# ஸ்ரீமத்
# கம்பராமாயணச்
# சுருக்க வசனம்.



இராங்கியம்,

பெரி. லெ. இலட்சுமணஞ் செட்டியாரவர்களால்

அச்சிடப்பெற்றது.

இதன் விலை ——— ரூ. 2—0—0.

Title Page Printed at the Shunmuga Vilas Press, Madura.



உ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீமத் கம்பராமாயணச் சுருக்க வசனம்.

இஃது
இதுவரை அச்சில் வெளிவராத பழைய ஏட்டுப்
பிரதியிலிருந்து நல்ல நடையிற் சுருக்க
வசனமாக எழுதப்பெற்றதை

மதுரை புத்தகசாலை.
**S. கூடலிங்கம் பிள்ளை அவர்களாலும்**

வித்துவான்
**மு. திருமலைமுத்துப்பிள்ளை அவர்களாலும்**
பார்வையிடப்பெற்று

புதுக்கோட்டையைச் சார்ந்த ராங்கியம்
**பெரி. லெ. இலட்சுமணஞ் செட்டியார் அவர்களால்**
அச்சியற்றி வெளியிடப் பெற்றது.

1926



Meenakshi Vilas Press,
Madura—1926

# முன்னுரை.

எங்கும் நிறைந்த எல்லாம்வல்ல இறைவன் திருவருளாலாக்கப் பெற்ற அகண்ட அண்ட கோளத்துள்ள பற்பல கண்டங்களுள் பரதகண்ட மென்னும் இந்தியா தேசமு மொன்று. இவ்விந்தியா தேசமோ! இமயமலை முதல் இலங்கை வரை எல்லையாகக் கொண்டது. இவ்வெல்லைக்குள் பற்பல பாஷைகளைத் தாய் மொழியாகக் கொண்டு பாஷை வாரியாகப் பிரிக்கப் பெற்ற நாடுகளும், பல்வேறு சமயக் (மதம்) கொள்கைகளையுள்ள வெவ்வேறு பழக்கவழக்கங்களையுடைய பலதிறப்பட்ட மக்கள்களும் வதிந்துள்ளார்கள்.

இத்தகைய வேறுபாடுகளுடைய தேசத்தில் நம் தமிழ்நாடு மொன்று. தமிழ் நாடானது மக்கள், மொழி, அறிவின் வளர்ச்சியாலுள்ள பலவகை நாகரீகம் ஆகிய தோற்றங்களில் முதன்மை பெற்றதென்பது அறிஞர்களின் ஆராய்ச்சியாலறிந்த உண்மை. இவ்வுண்மையை விளக்க பழையசங்க விலக்கியங்கள், எச்சமய வேதங்களும் எதிர்த்து நிற்க வியலாததும், தெய்வ வியல்பிற்கு மாறுபடாததுமான திருவருள் திகழ்ந்துள்ள தமிழ் வேதமாகிய திருக்குறள் முதலிய சத்திய நூல்களே சான்றாகும். அன்றியும் தமிழ் மொழியில் மகா சிறப்புற்றோங்கிய பேரறிவுடைய கம்பர் முதலிய கவிவாணர்களாலியற்றப்பெற்ற பல காவியங்களு முண்டு. இவைகளில் கம்பராமாயணமு மொன்றாம். இக்கம்பராமாயண மென்பது ஸ்ரீ இராமபிரானைப்பற்றிய வரலாறுகூறுவது. இது வடநாட்டு ஆரியச் சரித்திரம். இச்சரித்திரத்தை ஆதியில் தென்னாட்டிற் பரவச் செய்த காலத்தில் இதன் மூலநூல் வடமொழியி லிருந்தபடியால் இச்சரித்திரத்தை தமிழ்மொழியில் மாற்றியகாலத்தில் கவிவாணரான கம்பர் தன்கவித் திறமையால் சொற்சுவை பொருட்சுவை பொருந்த கற்பனாலங்காரத்துடன் செய்யுளுருவாயியற்றினர். அமிழ்தினுமினியதமிழ்மொழியிலியற்றிய கம்பராமாயணத்தின் கவிச்சிறப்பைப்பற்றி இன்று வரை தமிழ்நாடு பெரிதும் புகழ்ந்து கொண்டாடி வருகிறது. இத்தகைய சிறப்பு வாய்ந்த கம்பராமாயணக் கதையைச் சகலரும் எளிதில் படித்தறியும் வண்ணம் ஒன்றொருவரால் வசன நடையில் மிக விரிவாயெழுதப்பெற்றுள்ளது. இதை முழுதும் படித்தறிய அதிககாலஞ் செலவிட வேண்டிய திருப்பதால் சரித்திர முழுவதும் சுருக்கமாக

விளக்கத்தோடு சிறிய காலத்துக்குள் படித்தறியும்படி புதுக்கோட்டையைச் சார்ந்த இராங்கியம் மகா-ா-ா-ஸ்ரீ பெரி. லெ இலட்சுமணஞ்செட்டியாரவர்கள் தனக்குக்கிடைத்த சுருக்க வசனமான ஏட்டுப் பிரதியை அச்சிட வெண்ணி இதற்காகப் பெரிதும் முயற்சித்து ஷை-யூர் என் உரியநண்பரும் தமிழறிஞருமாகிய சி. பெரி. க. கறுப்பஞ் செட்டியாரவர்களும் பல ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு கூடுமானவரை சீர்திருத்திச் சுத்தமான வசன நடையில் பிரதி எழுதி ஷை பெரி. லெ. இலட்சுமணஞ் செட்டியாரவர்களால் பெரிய எழுத்தில் உயர்ந்த கடிதத்தில் அச்சிட்டு தமிழ் மக்கட்கு வெளியிட்டிருப்பது பெரிதும் போற்றத்தக்கதேயாம்.

சுகம்! சுகம்!! சுகம்!!!

எஸ். கூடலிங்கம் பிள்ளை,

## சாற்றுக்கவிகள்.

மதுரை, வித்வான்
மு. திருமலைமுத்துப்பிள்ளை யவர்கள்
இயற்றியது.

---

தேவப்புலமைக் கம்பர் பிரான்
செய்த ராமா யணப் பனுவற்
பாவத் தனையுஞ் சுருக்கமதாய்ப்
படிக்க வசன வுருவி யற்றி
மாவற்புதமாய் முன் வரைந்து
வைத்த வேட்டுப் பிரதி தனை
மேவப் புகழ்சே ரிராங்கி யம்வாழ்
மிளிரும் வணிகர் குல நலத்தார்.

பெரிய கறுப்ப மால் பயின்றோன்
பெற்றிக் கறுப்ப நாவலவன்
உரிய வேண்டு கோட் கிணங்கி
யுலகிற் பெரிய கறுப்ப முகில்
புரியுந் தவச்சீ யிலக்கு மணப்
புநிதன் பொருளைச் செலவு செய்து
பிரிய மாக அச்சி யற்றிப்
பிறர்கள் மகிழத் தந்தனனே.

---

மதுரைமாநகரம்

### ஸ்ரீ ம. அழகர்சாமி பிள்ளை யவர்களியற்றியது.

தேனார் மலர்ப்பூம் பொழில் சூழுஞ்
சிங்கை நகரின் வணிகர்குலப்
பேனா ரிலக் குமணப்
பெரியோன் தெய்வக் கவிக்கம்பன்
வானோர் மகிழ்ரா மாயணப் பண்
வருக்க வதனை வசனமதாய்
ஆனாநற்சங் கிரகமென
அச்சி லியற்றி யளித்தனனே.

# அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:







ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத் கம்பராமாயணச்
# சுருக்க வசனம்.

## பாலகாண்டம்.

### காப்புகள்.

ஆழ்வார் துதி.

தருகை நீண்ட தயரதன் றன்றரும்
இருகை வேழத் திராகவன் றன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

வேறு, அநுமான் துதி.

அஞ்சிலேயொன்றுபெற்றானஞ்சிலேயொன்றைத்தாவி
அஞ்சிலே யொன்றாக வாரியர்க்காகவேகி [ரூரில்
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்கைக்கண் டயலா—
அஞ்சிலே யொன்றைவைத்தா னவனம்மையளித்துக்-
[காப்பான்.

## வேறு, சரசுவதி துதி.

புத்தகம் படிக மாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை
மொய்த்தகொந் தளகபார முகின்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல்-
[செய்வாம்.

## பயன்.

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

## வேறு.

நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண்டெ ழுத்தினால்.

வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாடையா தொன்றி னாயினும்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே.

அன்ன தான மகில நற் றானங்கள்
கன்னி தானங் கபிலையின் றானமே
சொன்ன தானப் பலனெனச் சொல்லுவர்
மன்னி ராம கதைமற வார்க்கரோ.



ஸ்ரீ
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் கம்பராமாயணச் சுருக்க வசனம்.

## பாலகாண்டம்.

### நூன்முகம்.



ஸ்ரீமந் நாராயணன் மார்பில் எழுந்தருளிய ஸ்ரீ மகாலட்சுமியின் திருமுகமண்டலம்போல் பிரகாசியா நின்ற அயோத்தியா புரியை மனு முறை தவறாது குடிகளினிடம் ஆறிலோர் கடமை கொண்டு செங்கோல் செலுத்தித், திரிலோகத்திலும் புகழ்நாட்டிய தசரதச் சக்கரவர்த்தி இராச்சிய பரிபாலனஞ் செய்துவருங்காலத்தில்,

### நாட்டுச் சிறப்பு.

கைலையங்கிரிபோன்ற வெண்ணிறமாகிய மேகங்களானவை சென்று, சமுத்திர நீரைப்பருகி, உமாதேவியின் உருவங்கொண்டு மீண்டுவந்து இமயமலையிற் காலூன்றி மின்னலோடு வருஷித்தன. அம்மலையின் பிரவாகமானது, புறப்பட்டு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், என்னும் நானிலங்களிலும் பரவிச் சரயுநதியில் சேர்ந்து கால்வாய்கள் வழியே சென்று, சோலைகள், நந்தவனங்கள், கழனிகள், முதலியவைகளிற்பாய்ந்து; ஏரி, தடாகம், முதலிய மடுக்களினிறைந்தன. கோசல நாட்டிலுள்ள மள்ளர்கள் சரயுநதியின் ஜலத்தைக் கொண்டு கழனிகளையுழுது மஞ்சள், இஞ்சி, கன்னல் முதலிய வான்பயிர்களை விளைவித்தும், செந்நெல் விரைத்து நட்டுப் பயிர்செய்து களைகளைந்து வளர்ந்து முற்

றிய கதிர்களை அறுத்துக் களத்தடித்துப் பதர்போக்கிக் கண்ட தானிய மணியை ஆறிலோர் பங்கு அரசிறையாகக் கொடுத்து, மீந்ததைக் கொண்டுபோய்த் தங்கள் மனைக்களஞ்சியங்களிற் சேர்த்து, தேவாலயம், அதிதிகள், விருந்தோம்பல், தென்புலத்தார் கடன் முதலிய கைங்கர்யங்களைச் செய்து, தங்கள் புத்திரகளத்திர சுற்றங்களோடு யாதொரு குறைவின்றி வாழ்ந்துவருவார்கள்.

## நகரச் சிறப்பு.

இத்தகைய பல செல்வங்களோடுகூடிய கோசல நாட்டை யுடைத்தாகிய அயோத்தியா புரியானது பூமிதேவிக்குத் திலதம்போலவும், நேத்திரம் போலவும், ஸ்ரீ மகாலட்சுமியின் உறைவிடமாகிய தாமரை மலர் போலவும், பிரகாசிக்கும். பாதளம்வரை ஆழ்ந்த அகழ் சூழ்ந்த கோட்டையும், மாடமாளிகை கூடகோபுரம் உப்பரிக்கைகளும், சதுர் வர்ணத்தார் வீதிகளும், சகல சாஸ்திர விசாரணை சாலைகளும், நடன சாலைகளும், யானையேற்றம் குதிரையேற்றம் பயிலிடங்களும், மகர தோரணங்களும், சங்கீத கோஷ்டங்களும், நிறைந்து அளகாபுரியும், அமராபதியும் பின்னிடையும்படியான மகா உன்னதமாகிய நகரமாகச் சிறந்தன.

## அரசின் முறை.

இம்மகத்துவமுடைய நகரத்தைப் பரிபாலிக்கும் தசரத சக்கரவர்த்தி, கௌசலை, கைகேயி, சுமித்திரையென்ற பட்டமகிஷிகள் முதலாகிய அறுபதினாயிரந் தேவியார்களோடு அறுபதினாயிர வருஷம் அரசாண்டு வந்தனர். ஓர் நாள் தனது குலகுருவாகிய வசிஷ்ட முனிவரைப் பணிந்தெழுந்து, சுவாமி! சூரிய குலத்தி

னராகிய எனது மூதாதைகளாயுள்ள மன்னர்கள் வாழை யடி வாழையாய்த் தொன்றுதொட்டு அரசாண்ட பின், கடையான அடியேன் அறுபதினுயிர வருஷம் இவ் வுலகைப் பரிபாலித்து வந்தனன். அப்படி வந்த எனக்குப்பின் இப் பூமிபாரத்தை வகித்துப் பிரஜைக ளைக் காப்பாற்றுதற்குப் புத்திரப்பேறில்லாது வருந்து கின்றனன். அஃது உண்டாவதற்கு மார்க்கம் அனுக் கிரகம் செய்யவேண்டுமென வேண்டுகின்ற வேந்தனை நோக்கியவுடன் முன் நடந்திருக்கிற தேவரகசியத்தை யாலோசித்தனர் என்னவெனில்:--

இராக்கதர்களால் வருந்துகின்ற இந்திராதிதே வர்கள் சிவபெருமானிடம் போய் முறையிட, அவர் கேட்டு இங்குவாருங்களென் றழைத்துக்கொண்டு பிர மாவினிடம் போய்ச்சொல்ல, பிரமா கேட்டு இது காரி யம் ஸ்ரீமந் நாராயணனுல் முடியவேண்டும் அங்கு செல்வோம் வாருங்களென்று ஒன்றுகூடி மேருபருவத உச்சியில் நவரத்தினமயமான மண்டபத்தில் வந்து சேர்ந்தார்கள். அப்போது இந்திரன் இந்திரசித்தனு லடைந்த துன்பத்தையும், மற்ற இராக்கதரால் அனுப விக்குங் கஷ்டத்தையுஞ் சொல்லக்கேட்ட பரமன், இரா வணனுதியரைச் சங்கரிக்கப் பாற்கடற்சயனனுகிய பரந் தாமனுலாகவேண்டும்; ஆதலால் எங்களான் முடியா தென்று சொல்லக்கேட்ட தேவர்கள் ஸ்ரீமந் நாராய ணனைக் கோரித் தோத்திரஞ் செய்தார்கள். அதை யறிந்த கருணைக்கடலாகிய பகவான் கருடவாகனமீ தாரோகணித்து, மேருமலையில் தேவருறைமிருக்கு மண் டபத்திற் கெழுந்தருள, சகலதேவர்களும் எதிர்கொண் டழைத்து, ஆசனத்திருத்திப் பணிந்தெழுந்து தங்கள் குறைகளை விண்ணப்பஞ் செய்தார்கள். அதைக்கேட்ட

பகவான், ஏ தேவர்காள்! அஞ்சாதீர்கள் உங்களின் மனக்குறையை நிவிர்த்திக்கப் பூலோகத்தில் தசரதச் சக்கரவர்த்திக்குப் புத்திரராக நாம அவதாரஞ்செய்யப் போகிறோம். ஆனதால், ராவணன் முதலிய ராட்சசர்களைச் சங்கரிக்கவேண்டும் நீங்கள் எனக்கு உபாலமாய்ப் பூமியில் வனங்களிலும், மலைகளிலும், வானரங்களாய்ப் பிறந்து சேனைகளாகத் தயாராயிருங்கள் என்று திருவாய்மலர்த்தருளியதைக் கேட்ட சகலரும் ஆனந்தக் கடலிற் படிந்தவர்களாய்க் கூத்தாடினார்கள். பின் திருமாலானவர் கருடவாகனத்திலாரோகணித்து மறைந்தனர். அதன்பின் மலரவன் மற்றோரைப் பார்த்து, நான் சாம்புவந்தராகப் பிறக்கிறேனென்றார்; இந்திரன் நான் அங்கதனாகப் பிறக்கிறேனென்றான், சூரியன் நான் சுக்கிரீவனாகப் பிறக்கிறேனென்றான், அக்கினி நான் நீலன் என்றான், திரிபுராந்தகன் எனது அம்சமாக வாயு குமாரன் அநுமனாகப் பிறக்கச்செய்கின்றோமென்றனர்; மற்றைய தேவரெல்லாம் யாங்கள் வானரர்களாகப் பிறக்கிறோமென்றார்கள். அப்படியே பூலோகத்தில் வந்து அவதரித்திருக்கிறார்கள். ஆனதால் இந்த வைபவம் நடந்திருப்பதால் வசிஷ்டர் தசரதச் சக்கரவர்த்திக்குச் சொல்லுகிறார்.

ஓ அரசர்க்கரசே! நீர் மகவில்லையென்னுங் கவலையை யொழிப்பீராக. புத்திரகாமேஷ்டி யாகம் செய்வீரேல், இவ்வீரேழ் பதினான்கு உலகத்திற்கும் அதிபதியாகும் புதல்வரைப் பெறுவீரென்றனர். அதைக் கேட்ட தசரதர் அடங்காத மகிழ்ச்சிகொண்டு ஐயனே! அந்த யாகஞ்செய்யுங் கிரமத்தை அனுக்கிரகிக்கவேண்டுமென்றனர். அப்போது வசிஷ்டர் காசிப முனிவரின் புத்திரர் விபாண்டகர்; அவர் புத்திரர் கலைமான்

முகமும், சிரசில் ஓர் கொம்புமுடையவர், மகா வேத சாஸ்திர பண்டிதர், சிவனும் புகழத்தக்கவர், மற்ற மாந்தர்களை மிருகமென்று எண்ணுபவர், மகா தவ சீலர், அவர் வந்தாராகில் நீர் செய்யப்புகும் யாகம் நிறைவேறும் என்றனர். அப்போது தசரதர் சுவாமி! அம்மகாநுபாவர் எங்கெழுந்தருளியிருக்கிறார்? இங்கு எவ்விதம் அழைத்துக்கொண்டு வருகிறது? அவ்விவரந் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்ன, வசிஷ்டர் சொல்வாராயினர்.

மனுகுலத்தரசனாகிய உத்தானபாத மகாராஜனுடைய புத்திரன் உரோமபாதன் என்பவன் இராச்சிய பரிபாலனம் செய்துவருநாளில் தன்னாட்டில் சிலகாலம் மழைபெய்யாது சகல ஜனங்களும் சீவராசிகளும் வருந்துவதைக்கண்டு, வேண்டிய தானதருமம் வழங்கிப்பெரியோர்களிடம் மழைபெய்வதற்குண்டான அநுக்கிரகம் செய்யவேண்டுமென்றனன். அதுகேட்ட பெரியோர்கள் ஏ அரசனே! கலைக்கோட்டு மகரிஷி யென்பவர் இந்நாட்டுக்குள் வந்தால் உடனே மழை பொழியும், க்ஷேமமுண்டாகுமென்றுரைத்துச் சென்றனர். பின் உரோமபாதன் சபையில் வந்து, அங்குள்ளாரை நோக்கிக் கலைக்கோட்டு முனிவரை, இங்கு எவ்விதம் அழைத்துக்கொண்டு வருகிறதென்று கவலைகொள்ளுங்கால், அச்சபையிலிருந்த நாடகப்பெண்கள் இருவரெழுந்து ஏ மன்னவ! அந்த மகாநுபாவரை யாங்கள் சென்று எவ்விதத்திலேனும் அழைத்துவந்துவிடுகிறோம் உத்திரவு கொடுமென்றனர். அப்போதரசன் பெண்களைப் பார்த்து மகிழ்ந்து நிரம்பவும் நன்று அவ்விதமே செய்யுங்களென்று வேண்டிய சன்மானமளித்து அனுப்பிவைத்தனன். அதுபெற்ற மாதர்கள் அவரிருக்கும்

வனஞ்சென்று, அவராச்சிரமத்திற்குச் சமீபமாகப் பன்னகசாலையொன்றியற்றி, முனிவர் வேடம்பூண்டு அதிலிருந்துகொண்டு, கலைக்கோட்டு முனிவருடன் அவர் பிதா வில்லாத சமயம்பார்த்துப்பேசி ஒன்றுக்கொன்று அளவளாவின அளவில், முனிவர் மாதர்களின் வஞ்சக மறியாதாராகையால் அவர்கள் வேடத்தை உண்மையென்றிருந்தார். அப்படி இருக்கும்போது மாதர்கள் முனிவருக்கு மதுரமான கனிவர்க்கங்களைப் புசிக்கச் செய்து நம்பிக்கையுண்டுபண்ணிக்கொண்டு, ஓர் நாள் முனிவரைப்பார்த்து ஏ முனிவர் பெருமானே! அடியேங்களுடைய குச்சுக் கெழுந்தருளவேண்டுமெனப் பிரார்த்திக்க, அப்படியே வருகிறேனென்ன; பின் அவ்விருமாதர்களும் முனிவரை உபசாரம்செய்து ஸ்திரீ சாகசத்தால் கால் நடையாக, உரோமபாதனுடைய நாட்டை நோக்கி அழைத்துவந்தனர். நாட்டின் சமீபமாக வரும்போது சப்தமேகங்களும் ஒன்றுகூடி வருஷித்து ஏரி, தடாகம், நதி, மடுக்கள் முதலியதும் நிரம்பி மறுகாலோடின.

அதைக் கண்ட உரோமபாதன் முனிவர் வருகின்றார்போலுமென்று மந்திரி முதலிய பெரியோர்களுடன் சேனைகள்சூழ எதிர்கொண்டுபோய் முனிவரைக் கண்டு வணங்கினர். அவர் அரசனையும், மற்ற சேனைகளையும், தன்னையழைத்து வருகிற மாதர்களையும் பார்த்து, இது வஞ்சனையாகவிருக்கிறது, என்ன விபரீதமென்று சிந்தித்துக் கண் சிவந்தனர். அதுகண்ட தேவர்களும் மற்ற முனிவர்களும் வெருண்டனர். உரோமபாதன் பயபக்தியுடன் முனிவரின் பாதத்தில் பன்முறைவீழ்ந்துபணிந்தெழுந்துதனக்குற்றவறுமையைச் சொல்லக்கேட்டு, இதுவும் உலக நன்மையைக்

கோரிச்செய்தனனென்று தனக்குள் சாந்தமடைந்து, பணிந்த அரசனுக்கு ஆசீர்வதித்துக் களிப்புற்றார். பின்னர் அரசன் முனிவரை இரதத்திலேற்றிச் சகலரும்சூழ அழைத்துக்கொண்டு வந்து சிம்மாசனத்திலெழுந்தருளச்செய்து அர்க்கிய முதலியவற்றால் பூசித்துத் தன் குமாரி சாந்தை என்னும் பெண்ணை விவாகம் செய்துகொடுத்தனர். அதனால் மகரிஷி மனைவியுடன் வீற்றிருப்பதால், அந்நாட்டில் மாத மும்மாரி பெய்து க்ஷாமமென்பதில்லாமல் க்ஷேமம் அபிவிருத்தியாயிருக்கிறது. ஆதலால் அம்முனிவரை அழைத்து வாருமென்றனர்.

அப்போது தசரதர், சுவாமி! இப்பொழுதே அழைத்துவருகிறேனென்று தன் மந்திரி சுமந்திரன் முதலிய பெரியோர்களுடனும், சேனைகளுடனும் புறப்பட்டு ரோமபாதனுடைய நகரத்தை நோக்கிச் செல்லும்போது வருவதைக் கேள்வியுற்ற ரோமபாதன் சேனைகளோடு எதிர்கொண் டழைத்துக்கொண்டு போய்ச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கச்செய்து, அடியேனை நாடி இவ்வளவு தூரம் வரலானது என் தவமேயாகும்; வந்த விவரம் உத்தரவாகவேண்டுமென்றனன். அப்போது சக்கரவர்த்தியார் நடந்த விஷயங்கள் முற்றும் சொன்னார். ரோமபாதன் அப்படியா? தாங்கள் நகரம் செல்லுங்கள், முனிவர் அங்கு வரும்படியான மார்க்கம் யான் செய்கிறேன் என்று சொல்ல, தசரதர் நல்லதென்று மீண்டு தன்னகர் சென்றார். பின் ரோமபாதன் கலைக்கோட்டு மகரிஷியிடம் சென்று சரணம்பணிந்து, தசரதருடைய வம்சபரம்பரையும், அந்நவர்கள்செய்த லோகோபகாரமும் விளங்கும்படி யெடுத்துரைத்துத் தாங்கள் அயோத்திக்குச்சென்று யாகம் பூர்த்திசெய்து

வாருங்களென்று விண்ணப்பஞ் செய்தனன். அது கேட்ட முனிவர் மனமிரங்கி, அவ்வாறே முடிப்போம் இரதங்கொண்டுவாருமென்றனர். உடனே ரதாலங்காரம் செய்துகொண்டுவர அதில் மனைவியுந் தானும் ஆரோகணித்து மற்றைய அந்தணர், முனிவர், பெரியோர்களும் சூழச் சேனைகளுடன் வாத்திய முழங்க இன்று நமது துயரொழிந்தனவென்று தேவர்கள் புட்பமாரி பொழிய புறப்பட்டு அயோத்தி நாடி வருகிற செய்தி கேள்வியுற்ற தசரதர், சேனைகளுடன் எதிர் வந்து முனிவரைப் பணிந்து, அழைத்துக்கொண்டு வரும்போது வசிஷ்ட முனிவரும் எதிர்வந்து வரவேற்றுச் சகலருமாகச் சபாமண்டபத்தில் எழுந்தருளியிருந்தார்கள்.

## திருவவதாரம்.

அப்போது தசரதர் வசிஷ்டரை நோக்கி, சுவாமி! தங்கள் திருவருளால் இம்மகானுபாவரும் வந்து சேர்ந்தார் என்றார். அதுகேட்ட கலைக்கோட்டார், இந்தப் புண்ணிய சிரேஷ்டரிருக்கும்போது உமக்கென்ன குறை என்றார். தசரதர் சுவாமி! தங்களைப் போன்ற மகா தவசிரேஷ்டர்களிருக்கும்போது அடியேனுக்கு என்ன குறை வரப்போகிறது? ஒன்றும் வராது என்றால் தற்காலம் ஓர் குறை மட்டும் இருக்கிறது அது என்னவெனில்:—அடியேன் அறுபதினாயிர வருஷம் இராச்சிய பரிபாலனம் செய்து தேவர்களையும் மானிடர்களையும் காத்துவந்தனன். எனக்குப்பின் இவ்வுலகத்தைப் பரிபாலிக்கக் குழந்தையில்லை அதுதான் குறை. அந்தக் குறையை நிவிர்த்திசெய்துவைக்கத் தங்களைப் பிரார்த்தித்து அழைத்துவந்தேனென்றார். அதற்குக் கலைமுனிவர் ஓ வேந்தனே! உமக்குத்

திரிலோகமும் புகழத்தக்கப் புத்திரப் பேறுண்டாகப் போகிறது. யாகத்திற்குரிய சாமக்கிரியைகளும், இடமுந் தயார்செய்யுமென்று சொன்னுர். அக்கணமே யாக சாலையுங் கட்டி, யாகத்துக்குரிய திரவியமுங்கொடுத்துச் சகல ஏற்பாடுஞ் செய்தார். பின் கலைக்கோட்டு முனிவரும் வதிஷ்டரும் சாஸ்திரப்படி காருகபத்தியம், தட்சிணுக்கினி, ஆகவனீயம் என்ற முத்தீ வளர்த்து ஆகுதி கொடுத்துப் பனிரண்டு மாதஞ் செய்துமுடித்தனர். முடிவில் யாககுண்டத்திலிருந்து சிவந்த மயிரும் அக்கினி நேத்திரமுந் தோன்ற கையிற் பொற்றும்பாளத்தில் திவ்யான்னம் வைத்துக்கொண்டு ஓர் பூதம் புறப்பட்டு வந்து பூமியில் வைத்துவிட்டு மறுபடியும் யாககுண்டத்துள் மறைந்துபோயின, பின் முனிவர் அவ்வன்னத்தை எடுத்து மூன்று பிண்டமாக்கி அரசன் கையிற் கொடுத்து இந்த மூன்றையும் மூன்று பெண்களுக்குக் கொடுத்துண்ணச்சொல்லுமென்றனர். அப்படியே அரசன் வாங்கி மூன்று பிண்டங்களை கௌசலை, கைகேசி, சுமித்திரை இந்த மூன்று பட்டமகிஷிகளுக்குக் கொடுத்தனர். அவர்கள் வாங்கிப் புசித்தனர். தட்டிலிருந்த மீந்த அன்னத்தைத் திரட்டி சுமித்திரைக்குக் கொடுத்தனர். இந்தப்படி முறையாய் வாங்கிச் சாப்பிட்டவுடனே மூன்றுபேருங் கலைக்கோட்டு மகரிஷியையும் வதிஷ்டரையும் பணிந்து அரண்மனையின் அந்தப்புரத்திற் போயிருந்தார்கள். பின் கருப்பவதிகளானுர்கள். சிறிது நாளிருந்து கலைக்கோட்டு மகரிஷி தசரதரிடம் விடைபெற்றுக்கொண்டு ரோமபாத மகாராஜன் பட்டணத்திற் கெழுந்தருளினுர். பின்னர் தசரதரின் தேவியார்கள் உடம்பு பசலைபூத்து; அங்கமெல்லாம் தங்க நிறமாய் ஐந்தா மாதம் ஏழாமாதங்களிற் செய்ய

வேண்டிய சீமந்தக் கல்யாணம் பூச்சூட்டுக் கல்யாண முதலிய சாஸ்திரங்கள் முடித்து

ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை.

மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைகற் கடக நீதிசேர்
ஓடைமா களிறனு னுதய ராசிகோள்
நாடினே காதசர் நால்வ ருச்சரே.

சரியாகப் பத்து மாதம் சென்றவுடனே மெய்நொந்து கௌசலை பிராட்டியார் திருவயிற்றிலே சித்திரை மாதம் புனர்பூச நட்சத்திரம், நவமி திதியுங் கூடிய சுபதினத்தில் தசரதருக்குப் புத்திரனாக வந்து மகாவிஷ்ணு அவதாரஞ் செய்தார். கைகேசி பிராட்டி வயிற்றிலே பூச நட்சத்திரமும் தசமி திதியுங் கூடின தினத்தில் அவருக்குத் தம்பியாகச் சக்கரத்தாழ்வார் அவதரித்தார். சுமித்திரை வயிற்றில் ஆயிலிய நட்சத்திரமும் ஏகாதசி திதியுங் கூடின தினத்தில் அவர்களுக்குத் தம்பியராக ஆதிசேஷனும், சங்கு என்று சொல்லும் பாஞ்சசன்யமும் பிள்ளைகளாகப் பிறந்தன. இப்படியாக நான்கு பிள்ளைகளும் பிறந்தவுடனே தசரத மகாராஜா, வெகு மனமகிழ்ச்சியுடன், தீர்த்தமாடிப் புத்திர முகம்பார்த்துச் சொர்னதானம், கோதானம், பூதானம், வஸ்திரதானம், கன்னிகாதான முதலிய சோடசதானங்களுஞ் செய்து, மற்றுமுண்டாகிய பெரியோர்கள் மந்திரிமார்கள் எல்லோருக்கும் வேண்டிய திரவியங்கொடுத்துக் கொலுமண்டபத்திலே வந்திருந்துகொண்டு நம்முடைய ராச்சியத்தில் பனிரண்டு வருஷத்துக்கு இறைவரி வேண்டுவதில்லையென்று கட்டளையிட்டுச் சந்தோஷ

மாயிருந்தார். அப்பால் பிள்ளைகளைத் தாய்மாருந் தாதிகளுமாக நீராட்டிவைத்து நான்கு பிள்ளைகளுக்கும் திலதமிட்டுச் சீராட்டிப் பாலூட்டித் தங்கத்தொட்டிலி லேற்றித் தாலாட்டினார்கள்.

தாலாட்டுக் கண்ணிகள்.

சீரா ரயோத்தித் திருநாட் டரசியற்றக்
காரார் வதிஷ்டர் கலைக்கோட்டு மாமுனிவர்

செய்யுமொரு வேள்வி சிறக்க இளைஞரொடு
வையமிசை வந்துதித்த மாதவனே கண்வளராய்

தாடகைசு வாகுவையுஞ் சங்கரித்துக் கோசிகற்குக்
காடதனில் யாகமதைக் காப்பவனே கண்வளராய்

அகலிகையைக் கல்லாக வன்றிட்ட சாபமதை
அகல்விக்க விந்நா ளவதரித்தோய் கண்வளராய்

செங்கையால் வில்லொடித்துச் சேர்ந்த மிதிலையிலே
மங்கை ஜனகிதனை மாலையிட வந்தவனே

நாடுந் தவப்பரசு ராமனுடையகர்வம்
ஓடும்படி செய்ய வுலகிற் பிறந்தவனே

மனம்போல அன்னைபிதா வாக்கை நிலைநிறுத்த
வனம்போக வந்த மகனேநீ கண்வளராய்

பன்னுசித்ர கூடப் பருவதத்திற் போயிருந்து
பன்னக சாலையுறப் பாப்பவனு நீதானே

வெம்பிக் கவன்றுமன வேகமாய் வந்துகண்ட
தம்பிக்குப் பாதுகையைத் தந்திட வந்தவனே

அருந்தவ ரானதண்ட காரணிய வாசிகட்குப்
பொருந்தபயந் தந்து புரக்கப் பிறந்தவனே

துதிக்குந் தமிழ்க்கரசாத் தோன்றும் அகத்தியனார்
மதிக்குவில் லம்புதர வாங்கப் பிறந்தவனே

கடுத்தவளாம் சூர்ப்பநகை காதல்கண்டு மானபங்கப்
படுத்திவைக்க வந்தப் பரந்தாம னீதானே

மாயமா னாக வடிவுகொண்டு வந்தவனை
மாயவே யம்புதொட வந்தவனு நீதானே

தந்தைக் குறவாஞ் சடாயுவுக்குக் கானமதில்
அந்திக் கடன்கடனை யாற்றப் பிறந்தவனே

கவந்தனைச் சங்கரித்துக் காரிகை யாஞ்சபரிக்
குவந்தவை குந்த முதவப் பிறந்தவனே

கண்டு வணங்குங் கனமா ருதியுறவு
கொண்டு நடத்தக் குவலயத்தில் வந்தவனே

சுக்ரீவ னுக்குமுடி சூட்டியண்ணன் வாலிதனை
நிக்ரகிக்க விந்த நிலத்திற் பிறந்தவனே

தஞ்சமென்று வந்து சரணடைந்த பூஷணனை
அஞ்சலென்று கைமயர்த்தி யாதரிக்க வந்தவனே

வாரிதியிற் சேதுகட்டி வானரச் சேனையொடு
நேரி லிலங்கைசெல்ல நேர்ந்தவனு நீதானே

சீதை சிறைமீட்டித் தென்னிலங்கைப் போர்முடித்து
வாதையற வானவரை வாழ்விக்க வந்தவனே

பட்டாபி ஷேகம் படைத்துலகை யாள்வதற்கு
மட்டா ருலகில்வந்த மைந்தனே கண்வளராய்

பவளக்கொடிபிணித்த பைம்பொன்னுந்தொட்டிலிலே
கவள மதயானைக் கன்றேநீ கண்வளராய்

தரணி குலம்வளரத் தாபத ரின்னலறத்
தரணி மிசையுதித்த தாசரதி கண்வளராய்

வந்தி யெனும்பெயரை மாற்றிய ஸ்ரீராமச்
சந்திரனே யென்றன் தனையனே கண்வளராய்.

இந்தப்படிக்குக் கௌசலை பிராட்டி நாவிற் சரசுவதி இருந்து பின்வருங் காரியமெல்லாம் முன்னே சொல்லித் தாலாட்டினுள். அது எப்படியெனில்:—இராவண சம்மார முடிப்பதற்கு முன்னே புற்றுக்குளிருந்து வான்மீகர் இராமாயணம் பாடினதுபோல் இவளும் பின்னே நடக்கப்போகிற காரியங்களை முன்னே சொல்லித் தாலாட்டினுள். இப்படி நாளொரு வண்ணமும், பொழுதொரு மேனியுமா வளர்த்து வருகிற நாளில், ஆண்டு நிறைந்ததென்று வதிஷ்டர் வந்து கௌசலை பிராட்டியார் குமாரனுக்கு இராமன் என்றும், கைகேசி பிராட்டியார் குமாரனுக்குப் பரதன் என்றும், சுமித்திரை பிராட்டியார் குமாரனுக்கு இலட்சுமணன் என்றும், அவர்க்கிளைய குமாரனுக்குச் சத்துருக்கன் என்றும், நான்கு பிள்ளைகளுக்கும் நாமகரணஞ் செய்தார். அதன்பின் புத்திரர்கள் நால்வரும் இருந்து தவழ்ந்து நடந்து விளையாடி ஐந்து வயது நிறைந்தவுடன் சௌளம் உபநயன முதலிய சடங்கு முடித்துப் பள்ளியில் வாசிக்கவைக்கவேணுமென்று வதிஷ்டரிடம் தசரதர் சொல்லி, நல்ல முகூர்த்தத்திலே பள்ளிக்கு வைத்து நான்குவேதம், ஆறுசாஸ்திரம், பதினெண் புராணம், இருபத்தெட்டாகமம், அறுபத்திநான்கு கலைக்கியானம், தத்துவ சாஸ்திர முதலிய சகல கலைகளும் வருத்திவைத்து, எட்டு வயதில் யானையேற்றம் குதிரையேற்றம் அஸ்திர சஸ்திர முதலிய சகல தொழில்களும் பயிற்றுவித்து மகா சந்தோஷமடைந்திருந்தார். இப்படியிருக்கிற நாளில் இராம லட்சுமணனிருவரும் பிரியாத் தோழராகவும், பரத சத்துருக்கனிருவருமோர் தோழராகவும், இருந்து விளையாடி வருவார்கள். ஒரு நாள் கைகேசி வீட்டில் ஊழியம்பண்ணு

கிற கூனி யென்றொருத்தியுண்டு. அவளுக்கு உடம்பு கூனலாயிருக்கும். ஆனதால், அவளுக்குக் கூனியென் றொரு பேருண்டு. அவள் தண்ணீரெடுக்க ஒரு நாள் நீர்த்துறைக்கு வந்தாள், அவளை இராமன் கண்டு தம்பி லட்சுமணா! இவள் கூனைப்பார்த்துச் சுண்டு வில் லுண்டைகொண்டு தெறிக்கிறேன் பாரென்று ஒரு உண் டையால் தெறித்தார். அந்த உண்டை பட்டு அவ ளுக்கு உடம்பு கூனிமிர்ந்தது. உடனே அவள் எறிட் டுப் பார்த்து அடா ராமா! இத்தனை அக்கிரமமென்ன? ஆகட்டுமடா எனக்குமொரு சமயம் வரட்டும் சொல்லு கிறேனென்று போனாள். அப்போது ராமனும் லட்சு மணனும் சிரித்துக்கொண்டு ஓடிப்போனார்கள். இப்படி யிருக்கிற நாளில், ஒருநாள் விசுவாமித்திர மகரிஷி அயோத்தியில், தசரதரைச் காணவேணுமென்று வரு கிறதை அரசனறிந்து எதிர்கொண்டு வந்து வந்தனை வழிபாடு செய்து, கூட்டிவந்து ஆசனத்திலிருக்கச் செய்து வேண்டிய உபசாரம் பண்ணினார். இப்படி யெல்லோருங் கூடியிருக்கிறபோது தசரதன் விசுவா மித்திரரைப் பார்த்துத் தேவரீரிங்கு எழுந்தருளியது இந்தப்பூமி செய்த பாக்கியமோ? அல்லது அடியேன் செய்த பாக்கியமோ? இல்லையேல் மந்திரிமார் செய்த பாக்கியமோ? என்று மகிழ்ச்சியாக வினவ அப்போது விசுவாமித்திரர் சொல்லுவார்.

விருத்தம்.

என்னனைய முனிவரரு மிமையவரு மிடையூறொன்
றுடைய ரானாற்
பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும் பாற்கடலும்
பதும பீடத்

தன்னகருங் கற்பகநாட் டணிநகரு மணிமாட
யோத்தி யென்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ விகல்கடந்த
புலவு வேலோய்.

வசனம்.

ஏ அரசனே! எங்களைப்போன்ற முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் ஒரு இடுக்கண் வந்தால், கைலாய வரையில் சிவனுரிடத்தில் அறிவிப்போம், அதுவன்றி வைகுண்டத்தில் மகா விஷ்ணுவினிடம் முறையிடுவோம், அல்லது பிரமலோகத்தில் பிரமாவினிடந் தெரிவிப்போம், அல்லது கற்பக நாடாகிய தெய்வ லோகத்தில் தேவேந்திரனிடத்திற் சொல்லுவோம், இந்த நால்வர்களைத் தவிர பூலோகத்தில் அயோத்தியாபுரியில் உம்மிடத்தில் அறிவிப்போம். இம்மட்டேயல்லால், வேறே புகலிடமில்லை. ஆனதால் உம்மிடத்தில் வந்தோமென்றுர். அதுகேட்ட தசரதர் சந்தோஷமுற்று சுவாமி! அடியேன் உமக்கு ஊழியம் பண்ண எவ்வளவோ பாக்கியம் பெற்றேன், அடியேனு லாக வேண்டிய காரியம் என்னவென்று கேட்டார். அப்போது விசுவாமித்திரர் சொல்லுவார்

விருத்தம்.

தருவனத்துள் யானியற்று ந் தவவேள்விக் கிடையூறுத்
தவஞ்செய் வோர்கள்
வெருவரச்சென் றடைகாம வெகுளியென நிருதரிடை
விலக்கா வண்ணம்
செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர் நால்வரினுங்
கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதியென வுயிரிறக்குங் கொடுங்கூற்றி
னுளையச் சொன்னன்.

வசனம்.

தருக்கள் நிறைந்த வனத்திலே யாகம்பண்ணுகிறதற்கு இராட்சதாள் விக்கினம் பண்ணுமல், யாகத்தைக் காத்து உத்திரவாதம் பண்ணுவதற்கு, உம்முடைய மக்கள் நாலுபேரிலே நீலவர்ணமாயிருக்கிற மூத்த பிள்ளையாகிய ராமனை என்னுடன் அனுப்பிவைக்கவேண்டுமென்று சொன்னவுடன் அரசனது செவியிலே நாராசங்காய்ச்சி விட்டதுபோலவும், புண்ணிலே தீச்சுட்டதுபோலவும், உடம்பு பதறி நன்றாயிருக்கிறது நாம் அருமையாய்ப் பெற்று வளர்த்து, இவர் கையில் ஒப்புவித்து இராக்கதர்களால் மடியக் கொடுக்கவோ என்று நெஞ்சில் விசாரமேலிட்டுப் பதில் ஒன்று சொல்லுவார். சுவாமி! தாங்கள் மகா பெரியவர் நான் சிறிய ஓர் விண்ணப்பஞ் செய்கிறேன். அவனோ சிறு பிள்ளை யுத்தமுகத்திற் பழகினவனல்லன், உம்முடைய வேள்விக்கு பிரமா, விஷ்ணு, ருத்திரன் முதலியோரால் இடையூறு வந்தாலும், அதற்கு முன்னின்று நான் காத்து உத்திரவாதம் செய்கிறேன் நீங்கள் புறப்படுங்களென்று சொல்ல, விசுவாமித்திரர் சினந்து, இராமனை நம்முடனே கூட்டியனுப்பினல் பழுதுவருமென்றல்லவோ எண்ணுகிருனென்று கோபித்துக் கண்சிவந்து உருட்டி விழித்துப் பார்க்கும்போது வதிஷ்டர் பதறியெழுந்து விசுவாமித்திரரின் கோபாக்கினியை அமர்த்தி, இராஜாவின் செவியிலே இரகசியமாய்ச் சொல்லுவார். அவரிருக்கிற கோபத்திற்கு அட்டி சொல்லவொண்ணுது அவருடனே கூட்டியனுப்பினல் குழந்தைக்குச் சகல வித்தையும் வரும் குற்றமொன்றும் வராது என் வார்த்தையைத் தட்டவேண்டாம் என்று சொல்ல, அரசன் சம்மதித்து இராம லட்சுமணுள்

இரண்டு பிள்ளைகளையுங் கூட்டிவரச்சொல்லி விசுவாமித்திரர் முன்னேவிட்டுச் சொல்லுவார்.

---

## கையடைப் படலம்.

### விருத்தம்.

குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
றிருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றெனா
வருக வென்றன னென்ற லோடும்வந்
தருகு சார்ந்தன னறிவி னும்பரான்.

### ஷ

வந்த நம்பியைத் தம்பி தன்னொடு
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநற்
றந்தை நீதனித் தாயு நீயிவர்க்
கெந்தை தந்தன னிமைந்த செய்யென்றான்.

### வசனம்.

இவ்விதமாகச் சொல்லி, அடைக்கலமென்று இரண்டு குழந்தைகளையும் கையில் ஒப்புவித்தார். அப்போது விசுவாமித்திரர் சந்தோஷமாய் எழுந்து தசரதரிடமும் வசிஷ்டரிடமும் விடைபெற்றுக்கொண்டு விசுவாமித்திரர் முன்னும் இராம லட்சுமணன் பின்னுமாக நடந்து, அயோத்தியாபுரி பட்டணங்கடந்து கற்பகத் தருக்கள் போன்ற வனத்தில் வந்தார்கள்.

### தாடகை வதம்.

அந்த வனத்தில் ஓரிடத்திலிருந்து கொண்டு, இவ்விடத்தில் யாகம் பண்ணவேணுமென்று இராம லட்சுமணன் இருவரிடத்திலுந் திட்டஞ்செய்து முனிவர் யாகம் வளர்த்தார்.

விருத்தம்.

எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்று நாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்.

வசனம்.

அப்போது அவ்வனத்திலுள்ள ராட்சசியாகிய தாடகை கண்டு ஆக்கிரமித்துக்கொண்டு, இவர்களிருக்கிற யாகசாலையை நோக்கி எப்படி வருகிறாளென்றால்:- நீலகிரி போலே சரீரமும், இரண்டு மலைப்பாம்புகளைக் காலிலே வீரதண்டையாகச் சுற்றிக்கொண்டு, இரண்டு மலைப்பாம்பைக் கையிலே கங்கணமாகச்சுற்றிக்கொண்டு ஒரு பாம்பில் யாளி, சிங்கம், கரடி, யானை இவைகளைக் கோர்த்து இடையிற் கட்டிக்கொண்டு, ஒரு பாம்பை உத்தரீயமாய்ப் போட்டுக்கொண்டு, கையிற் சூலாயுதமெடுத்துக் கோபாக்கினியோடு சீறி, ஆரடா! என்னுடைய வனத்திலே அஞ்சாமல் வந்திருக்கிறவனென்று மலை நகர்ந்து வருவதுபோல வருவதை விசுவாமித்திரர் கண்டு பயந்து சொல்லுவார். ராமா! அதோ வருகிறாள் பார் தாடகை அவளைச் சங்கரித்துவிடவேண்டும் என்று சொல்ல, இராமன் மனதிலே கிலேசப்பட்டுச் சுவாமி! முதல் முதல் பெண்ணோடு போர்செய்து, பெண்வதை செய்யலாமோ என்று கேட்டான். அப்போது முனிவர் அப்பா ராமா! இவளையோ பெண்ணென்று நினைக்கிறாய்? அவளோ அளவற்ற சீவன்களை வதை செய்தவள். ஆனதால் இனிக் கொஞ்சமேனும் தாமசம் செய்தால் நாம் மூன்று பேரும் அவளுக்கு இரையாவதற்குச் சந்தேகமில்லை. என் வார்த்தையைத் தட்டாதே, பெண்ணென்று நினைத்து விட்டு

விடாதே, துணிவாகப் பாணம் விடுவாய் என்று விசுவாமித்திரர் சொல்லக்கேட்டு ராமன் தாடகைக்கெதிரே போகிறபோது, லட்சுமணனை விசுவாமித்திரர்க் கருகே காவலாய் நிறுத்திவிட்டு அம்பறுத்தூணியுந் தோளிற் றாக்கிக்கொண்டு, கையிலே வில்லுமெடுத்து, ஒரு அஸ்திரத்தைக் கையிலே பிடித்துக்கொண்டு, யானையைக் கண்ட சிங்கம் போலே தாடகை முன்னே நடந்தான். அப்போது தாடகை எதிரே வருகிறபோது, அவள் காலிலே மிதிபட்ட மலைகள் சுக்கல் சுக்கலாய் உடைந்து நெரிந்து போகிறதையும், அவள் சொரூபத்தையுங் கண்டு ஆச்சரியமுற்று, பிரமன் இப்படியும் ஒரு பெண் சன்மம் படைத்தானோவென்று சொல்லி நிற்கும்போது, தாடகை கிட்டி வந்து பார்த்து நீ யாரடா? இந்த வனத்திலே வந்தவனென்று கோபங்கொண்டு, ஒரு மலையை எடுத்து, இராமன்பேரில் எறிந்தாள். அப்போது இராமன் ஒரு அஸ்திரந் தொடுத்து அந்த மலையைத் தூளாக்கிவிட்டான். அதைக்கண்ட தாடகை அதிசயித்துத் தன் சூலாயுதத்தை எறிந்தாள். அந்தச் சூலத்தை அறுக்கும்படி ஒரு பாணத்தை யேவியும், உடனே அவளுடைய நெஞ்சைப் பிளந்து போகத் தக்கதாகவும், அண்டச் சுவரும் அதிரும்படிக்கு மற்றொரு பாணத்தையும் விட்டான். அது எப்படி இருந்த தென்றால் :—

விருத்தம்.

சொல்லொக்குங் கடியவேகச் சுடுச்சரங் கரிய செம்மல்
அல்லொக்கு நிறத்தி னுண்மேல் விடுதலும் வயிரக்— [குன்றக்
கல்லொக்கு நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்— [றன்றே.

## வசனம்.

உடனே பாணம் தாடகை நெஞ்சிலே பட்டு, முதுகின் வழியாகப்போனது, கற்றுணர்ந்த அறிஞர், கல்லாத கீழ்மக்களுக்குச் சொன்ன நீதிமொழி மனதிற் றங்காமற் போனது போலிருந்தது. தாடகை வாயினுலும், மூக்கினுலும், இரத்தத்தைக் கக்கி, அண்டமதிரும்படி நிலத்தில் விழுந்து மாண்டனள். அவளிறந்த சேதி அவள் மக்கள் மாரீசன் சுவாகு என்ற இருவருங் கேட்டுப், படை யெடுத்து ஆரவாரித்து வருகிறதை இராமன் கண்டு விசுவாமித்திரரைக் கூப்பிட்டு சுவாமி! ஏதோ படை வருகிறதென்று சொல்ல, முனிவர் யாகம் பண்ணிக் கொண்டு மௌனமாக விருந்தபடியால், கூப்பிடுகிற சத்தங்கேட்கவில்லை. அதை இராமன் அறிந்து, முனிவரிடம் லட்சுமணனைக் காவலாக வைத்து விட்டு அந்தப் படைகளுக் கெதிரே போகும்போது; தாடகை மக்கள் வந்து தாயாரிறந்து கிடப்பதைக்கண்டு, அலறி விழுந்து அழுது, உன்னை யிப்படிக் கொல்லத் தக்க பேருமுண்டோ? திரிமூர்த்திகளானுலும் பழிவாங்காமல் விடுகிறதில்லை யென்று ஆக்ரமித்து வந்து இராமனைக் கண்டார்கள். கண்டவுடனே அடா! நீயோ எங்கள் தாயாரைக் கொன்றவ னென்று, சமுத்திரம் போலே வந்து வளைத்துக் கொண்டு வேல், சக்கரம், இருப்புத் தடி முதலிய பல ஆயுதங்களை யெறிந்தார்கள். சிறிது ராட்சசர் ஆகாசத்தினின்று யுத்தம் பண்ணினுர்கள். அப்போது இராமன் கைச்சித்திரங்களாக அஸ்திரங்களைத் தொடுத்துவிட்டு அந்த ஆயுதங்களையு மறுத்து, சில ராட்சசர்களையுங் கொன்று விட்டான். தியானத்திலிருக்கிற விசுவாமித்திரர் அறியாமல் ஆகாயத்தில் நின்று சிலர் யுத்தம் பண்ணினுர்கள். அதை லட்சு

மணன் கண்டு சிங்கந்துள்ளிப் பாய்ந்ததுபோல கர்ச்சித்து, விண்ணு மண்ணுந் தெரியாமல் வந்த ராட்சசரை யெல்லாஞ் சங்காரம் பண்ணி, இறந்த பிணங்கள் முனிவர் பேரிலும், வேள்வியிலும், விழாமல்சரக்கூடங் கட்டிப், பிணங்களை மலையாகக்குவித்து விட்டான். இராமனுெடு தாடகை மக்கள் இருவர் சேனை கொண்டு யுத்தம் பண்ணி எல்லோரையு மிறக்கக் கொடுத்துச், சுவாகும் இறந்துபோய்விட மாரீசன் மட்டும் தப்பியோடிப் போனுன். அதைவிட்டுராமன் லட்சுமணனிடம் வந்து நின்று, வேள்விச்சாலையைச் சுற்றிக்கிடக்கிற பிணங்களையும், இரத்தப் பெருக்கையுங் கண்டு, தம்பி லட்சுமணு! இவிடத்திலும் யுத்தம் நடந்ததோ வென்று கேட்டு, ஆச்சரிய முற்றிருக்கும்போது, விசுவாமித்திரர் யாகத்தை முடித்து விழித்தவுடன் இராமனும், லட்சுமணனும், நமஸ்காரஞ் செய்து சுவாமி! அடியேனுடன் தாடகை மக்கள் சிறிது படை யெடுத்து யுத்தம் பண்ணினுர்கள். இவிடத்தில் தம்பியுடனேயும் சிறிது ராட்சசர் வந்து எதிர்த்தார்கள், எதிர்த்த பேரையெல்லாம் வதைத்து விட்டோ மென்றனர்.

அது கேட்ட விசுவாமித்திரர் இராமலட்சுமணுளைத்தழுவி ஆசீர்வதித்து, வெகுநாளாய் முடியாமற் கிடந்த யாகம் இப்போது உங்களால் நிறைவேறிற்று என்று வெகுபிரியமான வசனமும், தாடகையின்பிறப்பு வளர்ப்புஞ் சொல்ல, அவர்களும் அதிசயமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். பின் முனிவர் வேள்வி முடிந்தவுடன் சகல தேவர்களையு மழைத்து, அவ்வவர் கையால் ஒவ்வொரு ஆயுதங்களையும் வாங்கி இராமன் கையிற் கொடுத்து, அந்த அஸ்திரங்களின் விசேடங்களையும் சொல்லி, அந்த அஸ்திரங்கள் சொன்ன ஊழி

யம் கேட்கும்படியாக நியமனமுஞ் செய்துவிட்டு மூன்று பேருமாக அவ்வனத்தை விட்டுப் புறப்பட்டுச் சென்றூர்கள்.

## மாபலி கதை.

அப்படிப் போகும்போது ஓர் வனத்தைக்கண்டு, இந்த வனம் யார் வனமென்று இராமன் கேட்க, விசுவாமித்திரர் சொல்லுகிறுர். இவ்வனம் மாவலிவாணன் இருந்த பட்டணம் அவனுடைய வரலாற்றைச் சொல்கிறேன் கேள். மாவலிவாணன் என்னும் பெயருடையவன் இந்த மூன்று லோகத்தையுங் கட்டியாள்கிற நாளையில், அவன் தபோபலத்தினுலே தேவர்களுக்கு இருக்க இடமில்லாமல், வானவர்கள் மகா விஷ்ணுவினிடத்தில் முறையிட்டார்கள். அப்போது மகாவிஷ்ணு அறிந்து, அவர்களுக்கு அபயாஸ்தங்கொடுத்து, வாமனுவதாரமெடுத்துக்கொண்டு மாவலிவாணன் முன்னே வந்து ஆசீர்வாதம் பண்ணினுர். மாவலிவாணன் வாரும்அந்தணரே! உமக்குவேண்டியதென்னவென்று கேட்க, எனக்கு உம்முடைய இராச்சியத்தில் மூன்றடி மண் தரவேணுமென்று யாசிக்க, நல்லதென்று சம்மதித்துத் தாரை வார்க்க வேண்டிக் கெண்டியில் நீர் கொண்டு வரச்சொன்னுன். அப்போது அவனுடைய குருவான சுக்கிராச்சாரி அறிந்து, மாவலிவாணனைப் பார்த்து, கேளும் சக்கரவர்த்தியே! இங்கு வந்திருக்கிறவன் பிராமணனல்ல, மகாவிஷ்ணுவே ஏதோகபடமாக வந்திருக்கிறதாகத் தோற்றுகிறது. இதன் விவரம் பின்பு தெரியும் நீர் தாரை வார்க்க வேண்டாமென்று தடுத்தான். அப்போது மாவலிவாணன் சொல்லுவான். ஆராணு லென்ன? பிச்சை யென்று கேட்டவனுக்கு, இல்லை யென்று சொல்லுகிறதைப் போல பாவமில்லை

யென்று குருவின் பேச்சைக் கேளாமல், கையேந்தி நிற்கிற பிராமணனை வாவென்றழைத்துத்தாரை வார்த்தான். அப்போது சுக்கிர பகவான், இவன் பின்னால் கெட்டு விடுவானே, நம் வார்த்தையைக் கேட்க வில்லையேயென்று நினைத்துச் சிறு தும்பி வடிவு கொண்டு, கெண்டியின் நீர்வருந் துவாரத்துட் புகுந்து நீர் வராமல் அடைத்துக் கொண்டான். அது கண்டு பிராமணனாக வந்த விஷ்ணு கையிலிருந்த தருப்பைப் புல்லினால் கெண்டியின் நீர்த்துவாரத்தில் குத்தினார். அது சுக்கிரபகவானுடைய கண்ணிற்பட்டு ஒரு கண்கெட்டுப் போய்விட்டது. அப்போது சுக்கிர பகவான் ஐயோ! நமக்கு இப்படி ஒரு கண்ணிழக்கும்படி நேரிட்டதே என்ற கிலேசத்துடன் பக்கத்திலே போனார். ஆகையால் கொடுக்கிற ஈகையாளரை வேண்டாமென்று யாரொருவர் தடுத்தாலும், நினைத்தாலும் அவனுக்குமென்மேலுந் துன்பம் வருவது தப்பாது; அதற்குச் சுக்கிரபகவானே சாட்சியாகக் காணலாமென்றார்.

பின்பு பிராமணனாக வந்தவர் தாரைவார்க்கப் பெற்றவுடனே, வந்த வடிவை மாற்றி விசுவரூபங் கொண்டு, பூலோகமெல்லாம் ஓரடியாகவும், மேல் அண்டத்தை ஓரடியாகவும் அளந்து, மற்ற ஓரடிக்கு இடமெங்கேயென்று கேட்க, என் தலைமேலே வையுமென்றான். அந்தப்படியே அரசன் தலையில் ஓரடி வைத்துப் பாதாளலோகத்திலே இருத்தினார். அப்படியான மாவலிவாண னிருந்த பட்டணமென்று விசுவாமித்திரர் சொல்ல இராம லட்சுமணன் கேட்டு ஆச்சரியமானார்கள்.

## கங்கையின் வரலாறு.

அவ்வனம் விட்டு அப்பால் நடந்து வெகு தூரங்கடந்து கங்கை யாற்றங் கரைக்கு வந்தார்கள். அப்போது கங்கைமிகவும் பூரித்துப் பெருகிவருவதை ஸ்ரீராமன் கண்டு இந்த நதியின் வரலாற்றை அடியே னுக்குத் திருவுளம் பற்றவேணும் இது வருகிற சம்பிர மங்களையும், இருகரையும் சோலைசூழ்ந்த திவ்ய வனங் களையும் நாங்கள் கண்டதில்லை யென்று கேட்க விசுவா மித்திரர் சொல்லுவார். ஏ ராமா! இந்த நதியைப் பற் றிக் கேட்கின்றாய்ச் சொல்லுகிறேன் கேட்பாயாக. உங் கள் வம்மிசத்தில், இருபத்தோராவது தலை முறையில் ஒரு அரசன் சகரன் என்பவன் அயோத்தியாபுரியை யாண்டான். அவன் அசுவமேதயாகம் செய்ய வேண்டு மென்று ஓர் குதிரையைப் பூப்பிரதட்சணம் வரவிடுத்து, அதன்பின் அஞ்சுமான் என்னும் தன் பேரனையனுப்பி வலம் வரும்போது இந்திரன் தன் பட்டத்துக் கிடை யூறு வருமென்று நினைத்துக் காமரூபியாய் வந்து குதி ரையைப் பிடித்துக் கொண்டு போய்ப் பாதாளத்தில் தவம் செய்து கொண்டிருக்கும் கபில முனிவரின் பின் னால் கட்டிவைத்துவிட்டுச் சென்றான். பின்னால் வந்த அஞ்சுமான் யாகக்குதிரையைக் காணாதவனாகி மீண்டு போய்த் தன் பாட்டனாகிய அரசனுக்குத் தெரி வித்தான் உடனே தன் மக்கள் அறுபதினாயிரவரையும் பார்த்து நீங்கள் போய்க் குதிரையைத் தேடிப்பிடித்துக் கொண்டு வாருங்களென்றேவினான். அவ் வறுபதினாயி ரம்பேரும்புறப்பட்டு இவ்வுலகில் மடம், தடம், சோலை வனங்கள், மலைகள் முதலிய இடங்களிலும். அட்டதிக் குக் கடைசி வரையிலும் தேடிப்பார்த்துக் காணாமல் பூமியைத் தோண்டிக் கொண்டு பாதாளஞ் சென்று கபி லரையும் குதிரையையும் கண்டார்கள். கண்டவுடன்

முனிவர்பேரிற் சினந்து அறுபதினாயிரவரும் யுத்தம் புரிந்தார்கள். தவம் செய்த கபிலர் கண்திறந்து பார்க்க உடனே அறுபதினாயிரவரும் வெந்து சாம்பலானார்கள். இதனை மற்றவர் அரசனிடம் போய்ச்சொல்ல மனம் வருந்திப்பின் பேரன் அஞ்சுமானைப் பார்த்து எடுத்த வேள்வி காரியத்தை விட்டுவிடப்படாது ஆனதால் நீ போய்க் குதிரையைக் கொண்டுவா வென்றான். அஞ்சுமான் அதன்படி பாதாளம் சென்று கபில முனிவரை வணங்கி நடந்தவைகளைச் சொன்னான். முனிவர் சரி குதிரையைக் கொண்டு போவென்றார். அப்படியே கொண்டு வந்து யாகத்தை நிறைவேற்றித் தேவர்களுக்கு அவிர்ப்பாகங்கொடாமல் காரிய முடித்தபின்னர் சகர ராஜன் பேரனுக்குப்பட்டங்கட்டி வைத்துப் பரமபதமடைந்தான். அதன்பின் பகிரத னென்பவன் பிறந்து பூலோகம் ஆளுநாளில் வசிஷ்டர் நடந்த வைபவங்களைச் சொல்லக் கேட்ட பகிரதன் சுவாமி! அந்த அறுபதினாயிரவரும் மோட்சமடைவதற்கு மார்க்கம் சொல்ல வேண்டுமென்றனன். வசிஷ்டர் ஆகாய கங்கை அந்தச் சாம்பர்க் குவியலிற்பாய்ந்தால் மோட்சமடைவார்கள் என்றார். உடனே பகிரதன் அரசை மந்திரிவசம் ஒப்பித்து விட்டு இமயகிரிச் சாரலில் வந்து பிரமனைநோக்கிப் பதினாயிர வருஷம் தவம் பண்ணினான். பிரமனவர் பிரசன்னமாகி ஏ அரசே! உன்தவத்தை மெச்சினோம். வானிருந்து கங்கைவந்தால் அதன் வேகத்தைத்தாங்க பரமேசுரனுக்கன்றி மற்றவர்களுக்கு முடியாததலால் சிவனைக்கோரித் தவம் பண்ணுவா யென்று மறைந்தார். அதன்பின் பகிரதன் சிவபெருமானைக் கோரிப் பதினாயிர வருஷம் தவம் பண்ணினான். பரமன் பிரசன்னமாகி உன் தவத்தை மெச்சினோம்.

உன்கருத்துப்போலமுடித்துக்கொடுக்கிறேமென்றுரை த்து மறைந்தனர். மறைந்தபின் கங்கையைக் கோரி ஐயாயிர வருஷம் தவசுபண்ணினன் கங்கை ஒருபெண் போல வந்து ஏ அரசே! உன்தவமெத்த நன்று கங் கையானவள் புறப்பட்டால் அவள் வேகத்தை யார் மாற்றமுடியு மென்றாள். சிவனிருக்கிறரென்றான். இது ஆச்சரியம் இன்னும் தவம் செய்து முற்றிலும் அறிந் துகொள்ளென்று கங்கை மறைந்தனள். பின் பரமனைக் கோரி இரண்டாயிரத்தைநூறு வருடம் தவம்செய்தான். பரமன் வந்து என்னென்று கேட்கக் கங்கை சொன்ன தைச்சொல்லப் பரமன் கேட்டு நீ ஒன்றுக்கும் அஞ் சேல் யாம் பாது காக்கின்றோ மென்றுரைத்து மறைந் னர். பகிரதன் மீண்டும் முப்பதினாயிர வருடம் தவம் பண்ணினன். தவத்திற் கிரங்கிக் கங்கையானவள் பிரம லோகம், தேவலோகமெல்லாம் நடு நடுங்கும்படி ஆர வாரித்து புறப்பட்டனள். அஃது கண்டு சிவபிரான் தன் சடையில் புல் நுனியில் பனிதங்கினது போல் தங்கும் படி தரித்துக் கொண்டதைக் கண்டு பகிரதன் வேண்ட கங்கையைக் கீழே யிறங்கும்படி செய்து, இதையழைத் துப்போய் என்புக் குவியலின் மேல் பாயும்படி செய் யென்றனர். அதன்படி பகிரதன் அழைத்து வரும் போது சன்னுவ மகரிஷி பார்த்து நமது யாகத்தை யழித்து விடுமென்றெண்ணிக் கங்கையைத் திரட்டி உள் ளங்கையில் வைத்து உண்டு விட்டனன். முன்செல்லும் பகிரதன் கங்கையைக் காணாததால் சன்னுவ முனியைப் பணிந்து நிகழ்ந்தவற்றைச் சொல்ல அவர் காதின் வழியாய்க் கங்கையை விட்டனர். பின்னர் அழைத்துக் கொண்டுபோய் இறந்தவர் சாம்பல் குவியலில் கங்கை பாயும்படிச்செய்தனன். உடனே நரகத்திற்கிடந்த அறு

பதினாயிரம் பேரும் மோட்சவுலகடைந்தனர். தேவர்க ளெல்லாம் பூமழை பொழிந்தார்கள் அந்தர துந்துபி முழங்கின அதன்பின் அரசன் அயோத்தியாபுரியடைந் தான். இராமா! சகரர்களாலே தோண்டினமையால் கடலுக்குச் சாகரமென்றும், பகிரதனால் கொண்டு வந்தகங் கைக்குப் பகிரதியென்றும், சன்னுவ மகரிஷியின் செவி வழி வந்ததால் சானவி யென்றும் பெயராயிற்று. ஆன தால் இதில் தீர்த்தமாடினால் இருபத்தோரா ந் தலைமுறை முதற்செய்த பாவங்க ளெல்லாம் நிவிர்த்தியாகி விடு மென்று இராம லட்சுமணருக்கு விசுவாமித்திரர் சொல்ல இருவருங் கேட்டு மகிழ்ந்து இந்தக் கங்கை யிற் றீர்த்தமாடிப் போவோமென்று மூவருந் தீர்த்தமாடி அப்பாற் சென்றார்கள்.

அகலிகையின் வரலாறு.

விசுவாமித்திரர் பின்னே, கௌதமர் சாபத்தி னால் அகலிகை கருங்கல்லாய்க் கிடக்கும் வழியாகப் போகும்போது இராமசாமியினுடைய பாதத்தாள்பட்ட வுடனே கல்லாய்க் கிடந்த அகலிகை பண்டு சொரூப மாகி அவர்கள் முன்னே நின்று வணங்கினாள். அது கண்டு இராமசுவாமி விசுவாமித்திரரைப் பார்த்துச் சுவாமி! கருங்கல்லாய்க் கிடந்தது பெண்ணாகி வரக் காரணம் ஏதென்று கேட்க விசுவாமித்திரர் சொல்லு வார். இராமா! இவளுடைய வரலாறு சொல்லுகி றேன் கேள். முன் தேவர்கள் எல்லோருங்கூடித் திருப் பாற்கடலைக் கடைந்தார்கள். அதில் அகலிகை, சரசு வதி, லட்சுமி என்று மூன்று பெண்கள் பிறந்தார்கள். லட்சுமியை மகாவிஷ்ணு மார்பில் தரித்துக்கொண் டார். சரசுவதியைப் பிரமதேவர் நாவில் தரித்துக் கொண்டார். இந்த அகலிகையைத் தேவேந்திரன்

தனக்கென்றும், கௌதமர் தனக்கென்றும் வாதாடிக் கொண்டிருந்தார்கள். தேவ சபையார் ஆயிர வருஷம் சமுத்திரத்தில் மூழ்கியிருந்து வந்தவர்கள் இந்தப் பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொள்ளலா மென்று தீர்மானித்தார்கள். அதன்படி நல்லதென்று தேவேந் திரன் ஐநூறு வருடம் கடலின் மூழ்கி யிருந்து வெளி வந்தான். கௌதமர் ஆயிரம் வருடம் சரியாய்க் கடலில் மூழ்கியிருந்து வெளிவந்தார். சொன்னபடியே கௌத மர் இந்த மங்கையைக் கல்யாணஞ் செய்து கொண் டார். பிறகு சிறிது நாட்சென்று தேவேந்திரன் அகலி கையை ரிஷி பத்தினி யென்று யெண்ணமல் சேரவே ணுமென்ற நினைவால் இவர்கள் ஆச்சிரமத்தின்பக்கம் சென்று கோழி ரூபங் கொண்டு கூவினன். அது கேட் டுக் கௌதமர் விடிந்த தென்று எழுந்து ஸ்நானம் செய்யக் கங்கைக்குப் போனர். அப்போது கங்காதேவி யுறங்கிக்கொணடிருந்தாள். அதைப்பார்த்து இன்னும் விடியவில்லை யென்று திரும்பி வந்து கொணடிருக்கி ரூர். அதற்குள் இந்திரன் கௌதமர்போல் வடிவெடுத் துஉள்ளே போய் அகலிகையுடன் கலந்தான். கௌத மர் ஆச்சிரமத்தின்முன் வரும்போது இந்திரன் பூனை யுருவெடுத்துக் குறுக்கே யோடினன். அதைக் கியான திருஷ்டியாலறிந்த கௌதமர் கோபாவேசம்உண்டாகி அடா இந்திரா வென்ரூர். பூனையுருவாய்ப் போன இந் திரன் சுயவடிவாய் நின்ருன். கௌதமர் பார்த்து அடா இந்திரா! பிறன் மனைவியின் ஒருயோனிக்காசைப்பட்ட தால் உன் உடம்புமுழுதும் ஆயிரயோனியாகப் போகக் கடவது என்று சாபமிட்டார். அப்படியே இந்திரன் தேகத்தில் ஆயிரயோனிக் குறிகள் உண்டாயின. இந்தி ரன் அவைகளைக் கண்டு மனம் வெட்கித்தலைகவிழ்ந்து

மகாமேருவுக்கு வடபாரிசத்திற் போய் மானதவாவி யில் மூழ்கிக்கிடந்தான். அப்பால் அகலிகையைப் பார்த்து, நீ தன் புருஷனென்றும் பிறபுருஷனென்றும் செய்கையின் உடன்பாடு தெரியாது உணர்ச்சியற்றிருந் தபடியால், கருங்கல்லாய்ப் போகக்கடவ தென்று சாப மிட்டார். இவள் சாபம் பெற்றவுடன் பயந்து அடியா ளுக்கு விமோசனகால மெப்பொழு தென்று கேட்க; பதினுயிர வருஷஞ் சென்ற பின் தசரதகுமாரர் இந்த வழியாக வருவார்கள், அவர்களில் இராமன்பாததூளி பட்டவுடன் இந்தச் சாபம் விமோசனமாகும் என்றார். ஆனதால் அந்தச்சாபம் இன்று உன்பாதத்தூட் பட்ட வுடன் பாபவிமோசனமாகிப் பெண்ணாகினாள்.

விருத்தம்.

இவ்வண்ண நிகழ்ந்தவண்ண மினியிந்த வுலகுக்கெல்
[லாம்
உய்வண்ண மன்றிமற்றோர் துயர்வண்ண முறுவதுண்-
[டோ
மைவண்ணத் தரக்கிபோரின் மழைவண்ணத் தண்ண
[லேயுன்
கைவண்ண மங்கு கண்டேன் கால்வண்ண மிங்கு கண்
[டேன்.

வசனம்.

இப்படிச் சொல்லி விசுவாமித்திரர் ராமனைப் புகழ்ந்து சொன்னார். ராமன் விசுவாமித்திரரைப் பார்த் துச் சுவாமி! தேவேந்திரன் ஆயிரயோனி பெற்று மானதவாவியில் மூழ்கிக்கிடந்தானென்றீர்களே, இப் போது தேவலோகத்துக்கு ராஜாவில்லையோவென்று கேட்க, முனிவர் சொல்லுவார். கேளாய் ராமா! தேவே ந்திரன் மானதவாவியில் மூழ்கிக்கிடக்கும்போது, அம ராபதிக்கு அரசனில்லாததால் தேவர்கள் எல்லோருங்

கூடிப்போய் பிரமாவினிடம் முறையிட்டார்கள். பிரமா தேவர்களைக் கூட்டிவந்து கௌதமரைக் கண்டு தேவ லோகம் அரசனில்லாது பாழாய்க்கிடக்கிறது. அவன் செய்த அபசாரத்தைப் பொறுத்துச் சாபவிமோசனம் பண்ணவேண்டுமென்று வேண்டினார்கள். அதுகேட்ட கௌதமர் நல்லதென்று சாந்தமாகி வந்தவர்களைப் பார்த்து நீங்கள் இந்திரனைக் கூட்டிவாருங்களென்றனர். அப்படியே தேவர்கள் போய் மானதவாவியுள் மூழ்கியிருக்கும் இந்திரனை அழைத்துவந்து விட்டார்கள். இந்திரனைப் பார்த்துக் கௌதமர் இந்திரா! உன் கண்ணுக்கு யோனிகளாகவும், பிறர் கண்ணுக்குக் கண்களாகவும் தெரியும்படி கட்டளையிட்டோம் நீ இருப்பிடம் போவென்றார். பின்னர் இந்திரன் தேவர்களுடன் அமராபதி போய்ச் சேர்ந்தான். பிரமா, கௌதமரிடம் விடைபெற்றுச் சத்தியலோகம் போய்ச்சேர்ந்தார் என்று சொல்லிவிட்டு அகலிகையை அழைத்துப் போய்க் கௌதமர் ஆச்சிரமத்தில் விட்டு வணங்கி நின்றார்கள். அவரும் ஆசீர்வதித்து ஆசனத்திலிருக்கச் சொன்னார். அப்படியே அன்று அங்கிருந்து மறுநாட் காலைக்கடன் முடித்துக் கொண்டு மிதிலாபுரியை நோக்கிப் புறப்பட்டார்கள்.

## மிதிலைக் காட்சிப்படலம்.

விசுவாமித்திரர் இராமலட்சுமணனைக் கூட்டிக் கொண்டு பலவழி கடந்து மிதிலா நகரத்துக்குட் பிரவேசித்தார்கள். அப்போது அங்கு எவ்வாறு யிருக்கிறதென்றால், ஒருவன் மற்றொருவன் மனைவியுடன் சூது விளையாடிக் கொண்டிருப்பதும், ஒருவன் மனைவியுந்தானும் பந்தடித்துக்கொண்டிருப்பதும், தன் மனைவிக்குப் பூச்சூட்டி யலங்கரித்துப் பார்ப்பதும், சிறுவர்கள் சிறு

தேருருட்டி விளையாடுவதும், வாலிபர் ஆனை யேற்றம், குதிரையேற்றம் பயில்வதும், பார்த்து அப்பால்போகிற போது, கடைவீதிகளில், பட்டாடை, பீதாம்பரம் விலை கூறி விற்பதும், நவரத்தினங்களைக் கொள்வதும், கொடுப்பதும், இப்படியான சிறப்புக்களெல்லாம் பார்த்துக் கொண்டு மூன்று பேரும் அரண்மனை வீதிமார்க்கமாகப்போனார்கள். அப்போது சீதையானவள் உப்பரிக்கையின் மேலிருந்தவள் இராமசாமியையும் மற்றிருவரையும் கண்டாள். சுவாமி சீதையைக் கண்டார் இப்படியொருவர்க் கொருவர் பார்த்து மனதிற்குள் காதல் கொண்டார்கள். இவ்விஷயத்தை முனிவரும் லட்சுமணரும் அறியார்கள். அப்பால் போகிறபோது, பட்டணத்துப் பெண்களிற் சிலர் சுவாமியினுடைய அழகையும், நடையையுங் கண்டு மயங்கினார்கள். சிலர் ஓடிப் போய்க் கட்டியணைப்போமாவென்றார்கள். சிலர் கூந்தலவிழ்ந்து, தனங்கள் பூரித்து, உடுத்தியிருக்கும் ஆடைகள் நழுவ நின்றார்கள். சில பெண்கள் சீதைக்கு மாப்பிள்ளை யிவரே சரி, இவருக்கு மனைவி சீதைதான் சரி யென்றார்கள். இப்படியாக நடந்து கொண்டிருக்கப் பார்த்துக் கொண்டு சனகராஜா விருக்கிற அரண்மனை வாசலில் வந்தார்கள். அப்போது முனிவர் வந்தசேதி யறிந்து, சனகராஜாவானவர் எதிர்கொண் டழைத்து நமஸ்காரம் பண்ணி முனிவரையும் இராம லட்சுமணனையும் கூட்டிப்போய் அவரவர்களுக்குத் தக்க ஆசனத்திலிருக்கச் செய்தார்.

## குலமுறை கிளத்துப் படலம்.

சதானந்த ரென்னு முனிவர், இராம லட்சுமணன், மந்திரி முதலிய பெரியோர்கள், மற்றுமுள்ளவர்

களும் நிறைந்திருக்கிறபோது, சனகராஜன் விசுவா மித்திரரைப் பார்த்துச் சுவாமி! இந்தக்குமாரர்கள் யாவ ரென்று கேட்க முனிவர் சொல்லுவார். கேளும் அர சனே! அயோத்தியாபுரிக் கதிபதியாகிய தசரதச் சக்கர வர்த்தியுடைய அருந்தவக் குமாரர்கள், இந்தப் பிள்ளை யின் பெயர் இராமன்; இந்தப் பிள்ளையின் பெயர் இலட் சுமணன், நாம் செய்த யாகத்திற்கு இடையூறு செய்த தாடகையைச் சங்கரித்து, யாகம் பூர்த்தி செய்து, கருங் கல்லாய்க் கிடந்த அகலிகை சாபவிமோசனமாக்கி வைத்தார்கள். இன்னு மிவர்கள் வெகுசன ரட்சகரா யிருந்து அநேக காரியம் நடத்தப் போகிறார்கள். ஆயு தப்பரீட்சைகளிலும், வீரபராக்கிரமங்களிலும்ஒருவரை யும் நிகராகச் சொல்லமுடியாது. அது காரியங்களிருக்க இப்போது உம்மிடம் இவர்களைக் கூட்டி வந்தகாரியம் என்னவென்றால், உம்முடைய புத்திரி சீதையை, இந்த மூத்தகுமாரனாகிய ராமனுக்கு விவாகம்பண்ணிக்கொடுப் பாயென்றார். அப்போது சனகராஜன் பிள்ளைகளுடைய அழகு முதலிய குணாதிசயங்களைக்கண்டு உடம்புபூரித்து வில்லை நினைத்து மலைத்துநின்றார். அப்போது அரசனை விசுவாமித்திரர் பார்த்து என்ன பதிற் சொல்லாமல் பேசாதிருக்கின்றீர் என்றார். அப்போது சனகன் முனி வரைப் பார்த்துச் சுவாமி! அடியேன் இந்தப்பிள்ளைக்கு என் புத்திரியை விவாகஞ் செய்து கொடுக்க ஆட்சேப மில்லை குறுக்கே ஒரு இடையூறிருக்கிறது. அஃதென்ன வென்றால்:—அடியேன் பிள்ளையில்லாமல் கவலையொடு யாகம் பண்ணுகிறதற்கு யாகசாலையைப் பொற்கொழு கொண்டுழுகிறபோது ஒரு பெட்டகத்தில் ஒரு பெண் ணும், ஒரு வில்லுமிருந்து கொழுமுனையிற் றட்டினது. அதை யெடுத்துக் கடவுளனுக்கிரகமென்று வளர்த்து

வருகிறபோது, வில்லுங்கூடவே வளர்ந்தது. அதனால் வில்லை வளைத்தவர்களுக்கு இந்தப் பெண்ணைக்கொடுக்கிறதென்று பிரதிக்ஞை செய்து விட்டேன். பெண் கேட்கும் பொருட்டு அநேக ராஜகுமாரர்கள் வந்து அந்த வில்லை வளைக்கமாட்டாமற் போய்விட்டார்கள். இவர்களோ சிறுவர்களாக விருக்கிறார்களே, எப்படிச் சொல்லுவதென நினைக்கிறேனென்றார்.

வில் வளைத்தல்.

அப்போது விசுவாமித்திரர் நல்லது அந்த வில்லைப் பார்க்கவேணும் எடுத்துவரச் சொல்லுமென்றார். அந்நேரமே அரசனுத்திரவுப்படி அறுபதினாயிர மல்லர்கள் போய்த் தோளிலுந் தலையிலுஞ் சுமந்து கொண்டு வந்து அரண்மனை வாசல் முன்னே போட்டார்கள். அப்போது அந்தப் பட்டணத்துச் சனங்களனைவரும் யாரோ ஒரு முனிவர் பிறகே இரண்டு ராஜகுமாரர்கள் வந்திருக்கிறார்கள், அவர்கள் வில்லைவளைக்கப் போகிறார்களாம், நாமெல்லோரும் பார்க்கவேண்டுமென்று வந்து இராமலட்சுமண ரிருவரையும் இமையாமற் பார்த்து, இப்படியழகில் மிகுந்தவர்கள் உலகத்தில் யாருமில்லையென்றும், இவர்களை மனிதரென்று சொல்லப்படாது ஆதிநாராயணனாகிய மகா விஷ்ணுவே யாகவேணுமென்றும், இந்த ராஜாவும், இவர் மகள் சீதையும் செய்த புண்ணியத்தா லிந்தப் பிள்ளையைக் கொண்டு வந்து விட்டது. உடனே கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேணுமென்றும், இந்தக் குழந்தைகள் முன்னே மலைபோலிருக்கிற வில்லைக் கொண்டு வந்து போடச் சொன்ன அரசன் புத்தி என்ன புத்தியென்றும், இந்த வில்லை எடுத்தெறிந்து விட்டுச் சீதையை மூத்தவனுக்குக் கல்யாணஞ்செய்து கொடுத்தால்

இரண்டுபேரும் பூஜாபலம் பண்ணினவர்கள் என்றும், இவர்களை யிந்த வில்லை வளைக்கச்சொன்னால் இவர்கள் சிறுபிள்ளைகளாகையால் வளைக்கமாட்டார்கள், சீதைக்குக் கல்யாணமாகிறதுமில்லையென்றும், அப்படியானால் இரண்டு பேருக்கும் அதிர்ஷ்ட மில்லை யென்றும், இது விஷயமென்னமாய் முடியுமோவென்றும், பட்டணத்திலுள்ள சனங்கள் பலவாறு சுவாமியைக் கண்டும், சீதையை நினைத்தும் மனமுருகிப் பேசிக்கொண்டு நிற்கிறபொழுது, விசுவாமித்திரர் வில்லைப்பார்த்து ஆச்சரியப்பட்டு இராமனுடைய முகத்தைப் பார்த்தார். அந்த நினைவு இராமபிரா னறிந்து சிங்கம் போல துள்ளி யெழுந்து வில்லண்டையிற் போய் நின்று வில்லைக் குனிந்தெடுக்காமல், இடதுகாற் பெருவிரலாலே அந்த விற்குதையில் மிதித்தார் அந்நேரம் ஒரு குதை ஆகாசத்திலெழும்பியது. வில்லைக் கையாலணைத்து வளைக்கும்போது வில் முறிந்துபோய் விட்டது. அந்த வில் முறிந்த சப்தம் எப்படி யிருந்ததென்றால், சப்தமேகங்களொன்றாய்க்கூடி முழங்கினது போலும், அண்டமிடிந்ததுபோலவு மிருந்தது, வில்லும் இரண்டு துண்டாய் நிலத்திலே வீழ்ந்தது. இராமபிரான் நகைத்து இந்தச்சொத்தை வில்லைவளைக்கச்சொல்லவேணுமோ உங்கள் பட்டணத்தில் நல்ல வில்லில்லையோ வென்று சொல்லிச் சீக்கிரம் சிம்மாசனத்திற்போயிருந்துகொண்டார். அந்நேரம் சனக மகாராஜா மனமகிழ்ச்சியாய் இராமசாமியைத் தழுவி, என் மனக்கவலை தீர்க்க வந்த நாயகனே யென்று ஆனந்த பரவசமானார். விசுவாமித்திரரும் அகமகிழ்ச்சியா யிருந்தார். பட்டணத்து ஜனங்களனைவரும் நம்முடைய இராஜ குமாரி சீதை செய்த தவமே தவமென்று கெம்பீரமானார்கள். வில் முறிந்த

சப்தம் சீதாபிராட்டியின் செவியிலுங் கேட்டது, அப்போது இனி விவாகத்திற்குநாள் வந்துவிட்டதென்று மகிழ்ச்சியாகித் தனங்கள் பூரித்தும், நேற்றுமாலை நாம் மேடையினிற்கிறபோது, ஒரு முனிவரின் பின்னே இரண்டு ராச குமாரர்கள் போனார்கள், அவர்களிலொருவர் நீலமேக வண்ணமா யிருந்தாரே, அவர் பேரில் நம்முடைய மனது பற்றினதற்கு அவரேயாக வேண்டும், வேறொருவ ரானுற் சரீர மெடுத்துப் பலனில்லையே, அவரோ? அவரல்லவோ என்று விசாரத்துடனிருக்கிறபோது, ஒரு தோழியானவ ளோடிவந்து அம்மா! ஒரு முனிவரின் கூட இரண்டு இராஜ குமாரர்கள் வந்தார்களே, அவர்களிலொருவர் நீலமேக வர்ணமா யிருக்கிறார், அவரை நீர் ஆயிரங்கண் கொண்டு பார்க்க வேண்டும். அப்படிப்பட்ட சவுந்தரிய முள்ளவர், நம் ராஜாவின் வில்லை வளைத்தொடித்துப் போட்டு அரண்மனையிலே வெகு கெம்பீரமா யிருக்கிறார் அம்மா வென்றாள். அப்போது சீதையானவள் நாம் நேற்றுக்கண்ட நாயகரேசரி யென்று மன மகிழ்ந்து குதூகலத்தாலுடம்பு பூரித்து, வந்து சொன்ன தோழிக்கு வேண்டிய ஆடையாபரண மெல்லாங் கொடுத்து, மகிழ்வாயிருந்தாள். அப்பால் சனகனும் மந்திரிமார்களும் சந்தோஷமாகி, விசுவாமித்திரரிடம் சொல்லித் தசரதச் சக்கரவர்த்திக்குத் திருமணவோலை ஒன்றெழுதி முத்திரைபோட்டுத் தூதர்கள் கையில் கொடுத்து அனுப்பினார்கள். தூதர்கள் மணவோலையைப் பெற்றுக்கொண்டு, இரவும் பகலுமாக நடந்து அயோத்தியாபுரிப் பட்டணம் வந்துசேர்ந்து, அரண்மனை வாசலில் வந்து நின்றார். அப்போது வாயிற்காப்போன் தசரதருக்கு அறிவித்தார்கள். தசரதர் வரும்படிக் கட்டளையிட அப்படியே தூதர்

போய்ச் சக்கரவர்த்தியைத் தண்டம்பண்ணி சுவாமி! அடியேம் மிதிலை நகரம் அங்குள்ள ராஜா இந்த வோலையைக் கொடுக்கும்படி ஆக்ஞையிட்டார். இதோ பாருங்களென்று மணவோலையை அரசன் கையிற் கொடுத்தார் அதை வாங்கி வாசிக்கிறார்.

பதினறடி ஆசிரிய விருத்தம்

மணிவிளையு நெடியகடல் வளையுலகை யொருகுடையுள்
வைத்தினிய பொறுமை சத்ய
வாய்மைதவ ருதரசர் திறைகொண்டு பணிகொண்டு
மக்கள்நெறி முறைமை கொண்டு
வளர்கதிர வன்மரபு தழைவுறவ யோத்தியா
மா நகர் புரக்கும் வள்ளல்
மகிமைதச ரதசக்ர வர்த்திசமு கத்திற்கு
மாதவசி ரேஷ்ட நிலைமை

தணிவுறு தொழுகுவிசு வாமித்ர முனியெழுது
தனிநிருப மென்ன வெனிலோ
தங்கயுமது விழிநிகரி ராமலட் சுமணரிரு
தனயரை யழைத் தேகியே
தடவனத் தெனதியா கத்தினைமு டித்துவரு
தாடகைசு வாகு முதலா ந்
தானவர்க ளுயிரெலாஞ் சங்கரித் தானபின்
தருவன மகன்று மிதிலை

அணிநகர மேகுமார்க் கத்தின்முன் சாபத்தி
னுலமைத் திட்ட கல்லை
ஆரியனி ராமனடி யாலணங் ககலிகை
யாக்குவித் துடனழைத்தே
அருந்தவக் கோதமனி டத்துவிட் டிருவரை
யழைத்தரச ஜனகன் மேவும்

அரண்மனை புக்கவவ னெதிர்கொண் டழைத்திட
வாசனத் துற்ற பொழுதில்
திணிதரும் பாரவிற் கொண்டுவர வதனையுன்
ஸ்ரீராம னுல் வளைக்கச்
சிந்தைமகிழ் கொண்டவன் குமரியாஞ்சீதையைத்
திருமணமி ராம னுக்குச்
செய்துதர மனமிசைந் தனனுத லாலுனது
சேனையொடு சுற்ற முடனும்
சிறிதுமய ராதுநீ மணவினை முடித்திடச்
சீக்கிரம் வருக மாதோ.

---

வசனம்.

தசரதர் படையெழுச்சி.

வாசித்துப் பார்த்து ஆனந்தமடைந்து ஓலை கொண்டுவந்த தூதுவருக்கு வேண்டிய சன்மானங் கொடுத்து அனுப்பிவிட்டு மிதிலைக்குப் போகப் பயண முகூர்த்தம் பார்த்து, தசரதர், பரதன், சத்துருக்கன், வசிஷ்டர், மந்திரி சுமந்திரன் முதலிய பெரியோர்களும், கோசலை, கைகேசி, சுமித்திரை பட்டமகிஷி முதலிய அறுபதினாயிர மனைவியரும், யானை, குதிரை, ரதம், காலாள் என்னும் நால்வகை சேனைகள் சூழப் புறப்பட்டு வருகிறபோது, சேனைகளால் எழுந்த தூளியானது சூரியமண்டலம் மேகமண்டலம் சந்திரமண்டலமும் மறையும்படி மூடியது. வருகிற யானை முழக்கம் குதிரை முழக்கம் முப்பத்திரண்டு வகை வாத்திய முழக்கம் இடியேறுபோல சப்தித்து திசைகளெல்லாம் செவிடுமண்ட நடந்து சந்திர சைல மென்னு மலைச் சாரலில் வந்து தங்கி யிருந்து, மறுநாள் புறப்பட்டு,

காடும் மலையுங்கடந்து மிதிலாபுரிப் பட்டணத்திற்கருகாக வருகிற போது, சனகராஜன் தெரிந்து, தேரேறிக்கொண்டு சேனைகளோ டெதிர் வந்து வரவேற்று ஒன்றுக் கொன்று க்ஷேமம் அளவளாவி யழைத்துக் கொண்டு வரும்பொழுது, இருவகைச் சேனைகளுக்கும் தாகவிடாயாகித் தண்ணீர் பருகவேணு மென்று, கங்கைக் கரையிலிறங்கித்தண்ணீர் பருகியவுடன், மடுக்கள் நீர் வறண்டு சேறுகி விட்டது. இருவகைச் சேனைகளினுலு மெழுந்த தூளி கிளம்பி ஆகாயமும் திசைகளு மூடிக்கொண்டு வழிதெரியாம லிருந்தது. எப்படியிருந்ததென்றால்:—முன் மாவலிவாணனிடம் மகா விஷ்ணு பிராமணவடிவு கொண்டு மூன்றடி மண் கேட்டு, உலகமெல்லா மோரடி வைத்து, ஆகாசத்திலோரடி வைத்த போது பிரமலோகமட்டும் போய் மறைத்தது போலிருந்தது. அப்போது சனகராஜன் முன்னதாகப் புறப்பட்டு நகரம் வந்து விசுவாமித்திரருக்குத் தசரதர் வரும் செய்தி யறிவிக்க, விசுவாமித்திரர் ராமலட்சுமணனை யழைத்து உங்கள் தந்தை முதலியோர் வருகிறார்கள் நீங்கள் எதிர்கொண்டழைத்து வாருங்கள் என்றனர். அவர்கள் முனிவரைப் பணிந்து சேனைகளைக்கூட்டிக் கொண்டு வருகிற தெப்படி யிருந்த தென்றால்:——

அயோத்தியா புரியில் விசுவாமித்திரர் வந்து இராம லட்சுமணனை யழைத்துப் போகிற போது, சீவனிழந்து வெறுங்கூடா இருந்த அரசனுக்குச் சீவன் கூடு தேடித் திரும்பி வந்தது போல விருந்தது. ராமலட்சுமணன் வருகிற சேனைகளுடன் போய்க் கலக்க, அதைக்கண்ட சருவ சேனைகளும் மகிழ்வடைந்து ஸ்ரீராமனுடைய பாதத்திற் பணிந்தார்கள். ராமலட்சுமணன் தன்தந்தையின் பாதத்தில் நமஸ்காரம் செய்

யத்தசரதர் அளவிலாமகிழ்ச்சியடைந்து ஆசீர்வதித்து இருவரையும் வாரியெடுத்து மார்போடணைத்து ஆனந்தக்கண்ணீர் விட்டார். அப்போது பரதசத்துருக்கனர் வந்து ஸ்ரீராமன் பாதத்தில் பணிந்தார்கள். அவர்களுக்காசீர்வதித்து, வதிஷ்டரைக்கண்டு பணிந்து ஆசிபெற்று, தாய்மார்களை வணங்க அவர்களும் ஆசீர்வதிக்கச் சந்தோஷமாய்ச் சேனைகளுக்கு முன்னே புறப்பட்டு இராமலட்சுமணன் மிதிலாபுரி வீதிவழி வருகிறபோது,

ஒரு பெண் சுவாமியைக் கண்டு மயங்கினாள், அது சமயம் மன்மதனும் பாணந்தொடுத்தான். அதனால் வெகு துயரப்பட்டு மயங்கினாள், ஒரு பெண் இந்த ராமனுக்குச் சீதை மனைவியாக எத்தனை கோடி காலம் தவசு பண்ணினாளோ அறியேனென்றாள். ஒரு பெண் அந்த வில்லைச் சாமர்த்தியமாய் முறித்தோம் இனி அவளை என்று கல்யாணம் பண்ணிக் கூடுவோமென்று சீக்கிரமாய்ப்போகிறாரேயல்லாமல், நான்படுகிற துயரந் தீர ஏறிட்டுப் பார்க்கவில்லையே, ஏது செய்வேனென்று மயங்கி விழுந்தாள். ஒரு பெண், இப்படிப் புஜபல பராக்கிரமசாலிகளுண்டோ? இவருக்குத் தூதுவிட்டழைத்தால் வருவாரோ, அல்லவோ என்றாலோசனை பண்ணினாள். மற்றொரு பெண் இவரைக் கண்டு தனது தோழியிடத்திற் சொல்லுவாள், நீ இவிடத்தில் தூது சென்று இவரை இணக்கி வந்தால் நான் பூண்டிருக்கிற ஆடையாபரணங்களெல்லாம் தருவேனென்றாள். மற்றொரு பெண் அரண்மனை வாசலுக்கும், தெருவுக்கும், தன் வீட்டுக்கும் பிரமைகொண்டலைந்து திரிந்தாள். மற்றொருபெண் சுவாமியைக்கண்டு பார்த்த கண்

ணிமையாமல், சித்திரம்போ லசைவற்று நின்றாள். மற்றொரு பெண் சுவாமியைக் கண்டு தனம் பூரித்ததைச் சகிக்க முடியாமல், நான் சரீர மெடுத்து என்ன பயனென்று மயங்கினாள். மற்றொரு பெண் நம்மை யார் பார்த்துச் சிரித்தாலுமென்ன? யார் தடுத்தாலுமென்ன, முன்னே போய்க் கட்டி மறிப்போமென்று மதிமயங்கினாள். ஒரு பெண் சீதையைப் பார்க்கப் போவது போல் போவோமென்றால், விடுவார்களோ? எப்படியோ? என்று ஆலோசனை பண்ணினாள்.

இப்படியாக அந்தப் பட்டணத்திற்கண்டபெண்களெல்லாம் மதிமயங்கித் துயரப்பட்டு நின்ற தன்மைகள் இவ்வளவென்று சொல்ல முடியாது. அப்பால் சுவாமி அரண்மனையிற் போயிருந்தார். சேனைகளோடு தசரதர் வந்து சேர்ந்து விசுவாமித்திரரை யடிபணிந்தார். அவர் ஆசி கூறி யிருக்கச் சொன்னார். பின் சபா மண்டபத்தில் ஆசனங்களில் வசிஷ்டர், விசுவாமித்திரர், சதானந்தர், கௌதமர் முதலிய மகரிஷிகளிருந்தார்கள். பக்கத்திலுள்ள சிம்மாசனங்களில் சனகர், தசரதர் இராமலட்சுமண பரதசத்துருக்க மந்திரி சுமந்திரன் முதலியோருடன் அன்னியதேச மன்னர்களும் இருந்தார்கள். இவ்வித ஆடம்பரமாய் நிறைந்திருக்கிற போது, அரண்மனையிலுள்ள சனங்களும், அயோத்தியாபுரி சனங்களும், மற்றவரும் கூடிய சபையில், வசிஷ்டர் சனகராஜாவைப் பார்த்துச்சொன்னார். உம்முடைய புத்திரியை யலங்கரித்துக் கூட்டிவரச்செய்யும் என்றார். சனகராஜன் அப்படியே நல்லதென்று தோழிகளிடம் சொல்லி சீதையை யலங்கரித்துக் கூட்டிவாருங்களென்றார். அதன்படி தாதிகள், அந்தப்புரம் சென்று, சீதாபிராட்டிக்குத் திருமஞ்சனமாட்டித் தலை யுணர்த்திப்,

பரிமள தைலந் தடவிச் சீவிச் சிணுக்கு வாங்கிச் சடையிட்டு நெற்றிச்சுட்டி நிலாப் பிறை சூரியப் பிறை சடைக்குச்சு திருகுபில்லை ஜடை நாகர் முதலிய ஆபரணங்களால் தலைச்சிங்காரஞ் செய்து, மல்லிகை, முல்லை, யிருவாட்சி, செண்பக பாரி ஜாத முதலிய மலர்கள் சூடி, நெற்றியிற் சாந்து சவ்வாது சிந்தூரத் திலதமிட்டு, நீலவிழிக்கு மையெ ழுதி, முத்து மூக்குத்தி நத்து, பிலாக்கு முதலிய பணி களும் பூட்டி, இரண்டு செவியில் இரண்டு சூரியர்கள் பிர காசிப்பதுபோல் அரதனத்தால் சமைத்த திவ்யமான தோடு பூட்டி, முருகு, ஒன்னப்பு கொப்பு ஜிமிக்கி முத லிய காதணிகள் மாட்டி, சித்திர வர்ணப்பட்டு ரவிக்கை மாட்டி, முத்து, பவளம், வயிரம், வயிடூரியம், கோமே தகம், நீலம், மரகதம், மாணிக்கம், புட்பராகமென்னும் ரத்தினக் கற்கள் பதித்த முத்துமாலை, மோகனமாலை, பவுன்மாலை, பவளமாலை, அட்டிகை, தாழ்வடம், சரடு, சரப்பளி, பதக்கம் சந்திரஹாரம் முதலிய கழுத்தணி களும் பூட்டி, இழையாயிரம் பொன்பெற்ற பீதாம்பர முடுத்தி, ஒட்டியாணம் பூட்டித் தோள்வளை வங்கி கடக கங்கணங் கொலுசுகளும் கைகளுக்கு மாட்டி, பத்து விரல்களுக்கும் கணையாழி மாட்டி, பாதத்திற்குச் செம் பஞ்சூட்டி பீலி. மிஞ்சி, காலாழி விரல்களுக்குப் பூட்டி; தண்டை சிலம்பு பாதசரம் பாடக முதலிய காலணிகள் பூட்டி, மானிலமாதரும் வானிலமாதரும் கண்டு மனம் வெட்கும்படி அலங்கரித்துத் தோழிப் பெண்கள் இரு புறமும் கைலாகு தந்து தாங்கிக்கொண்டு கூட்டிவந்து கல்யாண மண்டபமுன் னிறுத்தினர்கள். அப்போது ஜானகி தன் பிதாவின் பாதம் பணிந்து பக்கமாய் வீற் றிருக்கிற வதிஷ்டர் விசுவாமித்திரர் முதலிய ரிஷிகளை

யும் தசரதரையும் நமஸ்காரஞ்செய்ய அவர்களாசிர்வதித்தார்கள் பின் தன் பிதாவின் பக்கம் வந்து நின்றாள். வசிஷ்டர் விசுவாமித்திர முனிவர் முதலியோர் சந்தோஷமாயிருக்கும் போது, அயோத்தியாபுரி ஜனங்களனைவரும் சீதாபிராட்டியை இமைகொட்டாமற் பார்த்து, இந்தப்பெண் மானிடப்பெண்ணல்ல, செகன் மாதாவாகிய மகா லட்சுமியே நமது சக்கரவர்த்தித் திருக்குமாரனுக்கு மனைவியாக வந்து பிறந்தாளென்று ஆச்சரியமாகப் பார்த்திருந்தார்கள்.

மிதிலாபுரி ஜனங்களனைவரும் இராமனுடைய அழகுங் குணமுங் கண்டு இவர் ஸ்ரீமந் நாராயணனாகிய மகாவிஷ்ணுவே நம் ராஜாவின் மகள் சீதை செய்த புண்ணிய வசத்தால் இம்மானிட ஜென்மமெடுத்து நாயகராக வந்து வாய்த்தாரென்றும் புகழ்ந்து பேசிப் பார்த்திருந்தார்கள். இப்படி இரண்டுபேரையும் பார்த்து

விருத்தம்.

நம்பியைக் காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந் தோறுங் குரிசிற்கு மன்ன தேயாம்
தம்பியைக் காண்மி னென்பார் தவமுடைத் துலக மென்பார்
இம்பரிந் நகரிற் றந்த முனிவனை யிறைஞ்சு மென்பார்.

ஷை

தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற்
கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண்
டாரு மஃதே
வாள்கொண்ட கண்ணா ரியாரே வடிவினை
முடியக் கண்டார்
ஊழ்கண்ட சமயத் தன்னா னுருவுகண் டாரை
யொத்தார்.

## வசனம்.

இந்தப் பெண்ணுக்கு இவரே மாப்பிளை என்றும், இவருக்குப் பெண் சீதையே சரியென்றும் யாவரும் பேசிக்கொண்டிருந்தார்கள். அந்த வேளையில், சீதையானவள் மனதிலொரு சந்தேகம் நீங்காதிருந்தாள். அது என்னவெனில்:—முன்னமே நாம் மேடைமேல் நிற்கிறபோது ஒரு முனிவர் பின் இரண்டு ராஜ குமாரர் வந்தார்களே, அதிலே ஒருவர் நீலவர்ணமாயிருந்தார், அவர் பேரில் நம் மனது பற்றினது, அவரோ, அவரல்லவோ என்ற அனுமானம் இன்னம் நம்மைவிட்டு நீங்கவில்லையே, இப்போது நமதுவில்லை முறித்து நம்மைக் கல்யாணஞ் செய்ய வந்திருக்கிறவரை நாம் பார்க்கவேண்டுமென்றால், இந்தச் சபையிலே தலையெடுத்துப் பார்க்கவுங்கூடாது. இதற்கென்ன தந்திரமென்று தன் கையிற் பூண்டிருக்கிற வளையல்களைத் திருத்துகிறவள்போல விரல் வெளியிற் பார்வை செலுத்தி இராமனுடைய அழகு புஜபல பராக்கிரமங்களை இரண்டு கண்களாற் குளிரப் பார்த்துத் தலை கவிழ்ந்து நாம் நேற்றுக்கண்ட நாயகரே சரியென்று மனச் சந்தேகந்தீர்ந்தாள். ஜானகியை வசிஷ்டர் முதலிய ரிஷிகள் கேசாதிபாதமுதல் சவுந்தரியங்களைப்பார்த்து, இராமபிரானையுங் கண்ணுற்றுச் சொல்லுவார்கள்.

## விருத்தம்.

அச்சென நினைத்தமுத லந்தண னிருந்தான்
பச்சைமலை யொத்தபடி வத்தடலி ராமன்
நச்சுடை வடிக்கண்மலர் நங்கையிவ ளென்றான்
இச்சிலை கிடக்கமலை யேழையு மிருேனு.

ஷை

எய்யவில் வளைத்தது மிறுத்தது முரைத்தும்
மெய்விளை விடத்துமுத லையம்விட லுற்ருள்
ஐயனை யகத்துவடி வேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்.

வசனம்.

இந்தப் பெண்ணைக் கண்ட இராமன் இந்த ஒரு வில் மட்டுமோ முரிப்பான்? ஏழுமலையையுங்கூட முரிப்பானென்று சொல்ல இராமபிரான் குறுநகை செய்து தலை கவிழ்ந்திருந்தார். சீதையும் மனமகிழ்வாய்த் தந்தை மறைவிலொதுங்கியிருந்தாள். சகலருஞ் சந்தோஷமடைந்திருந்தார்கள்.

திருக்கல்யாணம்.

வதிஷ்டர் சனகராஜாவைப் பார்த்து முகூர்த்தம் எந்நேரம் பார்த்திருக்கிறீரென்ன சனகர் நாளை என்று சொன்னூர். எல்லோரும் எழுந்திருந்து அவரவர்களிருக்குமிடங்களுக்குப் போனூர்கள். சீதா பிராட்டியும் அரண்மனைக்குச் சென்ருள். சூர்யபகவான் நம் வங்கிசத்து ராமனுக்குக் கல்யாண மகோற்சவம், ஆனதால் சீக்கிரம் போய் நாளை வரவேணுமென்று அஸ்தகிரியை யடைந்தார். பின் மந்திரிமார் முரசுக்காரனை அழைத்து நாளையத்தினம்பட்டணமெல்லாம்சிங்காரிக்கச்சொல்லி முரசறையும்படிச் செய்தார்கள். அப்படியே முரசறைந்தான்.

தனக்கேற்பட்ட விதியிற் சேர்ந்த இராமசாமி, மேடையிலே நிற்கிறவளைக் கண்டு மயங்கினவர், சருவாபரணங்களுடனே அலங்கரித்துக்கொண்டு சமீபத்தில் வந்திருந்தவளைக் கண்டால், எவ்வளவு விரக தாபம் உண்டாகாது? நித்திரை செய்கிறவர் பஞ்சணை

மெத்தையிற் சயனித்துக்கொண்டு, சீதையை நினைந்து எப்போது விடியுமென்று கணிதமிட்டுக்கொண்டிருந் தார். சீதையும் அப்படியே விரகமுற்றிருந்தாள். சூரிய பகவானும் இராமசாமியின் மணக்கோலம் பார்க்க வேணுமென்று உதயகிரிக்கெழுந்தருளினர். உடனே பட்டணத்து வீதிகளைச் சிங்காரிக்கச்சொல்லி வாழை கமுகுகளுடன் மகர தோரணங்கள் கட்டினர்கள். அவ ரவர்களுந் தங்களுடைய விசேடங்கள் போல ஆடை யாபரணங்களணிந்து, களப கஸ்தூரி சுகந்த வாசனை கள் பூசிக்கொண்டு வந்தார்கள். அரண்மனையைச் சிங் காரித்துக் கல்யாண மண்டபத்தில் வச்சிரத்தூண், பவ ளத்தூண், வெள்ளித் தூண்களினலும் ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கத்தினலும், குறுக்கு விட்டஞ் சேர்த்து அபரஞ்சித் தகடுகளைப் பலகையாகப் பரப்பிப் பந்த லிட்டுக் கால்களில் வாழை, கமுகு, கரும்பு, ஈந்து, இள நீர், எலுமிச்சம்பழம், நார்த்தம்பழம், மாங்காய், தேங் காய் முதலான கனிவர்க்கங்கள் கட்டித் தொங்கவிட் டும், மல்லிகை, முல்லை, இருவாட்சி, பிச்சி, சண்பகம், பாரிஜாதம் முதலிய புட்பங்களையும் பக்கத்திலே கட்டி விதானித்து, நட்சத்திரங்கள் போல இடைவிடாமல் ரத்ன தீபங்களேற்றி, அகில் சாம்பிராணித்தூபம் பரி மள சுகந்தம், வெட்டிவேர், விலாமிச்சை வேர், மரு மருக்கொழுந்து முதலானது பரிமளிக்க, ஆனையர சாணி நிறுத்தி, மூளைப்பாலி பூரண கும்பம்வைத்து, மணவறைக்கு முன்னே ஓமகுண்டம் அமைத்து இராம சாமிக்குக் கங்கைமுதலியபுண்ணியதீர்த்தங்கள்கொண்டு வந்து திருமஞ்சனமாட்டிச்சருவாபரணங்களும்பூட்டி நெற்றியில் நாமமுந்தீட்டி மணக்கோலஞ்செய்தார்கள்.

அப்பால் பரதலட்சுமண சத்துருக்கன் மூவருக்குந் திருமஞ்சனமாட்டிச் சகல ஆபரணங்களும் பூட்டி, மாப்பிளைக் கோலஞ் செய்தார்கள். பின் சீதாபிராட்டிக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து ஆடையாபரணங்கள் அணிந்தும், சனகராஜா தம்பி குசத்துவசன் என்னும் அரசன் மக்கள் ஊர்மிளை, மாண்டவி, சுதகீர்த்தி என்னும் பெண்களுக்கும் அவ்விதமே மணக்கோலம் செய்தும், நான்கு பெண்களையும், நான்கு மாப்பிளைகளையும் மணவறையில் எழுந்தருளச் செய்து, வலம்புரிச் சங்கம், நாதசுரம், தித்தி, புல்லாங்குழல், தவில் முதலிய முப்பத்திரண்டு வகை வாத்திய முழங்க, வதிஷ்டர், விசுவாமித்திரர், கௌதமர், சதானந்தர் முதலிய ரிஷிகளிருந்து ஓமகுண்டத்தில் அக்கினி வளர்த்தி, உறவின் முறையார், ஐம்பத்தைந்து தேசத்தரசர்கள், மந்திரிகள் மற்ற சகலரும் மணவறையைச் சூழ்ந்திருக்க. இராமசாமிக்கு வலப்பக்கம் சீதையை எழுந்தருளச் செய்து வலம்புரிச்சங்க முழங்க, முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள், கின்னர, கிம்புருடர் சித்த வித்தியாதரர் ஏகாதசருத்திரர், துவாத சாதித்தர், அஷ்டவசுக்கள், முதலியோர் புஷ்பமாரி பொழிய சனகராஜா தாரை வார்த்துக்கொடுக்க, நல்ல லக்கினத்தில் வதிஷ்ட முனிவர் மாங்கல்ய மெடுத்து ராமசாமி கையிற் கொடுத்துச் சீதாபிராட்டிக்குத் திருப்பூட்டச் செய்தும், மற்றும் வதிஷ்டரே லட்சுமணனுக்கு மாங்கல்யங்கொடுத்து ஊர்மிளைக்குத்திருப்பூட்டவும், பரதன் மாண்டவிக்குத் திருப்பூட்டவும், சத்துருக்கன், சுதகீர்த்திக்குத் திருப்பூட்டவும் செய்து, ஒவ்வொருமாப்பிள்ளையும் தங்கடங்கள் மனைவியர் கைப்பிடித்து எழுந்து மணவறையையும் அக்கினியையும்வலம்வந்து, அம்மி மிதித்து அருந்ததி பார்த்து,

விருத்தம்.

வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்பொரி செய்வன செய்பொருண் முற்றி
இலங்கொளி யம்மி மிதித்தெதிர் நின்ற
கலங்கலில் கற்பி னருந்ததி கண்டார்.

ஷை

ஆர்த்தன பேரிக ளார்த்தன சங்கம்
ஆர்த்தன நான்மறை யார்த்தன வானோர்
ஆர்த்தன பல்கலை யார்த்தன பல்லாண்
டார்த்தன வண்டின மார்த்தன வேலை.

வசனம்.

சபையிலுள்ள சகலரையும் வணங்க, அவர்கள் ஆசீர்வதித்து முறைப்படி மணமிட்டு வாழ்த்தினர்கள். பின் சனகராஜா அன்னதானம், சொர்னதானம், வஸ்திரதானம், பூதானம், கோதானம், கன்னிகா தானம் முதலியதும் வழங்கி, வந்தவர்களுக் கெல்லாம் சந்தனம் பனிநீர் புஷ்பம் தாம்பூலங் கொடுத்து, அனைவருக்கும் அறுசுவை யுண்டி யளித்து உபசரித்தனர். அதன்பின் கல்யாண மகோற்சவந்தரிசித்தவர்கள் தங் கடங்கள் இடம் சேர்ந்தார்கள் சூரியனு மறைந்தான். அன்றிரவில் பள்ளியறை யலங்கரித்து, அம்சதூளிகா பஞ்சணையில் காம்பரிந்த பலமலர் பரப்பி, அதில் ராமசாமியும் சீதையும், மதனும் ரதியும் போல கூடி, இன்பக்கடலிலே மூழ்கினவர்களா யிருந்து, நித்திரை செய்தெழுந்தார்கள். அப்போது சீதாபிராட்டி தன் மனோபீஷ்டம் நிறைவேற்றியும் மறுபடியும் ஒன்றை நினைத்துக் கொண்டு தான் அணிந்திருந்த கற்பதித்த ஆபரணங்களைக் கழற்றிப் பஞ்சணைமெத்தையின் கீழேவைத்

திருந்தாள். அப்போது சுவாமி விழித்துச் சீதையைப் பார்த்துப் பெண்ணே! உன் ஆபரணங்க ளெங்கே யென்று கேட்டார். சீதையானவள் பேச நாணமுற்றுத் தலைகவிழ்ந்து கொண்டு சுவாமி! தேவரீர் மிதிலாபுரிக் குவருகிறபோது, வழியில் கேவலம் ஓர் கருங்கல், சுவாமியவர்கள் பாதத்தூள் பட்டவுடனே, நல்ல ரூபலாவண்யமுள்ள பெண்ணாகினதென்று கேள்வியுற்றேன் அதனாலே இப்போது நான் பூண்டிருக்கிற ஆபரணங்களில் விலையதிகம் பெற்ற நவரத்தினக் கற்கள் பதித்திருப்பதால், அக்கற்களில் சுவாமியின் கால் முதலிய தேகபரிசம் படுமாகில் எத்தகைய மாதர்கள் உற்பவிப்பார்களோ? அவர்களைப் பார்த்தவுடனே அடியாள்பேரிலுள்ள விருப்பந் தவறிவிடுமோ, என்ற சந்தேகங் கொண்டு, அவைகளைக் கழற்றி வைத்தே னென்றாள். அப்போது சுவாமி சீதையின் யோசனையை வியந்து, சந்தோஷமடைந்து, பக்கத்திலே தழுவி வைத்துக் கொண்டு, தன்னுடைய கையினலந்த ரத்னாபரணங்களை யெல்லாம் எடுத்துப் பூட்டி, அவளுடைய மனந் திருப்தியாகும்படிச் சொல்லுவார். எனதன்பிற் குகந்த பெண்ணே! இந்தக் கற்கள் அப்படிப் பெண்ணாகப் போகிறது மில்லை, நான் இந்தச் சன்மத்தில் உன்னையல்லாது வேறொரு ஸ்திரீகளை நினைப்பது மில்லை யென்று சந்தேகத்தை மாற்றிச் சந்தோஷப்படுத்தினார். மறுநாளுதைய காலத்திலெழுந்து ஸ்நானம் அனுஷ்டான ஜெபதபங்களை முடித்துக் கொண்டிருக்க, பாத சத்துருக்க லட்சுமணரும் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு, நாலாநாட் சடங்கு மஞ்சணீர் விளையாட்டுச் செய்து, உண்டு களித்திருந்தார்கள். அப்போது பட்டணமுழுவதும் தீபமயமாய்ச் செய்வித்து, நான்கு மாப்

பிள்ளைமாரும், அவரவர்கள் தேவிமாரும் ரதத்திலாரோகணிக்க, அணியணியாக பதினெட்டு வகை மேளவாத்தியங்கள் முழங்க நீவட்டி பகவத்தி மத்தாப்பு வாணங்கள் முதலியவை எங்கு பார்க்கினும் பிரகாசஞ் செய்ய அந்தணர் வேத பாராயண முழக்க, தெய்வரம்பையர்கள் நடனஞ் செய்ய வெகு ஆடம்பரமாய் மிதிலாபுரியைவலமாகப் பவனி வந்து ரதம் விட்டிறங்கினவுடன் மங்கிலியப்பெண்டுகள் திட்டி சுற்றி ஆலத்தி யெடுத்தார்கள். மாப்பிள்ளைமார் பெண்கள் வதிஷ்டர் விசுவாமித்திரர் முதலிய ரிஷிகளையும், தசரதர், சனகராஜா மந்திரி முதலிய பெரியோர்களையும் கௌசலை, கைகேசி, சுமித்திரை முதலிய தாய்மாரனைவரையும், முறைப்படி நமஸ்காரம்செய்து, அவரவர்களும் ஆசீர்வதிக்கப் பெற்றுச் சந்தோஷமாக அரண்மனைக்குட் புகுந்தார்கள். பிறகு சகலரும் போசனமருந்திக் களபகஸ்தூரி முதலான வாசனைகளணிந்து, தாம்பூலந்தரித்தான பின், சிலநாளங்கிருந்து பின்பு அயோத்தியாபுரிக்குப் பிரயாணமாகி, சனகமகராஜா சீதன முதலாகிய வரிசைகள் கொடுக்கப் பெற்று, தாய்மார்களும், மணப்பெண்களும் பல்லக்கிலேறி வர, மாப்பிள்ளைமாரும் ராசா தசரதரும் தேர்களிலேறிக் கொண்டும், வதிஷ்டர் முதலிய மகரிஷிகள் விமானங்களிலேறி வரவும், மற்ற ராஜாக்கள் மந்திரிமார், பட்டவர்த்தனர், மகுட வர்த்தனர் முதலியோர் சனகராஜா விடத்திலும், அவர் தம்பி குசத்துவ மகாராஜா விடத்திலும் விடை பெற்றுக் கொண்டு அயோத்தியாபுரியை நோக்கி வருகிறார்கள்.

## பரசுராமப் படலம்.

இந்த வண்ணம் சதுரங்க சேனைகளுடன் புறப்பட்டு வருகிற ஆரவாரத்தைப்பரசுராமன் கேள்வியுற்று

சீக்கிரம் தன் வில்லை வளைத்து நாணேற்றிக் கொண்டு வந்து தசரதமகாராஜனை மறித்துக் கொண்டு சொல்லு கின்றான். அடா தசரதா! நீ எனக்குக் கொடுக்க வேண் டிய இருபத்தோராம் பழியையிப்போது கொடுத்தாலாச் சுது, இல்லாதிருந்தா லுன்னை விடுகிறதில்லை யென்று போராட வருகிற பரசுராமனைக்கண்டு, தசரதர் பயந்து, வருத்தமுற்றிருக்கிறதை, இராமபிரானறிந்து, சீக்கிர மோடி வந்து, தந்தையை நமஸ்காரஞ் செய்து, தேவ ரீர் இவனைக்கண்டு அஞ்சிப் பயப்படுகின்றதை அடியே னுக்கு அறிவிக்க வேண்டு மென்று கேட்ட, இராம னுக்குத் தசரதர் சொல்லுவார். இராமா! இவன் பெயர் பரசுராமன் சமதக்கினி முனிவருடைய புத்திரன், தாய் பெயர் ரேணுகை, இவன் தந்தை செய்கிற பூஜைக்கு, இவன் தாயார் கற்பின் மகத்துவத்தால், கங்கையைக் கையாற் றிரட்டி யெடுத்துக் கொண்டு வந்து கொடுப் பாள். இப்படி நடந்து வருகிற நாளையில் ஒரு நாள் கங்கை திரட்டப்போய்த் தண்ணீரி னிற்கும்போது நம் வம்மிசத்துக் கார்த்த வீர்யார்ச்சுன னனவன், ஆகாயத் தில் வருகிறபோது அவனுடைய நிழலை அந்த ஜலத் திற்கண்டாள். கண்டதும் இப்படித் திடசாத்திர புரு ஷர்களு முண்டோ வென்று காமுற்று நினைத்தாள். நினைத்தவுடன் கற்புக் கெட்டுப் போய்விட்டது. அத னால் அவள் வழக்கம் போற் கங்கையைத் திரட்டவரா தபடியால், ரிஷியிடத்தில் வந்து சுவாமி! ஏதோ இன் றையத்தின ந் தண்ணீர் திரட்ட வரவில்லை நானென்ன செய்வேனென்றழுது கொண்டு முனிவரிடம் சொல்ல, முனிவர் கோபித்து இவளுடைய கற்புக்கு இன்று பங் கம் வந்து விட்டதென்று பரசுராமனை யழைத்து, இவ ளைக் கொண்டுபோய்ச் சிரசைத் துண்டித்து விட்டுவா

வென்று உத்திரவு செய்தார் அப்படியே இவன் தாயா ரென்றும்பாராமல், தந்தை வாக்கியந்தட்டாமல் காட்டிற்குக் கூட்டிப் போய்த் தாயின் றலையைவெட்டிவிட்டு வந்தான். அவளுடைய சிரசு ஆகாயத்திற் கிளம்பி மறு வனத்திலே போய் விழுந்தது. அவள் சிரசை வெட்டுகிற விசையால், ஆகாயமார்க்கமாய்க் கிளம்பினது இவனுக்குத் தெரியும் இன்ன இடத்தில் விழுந்தது என்பது மட்டும் தெரியாது. பிறகுஇவன் தந்தையிடத்தில் வந்து, தேவரீருத்திரவின்படி செய்து வந்தேனென்று சொன்னான்.

தந்தை இவன்பேரிற் சந்தோஷமாகித் தாய் என்றும் பாராமல் நம்முடைய வாக்கின்படி நடத்தி வந்தானே என்று நினைத்து, அப்பா பரசுராமா! உனக்கு வேண்டிய வரமென்னவென்று கேட்கப் பரசுராமன், தந்தையே! என்னுடைய தாயாரை எழுப்பித் தரவேண்டுமென்று கேட்டான். முனிவர் நல்லதென்று சீக்கிரம் போய் உன் தாயாரின் தலையையெடுத்து, உடலிலே பொருதிக் கூட்டிவாவென்று கட்டளையிட்டார். அப்படியே பரசுராமன் சீக்கிரம்போய்த் தன்றாயினுடலைக் கண்டான். தலையை அந்தவனமெல்லாந் தேடிக் காணமற் றிரிகிறபோது, யாதோவொரு காரணத்தால் ஒரு புலைச்சியின் றலையை அந்த வனத்தில் வெட்டிக் கிடக்கக்கண்டு, அந்தத் தலையைத் தன் தாயின் றலையென்றறியாமல், இவன் தாயாருடலிலே பொருதிக் கூட்டிவந்தான். தந்தை சிரித்து அடா சிறுவனே! பறைச்சி தலையை எடுத்தல்லவா உன் தாயினுடலிலே பொருதிக் கூட்டிவந்தாய், ஆனால் "எண்சாணுடம்பிற்குச் சிரசே பிரதானம்" என்றதுபோல், இவள் முழுதும் பறைச்சியே யல்லாது வேறல்ல, இவளைத் தூரத்திற்

கொண்டுபோய் விட்டுவிடு. உன்னுடைய தாயார் தலையானது, அந்த வனத்திற்கு மேற்புறத்திலே ஒரு மலையடிவாரத்திற் கிடக்கிறது. இனி உடலில்லாத தலையைக் கொண்டுவந்து என்ன செய்கிறது? இங்கே யொரு கோவிற்கட்டி அதில் இந்தத் தலையைவைத்து, நாட்டின் எல்லையம்மனென்று பெயரிட்டுவாவென்றூர், அப்படியே பரசுராமன் போய் அந்தத் தலையையெடுத்து ரிஷி சொற்படி செய்துவந்தான்.

பிறகிந்தப் பரசுராமன் தன்னுடைய தாயை இப்படிச் சிரச்சேதம் பண்ணும்படிச் செய்த கார்த்தவீரியார்ச்சுனனை விடுகிறதில்லை என்று, தன் படைகளுடன் வில் அஸ்திரங்களை எடுத்துக்கொண்டு யுத்தஞ்செய்யப் புறப்பட்டு, கார்த்தவீரியார்ச்சுனனுடன் யுத்தஞ்செய்து, அவனையுங் கொன்று, பின்னும் ஆக்ரமித்து, இவன் மட்டிலும் விடுவேனே இன்னும் இருபத்தொரு தலைமுறை ராஜாக்களையுங் கருவறுக்கிறேனென்று புறப்பட்டு, இருபது தலைமுறை அரசர்களையுங் கொன்று, இருபத்தோராவது தலைமுறை அரசனான என்னையுங் கருவறுக்கவேண்டுமென்று தேடிவந்தான். நான் பயந்து ஓடிமறைந்துகொண்டேன். அப்போது இவன் நீ எங்கே தப்பினாய் உன்னுயிர் வாங்காதிருந்தால் என்னுடைய சபதம் எப்படி நிறைவேறுமென்று சொல்லிச் சினங்கொண்டு போயினன். இன்னுமொரு பழி கொடுக்கவேண்டியதால் இவன் வழிமறிக்கிறானென்று தசரதர் மனம்பதறிச் சொல்லுகிறதை இராமன் கேட்டுத் தேவரீர் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். சாமர்த்தியமில்லாத புதல்வரைப் பெற்றவர்களுக்கல்லவோ கவலைவேண்டும்; அடியேனைப் பெற்ற தேவர்ருக்குக் கவலைவேண்டியதில்லை. இதோ பாரும் நேரங் கடிகைக்

குள் இந்தப் பரசுராமனை அதம் செய்துவிடுகிறேன் என்று, தந்தைக்கித் திடஞ்சொல்லிவிட்டு, அந்தப் பரசு ராமனிடத்திற் சென்று, அவனுரடா பழிகேட்கிறவன்? நீ சுத்த வீரனேயானுற் கிட்டிவாடா என்று இடிமுழக் கம்போற் சொன்னுன். அப்போது பரசுராமன் நகை த்து வாடா ராமா! எத்தனையோ மன்னர்கள் என்னுட னெதிர்க்கமாட்டாமல், புறங்கொடுத்தோடினவர்களும், யுத்தஞ்செய்து இறந்தவர்களுமுண்டு; அப்படியிருக்க நீ மிதிலையிலே ஒரு சொத்தை வில்லை முறித்துவிட்டுச் சீதையைக் கல்யாணஞ்செய்துகொண்டு வந்தோமென் கிற ஆணவத்தால், நெஞ்சு மஞ்சாமல் என்னுடன் எதிர்த்தாயல்லவா? நல்லது இப்போது என் கையி லிருக்கிற வில்லை வளைந்து நாணேற்றினுல், நீ நல்ல வீரன்ருன், சூரியகுலத் தரசர்களில் உன்னை நிரம்ப மெச்சுவேனென்று பரசுராமன் சொல்ல, இராமசாமி நகைத்துப் பரசுராமா! உன்னுடைய சாமர்த்தியத்தை நீ தான் மெச்சவேண்டும், ஆனல் நீ சமதக்னி மகரிஷி யினுடைய புத்திரனுனல் அதற்குத்தகுந்தவாறு சபதஞ் சொல்லுவாயென்று சொல்ல, பரசுராமன் அதிக உக்கி ரங்கொண்டு அடே ராமா! என்ன சொன்னுயென்று பற் களை நெறுநெறுவென்று கடித்து, ஆக்ரமித்துச்சொல் லுவான். வாடா ராமா! நீ இந்த வில்லை வளைத்து நாணேற்றினுயானுல், உன் தந்தை பழியையும் விட்டு, நான் பண்ணின தவமும், இந்த வில்லையுமிழந்துபோ கிறேனென்றும்; நீ நாணேற்ருதுபோனுல் உன்னையும் உன்னுடைய சேனைகளையுங் கொன்று பழி வாங்காமல் விடுகிறதில்லையென்றும், சபதஞ்சொல்லி வில்லை ராம சாமி கையிற் கொடுத்தான். அந்த வில்லை சாமி வாங் குகிறபோது, பரசுராமனுடைய பலத்தையும் கூடவே வாங்கி, வில்லை நாணேற்றிச் சிறு நாணெலிகாட்டினுன்.

அந்தச் சப்தமானது இடி முழக்கம் போலத் தேவலோகமெல்லாங் கேட்டு, ராவணனுடைய செவியிலுங் கேட்டது. அப்போது தேவர்களெல்லாம் பயந்து நடுநடுங்கி, இந்தச் சப்தமானது இன்னதென்றறியாதிருந்தார்கள். அந்நேரம் பரசுராமன் பலங்கெட்டுத் தவசையுங் கொடுத்து நிற்கமாட்டாமல், இராமசாமியைத் தோத்திரஞ் செய்து கொண்டு ஒரு மலையடிவாரத்திற்போய்த் தவம் பண்ணிக் கொண்டிருந்தான். பின்னால் இராமபிரான் அந்த வில்லைப் பின்னொருகாலத்திற்காகுமென்று வருணன் கையிற் கொடுத்து விட்டுத், தந்தையின் பாதத்தில் நமஸ்காரஞ் செய்து தேவர்களுடைய பழியை நீக்கி, அந்தப் பரசுராமனுடைய பலத்தையும்வாங்கி வந்தேனென்று சொன்னார். அப்போது ராமசுவாமியை வாரி யெடுத்து மார்போடணைத்துக் கொண்டு சொல்லுவார்.

விருத்தம்.

பரிவறு சிந்தையப் பரசு ராமன்கை
வரிசிலை வாங்கியோர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவிநின் றுச்சி மோந்து தன்
அருவியங் கண்ணெனுங் கலச மாட்டினான்.

வசனம்.

என்னுடைய மனக்கிலேசந் தீர்த்த மகனேயென்று, ஆசீர்வதித்துத் தேரி லேறும்படி ஆக்ஞாபித்து, வசிஷ்டர் முதலாகிய ரிஷிகளும், சதுரங்கச் சேனைகளும் அவிடம் விட்டுப்புறப்பட்டு அயோத்தியாபுரி நோக்கி வந்தார்கள்.

பாலகாண்டம் முற்றுப் பெற்றது.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

கம்பநாட் டாழ்வார் திருவடிகளே சரணம்.

இரண்டாவது

# அயோத்தியா காண்டம்.

காப்பு.

வானின் றிழிந்து வரம்பி கந்த
மாபூதத்தின் வைப் பெங்கும்
ஊனுமுயிரு முணர்வும்போ
லுள்ளனம்புறத்து முளனென்ப
கூனுஞ்சிறிய கோத்தாயுங்
கொடுமையிழைப்பக் கோற்றுறந்து
கானுங் கடனுங் கடந்திமையோ
ரிடுக்கண்களைந்த கழல்வேந்தை.

வசனம்.

மந்திரப்படலம்.

அயோத்தியாபுரிப் பட்டணம் சேர்ந்து, சகல ஆடம்பரத்துடனே பட்டணப் பிரவேசம் வந்து, சந்தோஷமாக இருக்கிற நாளையில், தசரதர் பரதனை நோக்கி, அப்பா பரதா! கேகய நாட்டு அரசனாகிய உன் பாட்டனார் உன்னைப் பார்க்கவேணுமென்று, ஓலை எழுதி யனுப்பியிருக்கிறார். ஆனதால் உன்னுடைய சேனையைக் கூட்டிக்கொண்டு போய்வா வென்றவுடன்,

பரதன் நல்லதென்று சத்துருக்கனை அழைத்துக் கொண்டு, தன்னுடைய சேனைகளிற் சிலவற்றைக் கூட்டிப் புறப்பட்டுக் கேகய நாட்டுக்குப் போய்ச்சேர்ந்தான்.

அரண்மனையில் ராஜநீதியாக மங்களமாயிருந்தார்கள். இப்படி இருக்கிற நாளையில், தசரதர் குருவாகிய வதிஷ்டரைப் பார்த்துச் சுவாமி! அடியேன் இதுவரை சகல பாக்கியங்களையும் அனுபவித்து ராச்சிய பரிபாலனம் செய்துவந்தேன். இனிமேல் இந்தப் பூபாரந் தாங்க என்னால் முடியாது, மூத்த குமாரன் இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவைக்கலாம் என்று எண்ணுகிறேன் தாங்கள் என்ன சொல்கிறீர்களென; அதற்கு வதிஷ்டர் உன் மனோபீஷ்டம்போற் செய்வோமென்று சொல்லி, மந்திரிமார் காரியக்காரர் முதலாகிய சகலபேர்களுஞ் சந்தோஷங்கொள்ள நல்ல முகூர்த்தமிட்டுச் சுமந்திரனாகிய மந்திரியினிடத்திற் பட்டாபிஷேக மண்டபமெல்லாம் சிங்காரிக்கச் சொல்லிக் கட்டளையிட்டார்.

## மந்தரை சூட்சிப்படலம்.

அப்படியே மந்திரி பட்டாபிஷேகத்திற்குண்டான சாமான்கள் சேகரித்து, ராஜாவிடத்திற் றெரிவித்தான். இது சேதிகளை மந்தரை என்னுங் கூனியானவளறிந்து இராமன் விளையாடுகிறபோது கூனியினுடைய கூனலைப்பார்த்துச் சுண்டு வில்லுண்டை கொண்டு தெறித்தானல்லவா, அந்த வர்மந்தீர ஒரு உபாயஞ் செய்தாள். எப்படியெனில் :—அவிடம் விட்டுச் சீக்கிரம் எழுந்துபோய்க் கைகேசி பிராட்டியாரிடம் நின்று, அம்மா! ஒரு விசேடஞ் சொல்லுகிறேன். சற்றே தயவு செய்து கேட்டருளவேண்டும்.

விருத்தம்.

சிவந்தவாய்ச் சீதையுங் கரிய செம்மலும்
நிவந்தவா சனத்தினி திருப்ப நின்மகன்
அவந்தனுப் வெறுநிலத் திருக்க லானபோ
துவந்தவா றெண்ணிதற் குறுதி யாதென்றாள்.

ஷ

மறந்திலள் கோசலை யுறுதி மைந்தனும்
சிறந்தநற் றிருவினிற் றிருவு மெய்தினன்
இறந்தில னிருந்தன னென்செய் தாற்றுவான்
பிறந்திலன் பரதநீ பெற்ற தாலென்றாள்.

வசனம்.

தாயே! இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதாக, ராஜாவும் மற்ற பெரியோர்களும், நிச்சயித்திருக்கிறார்களென்றாள். அப்போது கைகேசி நல்லதென்று சந்தோஷமாயிருந்தாள். பின் கூனி சொல்லுவாள், நான் சொன்னதற்கு மறுமொழி சொல்லாமல் சந்தோஷமாயிருந்தாயேயல்லது பதிலொன்றுஞ்சொல்லவில்லையே யென்றாள். அப்போது கைகேசி அதற்கென்னடி சொல்கிறது! இராமனுக்குப் பட்டங்கட்டினால், நமக்கும் மற்ற யாவருக்கும் சந்தோஷமேயல்லாது வேறென்னவென்றாள். பிறகு கூனி இராமனுக்குப்பட்டங் கட்டினால் உன் மகன் அவனுக்கு ஊழியஞ்செய்வது! அவன் தாய்க்கு நீ ஊழியஞ்செய்வது! அவ்வீட்டுப் புழுக்கச்சி உனக்கு நான் ஊழியஞ் செய்வது! இப்படி நாமெல்லாருஞ் சிரமப்படுவது தான் சந்தோஷமோ? ஆனால் இந்த விஷயம் உனக்குச் சம்மதமானாலும், எனக்கு லச்சைக் கேடாயிருக்கிறதென் றழுதாள். அப்போது கைகேசி சொல்லுவாள் அடி கூனி! உன் அறிவுக்குத் தசகபடி யோசனை செய்தாயே யல்லது வேறல்ல, மூத்தவனிருக்க இளையவனுக்குப் பட்டஞ்

கட்டுவார்களோ? 'புழுக்கை யொழுக்க மறியாது' என்கிற புத்தியைக் காட்டி விட்டாயே யென்றாள்.

கூனி சொல்லுவாள் அம்மா! உன் மகன் பரதனுக்குப் பட்டங்கட்டும்படி நானொரு உபாயஞ் சொல்லுகிறேன் நீ அந்தப்படிச் செய்யென்றாள். கைகேசி நகைத்து, நானோ பெண்ணாய்ப் பிறந்தவள், நீ என் வீட்டுப்புழுக்கச்சி, நீயும் நானுங்கூடி யோசனைசெய்து என்னகாரியம் முடிக்கப் போகிறோ மென்றாள். அப்போது கூனி ஆனாலும் நானொரு உபாயஞ் சொல்லுகிறேன் அதைக் கேள். முன் சம்பரா சூரனோடு ராஜாயுத்தம்பண்ணுகிறபோது, நீ சாரத்தியஞ் செய்த காலத்தில், ராஜா சந்தோஷமடைந்து உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் தருகிறேனென்று சொல்ல, நீ எனக்குச் சமையம் வந்தபோது இரண்டு வரங் கேட்பேன் தரவேணுமென்று, கேட்டுக் கொண்டபடி தருகிறேனென்றாரே, அந்த வரத்தை இப்போது தரவேணுமென்று கேள். அவர் என்னவரம் வேணு மென்று கேட்பார், அப்போது நீ என் மகன் பரதனுக்குப் பட்டங்கட்டுகிற தொரு வரமும், இராமனைப் பதினான்கு வருஷம் வனவாசஞ் செய்யப் போகச் சொல்லுகிற தொரு வரமும், இந்த இரண்டு வரமுங்கேள், இதுதான் தந்திரம், இதை மறந்துவிடாதே, இந்தப்படியே கேளென்று சொன்ன கூனி வார்த்தையைக் கேட்டுக் கைகேசி மதிமயங்கி நல்லயோசனை சொன்னா யென்று சம்மதித்து, மனத்தைத் தைரியப் படுத்திக் கொண்டிருந்தாள்.

## கைகேசி சூழ்வினைப் படலம்.

தசரதர் அன்று கைகேசி யரண்மனையில் வந்து மஞ்சத்தில் சயனித்திருக்கும்போது, கைகேசியானவள்

கூனியின் துற்போதனையால் மதிமயங்கி நாயகனுக்கு, யாதொரு உபசாரமும் செய்யாமல் முகவாட்டமாயிருக்கிறதைப் பார்த்துத் தசரதர். பெண்ணே! நீ இப்படிக் கவலையுடனிருக்க வேண்டிய காரண மென்ன வென்று கேட்க, அப்போது கைகேசி சொல்லுவாள். தேவரீர் அடியாளுக்கு முன் இரண்டு வரந்தருவதாக வாக்களித்திருந்திரல்லவா, அந்த இரண்டு வரமும் இப்போது தரவேணுமென்று கேட்டாள். இராஜா என்ன வரம் வேணுமென்று கேட்க, கைகேசி என் மகன் பரதனுக்குப்பட்டங் கட்டுகிறதொரு வரமும், இராமனைப் பதினுன்கு வருஷம் வனவாசஞ் செய்யப்போகச் சொல்லுகிறதொரு வரமும், இந்த இரண்டு வரமுந் தரவேணுமென்று கேட்டாள். அப்போது அரசன் மனங்கலங்கிச்சொல்லுவார், அடி கைகேசி! உனக்கு இந்த இரண்டுவரமுங் கேட்க அடுக்குமோ? வேறு வரங்களைக் கேட்கக்கூடாதா? நம்முடைய வம்மிசத்தில் மூத்தவனிருக்க இளையவனுக்குப் பட்டங் கட்டுவார்களா? அப்படியானல் தருமசாஸ்திரத்திற் கடுக்குமா? இராமனை வனத்திற்குப் போகச் சொல்ல வேண்டிய காரணமென்ன? என்று கேட்டார். அப்போது கைகேசி, நீர் தருவதாகச் சொன்ன வார்த்தையைக் கேட்டால், அதை விட்டு மறுவசனஞ் சொல்லுகிறது தரும சாஸ்திரத்திற்கடுக்குமா? அதை அடியாளுக்குச் சொல்ல வேணுமென்று கேட்டுப் பின்னும் நீர் தந்த வரம் இல்லை யென்று சொல்லுகிறீரா? என்று கேட்டாள்.

அப்போது மன்னவன் நீ கேட்டபடியே தந்தோம். நீ எனக்கு ஒரு வரம் தரவேணும் அது என்ன வென்றல்:—உன்மகன் பரதன் பட்டமாள்கிறதுசரியே இராமனை வனத்திற்குப் போகாமல், பட்டணத்திலே

யேயிருக்கும்படியா யோர் வரமுந்தர வேண்டுமென்று கைகேசி கையைப்பிடித்துக் கொண்டு கேட்டார். அப்போது கைகேசி வேந்தன் கையை யுதறிவிட்டு நீர் தந்த வரத்தை யில்லையென்று தப்புகிறீரோ வென்று அப்பாலே போனாள். அட்சணமே தசரதர் மதிமயங்கி நாமென்ன நினைக்க என்ன காரியம் வந்த தென்று மனநிலை தடுமாறி மெத்தையிற் சாய்ந்தார். அப்பொழுது கைகேசி ராமசுவாமியை யழைத்துவரச் சொன்னாள், தோழி போய்ச் சொல்ல இராமபிரா னெழுந்து வந்து தாயே! அடியேனை யழைத்த காரணம் உத்தரவாக வேண்டுமெனக் கேட்க கைகேசி சொல்லுகிறாள்.

விருத்தம்.

ஆழிசூ ழுலகமெல்லாம் பரதனே யாளநீபோய்த்
தாழிருஞ் சடைக டாங்கித்தாங்கருந் தவமேற்கொண்டு
பூழிவெங் கான நண்ணிப் புண்ணியத் துறைகளாடி
ஏழிரண் டாண்டின் வாவென் றியம்பின னரசனென்-
[றாள்.

வசனம்.

நகர் நீங்கு படலம்.

அப்பா இராமா! உன் தகப்பனார் என் மகன் பரதனை இந்த ஆழி சூழ்ந்த உலகமெல்லாம் அரசாளும்படியும், உன்னைத் தவவடிவம் பூண்டு பதினாலுவருடம் வனவாசம் செய்து வரச் சொல்லியுங் கட்டளையிட்டார் அப்படியே போய்வா வென்றாள். இப்படிச் சொன்னவுடனே இராமசாமியினுடைய முகமானது அலர்ந்த செந்தாமரைப் புட்பம் போன்று, இன்றைக்குப் பட்டாபிஷேக மென்றதும், நாளை வனவாசம் போவென்றதும், நான் செய்த பாக்கியமே யல்லது வேறில்லை யென்று, அதிக சந்தோஷத்துடனே கைகேசியைப் பார்த்து,

விருத்தம்.

மன்னவன் பணியன்றாகி னும்பணி மறப்பனோவென்
பின்னவன் பெற்றசெல்வ மடியனேன் பெற்றதன்றோ
என்னினியுறுதியப்பா லிப்பணி தலைமேற்கொண்டேன்
மின்னொளிர் கானமின்றே போகின்றேன் விடையுங்-
[கொண்டேன்.

வசனம்.

தாயே! என் தந்தை என்னை வனவாசம் போகச் சொன்னாரென்று சொன்ன தென்ன? உம்முடைய வாக்குக்குத் தடை செய்வேனோ? தம்பி பரதன் பெற்ற செல்வம் நான் பெறவில்லையோ வென்று, கைகேசி பாதத்தில் நமஸ்காரம் பண்ணி, அடியேன் போய் வருகிறேன் தாயே யென்றார். கைகேசி தடையென்ன விருக்கிறது? இப்போதே புறப்படு வென்றாள். அது கேட்ட சுவாமி கைகேசி யிடம்விடை பெற்றுக்கொண்டு, அரண்மனையிற்போய், தாயார் கௌசலையின் பாதத்தில் நமஸ்காரம்பண்ணி நடந்தவிஷயத்தைச்சொன்னார். கோசலை கேட்டு மூத்தவனிருக்க, இளையவனுக்குப் பட்டங்கட்டுகிறதெப்படி? நீதி தப்பி இந்த யோசனை முடித்தவர் யாரென்றும், அவர்களறியாததற்கு நாமென்ன சொல்லுகிற தென்றும், பேசிக்கொண்டிருக்கிறபோது, இராமன் ஆடையாபரணங்க ளெல்லாங் கழற்றி வைத்துவிட்டு, ஆயுதத்துடனே மரவுரியுஞ் சடாமவுலியுந் தரித்துத் தவவடிவம் பூண்டு வெளியிலே புறப்பட்டு வருகிறபோது, தாயார் கௌசலை கண்டு மகனே! இந்தக் கோலமேதென்று அடித்து விழுந்தலறியழுது, மகனை வாரி யெடுத்து மார்போடணைத்துக் கொண்டு மகனே! இந்தக் கோலங் காணவோ இவ்வளவு தவஞ்செய்து பெற்றே னென்று துக்கப் படுகிற தாயைப் பார்த்துச்

சொல்லுவார். தாயே! என்தகப்பனார் என்னை வனவாசம் போகச்சொன்னார் அதனால் நீ யேன் துக்கப் படுகிறாய் வேண்டாமென்று சொல்ல, கௌசலை மறுபடியும் நிலத் திலே வீழ்ந்து மூர்ச்சையாகித் தெளிந்தெழுந்து, என் மகன் அரசாள வில்லையேனும், அரண்மனையிலாவது இருக்கச் சொல்லக்கூடாதா? வனம் போகச் சொன்னீர் களே, இவனாலே வந்த அபகீர்த்தி யென்ன? இந்த யோசனை செய்து முடித்தது யாரென்று அரசனிடம் போனாள்.

விருத்தம்.

மாதர்கள் கற்பின் மிக்கார் கோசலை மனத்தை யொத்தார்
வேதியர் வதிட்ட னொத்தார் வேறுள மகளீ ரெல்லாம்
சீதையை யொத்தா ரன்ன டருவினை யொத்தா ளவ்வூர்
சாதுகை மாந்த ரெல்லாந் தபரதன் றன்னை யொத்தார்.

வசனம்.

அச்சமயம் ராமச்சந்திரன் பயணமாகப் புறப் பட்டுச் சீதையிடம் வருகிறபோது, சீதை கண்டு இந்தக் கோலமேதென்று திகைத்து மயங்குகிறபோது, ராமன் ஜானகியைப் பார்த்து, ஏ சீதா! என் தகப்பனார் என்னை வனவாசம் போகும்படிச் சொன்னதால், நான் போய் வருகிறேன் நீ அரண்மனையிலேயே யிருவென்றுசொன் னவுடனே, ஜானகி மனக்கிலேசமடைந்து, முகத்திலே யறைந்தழுது விதிவசம் இப்படியுமுண்டோ? தங்க ளுக்குப் பட்டாபிஷேகமென்றதும், இப்போது வன வாசமென்று கேட்டதும் என்னமாயிருக்கிறது? இனி யான் செய்வது ஏதிருக்கிறது? என் பத்தாவுக்குள்ள இன்ப துன்பம் எனக்குமுண்டென்று, அரண்மனைக் குட் போய், ஆடையாபரணங்களெல்லாங் கழற்றி வைத்துத் தானும் மரவுரியுஞ் சடாமவுலியுந் தரித்துக்

கொண்டு இராகவனிடம் வந்து நின்றாள். இராகவன் பார்த்துக் கிலேசப்பட்டு, வனங்களில் மிருக சஞ்சார மானதால், இவள் அஞ்சுவாளே என்று நினைத்துச் சீதா! நீ என்னுடனே வனசஞ்சாரஞ் செய்து நிர்வகிக்கமாட்டாய், ஆகையால் நீ அரண்மனையிற்றானே உன் மாமிமார்களுடன் இருந்துகொண்டு, அவர்களுடைய ஏவற்பணிவிடையைக் கேட்டு அதுபோலவே நடந்துகொள்; நீ துயர்ந்து நடந்துவர மாட்டாய், அரண்மனைக்குள் போவென்று சொன்னார். எத்தனை விதஞ் சொல்லியுங் கேளாமல் சீதை கூட வருகிறேனென்கிறபடியால், எனக்கு வனத்திலே எவ்வளவோ இடர்கள் நேரிடும், அப்போது உன்னையுங் கூட்டி எங்கேதிரிவேனென்று சொல்ல, ஜானகி, சுவாமி! என்னை இங்கே விட்டுப்போனாற் சுகமென்றும், கூட்டிப்போனாற் றுன்பமென்றும் சொல்லுகிறீர்கள். தேவரீர் என்னை விட்டுப் போனாலும், அடியாள் உம்மை விட்டுப் பிரிகிற தில்லை என்று முன்னே நடந்தாள். காகுத்தன் சீதை மனமறிந்து தெய்வச்செயலின்படி நடக்குமென்று, ஜானகி பின்னேவர, சிற்றன்னையாகிய சுமித்திரை யிடத்திற் போய்த், தாள் பணிந்து நின்றார்.

அப்போது சுமித்திரை இராமனையும் ஜானகியையும் பார்த்து, மகனே! உனக்கிந்தக் கோலமேதென்று அடியற்ற மரம்போல் விழுந்து புரண்டு, அழுகிற தாயாரை, அழுகையமர்த்தித் தாயே! தந்தையார் பரதனுக்குப் பட்டங்கட்டி இராச்சியமாளும்படியாயும், அடியேனை வனவாசம் போகும்படியாயும், சொல்லியிருக்கிறபடியால், மாதாபிதா வாக்கியந் தவறாமல், வனவாசம் போகிறதற்குத் தடை சொல்லாமல் விடைதந்தருள

வேண்டு மென்று கேட்ட இராமனைப் பார்த்து, அடா மகனே! இதற்கோ அரியதவங்களைச் செய்து உங்களைப் பெற்று வளர்த்தது? நான் எப்படி யுன்னை வனவாசம் போகச்சொல்லுவே னென்று கவலைப்படுகிற சுமித்திரையைப் பார்த்துத் தாயே! காலதாமசமாகிறது, உத்திரவு கொடுக்க வேண்டு மென்று கேட்டார். அப்போது சுமித்திரை சீதையைக்கட்டியணைத்து, உங்களுக்கு இப்படியும் கதிவரலாமோ வென்று துயரப்பட்டுத் தன் மகன் லட்சுமணனைப் பார்த்து, லட்சுமணா! உன் தமையன் இராமனை உன் தந்தையானவர் வனவாசம் போகும்படியாயும், பரதனுக்குப் பட்டங்கட்டி இராச்சியமாளும்படியாயும், கட்டளை யிட்டபடியால், நீயுந் தவவடிவம் பூண்டு உன் தமையன் இராமன்பின் சென்று, அவனுக்கும், அவன் தேவி சீதைக்கும் பணிவிடை செய்து இரவும் பகலுங் காத்துக்கொண்டு இவர்களுக்கொரு ஆபத்து வந்தால், தனக்கு வந்தது போலவு மெண்ணி, அவர்களுக்கு முன்னின்று, குறைவின்றிப் பணிவிடைகள் செய்து வாவென்று, புத்தி சொல்லி லட்சுமணனைத் துணையாகக் கூட்டி யனுப்பினாள். உடனே இராமன் லட்சுமணன் சீதை இவர்கள் மூன்றுபேரும் புறப்பட்டுப் பட்டணமுங் கோட்டையுங் கடந்து போனார்கள்.

அப்போது பட்டணத்திலுண்டாகிய ஜனங்கள் கோவென்றழுதுக் கொண்டு, சுவாமி! உங்கள் பின்னால் நாங்களும் வருகிறோமென்று தொடருகிற குடிகளை இராமன் பார்த்து அழுகை யமர்த்திச் சொல்லுவார். நாம் மாதுர் பிதுர் வாக்கிய ந்தவறாமல் வனவாசம் போனால் நீங்களேன் இப்படி வரவேண்டும்? நீங்கள் யாவரும் நகர்போய்ச் சேருங்கள்; நாம் பதினால் வருடமும் பதி

ளுன்கு நாளாகக் கழித்து வருகிறோ மென்று வேண்டிய புத்திமதிகள் சொல்லி, அவர்களை யனுப்பி விட்டு வெகு தூரங்கடந்து வருகிறபோது, சீதை தொடர்ந்து நடந்துவரக் கூடாமல், கால்களயர்ந்து, இன்னும் வனம் எத்தனை தூரமிருக்கிற தென்று கேட்டாள். இராகவன் நகைத்து இன்னும் வனத்திற் கொஞ்சத் தூரங்கூட நடக்க வில்லையே இதற்குள் இவளிப்படி மலைக்குறளே, இன்னும் வனத்துட் சென்றால், இவளுக்குத் தேறுதல் சொல்லுகிறதெப்படி, இவளுடைய சரீரமிருதுவா யிருக்கிறதே, என்ன செய்யலா மென்று கவலையடைகிறதை லட்சுமணன்கண்டு தமையனுக்கும் தமையன் மனைவிக்கும் தேறுதல் சொல்லி, சீதையின் பாதம் நோகாமல் வழியிற் கிடக்கிற கல் முள்களைஒதுக்கிக் கொண்டு வர நடந்து போனார்கள்.

இராமலட்சுமணள் சீதை மூவரும் வனவாசம் போகிறார்களென்ற சேதி மந்திரி கேட்டு, ஒரு தேரை யலங்கரித்துக் கொண்டு வரச்சொல்லி, சுவாமி பாதம் நோக நடந்து போகிறீரென்று அழுது கொண்டு, சீக்கிரம்போய் வழிமை மறித்துப் பாதத்தில் நமஸ்காரம் பண்ணினர். அப்போது இராகவன் மந்திரிக்கு ஆசீர்வதித்து, நாம் மாதா பிதா வாக்கியம் பரிபாலனஞ் செய்ய வனஞ்சென்றால், நீர் அனைவரையும் அழைத்துக்கொண்டிப்படி வரலாமோ? ஆயினும் நீர் என்மீதுள்ள அன்பினால் வந்ததுஞ்சரியே, இப்போதுநமது சேனைகளை யழைத்துக் கொண்டு, நீர் நகரம் போய், அரசருக்குத் துணையா யிருந்து, இராச்சிய பரிபாலனஞ் செய்யும் நீர் புறப்படுமென்று சொல்ல, மந்திரி பின்னும் நமஸ்காரஞ் செய்து அன்புடனுரைப்பான். சுவாமி! இவர்கள் என் வார்த்தை கேட்கப்பட்டவர்க

ளல்ல, எல்லோரும் உயிரை வெறுத்து வந்தவர்களா னபடியால், சுவாமிதான் புத்திசொல்லி அனுப்பிவைக் கவேண்டுமென்று சொல்லச் சுவாமி சொல்லுவார்.

நம்பேரிலன்பு வைத்து வந்தவர்களைக்கடிந்து சொல்லவும், நிராகரித்துத் தள்ளவுங்கூடாது. ஆனால், நானொருபாயஞ்சொல்லுகிறேன் அப்படிச் செய்தால் சிலாக்கியமாகும்; என்னவென்றால்:—நாங்கள் மூவரு மறைவாகப் பக்கத்தி லிருக்கிறோம். நீர் இரவிற்றானே தேரிலேறிக் கொண்டு, சுவாமியைப் பட்டணத்திற்குக் கூட்டி வருகிறேனென்று சொல்லித், தேரை நடத்தி, யாவரையு மழைத்துக் கொண்டு நகரம் போய்ச்சேரும். நாம் வனவாசம் போய்ப் பதினன்கு வருடம் சென்ற வுடன் வந்து சேருகிறோமென்று, மந்திரிக்கு வேண் டிய புத்திமதிசொல்லி அனுப்ப, மந்திரி ஐயோ! நான் பாவி உங்களை வனத்திற் கனுப்பிவிட்டு, எப்படி ஊர் போய்ச் சேர்வேனென்று, முகத்தி லறைந்து கொண்டு முட்டி விழுந்து புரண்டு அழுது துயரப்பட்டுச், சுவாமி நான் போய் இராஜாவுக்கு என்ன தேறுதல் சொல்வே னென்று கேட்கச் சுவாமி சொல்லுவார். நாம்பதினன் குவருடஞ் சென்றதும் வருகிறோம், நீர் ஒன்றுக்கும் யோசனை பண்ண வேண்டாமென்று சொல்லும், சீக்கி ரம் புறப்படுமென்றார். அப்போது சுமந்திரர் லட்சும ணனைப் பார்த்துத் தந்தைக்குச் சேதியுண்டோவென்று கேட்டார், லட்சுமணர் எங்களைக் காட்டிலே விரட்டிய தகப்பனுக்குச் சேதியென்ன இருக்கிறது! போமென்று கோபமாய்ச் சொன்னார்.

பின்னர் சீதாபிராட்டியைப் பார்த்துத் தாயே நீ சொல்லவேண்டிய சேதி யேதேனுமுண்டோவென்றார் அப்போது சீதை, என் மாமனார் மாமிமாரிடம் நான்

வனவாசம் போய் வருவதாகச் சொல்லிக் கொண்டே னென்றும், என்னை வேண்டி என்றோழிகளிடம் நான் வளர்த்த பஞ்சவர்ணக் கிளியையும், நாகணவாய்ப்பட்சியையும் பாதுகாக்கும்படிச் சொல்லும், பட்சிகள் என்னைக் காணமல் பால் பழம் உண்ணும லிளைத்துப்போகும். நான் வைத்திருப்பதுபோல வைத்திருக்கச்சொல்லும், நான் விளையாடுகிற பந்துகள், அம்மானை, பண்ணுங்குழி முதலிய விளையாட்டுக் கருவிகளைப் பத்திரமாயிருக்கும்படியாயும் சொல்லும், என்று இப்படிச் சொல்லும்போது, சுவாமி கேட்டு உள்ளத்தில் சிறு நகை கொண்டிருந்தார்.

மந்திரி இவைகளைக் கேட்டுக் கண்ணீர் கலங்கி, அடியேன் உங்களை யெப்போது காணப் போகிறேனென்று, கவலை கொண்டு சுவாமி வார்த்தை தட்டாமல் வணங்கி யனுப்பி விட்டு, ஜனங்களிடம் சுவாமியை உடன்படிக்கை பண்ணிக் கூட்டிவருகிறேனென்று பிரஸ்தாபித்துத் தேரிலேறிச் சேனைகளைக் கூட்டிக் கொண்டு சுவாமி வருகிறார் வருகிறுரென்று சொல்லிச் சனங்களை உபாயமாகக் கூட்டிக் கொண்டு பட்டணம் வந்து சேர்ந்தார்.

## கங்கைப் படலம்.

சுமந்திரனுகிய மந்திரியை அனுப்பிவிட்டு ராமபிரானும் லட்சுமணரும் சீதாபிராட்டியும் கங்கைக் கரையில் வந்துசேர்ந்து, இந்தக் கங்கையைக் கடந்தல்லவோ போகவேண்டும் என்று யோசனைபண்ணிக்கொண்டிருக்கிறபோது, சூரியனும் அஸ்தகிரியடைந்தான். அன்று இரா முழுதும் கங்கைக்கரையிலிருந்து, சுவாமி நடந்த விஷயங்களை நினைந்து நித்திரை செய்யாமல், சீதை மடியில் சிரசை வைத்துக்கொண்டு சயனித்திருந்

தார். லட்சுமணர் புறக்காவலாக விழித்துக்கொண்டிருந்தார். இப்படி இராமுழுதும் இருந்து சூரியன் உதையகிரிக் கெழுந்தவுடன் மூன்றுபேரும் காலைக் கடன்களை முடித்துக்கொண்டிருக்கும்போது, அந்தக் கங்கையில் ஓடம் விடுகிறவர்க்கு அதிபதியாகிய குகன் என்பவன் கண்டு, இவர்கள் யாரோ இராஜவடிவாகவும், முகவாட்டமாகவும், ஒருபெண்ணையுங் கூட்டிவந்திருக்கிறார்களே இப்படிவரக் காரணமென்ன? இது விஷயம் நாம் விசாரிக்கவேண்டுமென்று சீக்கிரம் சமீபத்தில் வந்து, அவர்களை நன்றாய்ப் பார்த்து, இவர்கள் தேவ அம்சமாயிருக்கவேண்டும் என்றெண்ணிக் கிட்டவந்து கும்பிட்டான்.

அப்போது லட்சுமணன் குகனைப் பார்த்து நீ யாரப்பாவென்று கேட்க, நான் வேடர் குலம், என் பெயர் குகன், நானிந்தக் கங்கையிலே ஓடம்விடுகிறவனென்று சொல்லி, லட்சுமணரைப் பார்த்து, நீங்கள் யாரையாவென்று கேட்க, லட்சுமணர் சொல்லுவார். நாங்களிருக்கிறது அயோத்தியாபுரி, தசரத மகாராஜாவின் புத்திரர்கள். நாங்கள் நான்கு பேருண்டு, அதிலிரண்டுபேர் ஊரிலிருக்கிறார்கள். இவர் பெயர் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி, இந்த அம்மணி அவருடைய தேவி, பெயர் சீதாலட்சுமி, என் பெயர் லட்சுமணன். எங்கள் தந்தையார் எங்கள் சிற்றன்னை குமாரன் பரதனுக்குப் பட்டங்கட்டும்படியும், எங்களை வனம்போகச் சொல்லியுந் திட்டஞ்செய்தபடியால், நாங்கள் மாதுர் பிதுர் வாக்குத் தவறாமல் இப்படி வந்தோம். ஆனதால் இந்தக் கங்கையைக் கடந்துபோகவேண்டுமே அதற்காக இவிடத்தில் ஒருவரையுங் காணோமே என்று திகைத்திருந்தோம் இப்போது உன்னைக் கண்டோமென்றார்.

குகன் கேட்டு மனமுருகி ஐயோ! உங்களுக்கு இப்படிப்பட்ட வினையும் வரலாமோ என்று விசனப் பட்டு, நீங்கள் இளைப்பாயிருக்கிறீர்களே இருங்களென்று தான் சீக்கிரம் ஓடிப்போய் ஒரு தட்டிலே பச்சை மீனும், ஒரு தட்டிலே கிழங்கும், மற்ற கனிவர்க்கங்களும், ஒரு கலசத்தில் தேனும் கொண்டுவந்து வைத்துப் புசியுங்களென்று உபசரித்தான். அப்போது லட்சுமணர் சுவாமியின் முகத்தைப் பார்த்தார், சுவாமி குகனுடைய பக்தியையும், விசுவாசத்தையும் அறிந்து பக்தியே பிரதானமென்று, அந்த மீன் எங்களுக்கு வேண்டாம் மற்ற தேன், பழம், கிழங்கு கொடுவென்று வாங்கி, சுவாமியும் சீதையும் கனிவர்க்கங்களைப் புசித்து இளைப்புத் தீர்ந்து, ஒரு மரத்தடியில் சயனித்திருந்தார்கள். அப்போது குகன், சுவாமி எங்கள் சேரிக்கு வந்தால், பன்னகசாலையில் இருக்கலாம், மற்ற வசதிகளுமுண்டு, அங்கேயே பதினாலாண்டுமிருந்து பின்னேகலாம், அடியேன் தொண்டுஞ் செய்கிறேன் தேவரீர் எழுந்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.

சுவாமி குகனைப் பார்த்து, நாங்கள் வனவாசம் வந்தவர்கள் வனத்திலே யிருக்கவேண்டுமல்லாமல், நாட்டிலே வரக்கூடாது. ஆகையால் நாங்கள் இவ்விடத்திலிருக்கிறோம். நீ உன்னுடைய சேரிக்குப்போய் உணவருந்திவா என்றார். அப்போது குகன், நான் உங்களை இந்தக் காட்டிலே விட்டுவிட்டு, என் குடிசைக்கு எப்படிப்போவேன்? சுவாமி! என்று கவலைப்படுகிற குகனைப் பார்த்து, அப்பா குகனே! நாங்கள் நான்கு பேர் சகோதரர்களிருக்கிறோம், நீயும் ஒரு சகோதரன் ஆக ஐந்து பேரானோம், ஆனதால் உன்னிஷ்டம்போல் நம்மிடத்திலிருவென்றார். குகனும் மனக்களிப்போடு

நல்லதென்று, தன் பரிவார ஜனங்களுடன் தங்கியிருந்தான், அப்போது சுவாமி மரத்தினிழலில் சயனித்திருந்தார்.

விருத்தம்.

அஞ்சன வண்ணனென் னுருயிர் நாயக னளாமே
வஞ்சனை யாலர செய்திய மன்னரும் வந்தாரே
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ
உய்ஞ்சிவர் போய்விடி னுய்குக னென்றனை யேசாரோ.

வேறு ஷை

காரெனக் கடிதிற் சென்றான் கல்லிடைப்
படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய
பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான் பருவரற்
பரவை புக்கான்
வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ
ராட்டுங் கண்ணன்.

வசனம்.

இப்படி ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியானவர் தருப்பையாசனத்தில் சயனித்திருப்பதை லட்சுமணன் பார்த்து, ஐயோ! இப்படியெல்லாம் கஷ்டம் வந்துவிட்டதே விதியேயென்று கவலைப்பட்டு, வில்லை நிலத்திலேயூன்றிக்கொண்டு, குகனும் புறக்காவலாக அன்றிரவு முழுதும் விழித்துக்கொண்டிருந்து, மறுநாட்பொழுது விடிந்தவுடன் மூவரும் காலைக்கடன் முடித்துக்கொண்டு, குகனையழைத்து, ஓடங்கொண்டுவரக் கட்டளையிட்டுக் கொண்டுவர, அந்த ஓடத்தில் மூன்றுபேருமேறிக்கொண்டு அக்கரையிற் போய்ச்சேர்ந்து ஓடம் விட்டிறங்கித் தெற்கு நோக்கிப் புறப்பட்டார்கள்.

## வனம்புகு படலம்.

அப்போது குகனுங் கூடவே சென்று நான்கு பேரும் நடந்து காடுமலையுங் கடந்துபோய்ச் சித்திர கூட பருவதஞ் சேர்ந்து, அவிடத்தில் ஒரு பன்னக சாலை இயற்ற, அதில் சுவாமியும் சீதையும் வீற்றிருக்கச் செய்து, லட்சுமணனுங் குகனும் கந்தமூலபலாதிகள் கொண்டுவந்து கொடுத்துச் சாப்பிடச்சொல்லிப் பின் குகன் சுவாமியை நமஸ்காரம் செய்து, சுவாமி! அடியேன் உய்யும்வழி என்னவென்று கேட்கச் சுவாமி அவனுடைய பக்தி விசுவாசத்தைக் கண்டு சந்தோஷித்துக் குகனுக்குச் சொல்லுவார். நாங்கள் பதினாலு வருஷமுஞ் சென்று வந்து சேருகிறோம். நீ உன்னுடைய இருப்பிடம் போய்ச்சேர்ந்து சுகமாயிருவென்றார். அப்போது குகன் சுவாமியை அடியேன் எப்பொழுது காணப்போகிறேன் என்று கவலைப்பட்டு இந்தப் பதினான்கு வருஷமும், பதினான்கு நாளாகக் கழித்து வரவேண்டும். அப்படிக்குத் தேவரீர் வராது போனால் அடியேன் என் மனைவியுடனே அந்தக் கங்கையில் விழுந்து இறந்து போவேனென்றான். சுவாமி அப்படியே வருகிறோமென்றார். குகன்சுவாமி யிடத்தில் விடை பெற்றுக்கொண்டு தன்னுடைய சேரியிற்போய்ச் சேர்ந்தான். அங்கு சுவாமியும் சீதையும் சித்திரகூடபருவதத்தில் பன்னகசாலையி லிருந்தார்கள்.

## சித்திர கூடப் படலம்.

இப்படி யிருக்கும் போது சூரியன் அஸ்தகிரி யடைந்தான். இவர்கள் மூன்று பேரும் சந்தியா வந்தன முதலியவை முடித்துக் கொண்டபின், லட்சுமணர் காய் கனி கிழங்கு கொண்டு வந்து கொடுக்க, அதைப்

புசித்து விட்டு சுவாமி சீதைமடிமீது சயனித்திருந்தார், லட்சுமணர் விழித்துக் கொண்டு காவலிருந்தார். இப்படி யிருக்கிறபோது நித்திரா தேவி வந்து கண்ணை மருட்டின படியால், திடுக்கெழுந்து நித்திரா தேவியைத் தியானம் பண்ணி வரவழைத்தார். அப்படியே பெரியவள் வந்து உனக்கென்ன வரம் வேண்டுமென்றுகேட்க, லட்சுமணர் தாயே! நாங்கள் பதினன்கு வருடம் வனவாசம் பண்ணி, அயோத்தி போமளவும் என்னிடத்தில் நீ வரவேண்டாமென்று கேட்டுக் கொண்டார். அப்படியேமூத்தவள் உன் மனேபீஷ்டம்போலாகட்டுமென்று சொல்லிப் போனுள். போனபின் சூரியனுதயமானுன் சீதையும் சாமியும் நித்திரை தெளிந்தெழுந்து காலைக்கடன் முடித்திருக்க, லட்சுமணன் காய் கனி கொண்டுவந்து கொடுக்க அருந்திச் சுகமாக விருந்தார்கள். லட்சுமணன் பணி செய்து காத்துக் கொண்டிருந்தார்.

இவர்களிப்படி யிருக்க அயோத்தியா புரியில் கௌசலையும், சுமித்திரையும் போய், கைகேசி அரண்மனையிலிருக்கிற தசரதச் சக்கரவர்த்தி யிடம், இராமனை வனம் போகச் சொன்ன காரண மென்ன வென்று கேட்க, மன்னன் மனக்கவலையுடன் சொல்வார். நான் குழந்தை ராமனை வனவாசம் போகச் சொல்லவோ, அரிய தவஞ்செய்து பெற்றது? நான் ஒன்று மறியேன் இந்தக் கைகேசி யென்கிற சண்டாளி பண்ணிய கற்பனையை நானெவ்விதஞ் சொல்வேன்? அவள் முன்னெருகாலத்தில் என்னிடம் இரண்டு வரங்கேட்டாள்; என்னவரம் வேண்டு மென்றேன், எனக்கோர் சமயம் வந்த போது கேட்டுக் கொள்கிறே னென்றுள். அதுபோல இப்போது வரங் கேட்டாள், அது என்ன வரம்

என்றால்:—தன் மகன் பரதனுக்குப் பட்டங்கட்டுகிற தொருவரமும், இராமனை வனவாசம் போகச்சொல்லு கிற தொருவரமும், இந்த இரண்டு வரமுங் கேட்டாள். நான் அடிசண்டாளி! இப்படிக்குமூத்தவனிருக்க, இளை யவனுக்குப் பட்டங்கட்டுவார்களா? என்று தடுத்தேன். அதையுங்கேளாது நீர்சொன்னபடியே வரந்தரவேணு மென்று கேட்டபடியால், நானும் அப்படியே வரங் கொடுத்து விட்டேன், அதுவும் இந்தக் கைகேசியா கிய சண்டாளியினால் வந்தது. நான் இராமனை வனத் திற்குப் போகும்படியாய்ச் சொல்லவில்லை, இந்தப்பாவி யானவள் என்னையுங் கேளாமல், கண்மணி இராமனை வனத்திற்குப்போகும்படி செய்திருக்கிறாள். இராமனும் அப்படியே வனம்போயிருப்பானாகில் என்பிராணனும் போய்விடும் முன்னமே எனக்கும் ஒருசாபமுண்டு. அது எப்படியெனில்:—

நான் இளவரசனாக விருக்கும்போது வேட்டை யாடுவதில் மூர்க்கமும் பிரியமுமுள்ளவனாகி ஓர் நாள் மாலை நேரத்தில் மிருக வேட்டையாட வென்று நதி தீரத்தைச் சேர்ந்த ஓர் வனத்திற் பிரவேசித்து: இரு ளானபடியால் நதித்துறை முகத்தில் ஜலமருந்துதற்கு மிருகங்கள் வருமெனக் கரையின்மேல் மறைவாக வில் லம்புமா யிருந்தேன். அப்போது குருபுத்திரன் தாய் தகப்ப னிருவரும் வயோதிகமும் அந்தகருமானபடி யால், அவர்களைக் காவடிகட்டித் தோளில் சுமந்து கொண்டு ஓர் மரத்தடியிலிறக்கி வைத்து, அவர்கள் தாகத்திற்குச் சலங் கொண்டுபோக நீர்த்துறையி லிறங் கித் தன் பாத்திரத்தால் நீர் மொள்ளும் போது குடகுட வென்று ஒலி கேட்டது அவ்வொலியானது துஷ்ட மிருகத்தினுடைய சப்தம்போலிருந்ததால், மிருகமென்

றெண்ணி, அந்த சப்தம் உண்டான இலக்கைக் குறி வைத்துப்பாணம் போட்டேன். அது போய் ஜலத்தி லிறங்கி நீர் மொள்ளும் குரு புத்திரன் மேற்பட்டு ஊடு ருவியது, அப்போது அவன் ஆவென்றலறி ஆரடா வன் பாணம் போட்டவன் யான் ஒரு குற்றமுஞ் செய்ய வில்லையே யென்று கீழே விழுந்தான்.

அக்குரல் கேட்டயான் ஓடிப்போய்ப்பார்த்தேன் குரு புத்திரன் நீ யாரென்றுகேட்டான். நான் அயோத் தியாபுரி யரசன் தசரதனென்றேன். அது கேட்ட குரு புத்திரன் நீர் இரவில் அறியாமற்செய்ததினுல் உம்மீது தோஷமில்லை இது எனது கருமம், ஆனதால் அதோ புறகரையிலுள்ள மரத்தின்கீழ் எனதுதாய் தந்தையர் அதிதாகமாயிருக்கிறுர்கள். அவர்களுக்கு இந்தச்சலத் தையும் கொண்டுபோய்க்கொடுத்து, என்வரலாற்றையும் சொல்லென்று உயிர் துறந்தான்.

நான் வெகு கவலையுடன் பாத்திர ஜலத்தை யெடுத்துக் கொண்டு அவர்களிருக்கு மிடந் தேடிப் போய்க்கண்டு பாதத்தில் நமஸ்காரம்பண்ணி, ஏ பெரி யீர்! உங்கள் புத்திரன் ஜலம் கொள்ள இந்த நீர்த்து றையில்வந்து ஜலமொண்டான் அப்போதுஜலமொள் ளும் சப்தமானது துஷ்ட மிருகத்தினுடைய ஆரவா ரம்போ லிருந்தது. இருட்டானபடியால் இது துஷ்ட மிருகந்தானென்று பாணமெய்தேன், அது பட்டு நீர்த் துறையிலேயே விழுந்தான். நான் மிருகமென்று ஆவ லாய்ப் போய்ப் பார்க்கும் பொழுது விபர மறிந்தேன். உடனே தங்கள் விபரமுஞ் சொல்லி இந்தச்சலத்தைக் கொடுத்து அருந்தும்படிச் செய்யென்று உயிர் விடுத் தான். ஆனதால் இந்தச் சலத்தையருந்தி, அடியேன் அறியாமற் செய்த அபராதத்தை மன்னிக்க வேண்டும் தாங்கள் உள்ள வரையில் அடியேன் தங்கள் புத்திரன்

போல் பாது காக்கிறே னென்று பாதத்தில் வீழ்ந்து நமஸ்காரஞ் செய்தேன்.

அப்போது அவர்கள் அலறிவீழ்ந்து அடித்து அழுது புலம்பி அவனிறந்து கிடக்கும் இடத்தைக் காட்டென்றார்கள். அவர்களைக் கூட்டி வந்து இறந்து கிடக்கிற மகனைக் காட்டினேன். அவர்கள் தன் மகன் மேல் வீழ்ந்து கதறி ஐயோ! மகனே வயோதிகர்களா னஎங்களைக் கைவிட்டு, அநியாயமாய் மடிந்தனையே யென்று, ஆற்றொணாத் துக்கமடைந்து, என்னைப்பார்த் துச்சரி இனிமேல் நாங்கள் உயிர்தரியோம் நாங்களிறக் கின்றோம். எங்கள் மூவரையும் தகனம் பண்ணு வாய், நீயும் எங்களைப்போல் புத்திர சோபத்தாலிறக்கக் கடவாயென்று சாபமிட் டுயிர்துறந்தனர். அதன்பின் அப்படியேயவர்கள் மூவரையும் கட்டையிலடுக்கித் தகனஞ்செய்து விட்டுச் சாபத்தையு மேற்றுக் கொண்டு பட்டணம் வந்து சேர்ந்தேன்.

அந்தச்சாபம் இப்போது ஒத்திருக்கிறதினாலே இனி என் பிராணன் நிலைக்காது என்று கௌசலையிடத் திலும், சுமித்திரை யிடத்திலும் சொல்லிக் கொண்டிருக் கையில், மந்திரி சுமந்திரர் வெறுந்தேரை நடத்திக் கொண்டு சேனைகளுடன் இராமசுவாமி வனவாசம் போகவில்லை வந்து சேர்ந்தாரென்று சொல்லிக்கொண் டுவந்து சேர்ந்தார். அதைச் சந்தோஷமாய்க்கேட்டுத் தசரதர் மந்திரியை யழைத்து எங்கே இராமனென்று கேட்க, மந்திரி பயந்து நடந்ததைச் சொல்ல நாவெ ழாமல் நிற்கிறதை யறிந்து, சாரதியைக் கேட்கச்சாரதி நடுங்கிக் கொண்டு மகராஜா! இராமசுவாமி சீதைலட்சு மணர் மூவரும் வனம் போய் விட்டார்கள், நாங்கள்

அவிடம் போய் அரசருக்கு என்ன உத்தரவு சொல்லு கிறதென்று கேட்டோம்.

அப்போது சுவாமி, நாங்கள் பதினன்கு வருடம் வனசஞ்சாரஞ் செய்து வந்து சேருகிறோம், கவலையடையாதிருக்கும்படிச் சொல்லுங்கள், நீங்களும் நகரம்போய்ச்சேருங்களென்று சொன்னபடியால் வந்தோமென்று சொன்னன். அது வார்த்தை கேட்டவுடன் அரசன் திடுக்குற்று, ஐயோ மகனே! இதற்கோ உன்னைப் பெற்று வளர்த்தே னென்று சொல்லியழுது வசிஷ்டர் முதலியோரை யழைத்து, எனக்குப் புத்திர சோபம் பொறுக்கக்கூடுதில்லை, இனி என் பிராணன் நிலை நிற்க மாட்டாது ஆனல் கைகேசி எனக்குப் பெண்சாதியு மல்ல, பரதன் பிள்ளையுமல்ல வென்று சொல்லி, என் கண்மணியாகிய இராமா! உன்னை யென்று காண்பேன்? அரிஹரி இராமா! இராமா! இராமா! என்று மூன்று முறைசொல்லி வைகுந்த மடைந்தார். உடனே அவரைத் தைலமாட்டி வைத்தார்கள். இதுசேதி பட்டணத்திலுள்ள சருவ ஜனங்களுங் கேட்டு அழுது துக்கசாகரத்திலழுந்தினர்கள். அப்போது அரச ரில்லாததால் நகரம் அருள்மாறி காடாந்தரமா யிருந்தன.

## பள்ளியடைப் படலம்.

வசிஷ்டர் மந்திரி முதலியோர் வெளியில்வந்து தூதுவரை அழைத்து அரசனுடைய ஓலையாக வெழுதிக் கையிற் கொடுத்து இதைக் கேகய நாட்டுக்குப் போயிருக்கிற பரத சத்துருக்கனற்குக் கொடுத்துவா என்றனுப்பினர்கள். அப்படியே தூதுவர் ஓலையை வாங்கிக்கொண்டு கேகயநாட்டிற்குப் போய் பரத சத்துருக்கனைக் கண்டு ஓலையைக் கொடுக்க, அவர்கள் வாங்கி வாசித்துப் பார்த்து, ஏதோ அவசரமாக வரச்

சொல்லி எழுதியிருக்கிறார்களென்று, சீக்கிரம் ரதமேறிக்கொண்டு சதுரங்க சேனைகளுடன் புறப்பட்டு அயோத்தியாபுரியை நாடி வருகிறபோது, பட்டணம் அமங்கலக்குறி காணப்பட்டது என்று நகரையணுகுகிறபோது மேடைகளிற் கட்டியகொடியாடைகளும், முரசவாத்திய வொலிகளும் காணப்படாததால், இது காரணமென்னவோ தெரியவில்லையென்று விரைவாய்ப் பட்டண வீதியுள் வருகிறபோது வீதிகள் அலங்காரமில்லாமல், அங்குள்ள ஜனங்கள் முகவாட்டமடைந்திருப்பதைக் கண்டு, ஐயோ! தெய்வமே! அரசரில்லாத பட்டணம்போல் தெரிகிறதே என்று வீதிகளைக்கடந்து துக்கத்துடன் அரண்மனைக்குட் போனார்கள்.

அங்கு சருவ ஜனங்களும் அழுதுகொண்டிருக்கிறதைக் கண்டு எங்களுக்குத் தெரியும்படி சொல்லுங்களென்று பதறிக்கேட்டுப் பக்கத்தில் வசிஷ்டரைக் கண்டு அவர் பாதத்தில் விழுந்து வணங்கி அழுத பரதனை வாரியெடுத்து ஆறுதல் சொல்லுவார். அப்பா பரதா! ஏதோ முன்னொரு காலத்தில் உன் தந்தை உன் தாயாருக்கு இரண்டு வரங்கொடுக்கிறதாகச் சொல்லியிருந்தாராம் அந்த வரம் இப்போது தரவேண்டுமென்று உன் அன்னை கேட்டார்கள். அது என்னவென்றால்:—உனக்குப் பட்டங்கட்டுகிறதொருவரமும், இராமனை வனவாசம் போகச்சொல்லுகிறதொருவரமுந் தாவெனக்கேட்டு வாங்கி, இராமனை அழைத்து, உன்னை வனவாசஞ்செய்யப் போகும்படியாயும், பரதனுக்குப் பட்டங் கட்டும்படியாயும் உன் தகப்பன் சொல்லியிருக்கிறார். ஆனதால் நீ சீக்கிரம் வனம் போடாவென்று சொன்னவுடன், இராமனும், சீதையும், லட்சுமணனும் தவவேடம்பூண்டு வனவாசம் போய்

விட்டார்கள். அது காரணமாகவே உன் தகப்பனர் வைகுந்தம் சேர்ந்தார். இவை யாவும் உன் தாயார் கைகேசியின் சூழ்ச்சியால் நடந்ததென்று சொன்னர்.

அதைக் கேட்ட பரதன் அப்படியா சேதியென்றுபல்லை நெறுநெறுவென்று கடித்து, இப்படிச்செய்தவள் எனக்குத் தாயாவென்று கோபாக்கினியுடன் தன் மந்திரவாளை யுருவிக்கொண்டு, கைகேசி யிருக்கிற அரண்மனையை நோக்கிச் சென்று கைகேசியைக்கண்டு அடி சண்டாளி! கொலைபாதகி! பாவிநிருமூடி! யென்று கோபங்கொண்டு வெட்டுகிறதாக ஓடின பரதனைக்கௌசலைகண்டு தடுத்து பரதன் கையிலிருக்கிற வாளைப்பறித்துக்கொண்டு, கோபத்தைத் தணித்தாள். அந்நேரம் பரதன் கௌசலை பாதத்தில் விழுந்து முட்டிக்கொண்டு அலறியழுது நிலமெல்லாங் கண்ணீர் பெருகிச்சேருடகீழேகிடக்கிற, பரதனை வாரியெடுத்து மார்போடணைத்து நீ என்னசெய்வாய் மகனே! ஊழ்வினை யிப்படிமுடிந்ததே தவிர வேறில்லை யென்று பரதனைச் சமாதானஞ் செய்தாள்.

அப்படியுங் கேளாமல் வாளைக்கையிற் பிடித்துக்கொண்டு, இந்தப் புத்தியில்லாத நிர்மூடியை இருதுண்டாய் வெட்டினலொழிய என் கோபந் தாளாது, அல்லது நான் ஆயுதத்திலே விழுந்திறந்து போகிறேனென்று ஒருமித்து நடக்கிற பரதனை வசிஷ்டருங் கையைப் பிடித்து நிறுத்திக் கொண்டு, கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அப்பா பரதா! நீ புத்திசாலியென்றிருக்க, சிறுபிள்ளைபுத்திகாண்பிக்கலாமோ? இதுவும் உங்கள் குலத்திற்கடுத்ததா யில்லையென்று சொல்லியமர்த்தினர். அப்போது பரதன் குருவாக்கியந் தட்டலாகா தென்று கோபத்தை யடக்கிக் கைகேசியை

நினைந்து பெற்றதா யென்றும், பெண்சென்ம மானதா லும், அவளை யென்ன செய்யப் போகிறேன்? ஆனல் அவள் எனக்குத் தாயுமல்ல, நானவளுக்குப் பிள்ளையு மல்ல இனி அடியேன் நடந்து கொள்வதென்ன வென்று கேட்க வதிஷ்டர் சொல்லுவார்.

இனி நடக்க வேண்டிய காரியமென்ன வென்றால்:— தைலமாட்டி வைத்திருக்கிற அரசரை யெடுத்துத் தகனஞ்செய்து ஈமச்சடங்கு சாஸ்திரங்களைமுறைப் படிச்செய்ய வேண்டியது தான் என்றார். அது கேட்ட பரதன் சுமந்திரன் முதலியோரை யழைத்துக்கொண்டு எண்ணெய்ப் பத்தத்திற் கிடத்தி யிருக்கிற தந்தையை யெடுத்து அலங்கரித்து எடுத்துக் கொண்டு மயானத் திற்குப் போய், அடுக்கிய அகிற்கட்டை சந்தனக் கட்டைமேடையிற் கிடத்திச் சாஸ்திர மெல்லாஞ் செய்து முடித்துச், சத்துருக்கனைக் கொள்ளி வைக்கச் சொன்னார்கள். அப்போது பரதன் நானிருக்கச் சத்துருக்கனை அக்கினிவைக்கச் சொன்ன தென்ன வென்று கேட்டான். வதிஷ்டர் சொல்லப் பின் வாங்கினர், அப்போது பரதன் நான் அறியலாகாதோ சொல்லுங்க ளென்றான். பக்கத்தி லிருக்கிறவர்கள் இனி யொளிக்கிறதென்னவென்று சொல்லுவார்கள். உந்தை சீவன் விடுகிறபோது, கைகேசி மனைவியல்லவென்றும் பரதன் பிள்ளையல்ல வென்றுஞ் சொல்லி வைகுந்தஞ் சேர்ந்தா ரென்றார்கள். அதைப்பரதன் கேட்டு ஐயோ! என் தாயாகிய சண்டாளியால் நான் எல்லா விஷயங் களுக்கும் பாவியாய்ப் போனேனே தெய்வமே யென்று முகத்திலறைந்துகொண்டு நிலத்தில் விழுந்தான். அப் போது வதிஷ்டர் பரதனைத் தூங்கியெடுத்து, அணைத்

11

துக் கொண்டு நிற்கிறபோது, சத்துருக்கன் அக்கினி காரியத்தை முடித்தான். அப்போது தசரதரின் பட்ட மகிஷிகள் கௌசலை கைகேசி சுமித்திரை இவர்கள் மூவரும் நிற்க மற்ற தேவிமார்கள் அக்கினியில் வீழ்ந்து உடனிறந்தார்கள். பிறகு மயானச் சடங்குகளெல்லாமுடித்து அரண்மனை வந்திருந்தார்கள்.

அப்போது பரதனுக்கு ஒரு நினைவு வந்து வசிஷ்டர் மந்திரிமார்களைப் பார்த்துச் சொல்லுவான் நான் என் தமயனைக் கண்டு மனக்கவலை நீர்ந்து மகுடாபிஷேகஞ் சூட்டிக் கொள்ளும்படியாய்க் கூட்டி வருகிறேனென்று தானும் மரவுரியுஞ் சடாமவுலியுந் தரித்துக்கொண்டு புறப்பட்டான் அப்போதுசத்துருக்கனும் சேனைகளும், தாய்மார்கள் மூன்று பேரும், வசிஷ்டர் முதலாகிய பெரியோர்களுங்கூடி நடந்து கங்கைக்கரை வந்து சேர்ந்தார்கள்.

## குகப் படலம்.

அப்போது அங்குள்ள குகனென்பவன் கண்டு கோபங்கொண்டு சொல்லுவான். ஓகோ நம்முடைய சுவாமியைத் தாயுமகனுங்கூடி வனத்தில் விரட்டினதுமல்லாமல், அவர்கள்மேற் படையெடுத்தும் வருகிறார்களோ வென்று ஆக்ரோச முண்டாகி ஆயுத பாணியுடனே நின்று அடா வாருங்கள் வேடரே! சகலரும் போருக்குப் புறப்படுங்கள் என்று சொன்னான். உடனே வேடர்கள் புறப்பட்டு ஆயுதமுங் கையுமாய் வருகிற போது, அந்நேரம் முன்னதாகப் போனபேர்கள் வந்து சொல்லுவார்கள். வனம் போன தமையனைத் தேடி யழுது மயங்கிக் காணும் பொருட்டு வருகிறவர்களேயல்லது, யுத்தத்திற்கு வரவில்லை யென்றார்கள்.

அப்போது குகன் தன் படைகளை யெல்லாம் அப்பாற் போகச் சொல்லிச் சில படையுடனே வந்து, தமையனைத்தேடிக் கவலையுடன் தெற்கு நோக்கிக் கும்பிட்டுக் கொண்டு வருகிற பரதனைக் கண்டு பாதத்தில் விழுந்து தண்டம் பண்ணினான்.

உடனே பரதன் குகனை வாரி யெடுத்து ஆசீர்வதித்து, அப்பா வேடர்க் கரசனே! எங்கள் அண்ணாவையும், அவருடைய தேவியார் சீதா பிராட்டியாரையும், தம்பி லட்சுமணப் பெருமாளையும், கண்டாயோவென்று மிகத் துயரத்தோடு கேட்டார். குகன் சொல்லுவான் சுவாமி யவர்கள் மூன்று பேரும் இவிடத்திலேயிருந்து, எனக்குச் சில உறுதிமொழியுஞ்சொல்லி, இந்தக்கங்கையுங்கடந்து, சித்திரகூட பருவதம் போய்ச் சேர்ந்தார்கள் என்று சொன்ன வுடனே, பரதனும் மற்ற ரிஷிகளுங் கேட்டுச் சந்தோஷமாகிப் பரதன், நாங்கள் சகோதரர்கள் நாலுபேருடனே நீர் ஐந்தாம் பேரென்று சுவாமி சொன்னதாக நீர் சொல்லியபடிக்கு நாங்களிரண்டு பேரும் உம்முடைய தம்பியே யல்லாமல் வேறல்ல, நம்முடைய தமையனார் வனத்திற்குச் சென்றது கேட்டுத்தகப்பனார் இறந்துபோனார். நானுந் தம்பி சத்துருக்கனும் கேகய நாட்டிலிருந்து வந்து தகப்பனாரை யெடுத்தடக்கஞ்செய்து, அதற்குண்டாகிய சமச்சடங்குகளுஞ் செய்து முடித்துத், தமையனாரைக் கண்டு அழைத்துப்போக வந்தேனென்றுசொன்னான்.

விருத்தம்.

சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற கோசலையைத்
தொழுது நோக்கி
வெற்றித்தார்க் குரிசிலிவ ராரென்று குகன்வினவ
வேந்தர் வைகும்

முற்றத்தான் முதற்றேவி மூன்றுலகு மீன்றானை
முன்னீன் றானைப்
பெற்றத்தாற் பெருஞ்செல்வம் யான்பிறத்த லாற்றுறந்த
பெரியா ளென்றான்.

௸

படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ் செவிலி
யைத்தன் பாழ்த்த பாவி
குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கு முயிர்ப்பாரங்
குறைந்து தேய
உடரெலா முயிரெலா மெனத்தோன்று முலகத்தே
யொருத்தி யன்றே
இடரிலா முகத்தாளை யறிந்திலையே லிந்நின்றா
ளென்னை யீன்றாள்.

வசனம்.

அப்போது கௌசலையைக் குகன் பார்த்து இந்த அம்மாள் யாரென்று கேட்க, பரதன் சக்கரவர்த்தியினுடைய முதற்றேவியார். இந்த மூன்று லோகத்தையும் பெற்ற அந்த ஸ்ரீராமனென்னும் புருஷோத்மனைப் பெற்றுச் சகல பாக்கியமுண்டாயிருந்தும், நான் பிறந்ததினாலே அதைத் துறந்த என் தாயாரென்று சொன்னான். மற்ற பக்கத்தில் நிற்கிற சுமித்திரையையும், கைகேசியையும் பார்த்து, இவர்கள் யாரென்று வினவ பிராணன் போனாலும் வாக்குத்தப்பலாகாதென்றறிந்து போன மகாராஜாவினுடைய மனைவி, ஸ்ரீராமபிரானோடு கூடப் பிறந்தவர்களும் உண்டென்று சொல்லும்படியாய்க் கூடப்போயிருக்கிற லட்சுமணனைப் பெற்ற பாக்கியவதியாகிய சுமித்திரை யென்றும், கைகேசியைப் பார்த்து மிகுந்த அபகீர்த்தியைச் சம்பாதித்துப் பழியை வளர்த்து உலகத்து ஜீவகோடிகளெல்லாம், உயிரிழந்துபோகுஞ் சரீரம்போல பதைக்கச் செய்த பாவி,

இவள்வயிற்றிலே அநேககாலமிருந்த, எனக்கும் உயிர் தேயும்படி துயரத்தைக் கொடுத்தவள் பூலோகத்தில் இவளுக்குச் சமானமானவர்கள் வேறே கிடையாது. முகத்திலே கொஞ்சமாகிலும் விசனமென்கிறது இல்லா திருக்கிறாளே. அதனாலேயாகிலும் உனக்குத் தெரிய வில்லையா அப்பா வென்று சொன்னான்.

இப்படியாகச் சொல்லக் கேட்ட குகன் தாய்மார் மூன்று பேரையும் சரணமடையக் கௌசலை யம்மன் வாரி யெடுத்து ஆசீர்வதித்து யாவருஞ் சந்தோஷமாக இருந்தார்கள். அப்போது பரதன் குகனைப் பார்த்துச் சொல்லுவான். அண்ணனைக் கூட்டி வந்து பட்டங் கட்டவேணுமே. அதற்கு இந்தக் கங்கையைக்கடந்து போவதற்கு வகைசொல்லவேணுமென்று கேட்டான். அப்பொழுதே குகன் ஓடங்கொண்டு வரச்சொல்லி யாவரையும் ஓடத்திலேற்றிக் கொண்டு போய்த் தென் கரையிலிறக்கி விட்டான். அதன்பிறகு குகனையுமழைத் துக் கொண்டு பரத்துவாசர் ஆச்சிரமத்திற்கு வந்தார் கள். வந்ததும் பரத்துவாசரை வணங்கிநிற்க அவரும் ஆசீர்வாதஞ் செய்து இருக்கச் சொல்லி யாவருக்கும் விருந்து செய்து பரதனுக்குக் காய்கனி தேன் கிழங்குங் கொடுத்துச்சகலரும் அமுதுண்டிருந்தனர். அப்போது பரதன் அயோத்தியாபுரியில் நடந்த காரணமெல்லாம் பரத்துவாசருக்குச் சொல்ல அவர் கேட்டு நல்லகாரிய மாச்சு தென்று பின்னும் இராமர் சித்திரகூட பருவதத் திலே யிருக்கிறார் அங்கே போய்க் கூட்டி வாருங்க ளென்று பரதன் மற்ற யாவரையும் அனுப்பினார் அவர் களும் பரத்துவாசரிடம் விடைபெற்றுக் கொண்டு சித் திரகூட பருவதத்திற்கு நடந்தார்கள். இப்படி வருகிற போது இராமசாமிக்கும் சீதையம்மனுக்குங் காய் கனி

கொண்டுவரப் போன லெட்சுமணர் ஒரு பருவதத்தி லேறி வடக்கு முகமாகப் பார்க்கிறபோது பெரும்படை யுங்கொடிகளுமாக நிறைந்து வருகிறதைக்கண்டு பரத னல்லவோ நம் பேரில் படை யெடுத்து வருகிறு னென்று லட்சுமணர் அதிகக்கோபங்கொண்டு, மலையை விட்டிறங்கத் தாமசமாகுமென நினைத்து மலை யுச்சியி லிருந்து கீழே குதித்து ஓடிவந்து சுவாமி! பரதன்கண் கொள்ளாத சேனையுடனே நம்பேரிலே படை யெடுத் துக் கொண்டு இதோ வருகிறுன் வருகிற படை மன்ன வரையும் பரதனையும் கணநேரத்திற்குள் சம்மாரம்பண் ணுகிறேனென்று கச்சையுங் கட்டி வில்லும் அம்புறாத் தூணியுந் தோளிலே தாங்கி கையிலே அம்பும் பிடித் துக்கொண்டு போருக்குப் புறப்பட்டு நின்றுன்.

அப்படிக் கோபத்துடன் நின்ற தம்பியை இராம சாமி பார்த்து தம்பி லெட்சுமணு! நம்முடைய வம்மி சத்திலே அப்படியும் நடக்குமோ வென்று சொல்லிப் போரை விலக்கி வடக்கே படையைப் பார்த்தார். அந் தப் படைக்குள்ளே பரதன் வருகிற கோலத்தையுங் கண்ணுற்று லெட்சுமணரைப் பார்த்துச் சொல்லுவார். தம்பி பரதன் வருகிற கோலத்தைக் கண்டாயோ அவ னும் நம்மைப்போலே தவக்கோலங்கொண்டு வருகி றுனே யல்லாமல் இராஜரீகம் பெற்ற கோலமாகவும் மோடியுடனும் வரவில்லை. இவன் பட்டம்பெறுகிற தில்லையென்று நம்மை அழைத்துப்போக வருகிறது போலவுமிருக்கிறது. நாம் வரமாட்டோமென்றுல் தானும் நம்முடனே வருகிறதாக ஒருமித்துக்கொண்டு வருகிறுன்.

அதேதென்றுல் மூடுகவசம் போட்டுப் பல்லக் கில் நம்முடைய தாய்மார்களும் வருகிறுர்களென்று

சொல்ல லட்சுமணன் கோபந்தணிந்து வில்லைத் தளர விட்டு நின்றார். அந்நேரம் பரத சத்துருக்கரும் வந்து இராமசாமியின் திருவடியிலே விழுந்து புலப்பித் துயரப்படுகிற தம்பிமார்களை இராமசாமி யெடுத்து மார்போடணைத்து முத்துதிர்த்தார். அப்போது தகப்பனுரிறந்த சங்கதியுஞ் சொன்னார்கள். இராம லெட்சுமணுளுங் கேட்டுப் பூமியிலே அடித்துவிழுந்து புலம்பினார்கள். எப்படியெனில், தேவரீர் பிள்ளையில்லாமல் அறுபதினாயிர வருஷம் மனக்கவலையுற்றுப் புத்திரகாமேஷ்டி யாகம் வளர்த்துப் புத்திரனுண்டாயிற்றென்று சிந்தை மகிழச் செய்யாமல் உம்மைக்கொல்லவந்த கூற்றுவன் நாங்களே உமக்குச் சத்துருவாகப் பிறந்தோமென்று அழுது புலம்புகிறவேளையில் வதிஷ்டர் வந்தார் அவர் பாதத்திலே விழுந்து அழுது துயரப்படுகிறபோது வதிஷ்டர் தேறுதல் சொல்லி அறிவில்லாதவர்களல்லவோ இப்படி மயங்கவேண்டும் உமக்குப் புத்தி சொல்வதேதென்று சொல்லிக் கொண்டிருக்கிறபோது தாய்மார் மூன்று பேரும் வந்தார்கள்.

அவர்களைக் கண்டவுடன் தந்தை யிறந்தாரென்றதையும் தாய்மாரை வெகு நாளாய் விட்டுப் பிரிந்ததையும் நினைத்துத்தாய்மார்கள் பாதத்திலே விழுந்து அழுதுதுக்கப்பட்டுக் கொண்டிருக்கிறபோது அயோத்தியாபுரியிலுண்டான இராஜாக்கள் மந்திரிமார் மற்ற சேனைகளும் வந்து இராமசாமி பாதத்திலே விழுந்து அழுது யாவரும் துக்கங் கொண்டாடினார்கள்.

அப்போது மாமிமார் சீதையின்கிட்ட வந்தார்கள் சீதையும் அவர்கள் பாதத்திலே விழுந்து அழுது துயரப்படுகிறபோது சீதையை யெடுத்து மார்போடு

அணைத்துக்கொண்டு பிறகு யாவருந் தீர்த்தமாடிப் பிண்டப்பிரதானஞ் செய்து பன்னகசாலையில் வந்திருந்தார்கள். மறுநாள் பரதனெழுந்திருந்து. சுவாமிபாதத்திற் சரணம் பண்ணித் தேவரீர் அயோத்தியாபுரிக்கு எழுந்தருளிப் பட்டாபிஷேகஞ் சூட்டிக் கொள்ள வேணுமென்றான். அப்போது இராமசாமி தம்பியைப்பார்த்து நம்முடைய தந்தை கொடுத்த வரந்தப்பலாமோ? அந்த வாக்கை இப்போது நாம் காப்பாற்ற வேண்டியது நம்முடைய கடமை யாகையால் நாம் பதினான்கு வருடஞ் சென்றவுடனே வருகிறோம். அதுவரை நீ அயோத்தியாபுரிக்குப்போய்ச் செங்கோல் செலுத்திக் கொண்டிரு வென்று ஆக்ஞாபித்தார்.

அதுகேட்டுப் பரதனெழுந்திருந்து சுவாமிபாதத்திற் பணிந்துதேவரீ ரிப்போது எழுந்தருளாதிருந்தால் அடியேனுங் கூட வருகிறேன் தேவரீருடைய பூபாரம் யென்னால் தாங்க முடியுமோ அயோத்திக்கெழுந்தருள வேண்டுமென்று பரதன் விண்ணப்பஞ் செய்தான்.

அப்போது வசிஷ்டர் ஞானதிருஷ்டியாலறிந்தவராகையால் உலோகாசாரமாய் இராமசாமியைப் பார்த்து அயோத்திக்கு எழுந்தருளலாமென்று சொன்ன பிறகு இராமசாமி வசிஷ்டரைப் பார்த்துச் சுவாமி தாய் தந்தையர் வாக்கை மறுத்த பிள்ளையும் குருமொழி மறந்த சீடனும் நரகமேயடைவார்கள். ஆகையால் அடியேன் பதினாலு வருஷஞ் சென்றதும் அயோத்திக்கு வந்து சேருகிறேன். தாங்களும் மற்ற பெரியோர்களும் தம்பி பரதனைப் பட்டணத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்வாருங்களென்றுசொல்லிப் பரதன் கையைப் பிடித்துக்கொண்டு தம்பி பரதா! நாங்

கள் பதிநாலு வருஷம் வனசஞ்சாரஞ்செய்து அயோத்திக்கு வருகிறோம். நீ என் வார்த்தையைத் தட்டாமல் நம்முடைய தாய்மார் மற்ற சகலரையும் அயோத்திக்கழைத்துப்போய் நாடு நகரம் செழிக்கும்படியாய்ப் பட்டங் கட்டிக்கொண்டு சந்தோஷமாக இருங்கள் என்ன பரதன்சுவாமியை நமஸ்காரஞ்செய்து சொல்லுவான்.

தேவரீருடைய திருவடியிற்றரித்த பாதுகையை யருளினால் அடியேன் கொண்டுபோய் வைத்துப் பூஜை பண்ணிக் கொண்டிருக்கிறேனென்று சொல்லிப் பாதுகையை வாங்கிச் சிரமேல் வைத்துக் கொண்டு சுவாமியவர்கள் பதினான்கு வருடங் கழித்தவுடன் அயோத்திக்குவராதிருந்தால் அடியேன் வருட இறுதியில் திதி பஞ்சமியில் தேவரீர் சீர்பாதம் கெதியென்று அக்கினிப் பிரவேசமாவேன். இது உறுதியென விண்ணப்பஞ் செய்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான். தாய்மார்கள் இராமலட்சுமணாள் சீதை யிவர்கள் பால் போக விடை பெற்றுக் கொள்கிற போது, அவர்களும் தாய்மார்களையும், குருவையும், நமஸ்காரம் செய்து அனுப்பினார்கள். மற்றுமுண்டாகியவர்களும் ராமலட்சுமணாள் சீதையை தண்டஞ் செய்து விடை பெற்றுக் கொண்டு புறப்படுகிற போது, குகனும் நமஸ்காரஞ் செய்து கொண்டான்.

பின் எல்லோரும் புறப்பட்டு அயோத்தி நோக்கி நடந்து, பரத்துவாச ராச்சிரமத்திற்கு வந்து, அவரிடம் விடைபெற்றுக்கொண்டு குகனுடைய ஓடமேறிக் கங்கையைக் கடந்து குகனை நிறுத்தி விட்டு, அப்பால் காடு மலையுங் கடந்து நந்திக் கிராமத்தில் வந்து தாய்மார் தம்பி சத்துருக்கன் மற்ற யாவரையும் அயோத்திக்

கனுப்பி விட்டு, நந்திக் கிராமத்திலேயே பரதன் ஒரு பன்னக சாலைகட்டி அதில் சுவாமியின் பாதுகையை வைத்துப் பூஜை பண்ணிக் கொண்டு, சுவாமி எப்பொழுது வருவாரென்று நாளெண்ணிக்கொண்டிருந்தார். சத்துருக்கன் சகலரையுமழைத்துக்கொண்டு அயோத்திக்கு வந்து பரதனுடைய கட்டளைப்படிக், குடிகளைப் பாதுகாத்து, பகுதி வாங்காமல், சுவாமியை யெப்பொழுது காணப்போகிறோமென்று கணித மிட்டுக் கொண்டிருந்தார்கள்.

இவர்களிப்படி யிருக்க இராம லட்சுமணனும் சீதையும் சித்திரகூடபருவதத்திலே தங்கி, அந்தவனத்திலிருக்கிற ரிஷிகள் முதலியோருக்கு இடுக்கண்வராமல் காத்து ரட்சித்துக் கொண்டிருக்கிறபோது, ஒரு நாள் லட்சுமணர் காய்கனிதேன் கிழங்கு கொண்டுவர வனத்திற்குட் போய்விட்டார் அப்போது பன்னகசாலையில் சீதையின் மடியில் சுவாமி தலை வைத்துக்கொண்டு நித்திரை செய்கிறபோது, சீதை சுவாமியினுடைய திருமேனியைத் தடவிக் கொண்டிருந்தாள்.

அந்த வேளையில் அவ்வனத்திலுள்ள ஒருகாகாசூரன் வந்து, சுவாமி நித்திரை செய்கிறதை யறிந்து, ஜானகி மேகலை சோர்ந்துவிலகி யிருப்பதையும், தனம் பூரித்திருப்பதையும் கண்ணுற்று, தனபாரத்தைத் தீண்டினான் அப்போது சீதை துணுக்க முற்று தேகம்பதறினாள். பின்னும் நாமசைந்தோமானால், சுவாமியினித்திரைக்குப்பங்கம் வருமென்று சும்மா இருந்தாள் அந்நேரம் சீதையின் ஸ்தனத்திலிருந்து உதிரம் சொட்டிச் சுவாமி முகத்திற்பட்டது. பட்டவுடனே சுவாமி நித்திரை நீங்கிச் சீதை முகத்தை யேறிட்டுப் பார்த்தார். அப்போது சீதாதேவி சுவாமி! ஒரு காகம் வந்து இப்

படிச் செய்து விட்டு, அதோ விருக்குதென்று சொன்ஞள்.

சொன்னவுடன் சுவாமி கோபங்கொண்டு அருகிற்கிடந்த துரும்பையெடுத்துக், காகமே! உனக்கு இவ்வளவு அக்கிரமமென்னவென்று மேலே பிரயோகித்தார். அது பாணமாகப் புறப்பட்டு வருகிற வேகத்தைக் காகங்கண்டு திடுக்கிட்டெழும்பி யீரேழு பதினன்குலகமும் ஓடித்தவித்தது. பாணமுங் கூடத்துடர்ந்து கோபாவேசத்துடன் காகமே! உன்னை விடுவேஞேவென்று வருகிறதையுங்கண்டு, இனிமேல் நாம் தப்பித்துக்கொள்ள வழியில்லையென்றெண்ணி, அதிவேகத்துடனே ஓடிவந்து சுவாமி பாதத்தில் வீழ்ந்து 'திருக்கண்ட கண்ணுக்குத் தீவினை யுண்டோ' அடியேன் செய்த அபசாரத்தைப் பொறுத்தருள வேணுமென்று சரணுகதி யடைந்தான். அப்போது புல்லம்பு, காகாசூரனுடைய இரண்டு கண்ணையுங் கலக்கி விட்டது.

பிறகு காகம் அழுது துக்கப்பட்டுப் புலம்புவதைச் சுவாமி யறிந்து, அடே காகமே! நீ வந்து சரணம் புகுந்தபடியால், உனக்கு ஒரு கண் பார்வை தந்தேன் ஓடிப் பிழைத்துப்போடா வென்ருர். அப்போது காகம் சுவாமி! நான் உலகத்தில் ஒருகண் பார்வையால் சஞ்சரிக்க முடியாது, எனக்கிரண்டு கண்ணும் தெரியும்படியா யருள் செய்ய வேண்டுமென்று மன்ருடிஞன். பிறகு சுவாமிக்கு இரக்கம் வந்து ஒரு கண்ணினெளிவு இரண்டு கண்ணுக்குந் தெரியும்படி யருளினும். பிறர்தாரத்தைத் தீண்டினதால் இப்படி விபத்துநேரிட்டது. சிதா! உலகத்தில் யாரேனும் பிறர்தாரங் கண்டு விரும்பிஞல் இடையூறு வருவது தப்பாது. காகாசூரன் இதற்குச்சாட்சியாகக் காணலாமென்று சொல்லிக் காகத்தை

யனுப்பினர். அவன்பணிந்து விடைபெற்றுக்கொண்டு பறந்து போனான்.

இப்படிச் சாபம்பெற்றபடியால் காகம் சாய்த்துப் பார்த்தால் இரண்டு கண்ணுக்கும் ஒளி தெரியும் நேரே பார்த்தால் செவ்வையாய்த் தெரியாது அது நிற்க.

பின் இராம லட்சுமணன் சீதை யிவர்கள் சித்திர கூடபருவதத்தில் சிறிது நாளிருந்து இனிமேல் நாம் இவிடத்திருந்தால், அயோத்தியாபுரி ஜனங்கள் இன்னும் யாரும் வருவார்களென்று தெற்கு நோக்கிப் புறப்பட்டு நடக்கிறபோது, ஆறு பெருகிச் சமுத்திரம்போலோடினது.

## ஆற்றுப் படலம்.

அந்த ஆற்றைக்கடந்து போவதற்குலட்சுமணர் மூங்கில் மரம் வெட்டித் தெப்பங்கட்டி, அதன் பேரில் இராமனையும் சீதையையும் ஏற்றித் தான் தெப்பத்தைக் கடத்திக்கொண்டு போகிறபோது, தெப்பங்கட்டவிழ்ந்து, ஆறுமுன்னே யிழுக்கலட்சுமணர்பின்னே யிழுக்கச் சிரமப் பட்டுத், தெப்பத்தைத் தென் கரையிற் சேர்த்து ராகவரும் ஜானகியும் இறங்கினபின் ராகவர் தம்பி! நீ முன்னமே சித்திரகூடபருவதத்தில் பன்னகசாலைகட்டி வைத்த சித்திரமும், இப்போது மூங்கில்மரம் வெட்டித் தெப்பங்கட்டி, இந்த ஆற்றைக்கடந்து கரையிற்சேர்த்த தந்திரமும் எங்கே கற்றாய்? நீ பிறந்த நாள் முதல் இதுவரை என்னை விட்டுப்பிரிந்தவ னல்லவே, என்று சந்தோஷமுற்றுப் பின்னும் சொல்லுவார் சீதையின் பாதம் பஞ்சினு மெல்லிதா யிருக்கப்பட்டது. அதிற்கல்லும் முள்ளும் பட்டுக் கொப்பளங் கொள்ளவும், உன் கையினால் மரங்கள்வெட்டி வீடுகட்டவும், தெப்பமுண்டாக்கவும், இப்படி யெல்லாங் கஷ்டப்பட ஊழ்வினையோவென்று, மிகவுங் கவலையுட னிருக்கிறபோது, லட்சுமணர் சொல்லுவார். அண்ணா! இதுவொரு கஷ்டமாகுமா! இன்னும் நாம் அயோத்திக்குத் திரும்பிப் போகும் வரையில் எவ்வளவு பாடுகள் அனுபவிக்க வேணுமோ வென்றான்.

அயோத்தியா காண்டம் முற்றுப் பெற்றது.

ஸ்ரீ
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
கம்பநாட் டாழ்வார் திருவடிகளே சரணம்.

மூன்றாவது

# ஆரணியகாண்டம்.



## காப்பு.

பேதியாது நிமிர் பேதவுருவம் பிறழ்கிலா
ஓதியோதி யுணருந் தொறு முணர்ச்சியுதவும்
வேதவேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா
ஆதிதேவ ரவரெம் மறிவினுக் கறிவரோ.

## விராதன் வதம்.

சீதாபிராட்டியுடன், இராமலட்சுமணுள் நடந்து சிறிது தூரம் சென்றார்கள். அப்போது அவிடத்தில் விராதனென்றொரு ராட்சசன் இருந்தான். அவன் ஏழு மலையையும் பிடுங்கி அம்மானை யாடுவான். மகா பலமுள்ளவன். சப்தசாகர மெல்லாம் நொடிக்கு முன்னே சுற்றியோடி வருவான். அப்படிக்கொத்த விராதனென்பவன், இவர்களைக் கண்டு இமைமூடி விழிக்கு முன்னே சீதாபிராட்டியை யெடுத்துக் கொண்டோடினுன். அப்பொழுது இராம லட்சுமண ளிருவரும், அவனையோட விடாமல் முன்னும் பின்னுமாக மறித்தார்கள். அது கண்டு விராதன் சீதையை விட்டு விட்டு, இராம லட்சுமணுளிருவரையும், இரண்டு தோளின் மீது தூக்கி வைத்துக் கொண்டு, ஆகாயத்திற் கிளம்பி வட்ட மிட்டுத்திரிந்தான். அப்போது சீதை கீழே நின்று, வயிற்றிலும், வாயிலும், அடித்துக் கொண்டு, அலறி யழுது

சுவாமி! அடியாள் பொருட்டாக இருவரும், உயிர்துறக்கப்போகிறீர்களோ? முன்னமே அயோத்தியா புரியிலிருந்து வனசஞ்சாரத்திற்குப் புறப்படுகிற போது, பதினான்கு வருடஞ் சென்றவுடன் வருகிறோம், அதுவரையில் நீ உன் மாமிமார்களுடனே இருவென்று சொன்னீர்களே, நான் அப்படியே அவிடமிருந்தால் இப்படியான ஆபத்து வராதே அடியாள் கூடவந்தபடியாலல்லவோ இப்படியானதென்று சொல்லி விராதனைப் பார்த்து, அப்பா! என்னைத் தின்று அவர்களை விட்டுவிடுவென்று அழுது கூடவே யோடினாள்.

அப்படி ஓடிவருகிறதை லட்சுமணர் கண்ணுற்று, அண்ணா! பிராட்டியார் பதறி அழுகிறதென்ன? நாம் அசட்டையாகவிருக்கலாகுமோவென்று சொன்னவுடனே, சுவாமி! இவனை யாரென்றறியத் திருவடியாலமுக்கினவுடனே, விராதன் கீழேவிழுந்தான். விழுந்தவுடன் கால்வேறு கைவேறானது; திரும்பவும் ஒன்றாய்க்கூடி, ஆக்ரமித்து வந்து பொருதினான். அப்படிப் பொருதுகிறவன் பேரில், அநேக பாணம் விட்டும் இறவாததால், சுவாமி தம்பியைப்பார்த்துத் தம்பி! இவன் ஆயுதத்தினால் சாகமாட்டான், இவனைப் பூமியிலே புதைக்கவேண்டும். நான் இவனை மிதித்துக்கொண்டு நிற்கிறேன் நீ ஒரு குழி தோண்டுவென்று சொன்னார். அப்படியே லட்சுமணர் பாதாளம் வரை குழிதோண்டி, அதிற்றள்ளி மண்ணைப்போட்டுச் சுவாமி பாதத்தால் மிதித்தார். அதன் பிறகு அந்த ராட்சசனுக்குப் பழைய ரூபம் வந்து, ஆகாயத்தில் விமானத்தின்பேரில் நின்றுகொண்டு தோத்திரஞ் செய்தான். சுவாமி அதுகண்டு நீ யாரென்று கேட்டார். அப்போது நமஸ்காரம் செய்து சொல்லுவான். பூர்வ

காலத்தில் தேவ சபையில், நடனஞ்செய்கின்ற அரம்பையரில் ஒரு பெண்ணைக் காமவிகாரம் பொறுக்கமுடியாமல், நான் பிடித்திழுந்தேன். பிரமாவுக்குக் கோபமுண்டாகி, என்னைப் பூலோகத்தில் இராட்சசனாகப் போவென்று சபித்தார்.

அப்போது அடியேன் சாப விமோசன மெப்பொழுதென்று கேட்டேன். சிறிது காலஞ் சென்றவுடன், நீ யிருக்கிற காட்டின் வழியாய்த் தசரத குமாரர் வருவார்கள், அவர்கள் பாதம்பட்டால் உனக்கு விமோசனமாகித்தெய்வலோகம் வருவாயென்றுபிரமாசொன்னார். அதன்பின் நான் அப்படியேசென்மித்து, அநேகவுயிரைக் கொன்றேன். இப்போது தேவரீருடைய திருவடித்தாமரை பட்டவுடன் சாபவிமோசன மாச்சுதென்று சொல்லி வணங்கித் தெய்வ லோகத்திற்குப் போனான்.

## சரபங்கர் முத்தி.

விராதன் போனபின் மூவரும் அவிடம் விட்டு அப்பால் போகிறபோது, சரபங்க முனிவர் தன் ஆச்சிரமத்தில் நின்று கொண்டு தன்னுடைய, இருதயத்திலே நினைந்து தோத்திரஞ்செய்து, சுவாமியைக் கண்டவுடனே அக்கினிப் பிரவேசஞ் செய்ய வேணுமென்று நிற்கிறவரை, இராமபிரான் கண்டு நமஸ்காரஞ் செய்தார். அப்போது சரபங்கர் ஆசீர்வதித்து, நல்லவேளையில் வந்தீர். என்னை மேலாம் பதவியிற் சேர்ப்பிக்க வேண்டுமென்று சொன்னார். அதற்குப் பரமபதமே உமக்குக் கிடைக்குமென்று இராமபிரான் திருவாய் மலர்ந்தருள, உடனே சரபங்கரும் அவர் தேவியும் அக்கினியின் மூழ்கித்தேவசொரூபம்பெற்று, விமானத்

திலேறிக் கொண்டு பிரமலோகம் போய்ச் சேர்ந்தார்கள். அப்பால் மூவரும் அவிடம் விட்டு அகஸ்தியரிருக்கிற ஆச்சிரமம் நோக்கி நடந்தார்கள்.

விருத்தம்.

மலைகளு மரங்களு மணிக்கற் பாறையும்
அலைபுன னதிகளு மருவிச் சாரலும்
இலைசெறி பழுவமு மினிய சூழலும்
நிலைமிகு தடங்களு மினிது நீங்கினர்.

இப்படிச் சோலை சூழ்ந்த வனங்களு மலைச்சாரல்களும் கடந்து தண்டகாரணியத்திற் புகுந்தார்கள்.

தண்டகாரணியம்.

அப்போது அங்குள்ள மகரிஷிகள் கண்டு மகிழ்கூர்ந்து வரவேற்று நிற்க, இவர்கள் மூவரும் சகல ரிஷிகளையும் சரணம்புரிய, அவர்கள் ஆசீர்வதித்துப் பன்னகசாலைக் கழைத்துப்போய் வேண்டிய உபசாரங்கள் செய்து, ராமனைப் பார்த்து நீங்கள் எங்களை ரட்சிக்கும் பொருட்டு, இங்ஙனம் பிராப்தமானீர்கள். அதுவும் நாங்கள் செய்த தவமகிமைதான். இவிடத்தில் ராட்சதாள் உபத்திரவம் பொறுக்கமுடியவில்லை அந்த விபத்தை நீக்கி ரட்சிக்க வேண்டுமென்று சகல ரிஷிகளும் சொல்லச் சுவாமி சொல்லுவார் சுவாமிகாள்! எங்கள்தந்தை பரமபதமடைந்தார். அதனால், நானும் என்சகோதரர்களும், துயர மெய்தவும், என் தேசத்துக் குடிகளெல்லாம் மயங்கவும் கவனியாமல் நான் வனவாசம் வந்தது பெரியவாள்செய்த புண்ணியம். அருந்தவநெறி அந்தணர்க்குதவாதார் இருந்தும் பயனென்ன? நீங்கள் யாவருங்காண பரந்தராட்சதரைச் சங்காரஞ்செய்து, கவந்தங்கள், காளிகள், நடனங் காணச்

செய்ய வில்லையானால் என் கையிலமர்ந்தவில்லும், அம்பறாத்தூணி சுமந்த தோளும் எதற்காக விருக்கிறது? பசு, அந்தணர், எளியவர் முதலிய உயிர்களை ரட்சிக்குநிமித்தம் இறந்தவர்கள் தேவர்கட்குத் தலைவர்களாவார்கள். தகாத காரியங்களையும் முனிவர்களுக்குத் துன்பமுஞ் செய்து வருகின்ற ராட்சசர்களுக் குதவியாய்முப்புரதகன மகாதேவனும் அசுரசங்காரஞ் செய்த சுப்பிரமணியனும், சக்கராயுந் தாங்கிய மகா விஷ்ணுவும் வந்தாலும் ராட்சசரைச் சங்கரித்து என் சொல்லை நிலைநாட்டுவேன் நீங்கள் ஒன்றுக்கும் மயங்காதீர்களென்று வாக்குத்தானம் செய்தார். அப்போதுரிஷிகளெல்லோரும் சந்தோஷமடைந்து மிகவுஞ்சரி தாயார் சொற்போல் பதினான்கு வருஷந் தீர்ந்து போமளவும் இவ்வனத்திலேயே எங்களுக் குதவியா யிருமென்று பன்னகசாலையுங் கட்டிக் கொடுத் திருக்கச்சொன்னார்கள்.

முனிவர்கள் வேண்டு கோளுக்காக அவ்விடத்திற் சில வருடந்தங்கி யிருந்து ஓர் நாள் அகஸ்திய முனிவரைக் காணவேணு மென்று ரிஷிகளை நமஸ்காரஞ் செய்து விடை பெற்றுக்கொண்டு மூவருஞ் தண்டஹாரணியத்தை விட்டுப் புறப்பட்டுச் சாலைகளும், சோலைகளும், வனங்களுங் கடந்து போகிறபோதுசுடர் நேமியான சுதிஷ்ட மகாமுனி ஆச்சிரமம் சென்றார்கள். அங்கிருக்கின்ற ரிஷியைக் கண்டு நமஸ்காரஞ் செய்ய, அவரும் ஆசீர்வதித்து அமருங்க ளென்றார். சுவாமி சொல்லுவார் சுவாமி! தபசுக்கெல்லா மேலான தபசையுடைய தேவரீரை யடியேன்காண என்ன புண்ணியஞ் செய்தேனோ வென்று சொல்ல, முனிவர் சந்தோஷமடைந்து நீரிவிடத்திலே யிருமென்று சொல்ல இராமபிரான் சுவாமி! அகஸ்தியமகாமுனிவரைக்காண

வில்லை, அவரைக் கண்டு தரிசிக்க வேணு மென்று சொன்னார். முனிவர் நல்லதென்று ஆசிகூறி நீடித்த ஆயு ளுங்கூறியனுப்ப விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டு நடந்தார்கள்.

## அகஸ்தியரைக் காணுதல்.

சிலதூரம் வனத்தில் நடந்து போகிற போது வருகிறார்களென் றறிந்து அகஸ்திய ரெதிரேவந்தார். அவர் மகத்துவ மென்னவென்றால்:—சத்த சமுத்திரத் தையும் உள்ளங்கையி லேந்தி யுண்டவர், சகலமான தேவர்களும் வணங்கத்தக்கவர், இதுவல்லாமல், வில் வலன் என்னும் ஒரு அசுரனனவன் தம்பியை யாடாக் கிக்கறிசமைத்துத் தனக்கு விருந்திட உண்டபின் கூப் பிட, வயிற்றுள் கறியாயிருப்பவன் உருவமாகி வெளி வர ஆரவாரஞ் செய்தான். அதை யறிந்து வயிற்றைத் தடவிச் சீரணித்து விட்டார். பின்னும், விந்தகிரிகெரு வங்கொண்டு, ஆகாயம் வரையில் வளர்ந்திருக்க, அதைக் கையினலமுக்கி அடக்கி விட்டார். அவ்வித மகத்துவமுள்ள அகஸ்தியர். இராமசுவாமிவரவுகண்டு கெண்டியிலே தீர்த்தமுங் கொண்டு எதிரே வந்து நின் றார். அப்படி நின்றவரை இராம லட்சுமணள் சீதை யிவர்கள் கண்டு நமஸ்காரம் செய்தார்கள். இவர்கள் மீது கமண்டல நீரைத் தெளித்து ஆசீர்வதிக்க, மற்ற முனிவர்கள் பல்லாண்டு கூறத் தம்முடைய பன்னக சாலைக்குக் கூட்டிப்போய்க் காய் கனி தேன் கிழங்கு கொண்டு வந்து விருந்தளிக்கச் சாப்பிட்டு இளைப்புத் தீர்ந்து இருக்கிறபோது, அகஸ்தியர் சொல்லுவார். இராமபத்திரா! நீரிங்குவர நான் என்ன அருந்தவஞ் செய்தேனோ வென்றார். அப்போது இராகவன், தேவ ரீர் தரிசனங் கண்டவுடனே தான் அடியேன் செய்த

தவமும் நிறைவேறிய தென்றார். அகஸ்தியர் நிரம்ப வுங்கொண்டாடித் தனது ஆச்சிரமத்தி லிருக்கச் செய் தார். அப்படியே சிறிது நாளங் கிருந்தார்கள். அப் போது அகஸ்தியர்சொல்லுவார். நீங்கள் இவ்விடத்தி லிருந்தால் மறைகள் வளரும், மக்கள் நீதி யோங்கும், அறந்தழையும், தேவர்கள் வாழ்வார்கள், தானவர்கள் தாழ்வார்கள். ஆழியுலகாளும் அரசனே! ஐயமில்லை ஏழுலகும் செழிக்கும் இங்கு தானே யிருங்களென்றார். அப்போது இராமபிரான், இராக்கதாளைச் சங்கரித்து, உங்கள் இடுக்கந் தீர்த்துத் தருகிறோம் என்று வாக்குத் தத்தம் செய்து கொடுத்தார். அதன் பிறகு அகஸ்தியர் சந்தோஷமடைந்து, பரமன் கொடுத்த வில்லும், அம் பருத்தூணியும், முப்புரமெரித்த கணையும், வடிவாளுங் கொடுத்துக் கோமதி யாற்றங்கரையிலே சோலைகள் நெருங்கி யிருக்கிறது, அவிடத்தி லிரண்டு பருவத மிருக்கிறது, அங்கு பஞ்சவடி தீர்த்தமொன் றுண்டு, அதில் பன்னகசாலை கட்டிக் கொண்டிரு மென்று சொல்லி யனுப்பினார்.

சடாயுவைக் காணல்.

அப்படியே அகஸ்தியரிடம் விடை பெற்றுக் கொண்டு தெற்கு நோக்கிப் புறப்பட்டார்கள். அப்படி நடந்து போகிறபோது, கானயாறும், கரிய குன்றுக ளும்பலபலசோலைகளுங் கடந்து, வெகுதூரஞ்சென்று சடாயு விருக்கும் மலையைக் கிட்டினார்கள். அந்தமலை யிலே கழுகுக்கு வேந்தனானவர் ஒருபருவதம்போலே மலையினுச்சியி லிருந்தார். அவரைக்கண்டு இராமலட்சு மணு ளிருவரும் இவன் யாரோ! இராக்கதனோ! அல் லது தவசியோ வென்று ஆலோசனை செய்து பார்த்து நின்றார்கள். அப்போது சடாயு இவர்களைக் கண்டு

யாரோ தபோதனர்களைப் போலவும், சிறு பிள்ளைகளா கவுமிருக்கிறார்கள், பிரமா, விஷ்ணு, ருத்திரனென்றால்' அவர்களையும் நாம் அறிவோம். இவர்கள் பலத்தில் அதிகமானவர்கள் போலும் கையிலே வில்லும் பிடித் துத் தோளிலே அம்பறாத் தூணியுமாட்டி, இடையிலே உடைவாளுஞ் சொருகிக் கொண்டு, நிற்கிறார்கள். இராட்சதரை யெல்லாம் தூளாக்கும் பராக்கிரமம் பெற் றவர்கள் போலும், கல்விப் பயிற்சியில் நிகரற்றவர்கள் போலுமிருக்கிறது; ஆகையால் நாம் விசாரிப்போ மென்று, மலையைவிட்டுக் கீழிறங்கி இவர்களிடம்வந்து நீங்கள் யார்? எந்தவூர்? ஒரு பெண்ணையுங் கூட்டிக் கொண்டு, இந்தக் காட்டிலே வரக் காரண மென்ன வென்று கேட்க இராமச்சந்திரர் சொல்லுகிறார். ஐயா! நாங்கள் அயோத்தியாபுரி, அதற்கரசனாகியவர் தசரத மகாராஜா, அவருடைய குமாரர்க ளென்று சொன்ன வுடனே, சடாயு பதறி யெழுந்திருந்து, அவர்களைச் சிறகினாலே கட்டி யணைத்துக் கொண்டு இராஜா நன்றா யிருக்கின்றாரோ வென்று கேட்டார். அப்போது ஐயா பரமபதமடைந்தா ரென்றார். அதைச் சடாயு கேட்டு முகத்திலேயறைந்துகொண்டு நிலத்திலடித்துவீழ்ந்து புரண்டழுது புலம்பினார். நாம் இரண்டு பேரும் பால்ய சிநேகமாகவும், தம்பியுந் தமையனுமாகவு மிருந்தோ மே ஐயோ! நீரிறக்கும்போது என்னையுங் கூட்டிப்போ காமல் விட்டுப்போன தென்ன? உமக்குப் பிறகு நானி ருக்கிறதென்ன? நான் அக்கினிப்பிரவேச மாகுறேன், என்னையும் நல்லகதியிற் சேரும்படிச்செய்யுங்களென்று மிகவுங் கவலையாகச் சொன்னார். அது கேட்டு சுவாமி சொல்லுகிறார். ஐயா! நீராவது எங்களுக்குத் துணையா யிருந்து எங்களுக்கு ஆறுதல் சொல்ல வேண்டாமா!

இறக்கத் துணியலாமா வென்று வருந்தினுர்கள். பின்னர் சுவாமி நீர் தந்தைக்குத் துணைவரான தென்ன காரணம்? நாங்களறியச் சொல்ல வேண்டு மென்று கேட்கச் சடாயு சொல்லுகிறுர்.

பிள்ளைகாள்! கேளுங்கள் பூர்வத்தில் தட்சப் பிரஜாபதிக்கு ஐம்பது பெண்கள் பிறந்தார்கள். அதிலே பதி மூன்று பிள்ளைகளைக் காசிப மகாரிஷி கல்யாணம்பண்ணிக்கொண்டார். அதிலே அதிதி என்பவள் முப்பத்து முக்கோடி தேவர்களையும், வாமனுவதாரமான மகாவிஷ்ணுவையும் பெற்றுள். திதியென்பவள் அறுபத்தாறு கோடி அசுரரைப்பெற்றுள். தனு என்பவள் தானவர் முதலானவர்களைப் பெற்றுள். மதி யென்பவள் மனுசரையும், அவர்கட்கு இயல்பான வருஷ முதலியவைகளையும் பெற்றுள். சுரபி யென்பவள் பசுக்களையும் சராசரங்களையும் பெற்றுள். குரோதவசை என்பவள் கழுதை, கடமை, ஒட்டகம் முதலிய இவைகளைப் பெற்றுள். வினதை என்பவள் காற்று, இடி, மின்னல், அருணன், கருடன், கூகை, பருந்து, பட்சி முதலியவைகளைப் பெற்றுள். தாம்பிரவை என்பவள் ஊர்க்குருவி, கௌதாரி, காடை முதலியவைகளைப் பெற்றுள். கழை என்பவள் கொடிகளையும் செடிகளையும் பெற்றுள். கத்துரு என்பவள் பலபல சிரசுகளையுடைய சர்ப்பங்களைப் பெற்றுள். சுதை என்பவள் ஒருதலைப் பாம்பு முதலியவைகளைப் பெற்றுள். அரிடை என்பவள் ஓணன், உடும்பு, அணில் முதலியவைகளைப் பெற்றுள். இந்தப் பதிமூன்று பெயராலே ஆதியில் உலகம் உண்டாயிற்று. இவைகளில் வினதை புத்திரனை அருணன் அரம்பையைச் சேர்ந்தான், அவனுக்குச் சம்பாதியும் நானும் பிறந்தோம். என் பிதாவான அரு

ணன் சஞ்சரிக்கிற இடமெல்லாம் கூடத்திரிவேன். அப்போதே தசரதச் சக்கரவர்த்திக்கு இன்னுயிர்த் துணைவனுயிருந்தேன். இது மூலமாய் உறவென்று சொன்னார்.

இவை யெல்லாம் இராமலட்சுமணுள் கேட்டு, வைகுந்தம் சேர்ந்த தந்தை திரும்பி வந்ததுபோலச் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். பின்னுஞ் சடாயு கவலைப்படுகிறதைப் பார்த்து, அவர் மனக் கவலையை யாற்றி, ஐயா! நீர் எங்களுக்கு உதவியா யிருப்பதை விட்டு நீரே இப்படி மயங்கினுல், உமக்குப் புத்தி யார் சொல்லப் போகிறதென்று சொல்ல, சடாயு அப்படியே கவலை யொழிந்து சந்தோஷமாக விருந்தார். அதன் பிறகு சடாயு நீங்கள் வனத்திற்கு வந்த காரணமேதென்று கேட்க இராமசாமி சொல்லுகிறார். என் தந்தையானவர் முன்னெரு காலத்தில் என் சிற்றன்னை கைகேசியாருக்கு இரண்டுவரங் கொடுக்கவேண்டியதற்காக, என்னைப் பதினன்கு வருஷம் வனவாசஞ் செய்யச்சொல்லியும், தன் மகன் பரதனுக்குப் பட்டங் கட்டச் சொல்லியும், இந்த இரண்டுவரமுந் தரவேண்டுமென்று கேட்டவுடனே தந்தை அப்படியே கொடுத்தார். என் சிறியதாய் என்னையழைத்து, வனம்போகச் சொன்னபடியால், அட்சணமே புறப்பட்டு நானுந் தம்பி லட்சுமணனும் என் தேவி சீதையுமாக வந்துவிட்டோமென்று சொன்னுர்.

அப்போது சடாயு சிறிய தாயார் கேட்டபடியே தம்பிக்கு அரசுகொடுத்து நீ வனத்திற்கு வந்ததே சரி, அந்தப்படியே நீங்கள் பட்டணம் போய்ச் சேருகிற வரையில் நான் உங்களைக் காக்கிறேன். நீங்களிங்கே யிருங்களென்று சொல்லிக் கோமதி யாற்றங்கரையிலே,

உயர்ந்த மணலும், பஞ்சவடியாலும் பழுத்த சோலை களுமாகச் சிங்காரமாயிருக்கின்றது. அதிலே பன்னக சாலை கட்டி உங்களை அங்கே வைக்கிறேன் என்று சொல்லிச் சிறகினாலே அவர்களை யணைத்துக் கூட்டிப் போய்ப் பஞ்சவடியாலின்கீழ் பன்னகசாலையுங் கட்டி யிருக்கும்படிச் செய்து தானும் அவர்களுக்குக் காவ லாக அந்தப் பருவதத்திலே இருந்து காத்துக்கொண் டிருந்தார்.

## பஞ்சவடி தீர்த்தம்.

இராம லட்சுமணனும் சீதையும் பஞ்சவடி தீரத்தி லிருக்கும்போது, இலங்காபுரிக் கதிபதியாகிய இராவணேசுரனுடைய தங்கை சூர்ப்பநகியானவள், தன் புருஷனிறந்த பழியை வாங்கவேண்டுமென்று தன் மகன் சம்புகுமாரனைத் தவசுக்கு அனுப்பியிருந் தாள். அவன் வெகு நாளாக அந்த வனத்திலே தவ நிலையுற்றிருக்க, அவன் பேரில் புற்று வளர்ந்து, அதி லொரு ஆலவிருட்ச மூளைத்துக் கிளைகளோடியிருந் தது. அப்படித் தவசுசெய்கிறவனுக்குத் தவசுமுடிந்து ஆயுதம் வருகிற அன்றைக்கு, லட்சுமணர் போய் காய் கனி கொண்டுவருகிறபோது, ஆலமரத்தைப் பார்த்து, இந்த விருட்சத்தில் நல்ல இலையாகவிருக்கிறதென்று, அந்த மரத்தின்மீதேறி இலைபறித்தார். அப்போது மகாதேவர் கடாட்சத்தினால், அந்த ராட்சதனுக்குத் தம்முடைய வச்சிராயுதத்தை அனுப்பினார். அந்த ஆயுதம் ஆகாயத்திலிருந்து வருகிறதை லட்சுமணர் கண்டு, ஏதோ ஆயுதம் வருகிறதென்று கையை நீட்டி னார். அப்போது தவசுசெய்கிற இராட்சதனுங் கூடக் கையை நீட்டினான். இரண்டு கை வருகிறதென்று கண்டு திரும்பிப்போய், எந்தக் கையிற் போகிறதென்று

மகாதேவரைக் கேட்டது. ஈசுரன் முந்தின கையிலே போவென்றார். அப்படியே திரும்பி வருகிறபோது, லட்சுமணர் கையை நீட்டினார். இராட்சதனுங் கையை நீட்டினான்; லட்சுமணர் கை முந்தி நின்றபடியால் அந்த ஆயுதம் லட்சுமணர் கையில் வந்து நின்றது. அப்போது லட்சுமணர் ஆயுதத்தைப் பெற்றுச் சந்தோஷமாகித்திடீரென் றுமரத்தைவிட்டுக்கீழேகுதித்து, இந்த வாளின் கூர்மையைப் பார்க்கவேண்டுமென்று அந்த ஆலவிருட்சத்தை வெட்டினார்.

அப்போது அந்தராட்சதனும் ஆலவிருட்சமும் இரண்டுதுண்டாகவிழும்போது அந்தராட்சதனுடைய இரத்தம் லட்சுமணர் உடம்பெல்லாந் தெறித்துஇரத்த வாடையுடனே யோடி வந்து இராமசுவாமி யிடம் வந்து சுவாமி! அதோ ஒரு ஆலவிருட்ச மிருக்கிறது அதிலே நல்லஇலையாகவிருந்தது அதையேறிப்பறித் தேன் அப்போது ஆகாயத்தி லிருந்து இந்த வாள் வந்தது. இந்தவாளை வாங்கிநான்கீழேயிறங்கி வாளின் கூர்மை யறிய அந்த மரத்தை வெட்டினேன். அதனு டனே யாரோ தவசியோ இராட்சதனோ தெரியாது, இரண்டு துண்டாய் மரத்துடனே விழுந்தான். என் உடம் பெல்லாம் இரத்தம் பட்ட தென்று சொன்ன வுடனே இராமசுவாமி தம்பியைக் கிட்ட அழைத்து அஞ்சாதே யென்று பயமகற்றித் தம்பி! இராட்சதரை யெல்லாங் கருவறுக்கும்படியாய் ஈசுரர் ஆயுதம் அனுப் பினார். இந்த ஆயுதம் வாங்கத் தபசிருந்த இராட்சதன் பட்டானென்று தேறுதல் சொல்லி ஆற்றிலே போய்த் தீர்த்தமாடி அனுஷ்டான முடித்துக் கொண்டு வரச் சொன்னார். அதன் பிறகு சூர்ப்பநகி மறுநாள் தன் மகன் தவஞ்செய்யிடத்திற்குப் போய்ப் பார்க்கிறபோது

அந்த ஆலமரமுந் தன் மகனும் இரண்டு துண்டாக் கிக்கிடக்கிறதைக் கண்டு வயிற்றிலேயும் வாயிலேயும் அடித்துக்கொண்டு துள்ளி விழுந்து அலறி அபய மிட்டு இப்படிச் செய்தவனாரென்றும் தன் மகனுடைய பழிவாங்கவேண்டு மென்று மனதிலே நினைந்து சுற் றிப்பார்க்கிற போது ஒரு மனிதனடி காணப்பட்டது இந்த மானிடனல்லவோ இப்படிவெட்டினவனென்று தீர்மானித்து அந்த அடியின் வழியே துடர்ந்து பன் னகசாலை முன்னே வந்தாள் அப்போது இராமசுவாமி கோமதி யாற்றங்கரைக்கு அனுஷ்டானத்திற்குப்போகி றவரைச் சூர்ப்பநகிகண்டு அவருடைய கலையினழகும், மார்பிலேபூணூலிலங்க, யானைத்துதிக்கைபோ லிரண்டு தோளுங் கரமும், செந்தாமரைப் புட்பம்போ லிரண்டு கண்களுந் திருமுகமுந்தோண, சடைமுடியும் தவவடி வாகவு மிருக்கிறதைக் கண் கொள்ளாமற் பார்த்து, அவர் கையிலே பிடித்த வில்லும், இடையிலே கட்டிய கச்சையும், மகா சௌந்தரியங்களையுங் கண்ணுற்று, இவரைப்போ லழகும் வடிவும், பராக்கிரமங்களையு முடைய புருஷரை நாமிந்தப் பூலோகத்திற் கண்ட தில்லை. இவரை நாம் எந்தவிதமேனும் இணங்கி நாய கனகப் பெற்றுக் கொள்ள வேண்டு மென்று நினைத்து, அதற்கேற்ற வடிவெடுக்க உத்தேசித்தாள்.

### சூர்ப்பநகை சூழ்ச்சி.

விருத்தம்.

பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடிய ளாகி
யஞ்சொலிள மஞ்ஞையென வன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்.

ஷை வேறு

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற முடிக்கு மொய்ம்பினள்
மேலைநா ளுயிரொடும் பிறந்து தான்விளை
காலமோர்ந் துடனுறை கடிய நோயனாள்.

வசனம்.

சூர்ப்பநகையானவள் மகா லட்சுமியைப்போல ரூபங்கொண்டு, கையில் வெற்றிலைச் சுருளும் பிடித்து, ஆகாயத்தினின்று இறங்கினவள் போல, சுவாமி! ஆற்றங்கரையிலிருந்து திரும்பி வரும்போது வணக்கத்தோடு எதிரே வந்து நின்றாள். அப்படி நின்றவளைச் சுவாமி யேறிட்டுப்பார்த்து, அவள் சொரூபத்திற்குறைபாடில்லாததையுங் கண்டு, நீ எந்தவூர்? இங்கே வந்த காரியமேதென்று கேட்டார். அதற்கவள் சொல்லுகிறாள்.

விருத்தம்.

பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்விமுப்
புரங்கள் செற்ற
சேவலோன் றுணைவனான செங்கையோன்
றங்கை திக்கின்
மாவெலாந் தொலைத்து வெள்ளி மலையெடுத்
துலக மூன்றும்
காவலோன் பின்னை காமவல்லியாங்
கன்னியென்றாள்.

வசனம்.

ஐயா! பிரமாவின் பிள்ளை புலஸ்தியர், அவர் பிள்ளை விச்சிரவா, அவருடைய பிள்ளை இராவணேசுரன், அவருடைய தங்கை நான் என் பெயர் காமவல்லி. ஆனாலிவிடத்தில் வரக்காரணமேதென்றால்:—

நான் பெண் பிறந்த வெட்கக் கேட்டைச் சொல்லு கிறேன் கேளுமென்று பின்னுஞ் சொல்லுகிருள். என்னுடைய வடிவுக்கேற்ற நாயகரை மாலை சூட்டிக்கொள்வதே யல்லாமல், மற்றபடிக் கூடாதென்று சபதஞ் செய்து விட்டு, இந்த எட்டுத் திசைகளிலுஞ் சுற்றிப் பார்த்ததில், என் வடிவுக்கேற்ற மாப்பிள்ளை கிடைக்காதபடியால் இந்தக் கோமதி யாற்றிலே தீர்த்தமாடிப் போகவந்தேன். இப்போது உம்மைக் கண்டேன் என் மனதிற்கும் சரியாயிருக்கிறது, ஆகையால் அடியாளுக்கு நீரே நாயகன். தேவர்ருக்கு நானே பாரியாளாக விருக்கவேண்டும். நீ ரென்னைப் பாரியாக வைத்துக் கொள்ள வேண்டு மென்று சொன்னுள். இவைகளைக் கேட்ட சுவாமி புன்முறுவல் செய்து சொல்லுகிருர். அடி காமவல்லி! நீ இராவணன் தங்கை யென்ருயே? இராவணன் இராக்கத னல்லவோ? அவன் தங்கை யென்ருல் நீயும் இராட்ச்சியாக வல்லவோ இருக்க வேண்டும்? அப்படியிருக்க உனக்கிந்த ரூபம்வரவேண்டிய காரணமென்ன வென்று கேட்க, அப்போது இராவணன் தங்கையென்று அறியாமற் சொன்னேமென்று மனதில் நினைத்துச் சுவாமி யிடஞ் சொல்லுவாள்.

அப்படியல்ல விச்சிரவாவுக்கு, இராட்சசி ஒருத்தியும், விஞ்சையப் பெண் ணெருத்தியுமுண்டு; அந்த இரண்டு பெண்களில், இராட்ச்சிவயிற்றில் இராவணன் கும்பகருணன், விபீஷணன் இந்த மூன்று பேரும் பிறந்தார்கள். விஞ்சையப் பெண் வயிற்றிற் குபேரனும் நானும் பிறந்தோம். இராவணன் பிரபல மானதால், அவன் பெயர் சொன்னேன். நான் குபேரன் தங்கை கைலாய பருவதம் போல திரவியம் வேண்டு மென்ருலும் குவித்துக் காண்பிப்பேன். என்னைப் பாரியாக

வைத்துக் கொள்ளுமென்று வேண்டிய விதத்திலுஞ் சொன்னாள். அப்போது சுவாமி நீவிஞ்சைக்கிறைவன் மகள். நான் பூலோகத்து மனிதன், இருவருக்கும் பொருந்ாதென்றார். இப்படி யிருக்கிற வேளையில் பன்னகசாலைக் குள்ளிருந்து சீதை சுவாமி பூஜைக்குப் போனவர், எப்பொழுதும் சீக்கிரம் வருவாரே, இன்றைக்கு இந்நேரஞ் செல்லுவானேனென்று எட்டிப் பார்த்தாள். அப்போது ஜானகியைச் சூர்ப்பநகைகண்டு நம்மைப்பார்க்கிலும் இவள் அதிக வடிவமா யிருக்கிறாள், இவளும் நம்மைப்போலே தான் வந்தவளாக வேண்டுமென்று, நினைத்து இவளைப் பார்த்த கண்ணினால் நம்மைப் பார்ப்பாரோ? எவ்விதமும் இவளைக் கொன்றுவிடவேண்டும் என்று எண்ணிக் கொண்டு நின்றாள்.

அப்போது சீதாதேவி, நாயகனோடு பேசிக் கொண்டு நிற்கிறவள் சொரூபத்தைக்கண்டு, முன்னமே மிதிலையில் வில்லொடித்து நம்மை விவாகஞ் செய்த போது, இந்தச் சென்மத்தி லுன்னையல்லாமல், வேறு பெண்களைச் சிந்தையாலும் நினையேனென்று சொன்னாரே, இப்போது இப்படியாவதென்ன வென்று சுவாமிகிட்ட வந்தாள் அப்போது சூர்ப்பநகை யானவள் நான் பேசிக்கொண்டு நிற்கிறஇடத்திற்கு நீவரலாமோ என்று கோபித்துச் சீதையை நாடி நடந்தாள். அப்போது சீதை பயந்து சுவாமியைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். சுவாமி பயப்படாதே யென்று சொல்லி, மாயமாக வந்தவளைப் பார்த்து, நீ சீக்கிரம் இவிடம் விட்டு ஓடிப்போ, தம்பி கண்டால் ஆக்கினை செய்துபோடுவானென்று சொல்லி விட்டுச் சீதையைக் கூட்டிக்கொண்டு போய்ப் பன்னகசாலையி லிருந்தார்கள்.

## சூர்ப்பநகை மான பங்கம்.

அதன் பிறகு சூர்ப்பநகை மெத்த வியாகூலத்துடனே விம்மல் பொருமலாக எப்போது மிருக்கிற பொதும்பரிற் போய் வெதும்பிக் கொண்டிருந்தாள். இப்படியாக அன்று கழித்து மறுநாட்காலையில் ஸ்ரீராமர் ஆற்றங்கரைக்கு, அனுஷ்டானத்திற்குப் போனது பார்த்துப், பன்னகசாலையிலிருக்கிற சீதையைக்கொன்று விட்டோமானல், நம்மை யிவர் வைத்துக் கொள்வாரென்று நினைத்துப் பன்னகசாலைக்குச் சீதை பேரில் கோபங்கொண்டு போகிறபோது, லட்சுமணர் கண்டு, அது ஆரடி? நில்லடி நில்லடி யென்று மறித்தார், அப்படியும் நில்லாமற் போகிறபடியால், லட்சுமணர் சீக்கிரமோடிப்போய் அவள் தலைமயிரைப் பிடித்துக் கொண்டார். அப்போது சூர்ப்பநகை, லட்சுமணரைத் தோளிலேதூக்கப் பார்க்கிற போது, மோசம் வந்த தென்று, இடையிற் கிடந்த வாளையுருவிச் சூர்ப்பநகையின் மூக்கு முலை காதை யறுத்து விட்டார். அப்படி அறுபட்ட வேதனை பொறுக்க மாட்டாமல் அடித்து விழுந்து புரண்டழுது அலறின ஓசையால் எட்டுத்திக்கும் கிடுகிடென்று நடுங்கின. வனத்திலுள்ள சீவராசிகளுக்குச் செவிடு மண்டின. அறுபட்ட காயத்தி லிருந்து வந்த இரத்தப் பெருக்கு மலையிலிருந்து அருவி புறப்பட்டது போலப் பூமி யெல்லாம் பரவியோடின. அந்த இரத்தத்துக்குள்ளேகிடந்து, வயிற்றிலே யடித்துக்கொண்டு புலம்பினுள். அப்பொழுது தேவர்களெல்லாம் மலையையெடுத்த இராவணன் பத்துச்சிரமும் இருபது கரமும் கரன் தூஷணன் திரிசிரன் இவர்கள் சிரங்களையும் அறுப்பதற்குச் சூர்ப்பநகையின் மூக்குங் காதும் முலையும் அறுத்து நாட் செய்ததுபோ லிருக்கிற தென்று

சந்தோஷமடைந்தார்கள். அப்பால் சூர்ப்பநகையானவள் பின்னும் அனுஷ்டானத்திற்குப் போன ஸ்ரீராமர் வருமளவும் இருந்து, அவரிடத்திலிந்த ஆக்கினைகளையுங்காண்பித்து நம்முடைய எண்ணத்தையுஞ்சொல்லுவோமென்று சிறிது நினைப்பாள், சிலநேரம் மூர்ச்சையாகிக் கிடப்பாள், பின்னும் ஐயோ வென்று அலறி அபயமிடுவாள், தன் அண்ணனை நோக்கி நீ ஏழுலகத்திற்கும் இராஜாவாக இருக்க, இரண்டு தபசிகள் வில்லெடுத்துக் கொண்டு என்னுடைய மூக்கு, முலை, காது அறுத்துவிட்டார்களே இந்தப்பரிதாபங் காண வாராயோவென்றும் அழுவாள், தேவேந்திரனையும், முப்பத்துமுக்கோடி தேவர்களையும் திக்குப்பாலர்களையும், ஏவல் கொண்ட அண்ணாவே! என்னுடைய பழிகாண வாராயோவென் றழுவாள். பின்னும் அண்ணா! நீ கயிலாய மலையையு மெடுத்தாய், சிவன் தடக்கை வாளாயுதமுங் கொண்டாய், அப்படிக்கொத்த பலவானே! இந்தமானிடன் தலை துணிக்க வாராயோ'வென்றழுவாள். இப்படியாக அழுது புலம்பிப் பின்னுஞ்சொல்லுவாள்.

விருத்தம்.

இந்திரனு மலரயனு மிமையவரும் பணிகேட்பச்
சுந்தரிபல் லாண்டிசைப்ப வுலகேழுந் தொழுதேத்தச்
சந்திரன்போற் றனிக்குடைக்கீழ் நீயிருக்குஞ் சபைநடு
வந்தடியே னுனது முகங்காட்ட வல்லேனோ. [வே

ஷை

உரநெரிந்து விழவென்னை யுதைத்துருட்டி மூக்கரிந்த
நரனிருந்து தோள்பார்க்க நான்கிடந்து புலம்புவதோ
கரனிருந்த வனமன்றோ விவைபடவுங் கடவேனோ
அரனிருந்த மலையெடுத்த அண்ணாவோ! அண்ணாவோ

வசனம்.

என்று புலம்பிப் பின்னும் ஏ அண்ணு கரனே! தூஷணு! திரிசிரனே! நான் அபயமிட்ட சத்தம் உங்களுக்குக் கேட்கவில்லையோ? தேவேந்திரனைச் சிறையில் வைத்த மருகா! இந்த மானிடர் வலிகாண வருவாயோ என்றழுவாள். இப்படியாகப் புலம்பிக்கொண்டிருக்கிற வேளையிலே, சுவாமி அனுஷ்டான முடித்துக்கொண்டு பன்னகசாலைக்கு வருகிறபோது, சூர்ப்பநகை அவர் முன்னே அடித்து விழுந்து புரண்டழுது அபயமிடுகிறபோது, தம்பி லட்சுமணன் செய்த ஆக்கினைதானென்று மனதிலே நினைத்துக்கொண்டு, ஐயோ! நீ யாரென்று கேட்டார். அப்போது சூர்ப்பநகை நீர் என்னை யறியீரோ? நேற்று நான் உம்மிடத்தில் வந்து நின்றேனல்லவோ நான்றான் இராவணன் தங்கை, என் பெயர் சூர்ப்பநகி யென்றாள். இவள் இப்படிச் சொன்னவுடனே சுவாமி, நீ நேற்று விஞ்சையர்க் கிறைவன் மகள் காமவல்லி என்று சொன்னயே, இன்று இராவணன் தங்கை சூர்ப்பநகி யென்கிறாயே, நீ ராட்சசிதானே, நாங்கள் தவசு செய்கிற இடத்தில் வந்து இடர் நினைத்ததால், தம்பி மானபங்கஞ் செய்யானே வென்றுசொல்லிப் பின்னும், லட்சுமணரை அழைத்துத் தம்பி! இவளை இப்படி ஆக்கினைசெய்தது யாரென்று கேட்க, லட்சுமணர் சொல்லுவார்.

அண்ணு! இந்த ராட்சசி தேவியாரைத் தின்னத் தான் வந்தாளோ அல்லது எடுத்துப் போகத்தான் வந்தாளோ? வேறு எதைக் குறித்துவந்தாளோ? எனக்குத் தெரியாது. நல்லவளைப்போலப் பிராட்டியாரிருக்கும் பன்னகசாலைக்குள்ளே வேகமாய் நடந்துபோகிற போது, ஆராடி, அங்கு போகாதே யென்று மறித்தும்,

நிற்காததினால் விரைவிற் சென்று, தலைச்சிகையைப் பிடித்திழுத்தேன். அப்போது என்னைத் தோளிலே தூக்க வழிபார்த்தாள். அதனால் மானபங்கஞ் செய்தேனென்று சொன்னார். அதன் பிறகு சூர்ப்பநகி மாற்றானைக் கண்டால் மனமெரியாதோ வென்றாள். அப்போது ராகவர் போடிபோ அரக்கி! இராட்சதாளையெல்லாம் சம்மாரம் செய்கிறதற்குக் கங்கணங் கட்டிக் கொண்டு வந்திருக்கிறோம். அப்படியிருக்க நீ, முன்னதாக வந்து சிலுக்கிட்டாய் என்னுடைய தம்பி பெண் வதை செய்யலாகாதென்று நினைத்து உன்னை ஆக்கினை செய்தான். இப்போதே யெழுந்துபோனாற் பிழைத்தாய், இல்லையானாற் கொன்றுபோடுவானென்று சொன்னார்.

அதுகேட்டுச் சூர்ப்பநகை சொல்லுவாள் நரை திரையில்லாத பிரமா, தேவேந்திரன், திக்குப் பாலர்கள், ரிஷிகள், தபோதனர்கள் முதல் யாவரும், என் தமையன் இராவணேசுரனுக்கு அடிமைகளாயிருந்து ஏவல் செய்கிறார்கள். நீயோ அப்படிக்கொத்த பலவானைச் செயிக்கப்போகின்றாய்! ஆனால் நீங்கள் பிழைத்து நன்றாயிருக்கவேண்டுமானால், நானொரு யுத்தி சொல்லுகிறேன். அதென்னவென்றால்:—நான் உங்களுக்குப் பூலோகம், தெய்வலோகமெல்லாம் அரசாளும்படிக்கு முடிசூட்டிச் சிங்காசனத்தில் வைக்கிறேன்; என்னுடைய உயிரை நீங்கள் காப்பாற்றவேணுமென்றாள். அப்போது ஸ்ரீராமர் வாடி ராட்சசி! நாங்கள் அயோத்தியாபுரியை ஆளப்பட்ட தசரதச் சக்கரவர்த்தியின் புத்திரர்கள், எங்கள் தம்பிக்குப் பட்டங் கொடுத்து விட்டு, வெங்கானில் விரதம் பூண்டு ரிஷிகளோடு வந்து சேர்ந்தோம். அவர்களெல்லோரும்

இராவணன் முதலிய இராட்சதர்கள் உபத்திரவம் மெத்தவுண்டு, அவர்களைச் சம்மாரஞ்செய்து எங்களிடுக்கந் தீர்க்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதுபோலவே சம்மாரம் பண்ணுகிறோமென்று வாக்குத்தத்தம் பண்ணிக்கொடுத்தோம். அப்படியே ராட்சதாளை யெல்லாந் தேடித்திரியாமல் எங்கள் முன்னே உன்னைக் கூட்டிவந்து விட்டது நல்லதல்லவோ. தம்பி! இவள் இப்பொழுது எழுந்துபோனாலாச்சுது, இல்லாதிருந்தால் இவளைத் துண்டந் துண்டமாக வெட்டிப்போடு வென்றுசொல்லிப் பன்னகசாலையை நோக்கிப் போனார்.

இலட்சுமணர் அப்படியே கொல்ல வேண்டுமென்று ஆயுதமெடுக்கிறபோது, இவர்கள் ஒன்றுக்கும் இணங்கார்கள் நாம் ஒருவரும் அறியாமல் வீணிலே உயிரை மாய்ப்பானேனென்று எழுந்து போனாள். அப்படிப்போகிறபோது, என்ன சொல்லிக் கொண்டு போகிறாளென்றால்:—கரன் பல படைகளுடனே இந்தவனத்திலிருக்கிறான். அவனுக்கு நான் போய் அறிக்கை செய்து, இப்போது கூட்டிவருகிறேனென்று சொல்லிப் புறப்பட்டாள்.

### கரன், தூஷணன், திரிசிரன், வதம்.

இப்படியாக நடந்து காடு மலையுங் கடந்து கரனிருக்கிற வனத்திலே வந்து, கரனைக் கண்டு, அவன் காலடியிலே யடித்து விழுந்து புரண்டழுதாள். அப்படியழுதவளைக் கரன் கண்டு, திடுக்கென் றெழுந்து இப்படிப் பங்கஞ் செய்தது யாரென்று கேட்டான். அப்போது சூர்ப்பநகை அண்ணா! யாரோ இரண்டு பேர் அயோத்தியாபுரிப்பட்டணமாம், தசரதராஜாவின் மக்க

ளாம், அவர்கள் பெயர் இராமலட்சுமணனாம், அவர்கள் ஒரு பெண்ணைக் கூட்டி வந்து கோமதியாற்றங் கரையில் பஞ்சவடியாலின் கீழே, பன்னகசாலை கட்டிக் கொண்டிருக்கிறார்கள். அந்தப் பெண்ணைப்போல் இந்தத் திரிலோகங்களிலு மில்லை. அப்படி யழகுடைய பெண்ணை நான் கண்டு, இந்தப்பெண் நமது அண்ணன் ராவணேசுரனுக்காகுமென்று எடுக்கப்போனேன் அப்போது எங்களைக் கேட்காமல் நீ பன்னகசாலைக் குள்ளே போகக் காரிய மேதென்று, என்னைக் கீழே வீழ்த்தி இப்படிக்கு, லட்சுமணனென்பவன் ஆக்கினை செய்தான். அப்போது நான் ராவணேசுவரன் தங்கை என்னைப் பங்கப்படுத்தாதே யென்று சொன்னபோதுங் கேளாமம் இப்படிப் பங்கமுஞ் செய்து, அந்த ராவணனைச் சம்மாரஞ் செய்வதற்குத் தான் இவ்விடம் வந்திருக்கிறோம் சீக்கிரத்திலே பேரய்க் கூட்டிவாவென்றும் சொன்னார்களென்று சொன்னாள்.

அதைக் கேட்டவுடனே, கரன் அதிகக் கோபங் கொண்டு அவர்களெங்கே யிருக்கிறார்கள்? காட்டென்று இடது தோள் துடிக்க, எழுந்து நின்றான். அவன் எப்படிப்பட்டவ னென்றால்:— குபீர்குபீரென அக்கினிப் பொறிபறக்கும் கண்ணையுடையவன், ஆயிரம் யானைப் பலமுள்ளவன். தன் றேர்ப்பாகனை யழைத்துத்தேரைக் கொண்டு வரச்சொல்லி, இராட்சத சேனைகளையும் வரச் சொன்னான். அப்பொழுதே கோடாகோடி ராட்சதர்கள் வந்து கூடினார்கள். அந்தஇராட்சதாள் எப்படிப்பட்ட பலவான்களென்றால், ஏழுலகத்தையும் அளக்கத்தக்க வல்லவர்கள், சூலமும் பாசமும் வாளுங் கையிற் கொண்டு, வேலை சூழ்ந்த உலகமெல்லாம் அதிரும்படிக்கு ஆர்ப்பரிப்பார்கள் ஆலகாலம்போலே இருண்ட

மேனியராய் வந்து, கரனை வணங்கிச் சுவாமி! மனிதர் பொருட்டுத் தேவரீர் யுத்தத்திற் கெழுந்தருளினால், தேவர்கள் நகைப்பார்கள், நாங்கள் போய் அந்த இரண்டு மனிதரையுங் கொன்று, அந்தப் பெண்ணையுமெடுத்து வருகிறோமென்று சொன்னார்கள். அப்படியே நல்லதென்று, அந்த இரண்டு பேரையுங் கொன்றுவாருங்களென்று பதினன்கு படைத்தலைவரையும் சேனைகளையுமனுப்பி, அவர்களைக்காண்பிக்கும் பொருட்டுச் சூர்ப்பநகையையுங்கூட அனுப்பினன். அப்படியே அவர்கள் புறப்பட்டு வந்து பன்னகசாலையைவளைந்து கொண்டார்கள்.

அப்போது பன்னகசாலையிலிருந்த இராமலட்சுமணர் வெளியில் வந்தார்கள். அப்பொழுது சூர்ப்பநகி இராம லட்சுமணர் இவர்கள்தானென்று தான் அழைத்துவந்த ராட்சதாளிடம் காண்பித்தாள். பெரிய பெருமாள் இளையபெருமாளைப் பார்த்துத் தம்பி! கரனுடைய படையைக் கண்டாயோவென்று, தேவிக்குக் காவலாகப் பன்னகசாலையில் தம்பியை நிறுத்திவிட்டுத் தான் மட்டும் கச்சையுங்கட்டி, வில்லுங் கையிற்பிடித்து அம்பறுத்தூணியுந் தோளிலே மாட்டி, வாளை இடையிற் செருகி, வில்லை நாணேற்றிக்கொண்டு பன்னகசாலையிலிருந்து, வெளியே புறப்பட்டார். அப்பொழுது ராட்சதாளும் எதிர்த்தார்கள். சுவாமி பாணத்தைப் பிரயோகம் பண்ணினர். ராட்சதாளும் ஆயுதங்களைச் சுவாமிபேரில் எறிந்தார்கள். அப்பொழுது ராமபாணமானது அந்த ஆயுதங்களைச் சின்னபின்னங்களாக்கி, எதிர்த்த பதினன்கு படைத்தலைவரும் சேனைசைன்யங்களும், துண்டந் துண்டமாய் விழும்படியாக அறுத்து விட்டுப் பாணம் அம்பறுத் தூணியில் வந்து சேர்ந்தது.

இப்படிப் பதினான்கு படைத்தலைவரும், சேனைகளும் மடிந்ததைக்கண்ட சூர்ப்பநகை, ஓடிக் கரனிடம் போய் அடித்து விழுந்து புரண்டு அண்ணா! நம்முடைய ராட்சதாளெல்லாம், துண்டந் துண்டமாக அறுத்து விழக்கண்டதே யல்லாமல், ஒருவராகிலும் பிழைத்தவர்க ளில்லையென்று சொன்னாள். அதைக் கேட்ட கரன் கோபங்கொண்டு, தன்னுடைய சதுரங்க சேனைகளையெல்லாம் வரும்படியாய்ப் பேரிகை முழக்கச் சொல்லிக் கட்டளை யிட்டான், அப்படி முழக்கின பேரிகைச்சத்தங் கேட்டுத், தேர், பரி, யானை, காலாட்களெல்லாம் ஆரவாரித்து ஒவ்வொன்றாய்த் திரண்டது. அது கண்டு தெய்வலோகம், நாகலோகத்தார்களெல்லாம் பயந்து ஓடினார்கள். அந்த ராட்சசப் படையின் அதிசயம் எப்படியெனில்:—அவரவர்கள் ஆர்ப்பரித்து வருகிற ஓசையானது எட்டுத் திக்குமதிர, கடலோசையுமடங்க, ஆலகால விஷம் பரவி வருகிறது போலும், பருவதங்கள் நகர்வது போலும், படைகள் நடந்து வர, மேகங்கள் வருகிறது போல யானை குதிரை நெருங்கி நடந்து வரப் பூமியெலாம் நடுநடுங்க பதினாலாயிரம் படைத்தலைவரும் ஆறு கோடி ராட்சதாளும் வந்து கரனைக் கண்டார்கள்.

ஒவ்வொரு படைத்தலைவர்களும் இரண்டாயிர யானைப்பலமுடையவர்கள். தேர்மேல் கொண்டுவருகிற ஆயுதங்களென்ன வென்றால், மழு, தண்டு, வேல், வாள், தோமரம், சக்கரம், முத்தலைச் சூலம், இருப்புலக்கை, காலபாசம், குந்தம், குலிசம், வல்லையம், பாணம், வில், அம்பறாத்தூணியுங் கொண்டு, ஆதித்தனும் அக்கினியும் கோபித்தாற் போலப்புறப்பட்டு வருகிறவர்கள் கல்லினுந்திரண்ட தோளர்கள். இந்திரன்

முதலான திக்குபாலர்களும் அடிதொழப் பட்ட காலி னர். கவசங்கட்டிக் கொண்டு, அவரவர்தேர்களில் பூட் டியிருக்கிற யானைகுதிரை, பேய், குரங்கு, கோளரி, கரடி, நாய், வேங்கை, யாளி இவை முதலானதெல்லாமிருக் க, அரக்கர்கள், அனைவோரும் கரனுடனே புறப்பட் டார்கள். மலைகளைப் பொடி யாக்கிச், சமுத்திரத்தைத் தூர்த்து, ஆகாயத்தை மறைத்து, ஆரவாரத்துடனே கரன் பதினாலாயிரம் படைத்தலைவரும், ஆறு கோடி ராட்சதாளும், ஆறு லட்சந்தேர், பனிரண்டு லட்சம் யானை, இருபது லட்சம் குதிரை, இவைகளையெல்லாம் நடத்திக் கொண்டு வந்து இராமசுவாமியிருக்கும் பன் னகசாலையை வளைந்துகொண்டார்கள். அப்பொழுது சுவாமி கண்டு கண் கொள்ளாத சேனைகள் வந்ததைக் கரனுடைய சேனையென்றறிந்து, சந்தோஷப் பட்டு, தண்டகாரணியத்தில் ரிஷிகளுக்கு இராட்சத சம்மாரஞ் செய்து உங்களிடுக்கந் தீர்த்துத் தருகிறேன், அப்படி இல்லை யென்றால் இந்த வில்லைச் சுமந்து கொண்டு திரிவானேனென்று வாக்குத் தத்தஞ் செய்து கொடுத் தோமே, அப்படியே நான்றேடிச்செல்லாமல், வலியே அவரவர்கள் மடியவந்தார்களே இதுவும் நான்செய்த தவமகிமை யென்று மகிழ் வடைந்து, அம்பறாத்தூ ணியுந் தோளிலே மாட்டி வில்லுங் கையிற் பிடித்துக் கவசமணிந்து, உடைவா ளறையிற் சேர்த்துத் தம்பி யைத் தேவிக்குக் காவல் வைத்துவிட்டுப் பன்னகசாலை யிலிருந்து வெளியில் வந்தார். அப்போது சீதைஅந்த ராட்சதப் பெரும் படையைப் பார்த்துச் சுவாமியை நினைந்து, எவ்விதமாய்ப் போர்முடிகிறதோ வென்று அழுது கவலை யுற்று நின்றாள்.

அப்பொழுது மலைக்குகைக் குள்ளிருந்த சிங்க மானது யானைக் கூட்டத்தைக் கண்டா லெப்படிப்

பாயுமோ அதுபோல சுவாமி ராட்சதாள் முன்னே வந்து நின்றார். அந்நேரம் சூர்ப்பநகை இராமனென்பவன் இவன்றா னென்று கையை நீட்டிக் காட்டினாள். அது எப்படி யிருந்த தென்றால், 'குலத்துக்குக் கேடு கோடாலிக்காம்பு' என்பது போலும் மூங்கிலி லுள்ள பாஷாணமே அம்மூங்கிலைத் தகிப்பது போலும், தன்னுடைய கிளையிலுண்டானவர்களை யெல்லாம் கூட்டி வந்து காட்டிக் கொடுத்தாள். அப்பொழுது தேரின் பேரினின்றகரன் சுவாமியைக் கண்டவுடனே, நானிந்தமானிடனோடு போர்செய்து இவன் வலியை நீக்கி வாகைமாலை சூடுகிறேன், பழியுந் தீர்ப்பேனென்று தன்னுடையபடையைப் பார்த்துச்சொன்னான். அப்போது சேனாதிபதியான அகம்பனென்பவனெழுந்து, கரனைப் பணிந்து சுவாமி! ஒரு மானிடன் பொருட்டுத் தேவரீர் யுத்தத்திற்குப் போகவேண்டுமோ? இத்தனை கோடி படையிலே நல்லவீரர்களொருவ ரில்லையோ? நீர் போவது துற்குறிகளா யிருக்கிறது. 'குருதிமழை பெய்கிறது, மேகங் கர்ச்சிக்கிறது, சூரியனைப் பரிவேடமிட்டிருக்கிறது, உம்முடைய வீரக்கொடியின் பேரில் காகங்களேறி யடித்து விழுகிறது, வாயிலே ஈ மொய்க்கிறது, ராட்சதர்களுக்கு இடது தோள் துடிக்கிறது, குதிரைகளுக்குக்கண்ணீர் தாரைதாரையாக வோடுகிறது, யானைகளெல்லாம் துக்கித்துக் கொண்டு நிற்கிறது, ராட்சதாள் வாய் வெடி நாற்ற முண்டாகிறது, அவன் மனிதனொருவனென்று நீரெண்ணவேண்டாம். இப்போது நீர் போருக்குப் போவது காரிய மில்லையென்று சொன்னான் அது விஷயங்களைக் கரன் கேட்டு, முப்பத்து முக்கோடி தேவர்கள் தேவேந்திரன் முதலிய திக்குப்பாலரை யெல்லாம் ஏவல்கொண்ட நான், ஒருமானிடனை

இன்று வென்று வெற்றியடைய முடியாதோ? இப்படி யுலகத்தார் நகைக்கும்படியாக நீ இவ்வசனஞ் சொல்வாயோ வென்று கோபங் கொண்டு இடியேறு முழங்கினதுபோல ஆர்ப்பரித்து, இராகவனை வளைந்து கொண்டார்கள். அப்போது சுவாமிகைவாளினால் அந்தப்படைப் பெருக்கத்திற் சென்று முறிய அடித்தபோது சில சேனைகள் மாய்ந்தன, தேர்கள் சாய்ந்தன, யானைகளிறந்தன, குதிரைகளுயிர் துறந்தன, இன்னும் வந்தெதிர்தத பதினாலாயிரம் படைத்தலைவரும் மடிந்துவிட்டனர். பின்னும் வாளினால் இடசாரி வலசாரியாகக் காற்றாடிபோல் சுற்றி அறுத்து வீழ்த்தினார். அதன்பிறகு ஆறு கோடி ராட்சதாளும் இராமனோடு எதிர்த்தபேரெல்லாம் பட்டு விழுகிறதே யல்லாமல், ஒருவராகிலும் பிழைத்த பேரில்லை யென்று சினங் கொண்டு சுவாமி பேரில் ஆயுதங்களைவீசினார்கள். அப்பொழுது இராகவபிரான் ஒரு பாணந் தொடுத்து விட்டார், அது எப்படிப் புறப்பட்ட தென்றால்:— ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரமாகப் புறப்பட்டு, ராட்சதாள் சிரங்களை யெல்லாம் அறுத்து அறுத்து மலைபோற் குவித்து விட்டு, அந்தப் பாணமானது ஆகாயக் கங்கையிற் றீர்த்தமாடி, அம்பறாத் தூணியில் வந்து புகுந்தது.

இப்படி இராட்சதர்கள் அறுபட்ட இரத்தம் சமுத்திரம்போல நிற்கும். அதில் யானைகள், குதிரைகள், தேர்கள், குடைகள் இவையெல்லாம் மிதந்தது. எப்படியென்றால்:—சலம் நிறைந்த வாவியில் செந்தாமரையும், வெண்டாமரையும், செவ்வல்லியும், ஆம்பலும், புட்பித்து நிற்கிறதுபோல இருந்தது. இப்படி அந்த இராட்சதர்கள் பட்டவுடனே, பின்னும் எண்

ணிறந்த இராட்சதர்வந்து சாமியுடன் பொருதினார்கள். அந்த ராட்சதாளையெல்லாம் ஒருபாணந் தொடுத்துச் சம்மாரம்பண்ணிக் கரனுடைய இரத கஜ துரக பதாதிகளையும் மடியச்செய்துவிட்டார். இது விஷயம் கரன் அறிந்து, பிரமைபிடித்துத் தன்னுடைய தேரிலேறிக்கொண்டு இராமபிரானோடு யுத்தஞ்செய்ய வந்து எதிர்த்தான். அவனுடன் வந்த படைகளையும் பாணத்தாலறுத்து, தேரிற் பூண்டிருக்கிற குதிரைகளை யறுத்து, தேரையும் உடைத்துத் தள்ளினார். கைகளிலிருந்த வில்லும் பாணமும் அற்றுப்போனவுடன், பெருக்கொரு பருவதங்களைப் பெயர்த்து எறிந்தார்கள். அந்த மலைகளையெல்லாம் சுவாமி தூளாக்கிவிட்டார்.

## திரிசிரன் வதம்.

இவைகளைக் கண்ட திரிசிரன் நாலு கோடி படைகளுடன் சுவாமியுடன் வந்தெதிர்த்தான். சுவாமியும் திரிசிரனும் எதிர்த்துப் போர்புரிகிறபோது, திரிசிரன் சுவாமி பேரில் ஆயிரம் ஐமுகப்பகழியைப் பிரயோகஞ் செய்தான். சுவாமி அந்த ஆயிரம் பகழியையும் அறுத்தார். பின்னும் வச்சிரக்கணையில் இரண்டாயிரந் தொடுத்தான். சுவாமி அந்தக் கணைகளையும் அறுத்து, அவன் கைவில்லையும், தேரையும் போக்கி, மூன்று சிரத்தில் இரண்டையறுத்தார், அதன் பிறகு பருவதத்தைப் பெயர்த்தெறிந்தான். அதையும் தகர்த்து, அவன் வலது தோளையும் மற்றொரு சிரத்தையும் அறுத்துவிட்டார். திரிசிரனும் பட்டான். அவனுடைய சேனைகளிற் பிழைத்தபேர் ஓடினார்கள். அவர்களைத் தூஷணன் மறித்து அழைத்துக்கொண்டு நாலு கோடி ராட்சதருடனே ஸ்ரீராகவனை வந்து வளைந்துகொண்டு ஆரவாரித்துப் போர்புரிந்தான்.

## தூஷணன் வதம்.

அப்போது சுவாமி ஒரு கணைதொடுத்து அரக்கர் சேனைகளையெல்லாம் பிணக் குவியலாக்கினர். அந்த ரணகளத்தில் இரத்தவாறுகளுண்டாகிச் சமுத்திரத்திற் போய் வீழ்ந்தது. உடனே தூஷணன் தன் றேரை இராமபிரான் முன் நிறுத்திக்கொண்டு கோபாக்கினியுடனே சிறிது கணைகளை ஏவினன். அதிலொரு பாணம் சுவாமியின் நெற்றியிற்பட்டது. அதனல் சுவாமி தூஷணனை மிகப்புகழ்ந்து கொண்டாடி தூஷண! நீ நல்ல வீரியவான்ருன் என்று சொல்லி, சில கணைகளைத் தொடுத்தார். தூஷணன் அந்தக் கணைகளை யறுத்து, ஆயிரங் கணைகளைச் சுவாமி பேரில் பிரயோகஞ் செய்தான். அந்த ஆயிரங் கணைகளையும் அறுத்து, அவன் கவசத்தையும் தேர்ச்சாரதி, குதிரைகளையும் அறுத்துத் தேரையும் நொறுக்கித் தூட்படுத்தினர். அதன்பின் தேரைவிட்டுக் கீழே குதித்து, இருப்புலக்கையால் எறிந்தான். அந்த இருப்புலக்கையை முரித்துத் தூஷணன் சிரத்தையும் அறுத்து விழச்செய்தார்.

## கரன் வதம்.

தூஷணன் பட்டவுடன் கரன் கண்டு நம்முடைய பதினலு கோடி ராட்சதாளையும், தேர், யானை, குதிரை, பதாதிகளையும் கணப் பொழுதில் மடித்து விட்டானே, நம் ஆண்மை நன்ரு யிருக்கிறதென்று, தன் றேரைத்தூண்டி இராமபிரான் முன் வந்து நிறுத்தி வில்லை வளைத்துச் சிறு நாணொலி கொண்டான். அப்போது சுவாமியும் சிறு நாணொலி கொண்டார். அந்த ஓசை அண்டமெல்லா முழங்கினது. அதன்பின் கரன் இராமா! நீயோ மனிதன் திரிலோகத்திற்கும் அதிபனு

யிருக்கிற இராவணேசுரன் றங்கையை மானபங்கம் செய்கிறவன்? இப்போது அந்தக் கையை நிலத்தில் விழுகச் செய்கிறேன் பார். என்னைத் திரிசிரன் தூஷணனைப்போல் எண்ணாதே, என் பெயர் கூறுமிடத்தில், பிரமா, விஷ்ணு, சிவன் முதலியோரும் பயப்படுவர். அப்படி யிருக்க நீயோ என்னுடனெதிர்த்துப் போர் செய்கிறவன்? என்றான். அப்போது சுவாமி, வாடா கரனே! இராவணன் றங்கையைப் பங்கஞ் செய்தோமென்று சொல்ல வந்தாயே, இராவணனைச் சேர்ந்தவர்களை யெல்லாம் சங்கரிக்க முதலில் சூர்ப்பநகையை முலை, மூக்கு, காதுகளை யறுத்து நாட்செய்தோம். அந்தப் பலன் திரிசிரன், தூஷணன் மற்ற ராட்சதப் படைகளெல்லா மாண்டது. நீ யொருவனும் உனக்கு உபபலமாயுள்ளவர்களு மிருக்கிறீர்கள் உங்களையும் சங்கரித்தால் சரியாய்ப் போய்விடும், ஆனதால் அதுவுங்கணப்பொழுதிலே முடிக்கிறேனென்றார்.

அவ்வசனங் கேட்ட கரன் கோபங் கொண்டு ஆயிரம் பாணங்களைச் சுவாமி பேரில் தொடுத்தான். அதை விலக்கிக் கூட வந்த சேனைகளை யெல்லாம் பாணத்தால் அறுத்தார். கரன் ஒரு தேருடன் நின்றானேயல்லாது மற்ற படைகளைக் காணோம் அது கண்டு கரன் இவனுடன் எதிர்த்து மல் யுத்தஞ்செய்து வெற்றி கொள்ளவேண்டுமென்று, தன் றேரை முடுக்கிச் சுவாமிமுன் வந்து தொந்த யுத்தம் புரிகிறபோது, சுவாமிக்குக் கோபமுண்டாகி இவன் கவசத்தையும்விற் பிடித்த கரத்தையும் அறுக்கவேண்டுமென்று வில்லிற் பாணத்தைவைத்துத் தோள்புரள வாங்கி நாணையிழுத்து விடுகிறபோது வில்லொடிந்து விட்டது: அந்தத் தொனியால் தேவர்கள் ரிஷிகள் வெருண்டு ஓடினார்கள்.

அந்தவேளையில் கரன் இதுதான் சமயமென்று தேரைக்கிட்ட நெருக்கினான். அப்பொழுது சுவாமி முன் வைத்த காலை பின் வைத்தார். அதுகண்ட வருணன் முன் கொடுத்துவைத்த வில்லைக் கொண்டுவந்து கொடுத்தான். அதைச் சீக்கிரமாக வாங்கி வளைத்து நாணேற்றிப் பாணந்தொடுத்து விட்டார். அது கரனுடைய விற்பிடித்த கையை யறுத்துச் சென்றது. கரன் மற்றொருகையால் இருப்புலக்கை யெறிந்தான். சுவாமி ஒரு பாணம்விட்டு, அந்த வுலக்கையைப் பொடித்துத் தேரையும் சாரதியையும் அறுத்துத் தள்ளினார். கரன் சூலத்தை ஒரு கையா லெடுத்தெறிந்தான். சுவாமி, அந்தச் சூலத்தையும், அவன் சிரத்தையும், அறுத்தார் உடனே கரன் இறந்தான். உடனே தேவர்களும் முனிவர்களும் புட்பமழை பொழிந்து ஜெயா! ஜெயா! வெனக்கூறினார்கள். சுவாமி பன்னகசாலைக்குப் போகிறபோது சீதையும் லட்சுமணனும் வந்து பணிந்து எதிர் கொண்டழைத்துப் போய் இருக்கையி லிருந்தார்கள். தேவரிஷிகளுந் தங்களிருப்பிடஞ் சென்றார்கள்.

அப்பால்சூர்ப்பநகை கரன்பேரிலடித்து விழுந்தழுது நான் மூக்கும், முலையும், காதும் அறுபட்டதுமல்லாமல், உங்களை யெல்லாம் இறந்து போகும்படியுஞ்செய்தேனே யென்று புலம்பிப் பின்னும் நான் போய் இராவணனுக் கறிக்கையிட்டு அழைத்துவந்து இந்த இரண்டு மானிடரையுங் கொன்றுவிட்டுப், பன்னகசாலையி லிருக்கிற பெண்ணையும் எடுத்துப் போகச் செய்யவேணுமென்று புறப்பட்டாள்.

## சூர்ப்பநகை இலங்கை செல்லல்.

சூர்ப்பநகையானவள் இலங்கையை நோக்கி நடந்து வடக்குக் கோட்டை வாசல் வழியாக முறை

யிட்டுக்கொண்டு வீதிவழியே போகிறபோது இவளைக் கண்ட இராட்சதர்கள் ஆண் பெண் சகலரும், முகத்தி லும் வயிற்றிலும் அறைந்தழுது கொண்டு நின்றார்கள். அப்போது சூர்ப்பநகையைப் பார்த்து நீ இப்படிவரக் காரணமென்னவென்று கேட்டவர்களுக்குச் சொல்லு கிறாள், இரண்டு மானிடர்கள் வந்து, கோமதியாற்றங் கரையில், பன்னகசாலைகட்டி யதிலிருக்கிறார்கள்; அவர் கள் ஒரு பெண்ணைக்கூட்டி வந்திருக்கிறார்கள், அந்தப் பெண் தேவதாஸ்திரீகளிலும் அதிக ரூபவதியா யிருக் கிறாள்; அவளைத் தமையனுருக்கு வேண்டுமென்று தூக் கிக்கொண்டு வரப்போனேன், அப்போது இப்படிப்பங் கஞ் செய்தார்களென முறையிட்டுக் கொண்டுபோனாள். அப்போது பட்டணத்துச் சனங்களெல்லாம், இராவ ணன் றங்கையை மனிதனோ பங்கஞ் செய்வான்? இது ஏதோ காரணம் தெரியவில்லை, இராவணேசுரன், இந் தச்சேதி கேட்டவுடன், அவர்கள் யுத்தத்திற்குப் புறப் படுவார்கள் நாமும் போகவேண்டு மென்று ஆயுதபா ணிகளாய் வந்து கூடினார்கள். சூர்ப்பநகை ஓட்டமு நடையுமாக நடந்து அரண்மனைக் கோட்டைக்குட் போனாள்.

அப்போது இராவணன் சிம்மாசனத்தில், அரம் பாஸ்திரீகள் சாமரம்போடவும், தேவர்கள் பணிவிடை செய்யவும், கும்பகருணன், இந்திரசித்தன், அதிகாயன் விபூஷணன், அட்சயகுமாரன், முதலியவீரர்கள் கைகட் டிக் கொண்டு நிற்கவும்; கும்பன், நிகும்பன், போர்மத் தன், கலைமத்தன், வச்சிரசித்தன், பசாசன், புகைக்கண் ணன், முதலிய படைத்தலைவரும்; மகோதரன் முதலிய மந்திரிமார்களும், இருபுறமுஞ் சேவித்து நிற்க, பக்கங் களில் சேனை சைன்யங்கள் சூழ்ந்திருக்க, இப்படியாகக்

கொலு வீற்றிருக்கிற வேளையில், சூர்ப்பநகி அண்டங்கள திர, அபயமிட்டுக் கொண்டு வந்து, இராவணன் பாதத்தில் வீழ்ந்து கோவென்று அழுதாள்.

இராவணன் சூர்ப்பநகையின் அங்கபங்கமாயிருப்பதைக் கண்டு, திடுக்கிட்டெழுந்து, தங்கையைத் தாங்கியெடுத்து, நீஇப்படிவரக்காரணமென்னவென்று கோபத்துடனே கேட்டான். அப்போது சூர்ப்பநகை,

விருத்தம்.

ஆயிடை யெழுந்த சீற்றத் தழுந்திய துன்ப மாழித்
தீயிடை யுருக்கு நெய்யிற் சீற்றத்திற் கூற்றஞ் செய்ய
நீயிடை யிழைத்த குற்ற மென்னைகொ னின்னை யின்னே
வாயிடை யிதழு மூக்கும் வலிந்தவர் கொய்ய வென்றான்

சூர்ப்பநகை-ஷ.

என்வயி னுற்ற குற்றம் யாவர்க்கும் மெழுதொ ணாத
தன்மைய னிராம னேடுந் தாமரை தவிரப் போந்தாள்
மின்வயின் மருங்குல் கொண்டாள் வேய்வயின் மென்-
[றோள் கொண்டாள்
பொன்வயின் மேனி கொண்டாள் பொருட்டினாற் புகு-
[ந்த தென்றாள்.

ஷ

மஞ்சொக்கு மளக வோதி மழையொக்கும் வடித்த—
[கூந்தல்
பஞ்சொக்கு மடிகள் செய்ய பவளத்தின் விரற்க ளைய
அஞ்சொற்க ளமுதி லள்ளிக் கொண்டவள் வதன—
[மைதீர்
கஞ்சத்தி னளவிற் றேனுங் கடலினும் பெரிய கண்கள்.

வசனம்.

அண்ணா! இரண்டு மானிடர்கள் அயோத்தியா புரிப்பட்டணமாம், தசரதச் சக்கரவர்த்தியின் குமாரர்களாம், அவர்களின் பெயர் இராம லட்சுமணராம், தவ

வடிவு கொண்டு வந்து பஞ்சவடி தீரத்தில் பன்னக சாலை கட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடனே ஒரு பெண் வந்திருக்கிறாள் அவளுடைய அழகை ஆயிர நாவு படைத்த ஆதிசேடனாலும் சொல்ல முடியாது.

மேகம் போன்ற கூந்தலும், பஞ்சமிச் சந்திரன் போன்ற நெற்றியும், தனுசு போன்ற புருவங்களும், வேலுஞ் சேலும் போன்ற விழிகளும், குமிழ மலர் போல் நாசியும், வள்ளைக் கொடிபோல் செவியும், கண்ணடிபோன்ற கபோலமும், பவளம்போன்ற இதழும், முத்து வரிசை யொத்த பல்லும், செவ்வல்லி மலரை நிகர்த்த வாயும், கிளியுங் குயிலும் நாணத்தக்க மொழியும், வலம்புரிச் சங்கைப் போன்ற கண்டமும், மூங்கிலுக்குச் சமானமான தோளும், கடைந்த சிமிளும் பம்பரமுந் தாமரை முகையும் சமானமாகா இரண்டுஸ்தன பாரமும், ஆலிலை போன்ற வயிறும், மின்னற் கொடி போன்ற இடையும், வாழைத்தண்டை நிகர்த்த துடையும், இப்படி ரூபலாவண்ய முள்ள பெண்ணைக் கண்டு அவளை யெப்படியும் உனக்குக்கொண்டு வரலாமென்று எடுக்கப்போனேன். அந்த வேளையில் அவர்கள்வந்து இப்படி யென்னை அவமானஞ் செய்தார்கள். அப்போது நான் இராவணேசுரன் றங்கை உங்கள் குடியைக் கெடுத்து, உங்களையுங் கொல்வே னென்றும் சொன்னேன்.

அதற்கவர்கள் சொன்னதாவது:— நீ இராவணன் றங்கையானதே நல்லதாச்சுது, தண்டகாரணியத்தில் ரிஷிகள் நம்மைக்கண்டு, ராட்சதாள் உபத்திரவம் பொறுக்க முடியவில்லை யென்று முறையிட்டார்கள் அப்போது ராட்சதாளை யெல்லாம் சம்மாரம் பண்ணி,

உங்களிடுக்கந் தீர்த்து வைக்குறேமென்று வாக்குத் தத்தஞ்செய்து கொடுத்தோம், அப்படியே சம்மாரம் பண்ணுவதற்கு, உன்னைப் பங்கஞ் செய்து, நாட் செய்து கொண்டோமென்று சொன்னதின்பிற்பாடு கரன் தூஷணன் திரிசிரன் இவர்களிட முறையிட்டேன் அவர்கள் ரதகஜ துரகபதாதிகளுடன் வந்து பன்னகசாலையை வளைந்தார்கள். அது கண்ட ராமன் அந்தப் பெண்ணுக்குத் தம்பியைக் காவல்வைத்துத், தானொருவனாக வில்லெடுத்துக் கொண்டு வந்து நமது யானை குதிரை முதலிய ராட்சதச் சேனைகளையும், கரன் தூஷணன் திரிசிரன் இவர்களையும் ஒரு முகூர்த்த காலத்தில் சம்மாரம் பண்ணினான். அப்படியான பலவானோடு நீ படையெடுத்துப் போகலாகாது. தந்திரத்தால் அந்தப்பெண்ணைக் கொண்டுவர வேண்டுமென்று சொன்னாள். அந்தவார்த்தையைக் கேட்டவுடன், இராவணன் கோபித்துக்கொண்டு, ஒரு மனிதன் நம்முடைய தங்கையை மானபங்கஞ்செய்து, தம்பிமாரையும் சம்மாரம்பண்ணுவானோ? எட்டுத் திக்கையும் வென்று, கைலாச மலையுமெடுத்த தோள்களிருக்க ஒரு மனிதனுக்குத் தோற்கலாமோ? இதைக் கேட்டால் தேவர்கள் நகைப்பார்கள் அந்த இரண்டு மனிதர்களையுங் கொன்று, அந்தப் பெண்ணையு மெடுத்துக் கொண்டு வரவேண்டும் இல்லையேல், எனக்கென்ன பெருமை யிருக்கிறது? என்று சொல்லித் தன்னுடைய மாமனாகிய மாரீசனை யழைத்து நடந்தவை யெல்லாஞ் சொல்லி, அந்தப் பெண்ணைக் கொண்டு வருகிறேனென்று சொன்னான்.

## மாரீசன் வதம்.

அப்போது மாரீசன் இராவணனைப் பார்த்து அவர்களை நீ மனிதரென்று எண்ண வேண்டாம், என்

னுடைய தாய் தாடகையானவள், விசுவாமித்திரர்வேள்வியை யழிக்கிறுளென்று, அவரயோத்திக்குப் போய் அந்தராமனைச் கூட்டி வந்து வேள்வியை முடிக்கிற போது, என்னுடைய தாய் ஒருமலையைப்பிடுங்கி எறிந்தவுடன், இராமனொருகணை தொடுத்து, அந்தமலையையும் பொடி செய்து, அவளையுஞ் சங்கரித்தான். அதன் பிறகு என்னுடைய தமையன் சுவாகுவும் நானும், பதினுலு கோடி ராட்சதாளுடனே போய் எதிர்த்து யுத்தம் பண்ணினபோது, எல்லோரையுங் கணப்பொழுதில் சங்காரம் பண்ணி விட்டான். நான் மட்டிலும் தந்திரமாயோடி வந்து விட்டேன். அவன் விடும் அஸ்திரம் தவறுகிற தில்லை. மனிதனென்ருல், ஒரு கருங்கல்லை மிதித்தவுடன் பெண்ணுகுமா? ஜனகன் வேள்வியிற் பிறந்த, ஒருவரு மசைக்கப்படாத வில்லை, ஒருகையினுலெடுத்து முறிக்கக் கூடுமா? அப்படி யந்த வில்லையு மொடித்துச் சீதையைக் கல்யாணஞ் செய்து, அயோத்திக்குப் போகிறபோது, பரசுராமன் வந்து மறித்து உங்கள் இருபத்தோராந் தலைமுறையின் பழிதரவேண்டும், நீ மிதிலையிற் சொத்தை வில்லொடித்தாயே, என் கையிலுள்ள இந்த வில்லை வாங்கி வளைத்தாயேயானுல் உன்பேரிலே வந்தபழியையும் விட்டு, நான்பண்ணின தபசும், இந்த வில்லும் உனக்குத் தருகிறேனென்ருன். அப்படியே அந்த வில்லை வாங்கி வளைத்துக் கணை தொடுத்துப் பூட்டிய அம்பு வீணுகாமல், இலக்குசொல்லென்று கேட்டார், அதன்பிறகு பரசுராமன் சரணமடைந்து தன் வில்லும், தபசும், பலமும் கொடுத்து விட்டுப் போனுன். அப்படிக் கொத்த பலமுடையவர் அவரிடம்போக வேண்டாம், போனுல் உம்முடைய வாழ்நாளும், உயிருமிழக்க வேணும். சந்தேகமில்லை யென்று சொன்னுன்.

அது கேட்டு ராவணன் கோபித்துக் கொண்டு நான் சொன்னபடி கேளாதிருந்தால், உன்னை யிரண்டு துண்டாக வெட்டி விடுவேனென்று சொன்னான். பிறகு மாரீசன் நாம் இவன் சொற்படி மானாகப் போனால், அங்கு இராமன் கொல்வான், மாட்டோ மென்றால் இங்கு இராவணன் கொல்வானென்று நினைத்துச் சொல்வான், அப்பா ராவணேசுரா! நானுக்கு வேண்டிய புத்திகள்சொல்லியும் நீ கேட்கவில்லை 'கேடுவரும் பின்னே மதிகெட்டுவரு முன்னே' என்னும் பழமொழி வீணாகாது, ஆனதால் உனக்கும், உன் சேனைகளுக்கும் நான்போய் இடம்பார்த்து வைக்கிறேனென்று சொன்னான்.

விருத்தம்.

என்னமா மாயம்யான்மற் றியற்றுவ தியம்பு கென்றான்
பொன்னின்மா னாகிப் புக்குப் பொன்னைமால் புணர்த்-
[துகென்ன
அன்னது செய்வே னென்னா மாரீச னமைந்து போ-
[னான்
மின்னும்வே லரக்கர் கோனும் வேறொரு நெறியிற்—
[போனான்

வசனம்.

இப்படியாக மாரீசன் சொல்லி விட்டு அழகிய பொன் மானுருவங் கொண்டு, கோமதி யாற்றங் கரையில் பஞ்சவடியில், சீதாபிராட்டி யிருக்கும் பன்னக சாலையின் முன்பாக ஓடி விளையாடினான். ஜானகி கண்டு, இந்த மான் மிக அழகுள்ளதாக இருக்கிறது இதைப் பிடித்துத் தரவேண்டு மென்று சுவாமி யிடம் சொன்னாள். அப்போது ஸ்ரீராமச்சந்திரன், இது மானல்ல, இப்படி ராட்சதாள் மாயை பண்ணுவார்க ளென்று சொன்னார். அந்த வார்த்தையைத் தேவியார் கேளா

மல், இப்போதே இந்த மானைப்பிடித்துத் தர வேணு மென்று சொன்னபடியால், சுவாமி லட்சுமணரைப் பார்த்துத் தம்பி! இது மான் தானே பாரென்றார். அப் போது லட்சுமணர் பார்த்து, அண்ணா! இது உண்மை மானல்ல மாயமானாகத் தானிருக்கும், சந்தேகமில்லை இதைப்பிடிக்கக்கூடா தென்றார். பிறகு சீதை மானைப் பார்த்து ஐயோ! இந்த மான் ஓடிப்போகப் பார்க்கிறது, இராட்சதாள் மாயை யென்று பயந்தீர்களே யல்லாமல் உங்களுடைய பராக்கிரமம் பாராது போனீர்களே யென்று வருத்த முற்றாள்.

சுவாமி பார்த்துத் தம்பி லட்சுமணா! நீ சீதைக் குக் காவலாயிரு, நான் இந்த மானைத் துடர்ந்து போய்ப் பிடித்து வருகிறேனென்று திட்டஞ் செய்து விட்டு மானைத்துடர்ந்து போனார். மான் வேகமாய்ப் போகிறபடியால், அதன்பின் சுவாமியும் துடர்ந்தார். அப்படியுமான் அகப்படாமலோடுகிறபோது, சுவாமி வெகு தூரஞ்சென்றும், இந்த மான் லகுவில் அகப்ப டாதென்று பாணத்தைத் தொடுத்தார். அந்தப்பாணம் பட்டவுடனே, மாயமான் ஆகாயத்திற் கிளம்பி லட்சு மணா வென்று விழுந்தது. அந்தச் சப்தம், லட்சுமண னுக்கும், சீதைக்கும் கேட்டது. சீதைதிடுக்குற்று, லட்சு மணாவென்று சுவாமியின் குரல் போல் கேட்கிறதே அது அறிந்து வரவேண்டுமென்று லட்சுமணரிடம் சொன்னாள். லட்சுமணர் அம்மா! எங்கள் அண்ணருக் குத்தீங்கு ஒன்றும் வராது, நீ ரொன்றுக்கும் விசனப் படவேண்டா மென்ன, சீதை கோபித்து நீர் போய் விசாரித்து வராதிருந்தால், நான் அக்கினியில் விழு வேனென்றாள். இலட்சுமணர் அம்மா! இராட்சதாள் மாயை மெத்த வுண்டு, அவர்கள் சொன்ன தல்லாமல்

வேறல்ல, நான் போய் விட்டால் ராட்சதரால் உங்க ளுக்கு அபாயம் நேரிடும் அதற்குச் சந்தேகமில்லை. எப்படி முடியுமோ வென்று கண்ணீர் விட்டுச் சீதைக்கு அக்கினி பகவான் காவலென்று சொல்லிவிட்டுத் தமையனரைத் தேடித் தடத்தின் வழியே சென்றார்.

அப்போது இராமபிரான் மாயமானுக வந்த மாரீசனைச் சம்மாரஞ் செய்து விட்டுப் பன்னகசாலை நோக்கி மீண்டு வந்தார். லட்சுமணன் போய் அண் ணனைக் கண்டு, திருவடியிலே நமஸ்காரம் பண்ணி அழுதார். அப்படி யழுத தம்பியைத் தேற்றி நீ பன் னகசாலையிற் சீதையைத் தனியே வைத்து விட்டு இவ் வளவு தூரம் வரலாமோ? இன்றைக்குச்சீதையை யிழந் தோமென்று சொன்னர். அப்போது லட்சுமணன் ஆகாயத்தி லிலட்சுமணுவென்று, தேவரீர் சத்தம்போற் கேட்டது, அப்போது பிராட்டியார் சுவாமிக்கு வதோ ஆபத்து வந்திருக்கிறது, நீ போ யறிந்து வாவென்று சொன்னர், நான் அவருக்கு ஒரு போதும் விக்கினம் ஏற்படாது, நான் போனல் இங்கு ராட்சதாள் உபத் திரவமேற்படும், இவ்விடம் விட்டுப் போகேனென்று சொன்னேன், அதற்கு என்மேற் கோபங் கொண்டு நீ இப்பொழுதே போய் விசாரித்து வராவிட்டால், அக் கினியில் விழுவேனென்று சொன்னதினல், அக்கினி பகவான் காவலென்று நானும் வந்து விட்டேன் எப் படி முடியுமோ வென்று, லட்சுமணர் சொன்னவுடன் சுவாமி மனம் வருந்திச் சொல்லுகிறர்.

விருத்தம்.

பெண்சொற் கேட்டு நம்மையர் பெரியவானந்
தனை யடைந்தார்
பெண்சொற் கேட்டு நானுமிந்தப் பேதை மானின்
பின் றுடர்ந்தேன்

பெண்சொற் கேட்டு நீயுமந்தப் பேடை மயிலை
விட்டகன்ருய்
பெண்சொற் கேட்க நங்குடிக்கிப் பெரிய விதியின்
பயனென்ருர்.

வசனம்.

இப்படிக் கவலையுடன் தம்பி! சீதையை யிழந்தோம், இந்நேரம் ராட்சதாள் மாயை யெப்படி முடிந்ததோ வென்று, ஓட்டமாக வந்தார்கள்.

இராவண சன்யாசி வருதல்.

அப்படிச் சொல்லிக் கொண்டு அவர்கள் வருவதற்குள், இராவணன் விமானங் கொண்டு வந்து. பூமியில் மறைவாய் நிறுத்திவிட்டுச் சன்யாசி வேஷங்கொண்டு பன்னகசாலை வந்து நின்று, 'பவதிபிட் சாந்தேஹி' என்ருன். சீதாதேவியார் கண்டு தெண்டம் பண்ணி, ஆசன மெடுத்துப் போட்டுச் சுவாமி! இருமென்றுபசரித்து, நீர் எவ்விடமிருந்துவருகின்றீரென்றுகேட்கச், சன்யாசியான இராவணன், நானிருக்கிறது இலங்காபுரி உத்தரதேசத்திற்குப் போகிறேனென்ருன். அப்பொழுது சீதை, சுவாமி! தேவரீர் பெரியவரான நீர் நல்ல புண்ணியஸ்தலங்களிலிராமல், சருவசண்டாளனுகிய இராவணனிருக்கிற இலங்கைப்பட்டணத்தில் நீர் வாசம்பண்ணலாமா? என்றுகேட்டாள். அப்போது சன்யாசி ஏ பேதாய்! பிரமா, விஷ்ணு, ருத்திரன் முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத் தெண்ணுயிரம் ரிஷிகள், அஷ்டவசுக்கள், கின்னரர், கிம்புருடர், கருடர், காந்தருவர், சித்தர், வித்தியாதரர் மற்ற சகலலோகத்தார்களும், இராவணேசுரனுடைய சேவை காணமல், அவன் வாசலிலே காத்திருக்கிருர்கள். அப்படியான வாழ்வுடைய புண்ணியவானை நீ எப்படிச் சருவ

சண்டாளனென்று சொல்லலாம்? ஆனால் நீ பெண்புத்தியினா லறியாமற் சொன்னதல்லாமல் வேறல்ல இந்த வார்த்தை இனி நாவெடுத்துச் சொல்லொண்ணாது இது ராட்சதாள் வனம், உனக்கு மெனக்கும் ஆக்கினை வரப்போகிற தென்றான்.

அப்பொழுது சீதாபிராட்டியார் நீர் எத்தனை தான் சொன்னாலும், தேவர்களுக்கு இடுக்கம் பண்ணுகிறவன், சண்டாளனே யல்லாமல் நல்லவனல்ல, அவனைச் சங்காரஞ்செய்து தேவர்களி னிடுக்கந்தீர்க்க வல்லவோ என்னாயகர் வந்திருக்கிறார், நீர் அந்தப் பட்டணத்திலிருக்க வேண்டாம் பக்கத்திற் போயிருமென்று சொல்ல, சன்யாசி உன்னாயகன் மனிதனல்லவோ? தேவனாயிருக்கிற இராவணேசுரனை எவ்விதங் கொல்ல முடியுமென்றான். சீதாபிராட்டியார் கேளும் சன்யாசியே! பரசுராமன் மனிதனல்லவோ, அவன் கையினால், ஆயிரஞ்சிரமுடைய கார்த்தவீரி யார்ச்சுனன் இறந்து போனது நீர் கேட்க வில்லையோ? சூரியவங்கிசத்து இராஜாக்கள் கையினால், முன்னம் எத்தனையோ ராட்சதர்க ளிறந்து போனார்கள். நான் கேள்வியுற்றிருக்கிறேன். இப்பொழுது என்னாயகர் இராவணன் தங்கை சூர்ப்பநகையின் உருவத்தைப் பங்கப்படுத்தின செய்தியும். அவர்களுறவினராகிய கரன், தூஷணன், திரிசிரன் மற்ற முப்பதினாயிரம் ராட்சதாளும் இறந்து போனவிஷயம் அந்த இலங்கையிற்றெரியவில்லையோ? நீர் பெரியவர் அறியாத யோசனைக்கு நான் சிறுபெண் சொல்லுகிற தென்ன! அந்தக் கொடிய பாதகன் வாக்கியத்தை விட்டு வேறு வசன முண்டானாற் சொல்லுமென்றாள்.

அப்போது ராவணனுக்குக் கோபம்வந்து இனி இவளுடனே வார்த்தையாடிக் காலதாமதம் செய்யலாகாதென்று பிட்சை கேட்டான். அப்பொழுது பிராட்டியார் பிட்சைகொண்டுவந்து நின்றாள். அப்பொழுது இராவணன், சன்யாசி வேஷமாறித் தன் சுயரூபத்துடனேவரச், சீதை கண்டு பயந்து, சிங்கத்தைக் கண்ட குஞ்சரம் போல நடுங்கினள். அந்நேரம் கிட்டநெருங்கச் சீதையின் கற்புத் தீயானது இராவணனைக் கிட்ட நெருங்கவிடவில்லை யெனும் துணிந்து பன்னகசாலையோடு பூமியைப் பெயர்த்தெடுத்துத் தேரின் பேரில் வைத்துக் கொண்டு இலங்கையை நோக்கித் தேரை ஆகாயமார்க்கமாக நடத்தினன்.

அப்பொழுது சீதை அழுது அபயமிட்டுச்சொல்லுவாள். அடா சண்டாளா! நீ உருமாறி வந்து, என் னையகரும், இளையபெருமாளும் இல்லாத வேளையில், இப்படிச் சதி பண்ணலாமோ? நீ சாமர்த்திய முள்ளவனனால், அவர்களுடனே எதிர்த்துச் செயம் பண்ணிச் சிறைகொண்டு போகவேணும். நாயின் கோலங் கொண்டு உலகமெல்லாஞ் சிரிக்கும்படியாய்ப் பழிப்புக் கிடம் வைத்துக் கொண்டாயே அடா மதியீனா! என்று கேவலமாய்ப் பேசி முத்துமாலை, பவளமாலை முதலிய ஆபரணங்களைக்கழற்றி வழியிலெறிந்து விட்டு, மாலைக் குழல் விரித்துச் சுவாமிக்கபயமென்று, அலறி அழுது கொண்டு போனாள்.

## சடாயு வதம்.

அந்தச் சப்தமானது மலையின்மேலிருக்கும் சடாயு கேட்டு ஐயோ! நம் தசரத குமாரர்கள் பஞ்சவடி தீரத்தில் இருந்தார்களே, அங்கே போய் இந்த ராவணன் இராமனுடைய தேவியைக் களவிலே கொண்டு

வருகிறதுபோல விருக்கிறது, என்று ஆகாயத்திலே கிளம்பி, இரண்டு சிறகுகளையும் விரித்துக் கொண்டு தென்றிசையடைந்து போகாதே நில்லடா வென்று மறித்து நின்றான். அப்பொழுது இராவணன் றேர் போக வழியில்லாமற் றடைபட்டது. உடனே சடாயு வை இராவணன் எதிர்த்துப்பொருதினவுடனே, சடாயு இராவணனுடைய பத்துச் சிரத்தையுங் கொத்திப் பிடுங்கினான். அப்பொழுது தசமுகன் எதிர்த்தடித்தான் இப்படி யொருவர்க் கொருவர் தோர்வை யில்லாமல் யுத்தஞ்செய்து சபதம்பேசி உயிர்நிலை சொல்லிப்பொரு தும் போது, இராவணன் கபடமாக எனக்கு இடது காற் பெருவிரலில் உயிர் நிலை யென்றான். சடாயு உண்மையாக எனக்கு வலது சிறகில் உயிர்நிலையென்று சொல்லிப் போர்புரியும் போது, சீதா பிராட்டியாரழுது ஐயா சடாயுவேந்தே! சற்றே தாமசம் செய்தால், என் னுயகர் வந்து சேருவாரென்று சொல்லித் துக்கப்படுகி றதை நீக்கும் பொருட்டு பராக்கிரமங் கொண்டு இராவ ணன் இடது கால் பெருவிரலிற் கொத்தலானான். இரா வணன் சிவன் கொடுத்த வாளினால் வலது சிறகை வெட்டினான். உடனே சடாயு கீழே விழுந்தார்.

அதைச் சீதைகண்டு மதிமயங்கிச் சுவாமி இவ் விடம் வந்து கேட்டு, நடந்த விசேடஞ் சொல்லுகிற வரையில் சடாயுவுக்குச் சீவன் போகாதிருக்க வேண்டு மென்று வாக்களித்தாள். உடனே இராவணன்றேரைத் தெற்கு நோக்கி நடத்திக் கொண்டு போகிற போது, சானகி மற்றுந்தான் பூண்டிருக்கிற ஆபரணங்கள் யாவையுங் கழற்றி, ஒரு முடிப்பாக முடிந்து மதங்க ரிஷி பருவதத்தி லெறிந்து விட்டுப்போனாள். அந்தக் கலன்களைச் சுக்ரீவன் கண்டெடுத்து வைத்திருந்தான்.

அப்பால் இராவணன் சீதையை இலங்கைக்குக் கொண்டுபோய் அசோக வனத்தில் வைத்து, ராட்சத ஸ்திரீகளையும், விபூஷணன் மகள் திரிச்சடையையுங் கூடக் காவலாக வைத்துவிட்டுத் தன் அரண்மனையிற் போயிருந்தான்.

மானைத் துடர்ந்துபோன இராமபிரானும் லட்சுமணரும் ஓட்டமும் நடையுமாக வந்து, பன்னகசாலையைப் பார்க்கிறபோது தேவியாரைக் காணாதபடியால் சுவாமி ஆ சீதா! இனி உன்னை என்று காண்பேன்? ஐயோ! விதியே! என்று முகத்திலறைந்துகொண்டு மூர்ச்சையாய்ச் சாய்ந்தார். லட்சுமணருங்கூட விழுந்து அழுது எழுந்து தன் கவலையை அடக்கிக்கொண்டு, சுவாமியைப் பார்த்து இப்படித் துயரங் கொள்ளலாகாது; வருகிற விதியை யாரால் விலக்கமுடியுமென்று தேறுதல்சொல்ல, சுவாமி மூர்ச்சை தெளிந்து எழுந்து இருவரும் நாலு திசையுந் தேடி மயங்குகிறபோது தென்றிசையில் ஒரு தேர்வண்டித் தடங்கண்டு, அதைப் பற்றி யோடிப்பார்க்கிறபோது வழியிற் சீதையின் ஆபரணங்கள் கிடக்கிறதையுங் கண்டார்கள். உடனே சுவாமி லட்சுமணரைப் பார்த்து, தம்பி! சீதை தெற்கே போயிருக்கிறதற்கு ஐயமில்லை. மற்ற சூழ்ச்சி இன்னும் அறிவோம் வாவென்று சொல்லி அவ்வடையாளத்தின் வழியே நெடுந்தூரம் போனார்கள்.

## சடாயு சுவாமியைக் கண்டு மரணமடைதல்.

அப்படிப் போகிறபோது அங்கே சடாயு வெட்டுப்பட்டுக் கிடக்கிறதைக் கண்டார்கள். உடனே உடம்பு பதறி ஐயோ! எங்கள் அருமைச் சிறிய தந்தையே! உமக்கிப்படி விதிவரக் காரணமென்ன? எங்கள் தந்தை

இறந்துபோனூர் தாங்கள் தான் தந்தையென்று தைரியங்கொண்டிருந்தோம், இனி அந்தத் துணையுமில்லாமல் இழந்தோமே என்று அழுது புலம்பி, ஐயா! இப்படி உம்மை வெட்டினவன் யார்? சீதையைக் கண்டீரோ! என்று கேட்கச் சடாயு சற்றே மயக்கந் தெளிந்து சொல்லுகிறூர்.

அப்பா! என் அருமை மக்களா! ஒரு பெண்ணைத் தனியே வைத்துவிட்டு நீங்கள் என்ன காரியம் முடிக்கப் போனீர்கள்? இலங்காபுரியை ஆளப்பட்ட இராவணன் சீதாபிராட்டியைத் தேரிலேற்றிக்கொண்டு தெற்கு நோக்கிப் போகிறபோது, சீதை அழுது அபயமிட்டுக் கதறுவதைக் கேட்டு நான் சீக்கிரம் வந்து, அவன் றேரை மறித்து அவனுடன் யுத்தஞ் செய்கிறபோது வேண்டிய சாமர்த்தியங்கள் செய்தேன். அவன் பத்துச் சிரத்தையும் மூக்கால் கொத்திப் பிடுங்கினேன், பின்னும் ஆரவாரித்துச் சபதம் பேசி உயிர் நிலை சொல்லிப் பொருதினேன், அவன் கபடமாகச் சொல்லி என்னை இப்படி வெட்டிவிட்டுத் தெற்கு நோக்கிப் போய்விட்டான், நீங்களும் பின்றுடர்ந்து போய் இராட்சதாள் கிளைவழிகளையும் வேரோடு கருவறுத்துச் சீதையையழைத்து வருவீர்களென்றுசொன்னவுடனே சடாயு உயிர் துறந்தார்.

விருத்தம்.

இந்தன மெனைய வென்னக் காரகி
　லீட்டத் தோடும்
சந்தனங் குவித்து வேண்டுந் தருப்பையுந்
　திருத்திப் பூவும்
சிந்தினன் மணலின் வேதி தீர்தர
　வியற்றித் தெண்ணீர்
தந்தனன் றாதை தன்னைத் தடக்கையா
　னெடுத்துச் சார்வான்,

ஏந்தின னிருகை தன்னு லேற்றின
னீமந் தன்மேல்
சாந்தொடு மலரு நீருஞ் சொரிந்தனன்
றலையின் சாரல்
காந்தெரி கனலை மூட்டிக் கடன்முறை
கடவா வண்ணம்
நேர்ந்தன னிரம்பு நன்னூன் மந்திர
நெறியின் வல்லான்.

வசனம்.

உடனே இனிக் காலதாமசம் பண்ணலாகாதென்று, இருவரும் அவரை யெடுத்தடக்கஞ் செய்து அதற்குண்டான ஈமக்கிரியைகளைச் செய்துமுடித்து. அப்பால் சீதையைத் தேடி நடந்து காடுகள் மலைகள் கடந்து, நாற்பது யோசனை தூரம் நடந்து போகிற போது சூரியன் அஸ்தமனமாயிற்று.

அயோமுகி வதம்.

இருவரும் ஒரு இடத்திற் றங்கி யிருக்கும்போது சுவாமிக்குத் தாகமா யிருந்ததால் லட்சுமணனை ஜலங் கொண்டு வரும்படிச் சொன்னார். லட்சுமணன் கவலை யுடன் கமண்டலத்தைக் கையிலெடுத்துக் கொண்டு, அந்த வனத்திலே தண்ணீரிருக்கிற இடந்தெரியாததாலும், இருளானபடியாலும், கையிலே அக்கினியாஸ்திரமெடுத்துக் கொண்டு புறப்பட்டு அந்தவன மெல்லாம் தண்ணீரைத் தேடிக் காணமல், அப்பாலொரு மலையடிவாரத்திற் போகிற போது அங்கேயொரு சுனை யிருந்தது, அதிலிறங்கித் தண்ணீர் மொண்டு கொண்டு வந்தவழி தப்பி, மறுவழியாகப் போகிறபோது அங்கொரு குகையிற் கொண்டு போய்விட்டது. அந்தக் குகையிலிருந்து பிரமாண்டமான சரீரத்துடன் அயோமுகி யென்றொரு ராட்சசியானவள் புறப்பட்டுச் சிங்கம்

வந்து யானையைப் பாய்ந்தது போலப் பாய்ந்துவந்து பிடித்துக் கொண்டு நீ யாரடா வென்று கேட்டாள், அப்போது இலட்சுமணர் அவள் கையைத் திருகிக் கொண்டு நீ யாரடி யென்று கேட்டார்.

விருத்தம்.

பேசின னங்கவள் பேசுற நாணுள்
ளூச லுழன்றழி சிந்தைய ளுந்தான்
நேசமி லன்பின ளாயினு நின்பால்
ஆசையின் வந்த வயோமுகி யென்றாள்.

பின்னு முறைப்பவள் பேரெழில் வீரா
முன்ன மொருத்தர் தொடாமுலை யோடும்
பொன்னின் மணித்தட மார்பு புணர்ந்தென்
இன்னுயி ரைக்கடி தீகுதி யென்றாள்.

வசனம்.

அப்போது அயோமுகி நான்கந்தருவப்பெண், எனக்குச் சகல வித்தைகளுந் தெரியும், நானுனக்குப் புத்தி சொல்லுகிறேன் கேள்; இந்த மலைக் குகையில் நாமிருவரும் மருவி உல்லாசமாக இருக்க வேணும் வருகிறாயோ? இல்லையோ சீக்கிரம் சொல்லென்றுகேட்டாள். அப்போது இலட்சுமணர் அடி! உன் குடரைப் பிடுங்கி மாலையாய்ப் போடுவேன் ஓடிப் போடி யென்று அதட்டினர். அயோமுகி அடே உனக்குப்பயந்து ஓடிப் போவேனோ வென்று இலட்சுமணர்மேல் வீழ்ந்துபிடித்தாள். அந்நேரம் இலட்சுமணருக்குக் கோபமுண்டாகி அவள் கூந்தலைப் பிடித்திழுத்துக் கீழேவீழ்த்தி இடையிலிருந்த வாளையுருவி அவள் மூக்கையும் ஸ்தனத்தையுமறுத்து விட்டார். அந்த விதனம் பொறுக்க மாட்டாமல், கீழே விழுந்துபுரண்டு வனங்கள் அதிரும்படி யலறினாள். அந்தச் சத்தம் சுவாமியின் செவியிலே

கேட்டது. அப்பொழுது சுவாமியானவர் தம்பி லட்சுமணனுக்கு என்ன அபாயம் வந்ததோ என்று எழுந்து கச்சையை யிறுக்கிக் கட்டிக்கொண்டு, அம்பறுத்தூணியும் வில்லு மெடுத்து அக்கினியாஸ்திரத்தைக் கையிற் பிடித்துக் கொண்டு அந்தச் சத்தங் கேட்ட திசையை நோக்கி ஓடி வந்து தம்பி எங்கே சென்றிருக்கிறாய்? லட்சுமணா! லட்சுமணா! என்று ஓலமிட் டழைத்தார்.

அந்தக் குரல் இலட்சுமணர் செவியிற் கேட்டு அடியேன் இதோ வருகிறேன் வருகிறேனென்று ஓடி வந்தார். அப்படி வந்தவரைச் சுவாமி கட்டிக்கொண் டழுது, அபயமிட்டுச் சீதையை யிழந்த பாவி, உன்னை யுமிழந்து போக இருந்தேனே யென்று கிலேசப் படுகிற தமையனுக்குத் தேறுதல் சொல்லித் தண்ணீரைக் கொடுத்தார். சுவாமி அந்தத்தண்ணீரருந்திச்சீதையை நினைத்து வருந்தி, இனி யிந்தச் சரீரம் வைத்திருக்கிற தில்லையென்று நிலத்தில் முட்டி விழுந்து மூர்ச்சையானார். அப்போது லட்சுமணர் சுவாமி தலையைத் தாங்கி யெடுத்து மடியில் வைத்துக் கொண்டு, அண்ணா! எல்லாமறிந்த தாங்கள் இவ்விதம் துக்கமடையலாமா, தண்டகாரணிய வாசிகளாகிய முனிவர்களுக்கு, ராட்சதரைச் சங்கரித்து, உங்களுக்கு நன்மை செய்கிறோம் அஞ்சாதீர்களென்று அபயாஸ்தந் தந்த வாக்குத்தவறலாமா? ஆனதால் அவ்வாக்குத் தவறுதபடியும், பிராட்டியாரைக் கொண்டுபோன இராவணன் முதலிய இராட்சதரைச் சங்கரித்து, ஜானகியை மீட்டிவர வேண்டுமே யல்லது, தாங்கள் மயங்கலாகா தென்று தேறுதல் சொல்ல சூரியனும் உதையமானான் பின் இருவரு மெழுந்து தெற்கு நோக்கி நடந்து போனார்கள்.

## கவந்தன் வதம்.

போகிறபோது அந்த வனத்தில் கவந்தனென் பவன் வடக்கு முகமாக இருந்து வலது கையை உதையகிரி மட்டும், இடதுகையை யஸ்தகிரி மட்டும்

நீட்டி இரண்டு கையையும் பரப்பி வலைவீசி மீன் பிடித்தாற் போல வனத்திலுண்டான யாளி, சிங்கம், மான், மரை, பன்றி, புல்வாய், நாய், நரி, முயல் மலைப்பாம்பு முதலிய ஜீவஜெந்துக்களை யெல்லாம் கையால்வளைத்து உள்ளே அந்நேரம் எவையகப்பட்டதோ அவைகளை யெல்லாம் வாரி வாயிற் போட்டு விழுங்குவான். அப்படி இரண்டு கையும் பொருதி விரல் கோர்க்கிற போது இராமலட்சுமண ரிருவரும் அந்தக் கைவளைவுக்குள் அகப்பட்டுக் கொண்டு வருகிறபோது, அதற்குளகப்பட்ட அளவில்லாத மிருகங்கள் தெற்கு வடக்காயும், கிழக்கு மேற்காயும் மாறி மாறி யோடித்திரிந்து, கூச்சலிடுகிற சத்தம் மேகங்கள் கர்ச்சிக்கிறதுபோலிருந்தது. இந்தச் சத்தமேதென்று இராமலட்சுமணர் திகைத்து தம்பி லட்சுமணா! ஏதோ மிருகங்க ளெல்லாம் கோட்டைக்கு ளகப்பட்டது போல ஓடித் திரிகிறது. இந்த அதிசயம் இன்னதென்று தெரியவில்லையென்று சொல்லும்போது லட்சுமணர் மிருகங்கள் கூச்சலிடுவதும், ஓடித் திரிவதும் சுபாவந்தானென்று கவனித்துப்பார்க்கிறபோது, கவந்த ராட்சசனுடைய கை பருவதம் போல நகர்ந்து வருகிறதைக் கண்ணுற்றார்.

இலட்சுமணர் பார்த்து அண்ணா! ஏதோ மலை போல இரண்டு மலைப்பாம்பு வருகிறதென்று சொல்ல, இராமச்சந்திரமூர்த்தி கண்டு வடக்கே யிருந்து வருகிறது மலைப்பாம்பென்று தெற்கே யொதுங்கினார்கள்; அப்போது அங்கு கவந்தனுடைய வாய் மலைக்குகை போல இருந்தது. முன்னே போன யானை முதலியவைகளை யதக்கி விழுங்குகிறதை யிருவருங் கண்டு இங்கேயும் ஒரு பூதமல்லவோ இருக்கிறது, இது கையென்றும் இது உடலென்றும் அறிந்து தம்பி! இவனொரு ராட்ச

தன், நாம் எச்சரிக்கையாக இரண்டு பேரும் நின்று, இரண்டு புஜங்களையும் வெட்ட வேண்டுமென்றுவெட்டிவீழ்த்தினார்கள். வெட்டுமுன் விழுங்கின ஜீவசெந்துக்கள் போக மற்ற மிருகங்களெல்லாம், உயிர்பிழைத்தோமென்று ஓடி விட்டன. அப்பொழுது இருவருங்கூடித்தங்கள் கவலை யெண்ணமல், கவந்த ராட்சதனைப் பார்த்துப் பிரமித்துத் தம்பி! இப்படியுமொரு ஜீவனைப் பிரமதேவன் படைத்தானோ? என்று அதிசயப்பட்டு, அவன் முன்பாகப் போய்ப் பார்க்கும் பொழுது, கவந்தன் வாய் வானத்திற்கும் பூமிக்கும் ஒன்றாய்த்திறந்து குகைபோலிருந்தது இராகவன், தம்பி லட்சுமணா! நான் சீதையை விவாகஞ் செய்த அருமை நீ அறிவாய், அப்படி இருவரும் ஒரே மனதாய் மணந்து அன்பு செலுத்தின அருமைப்பெண்ணை ராட்சதன் கொண்டுபோக, என் செவியிற் கேட்டும் பிராணனைத் தியாகஞ் செய்துக் கொள்ளாமல் வைத்திருந்ததுரோகி இந்த ராட்சதன்வாயில் வீழ்ந்திறந்து போகிறேன், நீ அயோத்திக்குப் புறப்பட்டுப்போ வென்று சொல்லிக் கண்ணீர் மலங்கினார்.

அப்போது லட்சுமணர் அண்ணனைப் பார்த்து, அண்ணா! பிராட்டி தனித்திராமல் என்னைக் காவலாக வைத்து மானின் பிறகே துடர்ந்து போகிற போது, அப்படிக் காத்து உத்திரவாதம் பண்ணமல், உங்களிருவரையும் பிரியும்படிச்செய்த துரோகியான நான்இந்த ராட்சதன் வாயில் விழுந்திறந்து போகிறேன் என்று இருவரும்தங்கடங்கள் கவலையைப் பேசிக்கொண்டிருக்கிறபோது, கவந்தன் இரண்டு கையும் அற்று விழுந்த வேதனையால் உயிரை விடுத்தான்.

## சபரி மோட்சம்.

இறந்த கவந்தன் தெய்வ சொரூபம் பெற்று இராமபிரானைத் தோத்திரஞ்செய்துகொண்டு வைகுண்டஞ் சேர்ந்தான். அப்பால், இராமலட்சுமணனிருவரும் புறப்பட்டு மதங்காச்சிரம நோக்கிப்போகிறபோது 'சபரி என்பவள்' எதிர் கொண்டு வந்து தெண்டம் பண்ணி யழைத்துப் போய்த் தன்னுடைய ஆச்சிரமத்திலெழுந்தருளச்செய்து, மிகுந்த அன்போடு

### விருத்தம்.

ஆண்டவ னன்பி னேத்தி யழுதிழி
யருவிக் கண்ணள்
மாண்டதென் மாயப் பாசம் வந்தது
வரம்பில் காலம்
பூண்டமா தவத்தின் செல்வம் போயது
பிறவி யென்பாள்
வேண்டிய கொணர்ந்து நல்க விருந்து
செய் திருந்தவேலை.

### வசனம்.

தான் வனத்திற்போய் நல்ல கனிகளைக் கொய்து, தின்று ருசி பார்த்து நன்றாயிருக்கிற கனிகளை ஒரு தட்டிலே வைத்துக்கொண்டு, இராம லட்சுமணனிடம் வந்து நீங்கள் இந்தக் கனிகளைச் சாப்பிடுங்களென்று சொன்னாள். அதைச் சுவாமியறிந்து பத்தியே பிரதானமென்று சொல்லிச் சாப்பிட்டு இளைப்புத் தீர்ந்து இருக்கிறபோது, சபரியானவள் இருவரையும் பார்த்து நீங்கள் யார்? எங்கேயிருந்து வருகிறீர்களென்று கேட்டாள்.

அப்போது லட்சுமணர் நாங்கள் அயோத்தியாபுரி, தசரதச் சக்கரவர்த்தியுடைய குமாரர் நான்குபேருண்டு அதிலே இரண்டு பேர்கள் ஊரிலிருக்கிறார்கள்.

இவர் தான் யாவக்கும் மூத்தவர். இவரும், இவருடைய தேவியும், அடியேனும் ஒரு காரணமாக வனத்திற்கு வந்தோம். அங்கே நாங்களிருவரு மில்லாத வேளை பார்த்துக் கபடமாக இராவணன் வந்து பெண்ணை யெடுத்துக் கொண்டுபோய் விட்டான். அதன் பொருட்டு நாங்களிரண்டு பேருங் கிலேசப்பட்டுத் தேடிவந்தோமென்று சொல்லச் சபரிகேட்டு ஐயோ! உங்களுக்கிப் படிப்பட்ட அவதிவரலாமோ? நீங்களோ சிறு பிள்ளைகள், இராவணன் கொண்டுபோன பெண்ணை, எப்படித் திருப்பி யழைத்து வரப்போகிறீர்களென்று மிகவும் விசனமுற்றுப் பின்னும் ஒருபாயம் சொல்லுவாள். அதோ தெரிகிறது ரிஷியமுக பருவதம், அதனருகே 'பம்பா நதி' என்றொரு தீர்த்தமுண்டு, அந்த மலையடிவாரத்தில் வாலிக்குப் பயந்து சுக்ரீவனும், அனுமானும் மற்ற வானரச் சேனைகளுமாக வந்திருக்கிறார்கள். நீங்கள் போய் அவர்களுடனுறவாகித் துணையாக அழைத்துக் கொண்டு போனால், நாலு வகைக்கும் நல்லதென்றாள்.

அப்பொழுது சுவாமியும் லட்சுமணருமெழுந்தார்கள். அந்நேரம் சபரியானவள் அடியாளுக்கு ஒரு உத்திரவு கொடுக்கவேண்டுமென்று கேட்டாள். சுவாமி அஃதென்னவெனக் கேட்கச் சபரி சொல்லுவாள். உங்களை நான் தரிசனம் செய்தபடியால் என் பாவமகன்றது. இனிமேலாம்பதம் அருளவேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். சுவாமி கடைக்கண்ணாலே சபரியைப் பார்க்க, உடனே ஆகாயத்திலிருந்து விமானம் வர அதிலாரோகணித்து வைகுண்டஞ் சேர்ந்தாள். அதுகண்டு லட்சுமணர் அண்ணா! இங்கே நின்ற சபரி, எங்கே என்று கேட்கச் சுவாமி நானறியேனென்றார். அதன்பிறகு இரண்டு பேரும் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போனார்கள்.

ஆரணிய காண்டம் முற்றுப் பெற்றது.

---

ஸ்ரீ
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

கம்பநாட் டாழ்வார் திருவடிகளே சரணம்.

நான்காவது

# கிட்கிந்தா காண்டம்.



## காப்பு.

மூன்றுரு வெனக்குண மும்மை யாமுதற்
றேன்றுரு வெவையுமிம் முதலைச் சொல்லுதற்
கேன்றுரு வமைந்தவு மிடையி னின்றவர்
சான்றுரு வுணர்வினுக் குவந்த தாயினான்.

## பம்பாநதிப் படலம்.

இராமலட்சுமணுள் மதங்காச்சிரமம் விட்டுக் காடுகளும் சோலைகளும் கடந்து வெகு தூரம் நடந்து போய்ச் சோலைகள் சூழ்ந்து பரந்த இடமும் கரையுமுடைய பம்பா நதியைக் கண்டார்கள். அந்நதியானது ஞானிகள் உள்ளம் போலும் படிகம் போலும், தெளிவாய்த்தாமரை புட்பித்து விகசிதம் செய்யவும், வாளை, கண்டைகள், துள்ளவும் வளமா யிருப்பதைக் கண்டு, நடந்து வந்த சிரமந்தீர ஸ்நானஞ் செய்து அனுஷ்டான முடித்து அன்று தங்கி யிருந்து, இரவெல்லாம், சீதா பிராட்டி பிரிந்த ஏக்கத்தினால் நித்திரை யில்லா திருந்து விடிந்தவுடன் எழுந்து வெகு தூரம் நடந்து சபரி சொன்ன மார்க்கமாய்ப் போய் ரிஷியமுக பருவதத்தின் மேலேறினார்கள். அப்போது வாலிக்குப் பயந்துவந்திருக்கும் சுக்ரீவன் கண்டு, இவர்கள் யாரோ

தெரியவில்லை கையில் வில்லைப் பிடித்திருக்கிறார்கள், வேடர்கள்போலு மிருக்கிறார்கள், ஒருவேளை வாலியா லனுப்பப்பட்டவர்களாயிருக்கலாமோ என்னவோவெ னப்பயந்து, வானரங்களுடன்ஓடிப்பருவதத்தின்குகை களில் ஒளிந்து கொண்டு அனுமாரை யழைத்து நீர் போய், இந்த மலைமேல் அதோ வந்திருக்கிற இரண்டு பேர்களைக் கண்டு யாரெனச் சந்தேகந் தெளிந்து கொண்டு வாருமென் றனுப்பினான்.

அனுமானைக் காணல்.

அப்படியே அனுமானவன் ஒரு பிரமசாரிப் பிராமண வடிவு கொண்டு இராம லட்சுமணர் எதிரிற் போய் உங்கள் வரவு நல் வரவாகுக ஆசீர்வாத மென் றார். அப்போதவர்கள் பக்கத்தில் நிறுத்திக் கொண்டு நீரிருக்கிற தேசம் எது? என்று கேட்க,

விருத்தம்.

மஞ்செனத் திரண்ட கோலமேனிய மகளிர்க்கெல்லாம்
நஞ்செனத் தகைய வாகி நளிரிரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சமொத் தலர்ந்த செய்ய கண்ணையான் காற்றின்—
வேந்தற்
கஞ்சனை வயிற்றில் வந்தே னாமமு மநும னென்றான்.

வசனம்.

நீலமேகம் போன்ற சொரூபமும் தாமரை மலர் போன்ற நேத்திரமுமுடைய வள்ளலே! யான் வாயு குமாரனாக அஞ்சனாதேவி வயிற்றிற் பிறந்தவன் என் பெயர் 'அனுமன்' அதோ தெரிகிறதே அது தான் என்னுடைய வாசஸ்தலம் என்றான். அப்போதுகாகுந் தன் அனுமன் காதின் குண்டலத்தைக் கண்டு, ஓ அந் தணா! உம்முடைய காதில் அணிந்திருக்கிற குண்டலம் யாரால் செய்தது வெகு லட்சணமா யிருக்கிற தென்று கேட்டார்.

அப்போது அனுமார் திகைத்து நம்முடைய காதிற் கிடக்கிற குண்டலம் ஒருவருக்குந் தெரியாதே, நம் தாயார், உன் காதிலே கிடக்கிற குண்டலங் கண்டு சொன்னவர் தான் உனக்குக் குரு வென்றும், தெய்வ மென்றும் சொல்லி யிருந்தாளே அது போல், இவர் தான் நமக்குத் தெய்வ மென்று நினைத்துச் சீக்கிரஞ் சுவாமி பாதத்தில் நமஸ்காரம் பண்ணிக்கைகட்டிவாய் பொத்திக் கொண்டு சுவாமி! கிட்கிந்தையி லிருக்கிற வாலிக்குப் பயந்து அடியேனும், எங்களெஜமான் சுக்ரீபரும், சிறிது வானரச் சேனைகளுமாக அதோ தெரிகிறமலைக் குகையில் வந்திருக்கிறோம். இன்னும் அடியேனுக்கு வேறு ரூபமிருக்கிறது, அதைக் காட்டுகிறேன் பாருங்களென்று, வானுலகத்திற்கும் பூமிக்குமாக வளர்ந்து காட்டி நின்றார். அதை இராம லட்சுமணுள் கண்டு வெகு மகிழ்ச்சியாகி உன்னுடைய ரூபத்தை ஒடுக்குமென்று ஒரு துரும்பைக் கொண்டு அனுமார் கணைக்காலிற் றட்டினார். அப்பொழுது அனுமார்சொரூபத்தை யொடுக்கி முன்போல நின்று கொண்டு, இராம லட்சுமணுளைப் பார்த்து, உங்கள் வரலாறுகேட்கயாசிக்கிறேனென்றார்.

விருத்தம்.

புயறரு மத்தின் கோட்டுப் புகர்மலைக் கிறையை யூர்ந்து
மயறரு மவுணர் யாரு மடிதர வரிவிற் கொண்ட
இயறரும் புலமைச் செங்கோன் மனுமுதல் யாருமொ- [வ்வாத்
தயரதன் கனக மாடத் தடமதி லயோத்தி வேந்தன்.

அன்னவன் சிறுவ னுமிவ் வாண்டகை யன்னை யேவத்
தன்னுடை யுரிமைச் செல்வ நம்தம்பிக்குத் தகவி னல்கி
நன்னெடுங் கானஞ்சேர் ந்தா னுமமு மிராமனென்பான்
இந்நெடுஞ் சிலைவலா னுக் கேவல்செய் யடியன்யானே.

வசனம்.

அப்போது லட்சுமணர் சொல்வார் வடக்கே அயோத்தியாபுரிக்கு அதிபதியாகிய தசரதச்சக்கரவர்த் திருமாரர்கள் நான்கு பேர், அவர்களில் மூத்தவரிவர், இவர் பெயர் இராமசுவாமி, இவருக் கிளையவர் பரதர், அதற்கிளையவன் நான் என் பெயர் லட்சுமணன் எனக் கிளையவன் சத்துருக்கன் இப்படி நாங்கள் நான்குபேர் களும் பிறந்திருக்கிறபோது, இவருக்குப் பட்டாபிஷே கமென்று எம் தந்தை யோசனை செய்து அதற்குண் டானதர்ப்பாருட னிருக்கிறபொழுது எங்கள்சிற்றன்னை தன் மகன் பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யச் சொல்லியும், இவரை வனம்போகச் சொல்லியும் தனக் குமுன் எங்கள் தந்தை இரண்டு வரங்கொடுக்க வேண் டியதற்காக, இந்தப்படிக்கேட்டு முடித்துக்கொண்டாள் அதனாலிருவரும் இவருடைய தேவியார் சீதாபிராட்டி யும் நானும் ஆக மூன்று பேரும் புறப்பட்டு வந்து பஞ்சவடி தீரத்தில் பன்னகசாலையி லிருக்கிறபோது, இராவணனுடைய தங்கை சூர்ப்பநகை யென்றொரு இராட்சசி வந்து எங்களுக்கு இடர் நினைத்தபடியால் அவளை நாங்கள் ஆக்கினை செய்து விட்டோம், அத னால் அவள் பொருட்டுக் கரன், தூஷணன், திரிசிரன் என்ற மூவர்கள் முப்பது கோடி ராட்சசரும் எங்களை வந்து, வளைந்து கொண்டார்கள்.

அப்பொழுது இவர் அம்பறுத்தூணியிலிருக்கிற அநேக பாணத்தில் ஒருபாண மெடுத்துப் பிரயோகஞ் செய்து, வந்த ராட்சசாளையும், அந்தமூன்று பேரையும் கணப்பொழுதில் சிதைத்துவிட்டார். அதன்பிறகு சூர்ப் பநகை இலங்கையிற்போய்த் தன்றமையனிடம் என்ன சொன்னளோ அறியோம். அந்த ராவணன் ஒருமானை

யேவினன் அதை மெய்மானென்று, பிராட்டியார் பிடித்துத்தரவேண்டு மென்று கேட்டுக் கொண்டபடியால், இராட்சதாள் மாயையுங் கபடமுந் தெரியாமல், தேவியைத் தனியே வைத்துவிட்டு ஒவ்வொருவராக, அந்த மானின் பிறகே சென்று விட்டோம், அவிடஞ்சென்று கண நேரத்திற்குள் திரும்பி வருமுன்னே அந்த ராவணன் பக்கத்தில் மறைந்திருந்து, தேவியைப் பன்னகசாலையுடன் பெயர்த்தெடுத்துத் தன் றேரில் வைத்துக்கொண்டு இலங்கைக்குப் போய் விட்டான். நாங்களும் வந்து பன்னகசாலையிற் பார்க்கிறபோது தேவியைக்காணுததால், தேடிப்புறப்பட்டுப்பின்றுடர்ந்து வந்தோம் அதற்குமுன்அவன் மிஞ்சிப்போனபடியால், இரவுசபரியின் ஆச்சிரமத்திலிருந்து, நீங்கள் இங்கே யிருக்கிற சேதி கேட்டு இப்போது இங்கே வந்தோம் என்று இலட்சுமணர் சொல்ல, அனுமார் கேட்டு மிகு கவலையுற்று ஐயோ! இப்படிக்கான ஆபத்து உங்களுக்கு வரவேண்டுமா வென்றும், நாங்கள் தேவரீருக்கு உதவியாயிருந்து எந்த விதமும் அம்மனைச்சிறை மீட்டுகிறதற்கு உபாயம் பண்ணுகிறேம், அதற்கேற்ற சாமர்த்தியஞ் செலுத்திக் காரியங் கொள்ளத் தக்கவர்களும் இருக்கிறார்கள், நீங்களொன்றுக்கும் யோசனை பண்ண வேண்டாம் எங்களெஜமான் சுக்ரீவர் முதலியோர் அதோ அந்த மலைக்குகையி லிருக்கிறார்கள் அவர்களைக் கூட்டி யோசனை செய்து நடத்தலாமென்று அனுமார் சொன்னார்.

அப்போது சுவாமியானவர், நீங்கள்வாலிவகை என்பது கேட்டிருக்கிறேம், அப்படியிருக்க உங்களெஜமான் வாலியையும் கிட்கிந்தாபுரியையும் விட்டு இந்த மலையில் வந்திருக்கக் காரணமேது? உங்களுக்கு வந்த

இடுக்கமென்ன வென்று கேட்க அனுமார் சொல்லுகிறார்.

உங்களுக்கு அடியேங்கள் வந்த வரலாறு விண்ணப்பிக்கிறேன் கேளுங்கள், முன்னொரு காலத்திற் சூரியன் தேர்ச்சாரதி அருணனெனவன் பெண் வடிவு கொண்டுதேவலோகம் போய்த்தேவேந்திரனுடன்கூடினதால் வாலி பிறந்தான். அவனைக் கூட்டிக் கொண்டு சூரியமண்டலம்போய் சூரியனைக்கூடியவுடன் சுக்ரீவன் பிறந்தான். அவனையுங் கூட்டிக் கொண்டு பூலோகத்தில் வந்து, தெய்வத் தச்சனிடத்திற் சொல்லி கிட்கிந்தையென்றொரு பட்டண முண்டு பண்ணி. அப்பட்டணத்திலிருந்து அறுபத்தெட்டு வெள்ளம் வானரச் சேனையும், இரண்டு வெள்ளங் கரடிச் சேனையும், இருபத்தினலு படைத்தலைவருடனேயு மிருந்து இராச்சிய பரிபாலனஞ் செய்து வருகிறபோது வாலிக்கு அங்கதனென்றொரு பிள்ளை பிறந்து புஜபல பராக்கிரமங்களுடனே இருக்கிற காலத்தில், மயனென்கிறவன் புத்திரனில்லாமல் புத்திரயாகம் வளர்த்தான். அதிலே, துந்துபி மாயாபதி யென்னும் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுடைய புஜபலபராக்கிரமம் எப்படியெனில், மகாமேரு கிரியையும் ஈரேழுபதினலுலோகத்தையும் ஒரு உள்ளங்கையிலே அடக்கிப் பந்துபோலாடுகிற பலமுண்டு. அப்படிக் கொத்த பிள்ளைகளிரண்டு பேரும் தகப்பனிடத்திற் போய் எங்களுக்கு எதிராளியுண்டானுற் சொல்லும் இல்லாதிருந்தா லும்மைக் கொல்லுவோமென்றூர்கள். அப்பொழுது மயன்சொல்லுவான் நான் உங்களுக்குப் பாத்திரவானல்ல என்னை கொல்லவோ நான் பிள்ளை வேண்டுமென்று யாகஞ் செய்து உங்களைப் பெற்றேன்? நல்லது உங்களுக்கு எதி

வாலியாரென்றால் எல்லா உயிரையும் வாங்குகிறஎமனொருவனுண்டு அவன் எமபுரத்தி லிருக்கிறான் அவனை வென்று வாருங்களென்று சொல்லியனுப்பினான். உடனே அப்படியேயென்று, இரண்டு பேரும் புஜங்களைத்தட்டி ஆக்கிரமித்து எல்லாவுயிருக்கும் எமனொருவனுண்டோ அவன் திராணியை அறியவேண்டும் தம்பி புறப்படாவென்று இரண்டு பேரும் எமபுரம் போய் எமதருமராஜாவைப் பார்த்து நீ எங்களுடனே எதிர்க்கத்திராணியுண்டோ வென்று கேட்டார்கள்.

அப்பொழுது எமதருமன் இவர்களைக் கண்டு பயந்து உங்களுடனே எதிர்க்குந் திராணியுள்ளவன் வச்சிராயுதம் படைத்த தேவேந்திரனிருக்கிறான், அங்கே போருங்களென்று தன்னைத் தப்பித்துச் சொன்னான். அப்பொழுது அந்த இரண்டு பேரும் அவிடம் விட்டுத் தேவலோகம் போய்த் தேவேந்திரனைக் கண்டு எங்களுடன் போராடத் திராணியுண்டோ வென்று கேட்டார்கள். தேவேந்திரன் திடுக்கிட்டுப் பயந்து, உங்களுடன் அமர்புரிய எனக்கு வல்லமை இல்லை, எல்லா உலகமும் படைக்கப்பட்டப் பிரமாவே திராணியுள்ளவர், அவரிடம் போருங்களென்று சொன்னான். அப்பொழுது அவ்விருவரும் சத்தியலோகம் போய்ப் பிரமாவைக் கண்டு மல் யுத்தத்திற்கு அழைத்தார்கள். இவர்கள் நிற்கிற பராக்கிரமங் கண்டு பயந்து உங்களுடனே போர்துடங்க வைகுண்டத்தில் மகாவிஷ்ணுவிருக்கிறார் அவரிடம் போருங்களென்று அனுப்பினார். உடனே அவ்விருவரும் அவிடம் விட்டு வைகுந்தம் போய் மகாவிஷ்ணுவைப் பார்த்து, எங்களுடன் மல் யுத்தம்பண்ண வரவேண்டுமென்று அதட்டி அட்டகாசத்துடன் கேட்டார்கள். அப்பொழுது மகாவிஷ்ணு

இவர்களிருக்கிற உக்கிரமத்தையும் அகங்காரத்தையுங் கண்டு, எனக்கு உங்களுடன் யுத்தஞ்செய்து வெற்றி கொள்ளச் சாமர்த்தியமில்லை, கைலையங்கிரியில் சிவனிருக்கிறார் அவர்தான் உங்களுக்கு எதிராளியென்று சொன்னார். அப்பொழுதிருவரும் கைலைக்குச் சென்று பரமேசுவரனைக் கண்டு, எங்களுடன் எதிர்த்துச் சண்டைபோடப் பலமுண்டோவென்று கேட்க, பரமேசுரன் நகைத்து, இவர்களுக்குக் கெட்டுப்போகிற காலங் கிட்டினதாலல்லவோ இந்தப் புத்தி வந்திருக்கிறது? ஆனதால் இவர்களைக் கொல்லவேண்டுமென்றெண்ணிச் சொல்லுகிறார்.

உங்களுடைய புஜபல பராக்கிரமங்களைக் காட்டுகிறது, உங்களுக்குச் சமானமான பராக்கிரமசாலி வாலியிடத்திற் போகவேண்டுமேயல்லாமல், ஆண்டியுந் தாதனும், பார்ப்பனனுமோ உங்களுடைய வலிமை அறிவார்கள்? என்று உற்சாகப்படுத்தினார். அப்பொழுது துந்துபியும், மாயாபதியும், வாலி எங்கே யிருக்கிறானென்று ஆவலாய்க் கேட்டார்கள்; அப்போது பரமன், பூலோகத்தில், கிட்கிந்தைப்பட்டணத்தில் இருக்கிறான். அங்கே போருங்களென்று அனுப்பினார். அப்படியே யிரண்டு பேரும் பூலோகத்திற் குதித்து, வாலியிடத்தில் வருகிற சாமர்த்தியத்தை வாலியானவன் கண்டு, ஆக்ரமித்து, புஜங்களைத் தட்டிக் கொண்டு, அங்கே வருகிற தாரடா? நில்லுங்களென்று இடிமுழக்கம்போல அதட்டிக் கேட்டான். அப்பொழுது மாயாபதியுந் துந்துபியும் வாலியிடம் சொல்லுவார்கள். எங்களுக்குச் சரீரந் திமிர்பிடித்திருக்கிறது, ஆனதால் எங்களுடன் எதிர்க்கத் திராணி யுண்டோ? என்று கேட்டார்கள்.

அப்பொழுது வாலி நகைத்துச் சரியான பராக்கிரமசாலிகளல்லவென்று நிதானித்து வாலி சொல்லுவான். இப்பொழுது மல்லு யுத்தம் பண்ண இரண்டு பேரும் வருகிறீர்களோ வென்று கேட்டான். அப்பொழுது துந்துபி மாயாபதி சொல்லுவார்கள். ஒருவன் பேரில் இரண்டுபேர் பொருதுகிறதுண்டோ. ஒவ்வொருவராக வருகிறோ மென்றார்கள். அப்போது வாலி சொல்லுவான் ஒருவருக் கொருவர் சேர்ந்து மல்லு யுத்தஞ் செய்வது எங்குமுள்ள யுத்தந்தான் அது சம்பிரதாயமல்ல, வெகுநாளாயுத்தமுகமில்லாமல் என்உடம்பில் வலியும் திமிருமா யிருக்கிறது ஆனதால் என்னை வேண்டி நீங்கள் இரண்டு பேரும், நான் ஒருவனுமாய் நின்று மற்போர் செய்ய வேண்டு மென்று சொல்ல இரண்டு பேரும் லட்சைப் பட்டு, நன்றாச்சுது நாங்களுனக்கு இளைத்தவரோவென்று உக்கிரங்கொண்டு துந்துபியானவன் வாலியின் பேரிற்பாய்ந்து கட்டிச்சேர்ந்து இருவருங்கையோடு கைகள் பின்னிக் காலோடு கால்கள் பின்னி, முகத்தோடு முகம் பொருதி ஒருவருக்கொருவர் கீழுமேலுமாக விழுந்து புரண்டு கிட்கிந்தைமலையுச்சியிலே யிருந்து கீழேவிழுந்து, ஒருவரையொருவர் தூக்கி யெறிந்து பம்பரம்போல சுற்றி விழுந்து இப்படி மகாயுத்தங்கள் பண்ணுகிறபோது, கிட்கிந்தைப் பட்டணத்தின் சனங்கள் வெருண்டு, யாரோ இரண்டு இராட்சதர்கள் வந்து வாலியுடனே மற்போர் செய்கிறார்கள். நாம் வெகு சாக்கிரதையா யிருக்க வேண்டு மென்று யாவரும் ஒருங்குகூடி எச்சரிக்கையாக யிருந்தார்கள்.

அப்பொழுது வாலிக்குக் கோபமுண்டாகி ஆக்கிரமித்து துந்துபியை வாரி மலைப்பாறையிலே சிதற

அடித்தான் உடனே துந்துபி உடல்கள் சிதறிப்போனவையெல்லாம் வாரி யுண்டையாக யுருட்டி மேருகிரி போல குவித்துவிட்டுத் திரும்பி யவன் தம்பி மாயாவதியைப் பார்த்துப் பயலே! உன் சேதி என்னடாவென்று கேட்கும்போது, மாயாவதி பயந்து, நம்முடைய தமையன் பட்டபாட்டிலே நாம் எம்மாத்திரம்? இவன் சாமானியனல்ல வென்று வெருண்டு ஓடி கிட்கிந்தைமலைப் புடவிலே நுழைந்து பாதாள லோகத்துக்கு ஓடினான். அப்போது வாலியானவன், சுக்ரீவன் அங்கதன், குமுதன், நீலன் அடியேன் முதலாகிய பேரை யழைத்து, இந்தப் பாதாள வாசலிலே காவலாக விருங்கள், நானிந்தப் பாதாளவாசல் வழியாகப் போய், அந்த மாயாவதியைப் பிடித்துச் சம்மாரம் பண்ணி வருகிறேனென்று சொல்லி, அந்தப் புடவுக்குள் நுழைந்து போனான்.

முன்னமோடிய குகையினுள் மாயாவதி இருட்டில் வழிதெரியாமல் தடவிக்கொண்டு போகிறபோது, வாலிதுடர்ந்து அந்த இருட்டை யெல்லாம் கடந்து போய் மாயாவதியைக் கண்டு, மறித்துப் பிடித்திழுத்து, மற்கட்டிக்குகை அதிரும்படியாய்க் கீழுமேலுமாக உருண்டு திரிகிறபோது, வாலியானவன், மாயாவதியைப் பிடித்துத்தள்ளி, மார்பிலே ஒரு குத்துகுத்துகிறபோது மாயாவதி உடல் நெரிந்து இரத்த வெள்ளமானது பாதாளவாசற் கொள்ளாமல் மேலே பொங்கி நாங்களிருக்கிற இடம் வரையில் இரத்த ஆறு வந்தபடியால் நாங்களும் பயந்து வாலியானவன் இறத்து போனான், இனி மாயாவதி இந்த வாசல் வழியாய் வருவானென்றுயோசனை செய்து, அந்தப் பாதாள வாசலை அளவற்ற மலைகளைப் பிடுங்கி யடைத்து விட்டோம். அப்

போது மாயாவதியுடைய இரத்தவெள்ளத்திற்சேறுடிப் பாதாளலோகத்திலிருந்து வாலிமேலே வருகிறபோது வாசலடைபட்டிருப்பதைக் கண்டு, நன்றாயிருந்தது நம்முடைய தம்பி சுக்ரீவனையும், மற்றுமுள்ள பேரை யும் நம்பி, நாம் காவலாக வைத்துப்போக, நாம் திரும்பிவராதபடி பாதாள வாசலையடைத்து விட்டார் களே யென்று கோபங் கொண்டு, அடைத்த மலைகளை ஒரு காலால் உதைத்தான். அந்த உதைபட்டமாத்திரத் தில் அடைத்த மலைகளெல்லாம், சல்லி சல்லிகளாகிச் சமுத்திரத்திற் போய் விழுந்தது. வாலிக்குப் பாதாள வாசல் ஒரு பீரங்கி போலவும், அடைத்த மலைகள் பீரங்கிக் குண்டு போலவும், வாலியொரு மருந்தாகவும் அவன் கோபம்நெருப்பாகவும், இருந்தபடியால் பீரங் கியாகிய பாதாளவாசல் வழியாகப் புறப்பட்டுக் கோபங் கொண்டு வருகிறதைச் சுக்ரீவன் கண்டு, நம் தமையன் உயிர்பிழைத்து வந்தாரென்று எதிர்கொண்டு போனார்.

வாலி பிடித்து அடிந்து அவருடன் கூடிய எங் களைப்பிடிக்க வருகிறபோது, நாங்கள் யாவரும்பயந்து ஓடி வந்து இந்த மலைவாசலி லிருக்கிறோம். இங்கு வாலி வந்து மிதிக்கக்கூடாது. அப்படி வந்தால் உட னேதலை வெடித்துப் போகுமென்று, மதங்கரிஷி முன் னொருகாலத்தில் சாபமிட்டிருக்கிறபடியால் வாலி யிங் கேவருகிறதில்லை. பின்வாலி சுக்ரீவனைப்பார்த்து நான் பாதாளவாசல்விட்டு வருமுன்னே வழியை யடைத்து விட்டதினால் நீ எனக்குச் சகோதரனல்ல, எனக்குச்சத் துருவானபடியால் என் பட்டணத்தி லிருக்கவேண்டா மென்று துரத்தி, அவர் மனைவியையும் அபகரித்துக் கொண்டான் பின் இருப்பிட மிழந்து இந்த மலையில் அவருடன் நானும் மற்றவர்களும் வந்திருக்கிறோம்.

அடியேன் அவர்களுக்குத் தலைமையான நட்பாளனாக விருக்கிறேன் இவைகள் தான் விவரம். மற்றும் நடக்க வேண்டியவைகளுக்கு, அவ்விடஞ் சித்தம்போல் நடக்கிறோமென்று அனுமார் சொன்னார்.

சுக்கிரீவன் நட்புக் கோடல்.

இராகவேந்திரர் கிருபைகூர்ந்து நல்லது உங்களுக்கு இடுக்கம் செய்கிற வாலியைச் சம்மாரம் பண்ணி உங்களின் எஜமான் சுக்கிரீவன் மனைவியையும் மீட்டிக் கொடுத்து, ராச்சியத்தையும் பட்டங்கட்டி வைக்கிறேன் உங்களெஜமான் சுக்கிரீவனையும், அவனுடன் சேர்ந்த தலைவர்களையும், அழைத்துவா வென்று சொல்ல, அப்படியே அனுமான் சுவாமி யிடம் விடை பெற்றுக் கொண்டு வந்து சுக்கிரீவனைக் கண்டு சொல்லுகிறார்.

அடியேன் போனகாரியம் நமக்கு அனுகூலமானதா யிருக்கிறது. என்னவென்றால்:-வடக்கே அயோத்தியாபுரியாம், அதற்கு அதிபதியாகிய தசரத மகாராஜாவினுடைய புத்திரர் நால்வரில், இரண்டு பேர் தமையனும் தம்பியுமாக வந்திருக்கிறார்கள். அவர்களில் மூத்தவர் பெயர் இராமசுவாமி இளையவர் பெயர் இலட்சுமணர். மூத்தவருடைய தேவியார் சீதாபிராட்டியார் ஆக மூன்று பேரும் வனவாசம் வந்த சேதியும் அயோத்தியாபுரியின் வரலாறும், தங்கள் பட்டணம் விட்டு வந்த நாள் முதல் இதுவரை நடந்தவை யெல்லாம் விவரமாய்ச் சொல்லி, நம்முடைய காரியங்களைமுடித்துத்தருவதாகச் சொன்னார்களென்று சொல்ல, சுக்ரீவன் கேட்டுமனமகிழ்ந்து பின்சிறிது ஐயமுற்றுச்சொல்லுகிறான்.

மாருதி! நானொரு யோசனை சொல்லுகிறேன். அது என்னவெனில்:— துந்துபி எனும்பு மலையை

வாலி முழங்கால் மட்டும் தூக்கி உடம்பு திமிர் வாங்கிக் கொள்ளுவான் அந்த எலும்பின் மலையை இவர்கள் கணுக்கால் மட்டும் தூக்கிச் சோதனை காட்டவேணும் தப்பினால் இந்த மலைச் சாரலில் நிற்கிற ஏழு மராமரத்திலே. ஒரு மரத்தையாகிலும் எய்து முறித்துக் காட்டவேணும், இந்த இரண்டு சோதனையிலொன்றாகிலும் செய்து காட்டினால் அவர்கள் மீதுள்ள சந்தேகம் நீங்கும் நம்பி அந்த வாலியிடத்தில் நாம் யுத்தம் செய்யலாம் இவைகளைச் சொல்லியறிந்துவாவென்று திரும்பவும் அனுமாரைச் சுவாமியிடம் அனுப்பினார்கள். அப்படியே அனுமார் வந்து சொன்னவுடன் சுவாமி சந்தோஷமாகி, அந்தத் துந்துபி எலும்புமலை எங்கேயிருக்கிறது? வருகிறோமென்று சொல்ல, அதுபோல் அனுமார் திரும்பி வருகிறோமென்று சொல்ல, அதுபோல் அனுமார் திரும்பி ஓடி வந்து சுக்ரீவனிடத்தில் சுவாமி சொன்னதைச் சொல்ல அப்படியே நல்லதென்று மனமொப்பிச்சுக்ரீவன் வானரப்படைகளோடு வந்து சுவாமியைத் தரிசித்துப் பாதத்தில் விழுந்து நமஸ்காரம் பண்ணி நின்றான்.

விருத்தம்.

மற்றினி யுரைப்ப தென்னே வானிடை
மண்ணி னின்னைச்
செற்றவ ரென்னைச் செற்றார் தீயரே
யெனினு முன்னோ
டுற்றவ ரெனக்கு முற்றா ருன்கிளை
யெனதென் காதற்
சுற்றமுன் சுற்ற நீயே யின்னுயிர்த்
துணைவ னென்றான்.

## துந்துபிப் படலம்.

அப்போது சுவாமி சிரக்கம்பம்பண்ணி, வாருங்களென்று கிருபை பண்ணினர். அப்போது எல்லோரும் சுவாமியை யழைத்துக் கொண்டுபோய்த் துந்துபி எனும்புமலையைக் காட்டினர்கள். அதைச் சுற்றி நாலு புறமும் பார்த்து வந்து இப்படியுள்ள தேகம் படைத்தவருமுண்டோவென்று சுவாமி ஆச்சரியப்பட்டுத்தம்பி இலட்சுமண! இந்த மலையை நீ அசைத்துப்பாரென்றார்.

### விருத்தம்.

கேட்டன னமல னுங்கிளந்த வாறெலாம்
வாட்டொழி லிளவலே யிதனை மைந்தநீ
ஓட்டென வவன்கழல் விரலி னுந்தினன்
மீட்டது விரிஞ்சனு டுற்று மீண்டதே.

### வசனம்.

உடனே இலட்சுமணர் அந்த மலையை இடது கால் பெரு விரலாலே எற்றினவுடனே ஆகாயத்திற் கிளம்பிப் பூமியில் விழுந்து துகளாய் நொறுங்கிப் போய்விட்டது, அப்பொழுது இலட்சுமணர் சுக்ரீவனைப்பார்த்து இதுதானோமலை? இன்னுமுண்டோவென்றுகேட்டார். அப்போது சுக்ரீவன் அனுமார் முதலாகிய வானரச்சேனைகளெல்லாம் பயந்து, நடுநடுங்கிச் சுவாமியினுடைய பாதத்தில் நமஸ்கரித்து, இவர்கள் மனிதரல்ல ஆதிமூலமாகிய பரப்பிரமவஸ்துவே இந்தருபங் கொண்டு வந்திருக்கிறதென்று ஒருவர்க்கொருவர் பேசிக் கொண்டார்கள்.

பின் சுக்ரீவன் அனுமானைப் பார்த்து இன்னுமொரு சந்தேகமிருக்கிறது, அதையும் நிவர்த்தி செய்தால் பின்னில்லையென்று சொல்ல, அனுமான் அதை

யும் சொல்வோமென்று சுவாமி யிடம் விண்ணப்பித்தார். சுவாமி நல்லதென்றார். யாவரும்மராமரத்தினண்டை வந்தார்கள்.

## மராமரப் படலம்.

வந்து சேர்ந்ததும் ஸ்ரீராமர் அந்த மராமரத்தைப் பார்த்து இப்படியும் உலகத்திலே ஒரு மரமுண்டோ வென்று அதிசயித்துக் கேட்கிற போது, அனுமார் இந்த மராமரம் பத்து யோசனை பரப்புள்ளது, ஆகாயம்வரை வளர்ந்து அண்டமுகட்டிலுள்ள துகள்களைக் கிளைகள் துடைக்கின்றது, வேரானது நாகலோகம் வரை ஊன்றியிருக்கிறது. என்று சொல்லச் சுவாமிகேட்டு மகிழ்ந்து, தம்பியுடைய வல்லமையைத் துந்துபி எலும்பு மலையினாலறிந்தார்கள், இனி நம்முடைய பராக்கிரமஞ் சற்றே காண்பிக்க வேண்டுமென்று எண்ணி, இலட்சுமணர் தோளிலே மாட்டி யிருக்கிற தன் வில்லையும் பாணத்தையும் வாங்கி, வல்லை வளைத்துச் சிறு நாணொலி காட்டினார். அந்தச் சத்தம் மேகங்கள் ஏழும் ஒன்றாய்க் கூடி முழங்கினது போல விருந்தது. அப்பொழுது சமீபத்திலின்ற வானரச் சேனைகளெல்லாம் பயந்தன. இலட்சுமணர் பயத்தை மாற்றித் தேறுதல் சொல்லி நிறுத்தினார்.

### விருத்தம்.

எய்தல் காண்டுங்கொ லின்னமென் றரிதின்வந் தெய்—[திப்
பொய்யின் மாருதி முதலினோர் புகழ்வுறும் பொழுதில்
மெய்கொள் வார்சிலை நாணினை முறையுற வாங்கி
வெய்ய வாளியை யாளுடை வில்லியும் விட்டான்.

ஏழு மாமர முருவிக்கீ ழுலகமென் றிசைக்கும்
ஏழு மூடுபுக் குருவிப்பின் னுடனடுத் தியன்ற
ஏழி லாமையான் மீண்டதவ் விராகவன் பகழி
ஏழு கண்டபி னுருவுமா லொழிவதன் றின்னும்.

எழு வேலையு முலகமே லுயர்ந்தன வேழும்
எழு குன்றமு மிருடிக ளெழுவரும் புரவி
எழு மங்கைய ரெழுவரு நடுங்கின வென்ப
எழு பெற்றதோ விக்கணைக் கிலக்கமென் றெண்ணி

வசனம்.

பின் மரத்தை நோக்கிப் பாணத்தை விட்டார். பாணமானது அந்த ஏழு மராமரத்தையும் ஊடுருவிப் போய், ஆகாயக்கங்கையிற் றீர்த்தமாடி அம்பறுத் தூணியில் வந்து சேர்ந்தது. அப்பொழுது சுக்ரீவன், அனுமார், நீலன் முதலிய யாவர்களும் ஸ்ரீ இராமபிரானை அநேக தோத்திரஞ் செய்து வணங்கி, மனத்தின் சந்தேகத்தீர்ந்து சுவாமியுடன் களங்கமில்லாமற் பேசிக் கூட்டி வந்து ஓராசன மளித்து வீற்றிருக்கச் செய்து உபசரணை செய்தார்கள்.

ஆபரணங் காணல்.

அப்பால் முன்னே எடுத்து வைத்திருந்த சீதை திருவாபரண முடிப்பைக் கொண்டு வந்து சுவாமி முன்னே வைத்தார்கள். அப்போது சுவாமிசுக்ரீவனைப் பார்த்து இது என்ன வென்று கேட்டார். அதற்குச் சுக்ரீவன், சுவாமி! நாங்களிருக்கிற மலைக்குகை முன்னே யாரோ போட்டுப் போனார்கள். அவர்களைத் தெரியவராது, இது பெண்கள் பூண்டு கொள்ளுகிற ஆபரணம் போலிருக்கிற தென்று சொல்ல; சுவாமியதைப்பார்த்து தன் தேவியின் ஆபரண மென்றறிந்து கண்ணிலொற்றித் துக்கமடைந்தார். அப்பொழுது இலட்சுமணரும் துக்க மடைந்தார். சுக்ரீவன் முதலாகியவர்களும்மெத்தமனது நொந்து, இந்த வுடமையை நாம் அறியாமலெடுத்துக் கொடுத்தோமென்று கிலேசப் பட்டார்கள். பின் சுக்ரீவன் சுவாமி! ஒன்றுக்கும் யோசனை பண்ண

வேண்டாம் தங்களனுக்கிரகம் கொண்டு ஊழியம் பண்ண அடியேங்களிருக்கிறோம். என்று தேறுதல் சொல்லி இலட்சுமணரையுந் தேற்றினார்கள். அனுமார் அந்த ஆபரணங்களை இங்கே வைக்கலாகா தென்று ஓரிடத்திற் பதனமாக வைத்தார்.

## வாலி வதம்.

அப்பால் சுக்ரீவன் வந்து சுவாமி! மேல் நடக்க வேண்டிய காரியத்திற்கு உத்திரவாகவேண்டுமென்று கேட்டான். அப்போது சுவாமி, வாலியானவன் உனக்குத்தமைய னல்லவோ, நீ அறியாம லொரு காரியம் நடத்தினாலும், அதற்குத் தக்க புத்தி சொல்ல வேணுமன்றித் தம்பி பெண்சாதி யென்றும், பாராமல், சிறைபிடித்துக் கொண்டானே, அவன் நீதிமானல்ல, அவனைச் சம்மாரஞ் செய்து, உன் மனைவியை மீட்டிக், கிட்கிந்தைப் பட்டணத்தையும் பட்டங்கட்டிவைக்குறோம் நீ முன்னமே போய் அவனைப் போருக்குக் கூப்பிடுவென்றார். சுக்ரீவன் சொல்லுவான் சுவாமி! அவனோ மகாபலவான் பாற்கடல் கடையும்போது, தேவர்களெல்லாம் ஒரு புறமும், தான் ஒரு புறமுமாக நின்று கடைந்தான். ஆனதால் நான் அவனுடன் எதிர்த்துப் போர்புரிய மாட்டேன். எதிர்த்தவன் பலத்தில் பாதி யவனுக்குப்போகும். சுவாமி! என்பேரிற் கிருபைகூர்ந்து அவனை யெய்து அடியேனை எப்படியுங் காப்பாற்ற வேண்டு மென்று சொல்லிச் சுவாமி யிடம் விடைபெற்றுக் கொண்டு சுக்ரீவன் புறப்பட்டான்.

புறப்பட்டுவாலியிருக்கிற இடத்திற் போய் நின்று புஜங்களைத் தட்டிக் கர்ச்சித்து அடா வாலி வாடா! நீயா என்மனைவியைச் சிறைபிடிப்பவன்? நல்லசேவக

ஞனல் வெளியே புறப்படடா வென்று அட்டகாசம் பண்ணினன். அந்த ஆரவாரம் வாலி கேட்டு ஓகோ! இவ்வளவு பராக்கிரமசாலி யாகினையோ? இப்படியல்ல வோ வந்து எதிர்க்க வேண்டுமென்று, ஆக்ரமித்துப் புலி பாய்ந்ததுபோல் சுக்ரீவன் மீது பாய்ந்து, கட்டிப் பிடித்து இருவரும் காலோடு கால்கள், கையோடு கை கள், வாலோடு வால்கள் பின்னி, ஒருவரை யொருவர் பிடரியிலே கடித்துக் கொண்டு, நிலமதிர, மலையதிர, விழுந்து புரண்டு பட்டண மெல்லாம் ஐயோ வென்று அபயமிட ஒருவரையொருவர் குத்திக்கொண்டும்,நெஞ் சிலே யறைந்து கொண்டும் பற்களை நெறு நெறு வெனக்கடித்துச் சூறுவளிபோ லிருவருஞ்சுற்றுவதைச் சுவாமி பார்த்து, இரண்டு பேர் முகமும் ஒரே முகமா யிருந்தபடியால் குறிப்புத் தெரியாமற் றிகைத்து நின் ருர். அப்பொழுது சுக்ரீவனை வாலி நிலத்திலேவீழ்த்தி அடே என்னுடன் பிறந்தபடியால் உன்னை யின்று உயி ரோடு விட்டேன் ஓடிப்பிழைத்துப்போ வென்று விரட் டிவிட்டான்.

விருத்தம்.

மலைந்த போதினை ந் திரவிசே யையன்மா டணுகி
உலைந்த சிந்தையோ டுணங்கினன் வணங்கிட வுள்ளம்
குலைந்திடேலுமை வேற்றுமைதெரிந்திலங் கொடிப்பூ
மிலைந்துசெல்கென விடுத்தனனெதிர்த்தனன் மீட்டும்.

வசனம்.

அப்பொழுது சுக்ரீவன் வாயிலே இரத்தமோடி வரநாமிந்த இரண்டுபேரையும் நன்ருய்நம்பிவந்தோ மென்று அழுதுக்கொண்டு சுவாமியண்டை வந்தான். சுவாமி பார்த்துக் கிலேசப்பட்டு, உங்களிரண்டு பேர் முகமும் ஒரே முகமாயிருந்தபடியால், எனக்கு அடை யாளந் தெரியவில்லை; ஆனதால் நான் சந்தேகமா

யிருந்து விட்டேன். நீ யொன்றுக்கும் வருத்தப்பட வேண்டாமென்று தன்கரத்தினல் சுக்ரீவன் உடம்பைத் தடவினர், உடனே காயங்கள் ஆறி உடம்பு வலியுந் தீர்ந்து சுகமானுன். பின் சுக்ரீவன் சுவாமியைப் பார்த்துச் சுவாமி! இனிமேல் நடக்கவேண்டிய தென்ன வென்று கேட்டான். அப்போது சுவாமிஇனியோசனை யென்ன! நாளை ஒரு மாலையை நீ அடையாளமாகக் கழுத்திலணிந்துகொண்டு, அவனுடன் மல் யுத்தம் செய், அந்நேரம் நான் அந்த வாலியைச் சம்மாரம் பண்ணுகிறேனென்றார்.

அப்படியே நல்லதென்று மறுநாள் சுக்ரீவன் ஒரு மாலையை யணிந்துகொண்டு வாலியிடஞ் சென்று அடா வாலி வாடா! வெல்வதுந் தோற்பதும் விதிவசமேயல்லாமல் வேறல்ல, நீ யல்லவோ நேற்றுவெற்றி கொண்டாய், இன்றைக்கு என்திராணியைப்பார், வெளியேபுறப்படடாவென்று அதட்டி அட்டகாசம் பண்ணினன்; அதை வாலி கேட்டு நகைத்து, இவனையமலோகத்துக் கனுப்பவேணுமென்று ஆக்கிரமித்து, வெளியிலே புறப்படுகிற போது வாலியின் மனைவி தாரையானவள் குறுக்கே மறித்துக்கொண்டு நீர் அவனுடனே போருக்குப் போகவேண்டாம். அவனுக்கு உதவியாக இரண்டு பலவான்கள் வந்திருக்கிறார்களாம், நானும் இரவு பொல்லாத கனவு கண்டேன் ஆனதால் நீர் போகவேண்டாமென்று தடை செய்தாள். அப்பொழுதுவாலியானவன், அவள் மறித்ததையுந் தட்டி விட்டு இந்தப் பயலையும், இவனுக்கு உபபல்மாய்வந்த இரண்டுமனிதரையும், உள்ளங்கையில் வைத்துக்கசக்கி விடுகிறேன் நீ யொன்றுக்கும் யோசிக்க வேண்டாம். இனியென் திராணியைப் பார் என்று கோபமாய் வெளியில் வந்தான்.

விருத்தம்.

எடுத்துப் பாரிடை யெற்றுவாம் பற்றியென் றிளவல்
கடித்த லத்தினுங் கழுத்தினுந் தன்னிரு கரங்கள்
மடுத்து மீக்கொண்ட வாலிமேற் கோலொன்றுவாங்கித்
தொடுத்து நாணொடு தோளுறத் திராகவன் றுரந்தான்,

வசனம்.

வந்தவன் சுக்ரீவன் மேற்பாய்ந்துகட்டிச்சேர்ந்துநிலத்திலே வீழ்த்திச் சுக்ரீவன் பேரிலேறிக்கொண்டுநெஞ்சிலே யறைகிறதற்குக்கையையோங்குகிறபோது ஸ்ரீ இராமன் மறைவிலிருந்து பாணத்தை வாலிபேரிற்றொடுத்தார். அந்தப் பாணம் மார்பிற் பட்டுருவிப் பின்போகுமுன்னே, அந்தப் பாணத்தைக் கையிலே பிடித்துக் கொண்டு, இவன் முன்னே யிழுக்கப் பாணம் உள்ளேயிழுக்க இப்படி வாலியும் பாணமும் போராடும்போதுசுக்ரீவன் வாலியைப்புரட்டித் தள்ளிவிட்டுச்சுவாமியினிடம் வந்து சரணம் பண்ணி, நின்றான். அப்பால் விசையுடைய பாணத்தை வாலி, முதுகிலே உருவவொட்டாமற் கையிலே பிடித்து நிறுத்திக் கொண்டு இதுயாருடைய பாணமென்று வாசிக்கிறான்.

விருத்தம்.

மும்மைசா லுலகுக்கெல்லா மூலமந்
திரத்தை முற்றும்
தம்மையோர் தமக்கு நல்குந் தனிப்பெரும்
பதத்தைத் தானே
இம்மையே யெழுமை நோய்க்கு மருந்தினை
இராமனென்னும்
செம்மைசேர் நாமந் தன்னைக் கண்களிற்
றெரியக் கண்டான்,

ஷை

கண்ணுற்றான் வாலி நீலக் கார்முகில் கமலம் பூத்து
மண்ணுற்று வரிவில் லேற்றி வருவதே போலுமாலைப்
புண்ணுற்ற தனைய சோரிப் பொறியொடும் பொடிப்ப நோக்கி
எண்ணுற்றா யென்செய் தாயென் றேசுவா னியம்பலுற்றான்.

வசனம்.

வாசித்துப் பார்க்கும் போது இராம னென்ற இரண்டெழுத்தையுங் கண்டான், மறைவிலிருக்கிற இராமனையுங் கண்டான், இராமனைப் பார்த்து வாலி சொல்லுவான். அவனாடா! இராமனென்கிற சேவகன்? நல்லசேவகனானால், ஒளியம்பு வைத்து எய்யலாமோ? சுத்த வீரனுக்கு லட்சணமாகுமோ? சூரியகுல அரசனா யிருந்தும், மனுநீதி மன்னனாகிய தசரதன் வயிற்றிற் பிறந்தும், மனுநீதி உன்னிடத்திலில்லையே, நானென்னகுற்றஞ் செய்தேன்? மனுகுலத்தவனென்று உன்னைக் கேள்வியுற்றிருக்கிறேன் அப்படிக்கிருக்க இப்போது பாவத் தொழிற் செய்தாயே யென்று கேட்டான்.

அப்போது சுவாமி வாலியைப்பார்த்து நீபிலத் துவாரத்தில் மாயாவதியைத் துடர்ந்து போய் அநேக நாள்வராதபடியால் அந்த மாயாவதி உன்னைக்கொன்றுவிட்டுத்தம்பியான தன்னையும் வந்துகொல்லுவானென்று அச்சமுற்றுச் சுக்ரீவன் பிலத்துவாரத்தை யடைத்ததற்கு, அவனைத் துரத்தி விட்டு அவன் மனைவியையும் சிறைபிடித்துக் கொண்ட தென்ன வென்று வினவ, வாலி சொல்லுகிறான். நாங்கள் குரங்கின் குலமல்லவா, எங்கள் குலவண்மை போல் நான் செய்தாலுனக்கென்ன ஆனால் சாஸ்திர மெல்லாம் அறிந்த நீ

விருத்தம்.

அரக்கரோ ரழிவு செய்து கழிவரே லதற்கு வேறோர்
குரக்கினத்தரசைக் கொல்லமனுநெறி கூறிற்றுண்டோ
இரக்கமெங் குகுத்தாயென்பா லெப்பிழைகண்டாயப்பா
பரக்கழி யிதுநீ பூண்டாற் புகழையார் பரிக்கற்பாலார்.

வசனம்.

உன்னுடைய தேவியைக் களவிலே கொண்டு போன இராவணனைக் கொல்லாமல் ஒரு வழியும் செல்லாத குரங்கைக் கொல்லும்படி எந்தச் சாஸ்த்திரத்திற் சொல்லி யிருக்கிறது? ஐயோ! நீ இப்படி மோசம் பண்ணலாமோ? சிங்கத்தைத் துணை கொண்டு உன்னுடையகாரியத்தை முடித்துக் கொள்ளாமல், நரியைத்துணை கொண்டு இப்படிச் சதி செய்தாயே! என்னை நட்புக் கொண்டிருப்பாயே யானல், அந்த இலங்கையை வேரோடு பெயர்த்துக்கொண்டு வந்து உன் முன்னே வைப்பேன் அதை விட்டு ஒன்று மறியாத சுக்ரீவனைத் துணைகொண்டு என்னை வதைசெய்யத் துணிந்தாயே! எல்லோரையும்சமமாகப்பாவியாமல், ஒருதலைப்பட்சமா யிருந்தாயே இது உலகு ஒப்புமா? உனக்கு ஜீவகாருண்யமென்பதில்லையா? நடுநிலைமை தவருத நீயே யிப்படிச் செய்தால் மற்றவரைக் குற்றஞ்செய்தாயென்றுதண்டிக்கலாமோ?

விருத்தம்.

கோவியற்றரும முங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுத வொண்ணவுருவத்தா யுடைமையன்றே
ஆவியைச்சனகன் பெற்ற வன்னத்தை யமிழ்தின்வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலுஞ்—

செய்கை.

வசனம்.

இராமபத்திரா! சூரியவம்மிசத்தி லுதித்த முன்னுள்ள அரசர்களைப் பார்க்கிலும், எழுத வொண்ணு வடிவத்தையுடைய ராகவா! நீ சகல சாஸ்திர பண்டிதனுய்ப், பாவபுண்ணியம், கீர்த்தி அபகீர்த்தி என்றபேதாபேத மறிந்திருக்க, இப்படி அபவாதம் எதனுற் செய்தாயென்று யோசிக்கு மிடத்தில் ஆவி யென்று சொல்லப்பட்ட பிராண நாயகியானவளும், அன்னத்தைப் பின்னடையச் செய்யும் நடையுடையவளும், சனகராஜன் அருமையாய் வளர்த்த புத்திரியும், அமுதத்தொடு பிறந்த மகாலட்சுமி சனகன் வேள்வியி லுற்பவித்து வந்த சீதாதேவியைப் பிரிந்தபடியால் உன்னுடைய சித்தம் வேறுபாடடைந்து. இப்படி அநீதியாக ஒரு விருட்சத்தின் மறைவிலிருந்து ஒளியம்பு தொடுத்து வதைக்கலாமோ என்று கேட்கும் போது மறுஉத்தரஞ் சொல்லாமல் சுவாமி நிற்க இலட்சுமணர் சொல்லுகிறார்.

விருத்தம்.

முன்புநின் றம்பிவந்து சரண்புக முறையி லோயைத்
தென்புலத் துய்ப்ப னென்று செப்பினன் செருவினீயும்
அன்பினை யுயிருக் காகி யடைக்கலம் யானு மென்றி
என்பதுகருதி யண்ணன் மறைந்துநின் றெய்ததென்-
றான்.

வசனம்.

ஏ வாலியே! உன்னுடைய தம்பி சுக்ரீவன் சுவாமியிடம் அடைக்கலம் சேர்ந்து, என் தமையனுகிய வாலி என்னைப் பட்டணம் விட்டுத் துரத்தியும், என் மனைவியையும் சிறைபிடித்துக் கொண்டான் ஆனதால் அவனைக் கொன்று, என் ராச்சியத்தையும் மனைவியை

யும் எனக்களிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்ட தால், அப்படியே முடிப்போமென்று வாக்குத் தத்தஞ் செய்தார். அதற்காக ஏற்று உன்னெதிர் நின்றுபொருதி னுல் நீயும் ஒருவேளை சரணமாக வந்தடைந்தால் உன்னைக் கொல்லவுங் கூடாது, சுக்ரீவனுக்குக் கொடுத் தவாக்குப் பொய்யாகிவிடுமென்றெண்ணி மறைவாக நின்று எய்ததேயல்லாமல் வேறல்லவென்று சொன் னதைக் கேட்டு வாலியானவன் எப்படியிருந்தாலும் நாயகியைக் கொண்டுபோன ராட்சதனைக் கொல்லா மல் நிராயுதனு நின்ற என்னை ஒளிஅம்பு விட்டுக்கொல் லத் துணிந்தது தைரிய புருஷர்களுக்கு அழகல்ல வென்று சொன்னுன்.

அதைச் செவியுற்ற சுவாமி, முத்தொழில் செய் யப்பட்ட ஈசுரனைத் தோத்திரஞ் செய்யும் தபசிகளுக்கு இடர் செய்பவனையும், கொலை, களவு, பொய், வஞ்சனை பாதகம், துரோகம், அசத்தியம், அக்கிரமம், பிறனில் விழைதல் ஆகிய பாவங்களைச் செய்பவனை வேரோட றுத்துத் தருமத்தை நிலைநாட்ட வேண்டுமென்பதைக் கருத்துட் கொண்டே நான் வனதீட்சை பெற்று வந் தேன். நீயோ சுக்ரீவனுக்கு அதிகத் துரோகம் செய்த படியால், உன் பேரிற் பாணந் தொடுத்தேன், ஆனுல் நீயும் நல்ல சேவகன், உன்னுடம்பிற் பட்ட பாணத் தைப் பிடுங்கித் தாபசோபங்களையுந்தீர்த்து விடுகிறேன். நம்முடன் துணையாகவாவென்று சுவாமிசொல்லவாலி சொல்லுகிருன்.

இராகவா! என்பேரிற்பட்ட பாணத்தைப் பிடுங் கிவிடுவதாகச் சொன்னீரே, சந்திரனுக்கு வடுவுண் டென்று கேட்டும் பார்த்து மிருக்கிறேன், சூரியனுக்கு வடுவுண்டென்று கேட்டு மறியேன் பார்த்து மறியேன்,

அப்படிக் கொத்த சூரியவம்மிசத்திலுதித்த ஸ்ரீஇராமா! இப்போது நீஒளிந்து பாணந்தொடுத்து எய்தபோதே சூரியகுலத்திற்கும் ஒருவடுதேடிக் கொண்டாய், ஆனால் என் விதிப்பயனுக்கு நீ என்ன செய்வாய் என்று தோத்திரஞ் செய்து சுவாமி! தேவரீரை அடியேன் சரணமாகவந்தடைந்தேன், எனக்கு மேலானபதம் அருட்செய்தும், கிட்கிந்தைக்கு ராஜாவாகச்சுக்ரீவனுக்குப் பட்டங்கட்டியும் அங்கதனுக்கு இளவரசுங்கொடுத்து இரட்சிக்கவேண்டு மென்று இரண்டு பேரையும் பிடித்து, இராமபிரான் கையிற் கொடுத்து வாலி கையாற் பிடித்திருந்த பாணத்தைவிட்டுக்கொண்டான். உடனேஇராமபாணம் அவன் மார்பையும் முதுவையும் பிளந்து கொண்டு பெரும்புறக் கடலிற் றீர்த்தமாடி அம்பருத்தூணியில் வந்து புகுந்தது. வாலியுயிர் மண்ணுலகு விட்டு விண்ணுலகம் சேர்ந்தது. அது விஷயம் வாலி பெண்சாதி தாரை கேட்டு ஓடி வந்து தன் கணவன் பேரில் விழுந்தழுதாள். அப்போது சுக்ரீவன் அழுதுக் கொண்டு சுவாமி கிட்ட நின்றான். சுவாமி சுக்ரீவனைப் பார்த்து வாலியை யெடுத்து அடக்கஞ்செய்து, அதற்குண்டான கிரியைகளுஞ் செய்து முடித்துவாவென்றனுப்பினர்.

அப்படியே சுக்ரீவன் வாலிபேரில் வீழ்ந்தழுது துக்கப்பட்டு எடுத்தடக்கஞ் செய்து, மற்ற கிரியைகளும் முடித்துச் சுக்ரீவனும் அங்கதனும் சாமியிடம் வந்து சாஷ்டாங்கமாகத் தண்டஞ் சமர்ப்பித்து நின்றார்கள்.

### சுக்ரீவன் பட்டாபிஷேகம்.

அதன் பிறகு இளைய பெருமாளைப் பார்த்துத், தம்பி! சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து, அங்கத

னுக்கு இளவரசுப் பட்டமுங் கட்டிவாவென்றனுப்பிப் பின்னும், சுக்ரீவனைப் பார்த்துக் கேளாய் சுக்ரீவா! நீ பட்டாபிஷேகஞ் செய்து கொண்டு இந்தச் சரற்காலம் செல்லும் வரையில் உன்னுடைய பட்டணத்திலிருந்து அப்பால் வானரச் சேனைகளையு மழைத்துக் கொண்டு இவ்விடம் வாவென்று அனுப்பினார்.

அப்படியே சுவாமியிட்ட கட்டளைப்படி நடக்கச்சித்தமா யிருக்குறோமென்று சுக்ரீவன், அனுமார், அங்கதன் மற்ற பேர்களும் சுவாமியைச் சரணமடைந்து இலட்சுமணரை யழைத்துக் கொண்டு கிட்கிந்தைப் பட்டணம் போய்ச் சேர்ந்து, சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகமுஞ்சூட்டி, அங்கதனுக்கு இளவரசுப் பட்டமுங் கட்டிப், பட்டணப்பிரவேசம் வந்து, சுக்ரீவன், அங்கதன், அனுமார் மற்ற சேனைகளும் பட்டணத்தி லிருக்கச்செய்து இலட்சுமணர் சுவாமி யிடம் வந்து நமஸ்கரித்து நின்றார்.

## சரற் காலம்.

இப்படி யிருக்கிறபோது சரற்காலம்வந்து நான்குமாதம்வரையிலும் சுவாமி மன்மதபாணத்தால் மனம் நைந்து, பிராட்டியாரைப் பிரிந்த சோபத்தினாலும், மிகவும்கவலையடைய அப்போது இலட்சுமணர் வேண்டிய தேறுதல் சொல்லித் தேற்றிச் சந்தோஷமா யிருந்தார்கள். இப்படியாகச் சரற்காலமுங் கழிந்தும் சுக்ரீவன் சுவாமியிடம் வராதது கண்டு இலட்சுமணரைப் பார்த்துத் தம்பி! சரற்காலமும் போய் விட்டது, இன்னும் சுக்ரீவன் நம்மிடம் வராமல் அவன் அரசாட்சியின் பேரிலும், ஐசுவரியத்தின் பேரிலும், மயக்கங் கொண்டு, நம்மைச் சற்றும் நினையாமல் திரிகின்றான் போலும் ஆனதால் நீ கிட்கிந்தைக்குப் போய்ச் சுக்ரீ

வனைக் கண்டு இதுவரை நீ நம்மிடம் வராதகாரண மென்னவென்று கேட்டு.

விருத்தம்.

நஞ்ச மன்னவ ரைநலிந் தாலது
வஞ்ச மன்று மனுவழக் காதலான்
அஞ்சி லைம்பதி லொன்றறி யாதவன்
நெஞ்சி னின்று நிலாவ நிறுத்துவாய்.

வசனம்.

மனுசாஸ்திரப்படி விஷத்துக்குச் சமானமானவர்களைக் கொன்றால் அது பாபச் செய்கை யாகாது. ஆனதால் வாலியைக் கொன்ற அம்பு பிழைபோக வில்லை நம்மிடத்தி லிருக்கிற தென்று அவன் நன்றாயறியும்படி அறிவுறுத்தி வாவென்று அனுப்பினார்.

கிட்கிந்தைப் படலம்.

அவ்வுரையைக் கேட்ட இலட்சுமணர் அதிகோபத்துடன் புறப்பட்டு வருகிற வேகத்தைக் கண்டு, வானரப்படைகளெல்லாம் பயந்து மலைகளைக்கொண்டு வந்து, கோட்டை வாசலை யடைத்துக் கொண்டு நின்றார்கள். அப்பொழுது இலட்சுமணர் வந்து பார்த்து, அப்படியடைத்திருந்த மலைகளை யெல்லாம் காலினாலெற்றிவிட்டு உள்ளேபோகிறபோது, வானரப்படைகளெல்லாம் பார்த்துப் பயந்தோடி மலைக் குகைக்குள் ஒளிந்து கொண்டார்கள். அதுகண்டு அங்கதன் பதறியெழுந்து, தன் தாயாரிடம் போய்த் தண்டஞ்செய்து, அம்மா! இளையபெருமாள் அதிகோபத்துடன் வருகிறார், என்னகேடு வருமோ தெரியாது! சுக்ரீவன் நித்திரையி லிருப்பதால், நான் போய் அவரை எழுப்பி அழைத்து வருகிறேன் அதற்கு முன்னே, நீயும் மற்றவர்களும் போய் இலட்சுமணரைக் கண்டு, நமஸ்காரஞ்

செய்து சமாதானஞ் செய்யுங்களென்று சொல்லியனுப்பிவிட்டு அங்கதன், சுக்ரீவன் நித்திரைசெய்யும் பள்ளியறையை நோக்கிச் சென்றான்.

கோபங்கொண்டு வருகிற இலட்சுமணர் முன்போய் நின்ற தாரையைக் கண்ணுற்றுப் பூமியையப் பார்த்துக்கொண்டு நம்முடைய தாய்மார்களும் இப்படித்தானே அமங்கலியாக இருப்பார்களென்று எண்ணிக்கொண்டு கோபந்தணிந்து வருகிறபோது; முன்சென்ற அங்கதன், அநுமார் மற்றவரும் சுக்ரீவனண்டைசென்று, சுவாமி! இலட்சுமணர் மிகுகோபத்துடன் வருகிறார், ஆகையால் தாங்கள் எழுந்தருள வேண்டுமென்று சொன்ன வார்த்தையைக் கேட்ட சுக்ரீவன், திடுக்கிட்டெழுந்து, அனுமார், அங்கதன், சாம்புவர், நீலன், நளன், அவயன், கவயன் முதலியவானரங்களையழைத்துக்கொண்டு வந்து, லட்சுமணர் பாதத்தில் விழுந்து தண்டம் பண்ணி, சுவாமி! வானரச் சைன்யங்களிருக்கும் இடங்களுக்கு ஆளனுப்பினேன், அவர்கள் வந்து சேருகிற தாமசமேயல்லாமல், அடியேன் அசாக்கிரதையாக இருக்கவில்லை. மனம்பொறுத்தருள வேண்டுமென்று வேண்டினன்.

அவ்வார்த்தையைக் கேட்டு இலட்சுமணர், உன் தமையனைக்கொன்ற பாணம், என் றமையனை விட்டுப் போகவில்லை. சரற்காலம் போய் இதுவரை நீர் சுவாமியிடம் வராததினால், உம்முடைய பேரில் சுவாமி மிகவும் கோபங் கொண்டிருக்கிறார், நீர் கொஞ்சமேனும் தாமதம் செய்யாமல் வந்து சேருமென்று சொல்லிவிட்டுச் சுவாமியிடம் வந்து, தான் போய் வந்த விஷயங்களைச் சொல்லிச் சந்தோஷமாயிருக்கிற போது இலட்சுமணர் சுவாமியைப்பார்த்து, அண்ணா! இந்தச்

சுக்ரீவன், கூடப்பிறந்த தமைய னென்றும் பாராமல், பலவானைக் கூட்டி வந்து வாலியைச் சம்மாரஞ் செய் வதற்குத், துந்துபி இராட்சத னெலும்பாலும், ஏழு மராமரத்தினாலும்சோதித்துச் சம்மாரஞ்செய்யச்சொன் னனே அப்படியான சுக்ரீவனை நட்புக் கொண்ட தெப் படி? என்று கேட்கச் சுவாமி சொல்லுவார்.

விருத்தம்

அத்தாவிது கேளென வாரியன் கூறுவானிப்
பித்தாய விலங்கி னொழுக்கினைப் பேசலாமோ
எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்களெல்லாம்
ஒத்தாற் பரதன் பெரிதுத்தம னாதலுண்டோ.

வசனம்.

வானரத்தானை காணல்.

இப்படியுள்ள நீதி யறிந்திருந்தும் நீ இந்த வார்த்தை சொல்லலாமோ வென்று சொல்லிக்கொண் டிருக்கும் போது, சுக்ரீவன், அங்கதன், அனுமார் முத லிய வானரப் படைகளுடன் வந்து தண்டம் பண்ணி நின்றார்கள். சுவாமி ஆசீர்வாதஞ் செய்து, சுக்ரீவனைப் பார்த்து உன்னுடைய படைகளை எண்ணிக் கணக்கிடு மென்றார் அப்படியே எண்ணிக் கணக்கிட்டார். அனு மார், அங்கதன், சாம்புவர், நீலன், நளன், குமுதன், ஆதித்தன், அவயன், கவயன், தூலன் முதலான இரு பத்தினாலு படைத்தலைவரும், அறுபத்தெட்டு வெள் ளம் வானரச் சேனையும், இரண்டு வெள்ளம் கரடிச் சேனையும், ஆக, எழுபது வெள்ளச் சேனை யென்று கணக்கிட்டுச் சொன்னார். அதைக் கேட்டுச் சுவாமி சந் தோஷமா யிருக்கிறபோது, சூரியன் அஸ்தகிரியடைந் தான். அன்று கழித்து மறுநாள் உதயத்தில் யாவரு மெழுந்து காலைக் கடன் முடிந்து ஒருமித்திருக்கிற போது சுக்ரீவனைப் பார்த்துச் சுவாமி சொல்லுவார்.

விருத்தம்.

பொன்னிலங்கு கணைக்கிலக்காய் மாருதிதன் புயமிருக்கப் பொலிவினோடும்
தென்னிலங்கை மாநகரிற் சீதையும்போய்ச் சிறையிருக்கச் சிலையுமேந்தி
என்னிளங்கோ னருகிருக்க என்னுயிரு முடனிருக்க இலங்கை வேந்தன்
மின்னிலங்கு முடியிருக்க வில்லேந்தி நாமிருக்க விதித்தவாறே.

வசனம்.

சீதையைத் தேடல்.

என்று இப்படித் துக்கமடைந்து, சீதாபிராட்டி இன்ன இடத்திலிருக்கிறு ளென்று, அறிந்து வருவதற்குத் தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு இந்த நான்கு திசைக்கும், அதற்கான படைத்தலைவரையும், வானரச் சேனைகளையும், அனுப்ப வேண்டுமென்று, இராமபிரானிட்ட கட்டளைப்படிச் சுக்ரீவன் அனுமாரைப்பார்த்து, வாயு புத்திரரே! சீதாபிராட்டியாரைத் தேடாமல் இன்னுந்தாமதிப்பது சரியல்ல, நீர் சகல வல்லமையுடையவராதலின் நீர் தான் பிராட்டியாரைக் காணுவீர். இராவணன் சீதாபிராட்டியாரைத் தேர்மீதெடுத்துத் தென்றிசைக்குப் போனபடியால், நீர் இலங்கைக்கே செல்ல வேண்டுமென்றும், அங்கதனையும் சாம்புவர் முதலான இரண்டு வெள்ளப் படைத்தலைவரையும் பார்த்து, நீங்கள் தென்றிசைக்குப் போய், அம்மனைக் கண்டு ஒரு மாதத் தவணைக்குள் வந்து சந்தோஷமான வார்த்தை சொல்லவேண்டும்; சுவாமியிடம் விடைபெற்றுவிரைந்துசெல்லுங்களென்று, வழி மார்க்கங்களுஞ் சொல்லியனுப்பிவிட்டு, மேற்குத் திசைக்கு விருஷபனுடன் இரண்டு வெள்ளப் படைத்தலைவர்களையும் அனுப்பி,

வடக்குத் திசைக்குச் சதவலியுடன் இரண்டு வெள்ளப் படைத்தலைவரையும், கிழக்குத் திசைக்கு வினதனுடன் இரண்டு வெள்ளப் படைத்தலைவரையும், அனுப்பித் தேடிச் சீக்கிரம் வாருங்களென்றான், அவர்களும் அப்படியே புறப்பட்டார்கள்.

பின் இராமபிரான் ஆஞ்சநேயரைப் பார்த்து, இவன் எப்படியும் சீதையைக் கண்டு வருவானென்ற எண்ணம் திண்ணமா யிருந்தபடியால் அவர் சீதையின் சகல அடையாளங்களையும் சொல்லிச், சீதாபிராட்டியிடம் சொல்லவேண்டிய சில குறிப்புகளுஞ் சொல்லி, ஆஞ்சநேயா! என்னேத்திரம் போன்ற நாயகியைக்கண்ணுற்று வந்து சொல்லுகிறது உன் கடமை. நீ சீக்கிரம் புறப்படு வென்று, திருவாழியுங் கையிற் கொடுத்து ஆசிர்வதித்து, ஜெயத்துடன்திரும்புவாயென்றுசொல்லியனுப்பினர். அனுமார் சுவாமியை நமஸ்கரித்து விடைபெற்றுக் கொண்டு, அங்கதன் மற்ற படைத்தலைவரையும் அழைத்துத் தென்றிசையை நோக்கி நடந்தார்கள்

வழிசேல் படலம்.

அப்படியே அதிக விரைவாகச்சென்று அந்தத் திசைகளிற் றேடி, விந்தியகிரி, நருமதையாறு, இமயகிரி முதலிய இடங்களிலெல்லாந் தேடியும் அம்மனைக் காணமல், மற்றும் வனங்கள் மலைகளிலுந்தேடிக் காணது சஞ்சல முற்று, நாள் ஒன்றுக்கு நாற்பதிங்காதம் அறுபதிங்காதம் வரை சென்றுங் காணமல் நடக்கிறபோது, ஒரு மலைச்சாரிபில் பிலத்துவார மொன்றிருந்தது. அதைக்கண்டவுடனே நாமிந்தப் பிலத்துவாரத்திலுட்புகுந்து, அம்மையாரைப் பார்க்க வேண்டுமென்றுபோகிறபோது, அங்கே சூரிய பிரபை யில்லாமல்

இருளாயிருந்தபடியால் வழிதெரியாமல், யாவருங்கவலைப் படுகிறபோது, அனுமார் அஞ்சாதீர்களென்று இரண்டுகைகளினாலும் படைத்தலைவர்களை அணைத்துக் கொண்டு, வாலை முன்னாலே விட்டுத் தடவிப் பார்த்துச் செல்லும்போது, அங்கேயொரு கோட்டையிருக்கக்கண்டார்கள். அவ்விடம் சுற்றிப் பார்க்கிறபோது, அக்கோட்டை மத்தியில், ஒரு பெண் தவஞ் செய்து கொண்டிருந்தாள். மற்ற ஜீவஜெந்துக்கள் அவ்விடமில்லை. அவளைக் கண்ட மாத்திரத்தில் அங்கதன் சாம்புவர், மற்ற படைத்தலைவரையும் ஒருபுறமாக இருக்கச் செய்து, அனுமார் அந்தப் பெண்ணிடஞ் செல்லுகிற போது, அம்மாது தவஞ்செய்து கொண்டிருந்தனள். அது கண்டு, நம்முடைய மாதாவாகிய பிராட்டியாரை வஞ்சமனமுடைய இராவணன் இவிடத்திற் கொண்டு வந்தல்லவோமறைத்து வைத்திருக்கிறனென்று, பின்னும் ஐயமறக் கண்ணுற்றுச் சுவாமி அம்மனுக்குச் சொன்ன அடையாளங்களி லொன்றேனும் காணாதபடியால், கற்பினுக்குரிய மாதா வல்ல; இவள் யாரென விசாரிப்போமென்று, அப்பெண்ணின் சமீபத்தினின்று நீர் யாரம்மா வென்று கேட்க, அந்தச்சத்தங் கேட்டுப் பெண் தவநிலை விட்டு விழித்துப் பார்த்து நீர்யார்? எவிடம் வந்தீர்? இங்குற்ற காரணம் யாது? சொல்ல வேண்டுமென்று, ஆஞ்சநேயரை நமஸ்காரஞ்செய்து வணங்கிக் கேட்டாள். அப்போது அனுமார் தன்னுடைய வரலாற்றையும், அங்கு சென்ற விஷயத்தையுஞ் சொல்லக் கேட்ட அந்தப் பெண் மனமகிழ்ந்து இன்றல்லவோ என்சிறை நீங்கினது. நான்தெய்வப்பெண், என்னையொரு இராக்கத னெடுத்து வந்து, இந்தப்பட்டணத்தில் வேறு ஜீவன்களொன்றேனு மில்லாமல்

என்னைத் தனியே வைத்திருக்கிறான். நான் செய்த தவப்பயனல்லவோ உம்மைக் கொண்டு வந்து விட்டது. ஆனால் நீர் சீதையை எங்குந் தேடவேண்டிய தில்லை, தெற்கே இலங்கை நகராளும் இராவணன் ஒரு பெண்ணை எடுத்து வந்து, அசோக வனத்தில், இராட்சசிகள் சூழக் காவல் வைத்திருக்கிறா னென்று, என்னைக் கொண்டுவந்த இராட்சதன் சொல்லியிருக்கிறான்.

ஆனதால் நீ ரவ்விடஞ் சென்று பார்க்க வேண்டுமென்று சொல்லி நான் இப்போதே இவ்விடம் விட்டுப்புறப்பட வேண்டும். கொஞ்சந் தாமதிப்போமாகில், இந்நகரவாசியாகிய இராட்சதன் வந்து விடுவான், அவனோ மகாபராக்கிரமசாலி, அவன் வருவதற்குள் நாம் தப்பித்துப் போக வேண்டு மென்று, அனுமாரிடம் சொல்ல, நல்லது உனக்குப் பயமுண்டானால் அப்படியே செல்லுவோம். இவிடமிருந்து வெளியே செல்ல இந்த இருட்டு வழியல்லது வேறு வழியுண்டோவென்று அனுமார் கேட்க, அம்மாது என்னை இந்தஇராட்சசனெடுத்து வந்துவைத்த நாள்முதலாய் இந்த அறையை விட்டு வெளியே வந்தவளல்ல ஆனதால் எனக்கு வழிதிசை தெரியாதென்று சொன்னாள்.

அதைக் கேட்ட ஆஞ்சநேயர் அப்படியானால் சரியென்று அந்தப் பெண்ணையும், மற்ற படைத்தலைவரையும் அழைத்துக்கொண்டு, அவிடம் விட்டுப்புறப்பட்டு அனுமார் விசுவரூபங்கொண்டு, அந்தப் பிலத்துவாரத்தை அடியோடு பெயர்த்து மேற்குச் சமுத்திரத்திலெறிந்து விட்டு அந்தவழியாக, யாவரையுங் கூட்டிக் கொண்டு வெளியிலே வந்து நின்று, அப் பெண்ணைத் தெய்வலோகத்திற் கனுப்பி வைக்க, அவள் அனுமார்

முதலிய மற்ற படைத் தலைவர்களையும் நமஸ்காரஞ் செய்து விடைபெற்றுக் கொண்டு சென்றாள்.

அனுமார்முதலியவர்கள் அவ்விடம்விட்டு அப்பால் பொதிகாசல முதலிய இடங்களில் ஒவ்வொரு நாளும் தேடி அம்மனைக் காணமல் யாவருங் கவலையுடன் மகேந்திரகிரி போய்ச் சேர்ந்தார்கள். அப்படியேஅனைவருங் கூட்டமிட்டு, நாம் அம்மனைத் தேடிப் புறப்பட்டு ஒரு மாதகாலமாகியும் அம்மனைக் கண்டோமில்லை, நாம் திரும்பிப் போய்ச் சுவாமி சன்னதியில், பிராட்டியைத் தேடியுங் காணவில்லையென்றால், அந்தட்சணமே உயிர் துறப்பார். அதுவல்லாமல் நம்முடைய சுக்ரீவமகாராஜாவும் நம்மை ஆக்கினை செய்வார் இதற்கு நாமென்ன செய்வோமென்று கவலைப்பட, அங்கதன் சொல்வான், முன் அம்மனை இராவணன் எடுத்துப் போகிற போது, அம்மன் படுகிற பரிதாபத்தைக்கண்டு சடாயுவந்து இராவணன் றேரைமறித்து, அவனுடன் யுத்தம்பண்ணி இறந்ததும், அம்மனிமித்தமல்லவோ? இப்போது நாமும் அம்மனைத் தேடி வந்துங்காணததால் நாம் யாவரும் இந்த மகேந்திரகிரியிலேறிக்கீழே விழுந்துஉயிர் துறப்பதே நல்லயோசனையென்று சொல்லக் கேட்டுப் படைத் தலைவர்கள் இதுதான் சரியென மகேந்திரகிரியினுச்சியிலேறினார்கள்.

## சம்பாதிப் படலம்.

அப்போது அந்த மலைச்சாரிலே சிறகுதீய்ந்து கிடக்கிற சடாயு தமையனை 'சம்பாதி' இவர்கள்பேசிக் கொண்ட சத்தங் கேட்டு மெல்லத் தவழ்ந்து வந்து, என்னுடைய தம்பி சடாயு இறந்து போனனென்று சொன்ன நீங்கள் யாரையா? அவனிறந்த விபரஞ் சொல்லவேண்டுமென்று மகாதுக்கத்துடன் கேட்ட

பறவைக் கரசனைப் பார்த்து, ஆஞ்சநேயர் சொல்லு கிறார்.

நாங்கள் இராமதூதர்கள் அவருடைய தேவி ஜானகியம்மனை இராவணன் களவிலே கொண்டுபோகிறபோது, அம்மனிட்ட அபயக்குரல் கேட்டுச் சடாயு வந்து, இராவணன் றேரை மறித்து, அவனுடன் யுத்தஞ் செய்து இறந்து போனுரென்று சொன்னவுடன், பறவைக் கரசன் அடித்து விழுந்து புரண்டழுது துக்கப்படுகிறதை யாவருங்கண்டு, அழுகையமர்த்தி உமக்கு இப்படிச் சிறகில்லாமல் உடம்பு கருகியிருக்கிற காரணமென்னவென்று அனுமார் கேட்டார்.

பறவைக் கரசனுகிய சம்பாதி சொல்லுவான். நானும் என் றம்பி சடாயுவும் சூரியமண்டலம் பார்க்க ஆகாயத்திற் பறந்து போகிறபோது சடாயுவுக்குச் சூரியகிரணத்தின் வெப்பந் தாக்கிப் பறக்கமாட்டாமல், நின்றதைக் கண்டு என் சிறகின் நிழலால் அவனை மறைத்துக் கொண்டு, ஆதித்தன் மண்டலத்திற்கருகிற் செல்லுகிற போது, ஆதித்தன் கிரணம் பட்டு என்னுடைய சிறகு வெந்து நான் கீழே யிப்பருவதத்தில் விழுந்தேன். அதனுல் அவன் சிறகிழக்காமலும், வேறு உபத்திரவ மில்லாமலும் பறந்தோடினுன்; அப்படிக்கான ஆபத்திற் பிழைத்த தம்பி இப்போது ஒருஇராட்சதன் கையினுல் உயிர் துறந்தானே என்றுஏங்கியழுது பின்னுஞ் சொல்லுகிறுன். எனக்குச் சிறகு முளைக்க வேண்டுமென்று சூரியபகவானை நோக்கித் தபசு பண்ணினேன். அப்போது சூரியபகவான் வந்து உனக்கு என்னவரம் வேண்டுமென்று கேட்டார். சுவாமி! எனக்கு இரண்டு சிறகு முளைக்கவேண்டுமென்று கேட்டேன். அதற்கவர் சொன்னதாவது;—

விருத்தம்.

[வள்ளல்
மண்ணிடை விழுந்த வென்னை வானிடை வயங்கு—
கண்ணிடை நோக்கி யுற்ற கருணையான் சனகன் காதற்
பெண்ணிடை யீட்டின் வந்த வானர ரிராமன் பேரை
எண்ணிடை யுற்றகாலத் திறகுபெற் றெழுதி யென்றான்.

வசனம்.

பின்னொரு காலத்தில் இந்த வழியாக இராம தூதர்கள் வருவார்கள். அவர்கள் இராம நாமம் தோத்திரஞ்செய்தால், அதைக் கேட்டவுடன் இரண்டு சிறகு முளைக்குமென்று சொல்லிப் போய்விட்டார். நான் அன்றுமுதல் உங்கள் தரிசனங் கிடைக்குங்காலம் எதிர்பார்த்திருந்தேன். இப்போது வந்தீர்கள், இன்றுடன் என் மனக்குறையும் நிவிர்த்தியானது என்று சம்பாதிமொழியக்கேட்ட அனுமார், அங்கதன், சாம்புவர் முதல் இரண்டு வெள்ளஞ் சேனைகளும் சந்தோஷித்து இராம பஜனை செய்தார்கள். அதைக் கேட்டவுடன் இரண்டு சிறகும் இரண்டாயிரங் காதவழி யகலம் வளர்ந்து ஆகாயத்தி லெழும்பிப் பறக்கிறபோது, சகல ஜீவன்கள் சஞ்சரிக்கிறதையுங் கண்ணினாற் கண்டு அனுமாரைக் கூப்பிட்டுச் சொல்லுகிறான்.

விருத்தம்.

பாகொன்றுங் குதலை யாளைப் பாதக
வரக்கன் பற்றிப்
போகின்ற பொழுதுங் கண்டேன் புக்கன
னிலங்கை புக்கு
வேகின்ற வுள்ளத் தாளை வெஞ்சிறை
யகத்து வைத்தான்
ஏகொன்றிற் காண்டிரந்தி லிருந்தன
ளிறைவி யின்னும்.

வசனம்.

ஓ அனுமாரே! அதோ தெரிகிறது இலங்கைப் பட்டணம். அப்பட்டணத்தி னுள்ளே ஒரு அசோக வனமிருக்கிறது. அவ்வன மத்தியில் ஒரு பெண் பூரணச் சந்திரோதயம் போலே வடக்கு முகமாகத் தலை கவிழ்ந்து கொண்டு, அழுதகண்ணீருட னிருக்கிறாள். ராட்சசிகளும் சுற்றிக் காவலிருக்கிறார்கள். இக்கரையிலிருந்து இலங்கை நகரத்தின்அளவு நூற்றியைம்பது யோசனை தூர மிருக்கிறது. இனிமேலுங்கள் நோக்கத்தின்படியே நடந்து கொள்ளுங்க ளென்று சொல்லி, இவர்களையுந் தோத்திரஞ் செய்து கொண்டு வடக்கே மகாமேருகிரிக்குப் பறந்து போனான்.

மகேந்திரப் படலம்.

போனபின் அனுமார் முதல்யாவர்களும் மகேந்திரகிரியி லிருந்து கொண்டு யோசனை செய்தார்கள். இந்தச் சமுத்திரம் நூற்றியைம்பது யோசனை தூரமாகியது, இக்கடலைத் தாண்டியல்லவோ இலங்கைக்குட் பிரவேசிக்க வேண்டும் இச்சமுத்திரத்தைத் தாண்டுகிற பேர் யாரென்று யோசித்துச் சாம்புவரை அனுமார் கேட்கச் சாம்புவர் சொல்லுகிறார். நான் நூறு காதவழி தான் தாண்டுவே னென்றார். அங்கதன் நான் நூற்றியைம்பது யோசனை வழியுந் தாண்டுவேன் அப்பால் திரும்பிவரச் சக்தி யில்லை யென்றான். ஏனைய படைகளும் எங்களால் சமுத்திரந் தாண்ட முடியா தென்றார்கள். அப்பால் சாம்புவர் அனுமாரை நோக்கி நீர்தான் இந்தக் கடலைத்தாண்டி, இலங்கைக்குட்சென்று பிராட்டியாரைத்தேடிக் கண்டுவர வேண்டுமென்று சொல்லி, உம்முடைய கருத்தென்ன வென்று கேட்டார்.

அப்போது ஆஞ்சநேயர் மகா சந்தோஷமாகிச் சொல்லுவார். என் தாயாகிய ஜானகியம்மனை யான் கண்டு வருவேனென்று திடம்பண்ணியல்லவோ ரெகுநாயகர் திருவாழியை என் கரந்தந்து, விசேடவார்த்தைகளுஞ் சொல்லி யனுப்பினர். ஆனதால் இராகவருடைய திருவருளினாலே யான் சென்று வருகிற வரையில் நீங்கள் கூட்டங்கலையாது, இம்மகேந்திரகிரியிற்றானே யிருங்களென்று சொல்லி ஸ்ரீஇராமமூர்த்தியைத் தோத்திரஞ் செய்து சொல்லுவார்.

கிட்கிந்தா காண்டம் முற்றிற்று.

---



ஸ்ரீ
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
கம்பநாட் டாழ்வார் திருவடிகளே சரணம்.
ஐந்தாவது

# சுந்தர காண்டம்.



## காப்பு.

அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவெனப்
பூத மைந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா
டுற்ற வீக்கம்
கலங்குவ தெவரைக்கண்டா லவரென்பர்
கைவி லேந்தி
இலங்கையிற் பொருதா ரன்றே மறைகளுக்
கிறுதி யாவர்.

## கடல்தாவு படலம்.

அனுமானனவர் குறு நகை கொண்டு என்னு லானவரை சென்று வருகிறேனென்று அங்கதன் சாம்புவர் மற்றசேனைகளிடமும் விடைபெற்று, விசுவரூபங் கொண்டு, வாலை வடக்கே நீட்டித் தெற்கு முகமாக நின்று கொண்டு, ஆகாய மூடுருவ வளர்ந்து கிரியினுச்சியினிற்கிற போது, அம்மலை நெறு நெறு வென்று சிறிது பாதாளத்தி லமிழ, ஆஞ்சநேயர் ஆகாயத்திற் கிளம்பித் தெற்கு முகமாகப் போகிறபோது இரண்டு கையும் முன்னாக இலங்கைக்கு வழிகொண்டு போக, இரண்டு காலுஞ் சமுத்திரத்தி னீரைக் கீறிக்கொண்டு போக, சிரசானது தேவலோகத்தை உரசிக் கொண்டு போக, இப்படி மகாபராக்கிரமத்துடனே ஆகாயத்தின்

வழியாக இலங்கையை நோக்கிப் போகிறபோது, நடுச் சமுத்திரத்தில் மூழ்கிக்கிடக்கிற மைநாக பருவதம் அனுமார் வருகிற வேகங்கண்டு தலை யெடுத்துப் பார்த்து, இவன் தேவனேயாகும் பரப்பிரம வஸ்துவே யென்று தோத்திரஞ் செய்து சொல்லும். ஓ அனுமாரே! நீர் இலங்கைக்கிப் போகிறதுஞ் சரியே, நீ ரிப்போது மெத்த இளைப்புடன் போகிறதா யிருக்கிறது. நீரோ மகா புண்ணியவான், உம்மை நான் கண்டு தெரிசித்த தற்கு, என் தலைமீதுற்ற வனங்களிலுண்டான கனிவர்க்கங்களைப் புசித்துச் சுனை நீரருந்தி இளைப்பாறிப்போ மென்று வேண்டிக் கொண்டது.

அப்போது அனுமார் மனமகிழ்ந்து சொல்லுவார். மைநாகபருவதமே! நான் ரெகுநாயகர் காரியமாக இலங்கைக்குப் போகிறபடியால், இப்போதுஇங்கு சுணங்குதற்கு எனக்கு அவகாசமில்லை, நான் போய்த் திரும்பி வருகிற போது, அப்படியே யிருந்து இளைப்பாறிப் போகிறேனென்று சொல்லிக்கொண்டு, அப்பால் போகிறபோது, சமுத்திரத்தின் வழியால் போக இடமில்லாதபடித் தன்னுடலினாலே தென்றிசைமறைத்துக் கொண்டு ‘அங்காரதாரை’ என்பவள் மகாமேரு போல வழியை மறித்துக் கொண்டு வடக்குமுகமாக நின்றாள். அப்படி நிற்கிறவள் வாயிலே நுழைந்து வயிறுகடை வழியாகவே சகலரும்போக வேண்டுமே யல்லாது வேறு வழியில்லை. அதை அனுமாரறிந்து அந்த் அங்காரதாரை யிடத்தில் வந்து நின்று கொண்டு கேட்கிறார்.

அடி! இலங்கைக்குப் போக வழி யெங்கேயென்றுகேட்க அதற்கவள் என்னைப் பெண்ணென்று நினையாதேஎன்னுடனெதிர்த்தால்,தேவர்களானாலும்மாண்டு

போவார்கள். தவிர என் முன்பாக எமன் வந்தாலுங் கொன்று தின்று விடுவேனென்று பின்னும் பெரிய வாயைத் திறந்து மறித்து நின்றாள். அந்த மொழியைக்கேட்ட அனுமார் அப்படியே இவள்வாயின்வழியாகச் சென்றால், சுவாமி கொடுத்த மோதிரம் குற்றமுண்டாய் விடுமென்று, ஆழியை ஆகாயத்தில் விசைகொண்டெறிந்து, அது கீழே விழுமுன், அவள் வாயிலேபுகுந்து வயிற்றைக் கிழித்துக் கொன்று வேளியே புறப்பட்டுச், சமுத்திரத்தில் ஸ்நானஞ் செய்து கணையாழியை விழுமுன் கையிலேந்தி பிடித்துக் கொண்டு விசைகொண் டெழும்பி ஆகாயவழியாகப் போய்ப் பவளமால் வரையில் குதித்து நின்றார். பொழுதும் அஸ்தமனமானது. அப்போது அனுமார் இனி நாம் இலங்கைக் கோட்டைக்குட் பிரவேசித்துச் சீதாபிராட்டியாரைத்தேட வேண்டும். ஆதித்தனுதயமானால் நம்மைக் கோட்டைக்குள் புகவிடார்கள்.

ஆனதால் இந்த இருளிலேயே கோட்டைக்குட் செல்ல வேண்டும் வாசல் வழியே சென்றால், காவலாளிகள் கண்டால் விடார்களென்று பார்க்கிற போது, இலங்கைக் காவலாகிய 'இலங்கணி' என்பவள் இரவு முழுவதும் இலங்கை எழு நூற்றுக்காத வழியுங் காற்றுடி போல் சுற்றிக் காத்துக் கொண்டு வருவாள். அவளனுமாரைக்கண்டு, அவனாரடா? கோட்டைப் பக்கம் வந்தவன்? நில்லடாவென்று அதட்டி, அட்டகாசம் செய்து, தன் கையிலிருந்த சூலாயுதத்துடன் வந்தாள். அப்போது அனுமார் அம்மே! நான் குரங்கு இந்தக் கோட்டைக் குள்ளாகக் காய் கனி பறித்துத் தின்னப் போகிறே னென்று சொன்னார். இலங்கணி, ஆமடா

குரங்கே! இந்தக் கோட்டைக் குள் யாரும் பிரவேசிக் கக்கூடாது, நீ கள்ளனே யல்லது வேறில்லை. என்று தன்கையிலிருந்த சூலாயுதத்தை அனுமார்பேரிலெறிந் தாள்.

அந்தச் சூலாயுதத்தை அனுமார் ஏந்திப்பிடித் துயானையின் பேரில் சிங்கம் பாய்ந்தாற்போல, இலங் கணி பேரிற் பாய்ந்து, அந்தச் சூலாயுதத்தினல் மார் பிலே குத்தினர். உடனே குருதிகக்கிச்சீவனை விட்டாள். மேலே போகிற சீவன் என்ன சொல்லிப் போகிறதென் ருல், இந்தஇலங்கைப்பட்டணத்தை, அளவற்றகாலங் காத்து வந்தேன். இதுவரை என்னைச் செயம் பண் ணினபேரில்லை, அப்படி யிருக்க இப்போது என்னை நீ ஜெயம் பண்ணினபடியால், இனி யுன்னைச் செயம்பண் ணுகிறபேரில்லை, இலங்கைப் பட்டணத்தையும் இன் றைக்கே உன்கையில் ஒப்புக்கொடுத்தேன் என்றுசொல் லிக் கொண்டு வைகுண்டஞ் சேர்ந்தது.

ஊர்தேடு படலம்.

அப்பால் அனுமார் கோட்டைக்குள்ளே, முதற் கோட்டையில் சீதையைத்தேடிக்காணுமல், இரண்டாங் கோட்டை மூன்ருங்கோட்டையுந்தேடி அங்குங்காணு மல், நான்காங்கோட்டை வீதியடங்கலும் பார்த்துத் தேடி அங்குங்காணுமல், ஐந்தாங் கோட்டையிலுள்ள அரண்மனை முதலிய இடங்களுந்தேடிக் காணுமல், ஆருங் கோட்டையிற் போகிறபேர்து இந்திரசித்து அரண்மனை யானைப் பந்தி, குதிரைப் பந்தி, கடைத் தெரு, மாடமாளிகை, கூடகோபுரம், உப்பரிக்கைகள், பன்னகசாலைகள், பளிங்குமண்டபங்கள், முத்துமுகப்பு, ஆசாரச் சாவடி, அலங்காரமண்டப முதலான இடங்க ளுந்தேடி அங்குங்காணுமல், அப்பால் போகிறபோது

கும்பகர்ண னரண்மனை தோன்றிற்று; அங்கு சென்று மெல்லச்சோதிக்கிறபோது கும்பகர்ணன்பள்ளிகொண்டிருக்கிற உன்னதத்தைப்பார்த்து, அதிசயித்து இந்தப் பிரமாண்ட சரீரம் எப்படி ஒரு வயிற்றிலிருந்து வெளி வந்தது? அல்லது பிரமாவின் கற்பனையோ? என்று நினைத்து அப்பால் சென்று அதிகாய னரண்மனை, கும்பன், நிகும்பன், போர்மத்தன், கலைமத்தன், வச்சிரசித்தன், அட்சய குமாரன் முதலானவர்கள் அரண்மனையுந் தேடி அங்குங் காணமல், ஏழாங் கோட்டைக்குள் பிரவேசித்தார்.

ஏழாங்கோட்டையில் இராவண னிருப்பிடமாகிய அரண்மனை வீதியிற் செல்லுகிறபோது, அங்குற்ற சிறப்புகள் சிங்காரங்களும், நாலுபுறவீதிகளும் பார்த்துக் கொண்டு மகோதர னென்ற மந்திரி அரண்மனையும், மாலியவான் அரண்மனையும், மாரீசன்மக்கள் வீடுகள் படைத்தலைவர்கள் வீடுகளும், பார்த்துக் கொண்டு விபூஷணன் அரண்மனையில் வந்து பார்க்கிறபோது அங்கு வேள்விச்சாலைகளும், மந்திரச்சாலைகளும் மற்ற இடங்களுங்கண்டு அதிசயித்து, அப்பாற்சென்று இராவணனுடைய ஆசாரச் சாவடி முன்னே வந்து பார்க்கிறபோது, அவ்வரண்மனை வாசல் முன்பாகத்தீவெட்டிகள், பகல்வத்திகள் பிடித்துக் கொண்டு, அளவற்ற, ராட்சதர்கள் எச்சரிக்கையாக விருக்கிறதையுங் கண்ணுற்று, இவைகளைத்தாண்டி அப்புறம் எப்படிப்போகிறதென்று யோசித்து, வண்டு ரூபங்கொண்டு பறந்து பலகணி வாசலிற் புகுந்து இராவண னரண்மனையிற் போய்ப் பார்த்தார்.

பார்க்கிறபோது அரண்மனை ஆயிரத் தெட்டு மாற்றுள்ள தங்கமயமாய் ரத்தினங்கள் பதித்த மாட

மாளிகை கூடகோபுரங்களிற் பார்த்தும், பரிமளவாசங்கள் பரிமளிக்க, பாரிசாத புஷ்பங்களினுல் அலங்காரஞ் செய்து, சாம்பிராணித் தூபங்கமழப் பள்ளியறை சோடித்துத் தூங்குமஞ்சத்தின் பக்கத்தில், தூண்டாமணி விளக்கெரிய, இராவணனும் வண்டோதரியும் படுத்து நித்திரை செய்கிறதை ஆஞ்சநேயர் கண்டு மெல்ல எட்டிப்பார்த்து, ஐயோ! இவன் சமீபத்தில்சயனித்திருப்பவள் யாரோ? என்றுமனதில் ஐயங்கொண்டு அவளண்டையில் வந்து பார்த்தார்.

வண்டோதரியின் லட்சணங்களைக் கண்ணுற்றுக், கொடுவாயோடிக்கிடக்கிறதைப் பார்த்து, சுவாமியானவர் அம்மனுக்குச் சொன்ன அடையாளங்களிலொன்றேனு மில்லாததினுல் மனச்சந்தேகந் தெளிந்து, இராவணன் பத்துச் சிரத்தையும் திருகிப் பிடுங்கியெறிவோ மென்று நெருங்கிப் பின்னும், இவன் சுவாமிபாணத்திற் கிலக்காகட்டு மென்று யோசித்து, இராவணனிடம் விட்டு அப்பாற் சென்று, அந்த அரண்மனை உப்பரிக்கையின் மீதிலிருந்து கொண்டு நாலு திசையும் பார்த்து, இந்தப் பட்டணம் முழுதும் தேடி அம்மனைக் காணவில்லை, இனி அம்மனை எங்கு தேடிப் பார்ப்போமென்று மனதில் மிகவுங்கவலை யுற்று, ராமஸ்மரணை செய்து ஒரு யோசனை பண்ணி இனி அசோகவனஞ் சென்று தேடுவோமென்று. அவ்விடம் விட்டு அசோகவனத்தைத்தேடிச் சென்றூர். அந்த வனத்திற் போய் ஒவ்வொரு மரங்களாக வுறிப்பார்த்தார்.

## காட்சிப்படலம்.

அப்படிப் பார்த்துக் கொண்டு வருகிறபோது, கோமதியாற்றங்கரையில், பஞ்சவடி தீரத்தில் பன்னகசாலையுடன் இராவணன் பெயர்த் தெடுத்துக் கொண்டு

போய் வைத்தபடியே அவ்வன மத்தியில் ஒரு மரத்தி ணடியில், அநேக ராட்சசிகள் காவலாகச் சூழ்ந்திருக்க அவர்களுக்கு நடுவில், வடக்கு முகமாக, கேசம் விரித்த படியே தலைகவிழ்ந்து கொண்டு, கண்ணீரருவி யோட மகா துக்கத்துடனிருக்கிற அம்மனை அனுமார் கண்டு, சுவாமி சொன்ன அடையாளங்கள் சரியாயிருக்கிறதா வென்று, ஐயமறக் கண்ணுற்றபின், இவ்வளவு அழக மைந்த என் மாதாவுக்கு, இப்படிச்சிறையிலிருக்கும்படி விதிவந்ததே யென்று கவலையடைந்து, இனி எந்த விதம் பிராட்டியாரைத் தனித்துப் பேசுவோ மென்று எண்ணிக் கொண்டிருக்கிறபோது, ஆதித்தன் அஸ்த கிரியை யடைந்தான்.

## நிந்தனைப் படலம்.

இரவு பதினறு நாழிகை யளவில் தீவெட்டி, பகல் வத்திகள் பிடித்துவர, அந்தரங்கமா யிருக்கிற வர்களிற் சிலரை யழைத்துக் கொண்டு இராவணன் புறப்பட்டுச் சீதையிடத்துள்ள மயக்கத்தால் அசோக வனத்திற்கு வந்தான். அப்போது அனுமார் கண்டு இந்த நேரத்தில் இச்சண்டாளன் இங்கு வந்தகாரணம் யாதோ? இதை நாம் அறிய வேண்டு மென்று பார்த் திருக்க, இராவணன் பிராட்டியாருக்கு முன்பாக வந்து சீதையைப் பார்த்துச் சொல்லுவான். ஏ பெண்கள் நாயகமே! ஏ சீதாங்கனி! ஏஜானகி! உன் பேரில் என் னுடைய மனஞ் சென்று அடையுங் காமம் சகிக்க முடியவில்லை. இன்னும் உன் மனமிரங்க வில்லையா? நீ என் விருப்பத்திற் கிணங்குவாயாகில், என்னுடைய ஐசுரியங்களெல்லாம் நீயேபொருந்தினவளாய், ரம்பை ஊர்வசி, மேனகை, திலோர்த்தமை மற்ற தேவஸ்திரீ களையும் உனக்குப் பணி செய்ய நியமிப்பேன். இப்படி

யுனக்குக் கிடைக்கிற பாக்கியங்களை நீ வேண்டாமென் றுவெறுப்பதழகல்ல, அந்த இரண்டு மனிதரையும் ஒரு பொருட்டாக எண்ணி, அவர்களிடம் போய்ச் சேரு ,வோமென்கிற எண்ணத்தையும் விட்டுவிடு என்று பல வாறுக வேண்டிப், பாதத்திற் றொழுதான்.

சீதாபிராட்டியார் மிகவு மனதுநொந்து, கடுஞ் சினங்கொண்டு இராவணனுக்குப் பதிலாக ஒரு துரும் பைப் பார்த்துச் சொல்லுகிறுள்.

விருத்தம்.

[சொல்லக்
மிண்டாள னரக்கனிந்த வீண்வார்த்தை சொல்லச்—
கண்டாள்சா னகியுமென்றன் காகுத்தர் சரத்தினலே
உண்டானதெல்லாந் தோற்க ஊழிவந்தடுத்ததையோ
சண்டாள வெனக்கோபித்துத் தள்ளுவாள் விள்ளு—
[வாளே.

வசனம்.

அடா இராவணத் துரும்பே! என் துற்புத்தி யால் வீணே கெட்டுப் போகிருய்? நீயே ஆயிர வேதங் கற்றவனென்றும் சொல்லுகிருய்? நீயே மகா பராக்கிர மசாலி யென்றும், விவேகி யென்றும் சொல்லிக்கொள் கிருய்? பெண்பாலாகிய என் காலில் வீழ்ந்து நமஸ்கா ரஞ் செய்கின்ருயே, நீயுமொரு வீரனு? உனக்கென்ன கௌரவமிருக்கின்றது? இராகவரை நரனென்று அவ மதிப்பாய்ச் சொல்லாதே, நீ சுத்த வீரனுனல் அவருட னெதிர்த்து யுத்தஞ் செய்தல்லவோ என்னை யெடுத்து வரவேண்டும்? அப்படியல்லாமல், ஒரு பொய் மானைக் கொண்டு வந்து காட்ட, அதை நான் பிடித்துத் தரும் படிச் சொன்ன பிரிய வசனத்திற் கிணங்கி, அவர்கள் வெளியே செல்ல, அப்பொழுது திறந்த வீட்டில் நாய் நுழைந்தது போல நுழைந்து என்னைத் திருட்டுத்

தனமாய்க் கொண்டு வந்த உனக்கு ஒரு பேச்சும், வீரத்துவமு வேண்டுமோ? என்னுயகரை மனித ரென்று சொன்னாயே, நீ அவருடன் எதிர்க்து யுத்தஞ் செய்வாயாகில், உன் பத்துத்தலையையும், நாவையுமறுத்துப் பருந்திற்கும், காகத்திற்கும் இரை யிட்டிருப்பார்.

என் கொழுந்தன் இளைய பெருமாள் மட்டும் அன்றைக்கு என்னண்டையிலிருந்தால், இப்படி யான் சிறையிலிருக்கிறவளல்ல; நீ என்னை யெடுத்து வரும்போது ஒரு கழுகானது வந்து, உன் றேரை மறித்து, உன்னுடைய பத்துச் சிரசையும், பாணங்களையும் பிடுங்கியெறிந்து மகாயுத்தம்பண்ணுகிறபோது, அது உள்ளபடியே உயிர்நிலை சொல்ல, நீ புரட்டாக உயிர் நிலை சொல்லி அந்தக் கழுகைக் கொன்று போட்டு வந்தாய் இப்படி நீ செய்கிற தொழிலெல்லாம் புரட்டுருட்டே யல்லாமல் உன்னிடத்தில் கல்விக்கேற்ற அறிவும், சத்தியமும், நல்லொழுக்கமு மில்லையே நீ மகாதிருடிடன் துரோகி, உன் சத்தம் எஜ்ன்செவியில் விழலாகாது தூரப் போடாவென்று உத்தண்டமாகச் சொன்னாள்.

அப்படிச் சொன்னவுடனே இராவணனுக்குக் கோபமுண்டாகி ஸ்திரீ லோலனாகிய என்னை இப்படி மரியாதைக் கேடாய்ச்சொன்னவளை இரண்டுதுண்டாய் வெட்டி யெறிந்து விடுகிறேனென்று எழும்போது இவையனைத்தையுங் கண்டிருந்த அனுமார் மிகுதியுங் கோபாவேசனாய், இந்த இராவணனுடைய பத்துச் சிரசையுங் கிள்ளி யெறிந்து, இலங்கைப் பட்டணத்தையும் வேரோடு பறித்துச் சமுத்திரத்திற் போட்டுவிட்டுச் சீதாபிராட்டியாரை யெடுத்துப் போய் விடுவோமென் றெண்ணி ஆக்கிரமித்துக் கையைப் பிசைந்து கொண்டிருக்கிறபோது:—

மிருத்தசினத்துடன் அம்மனை வெட்டவேண்டு மென்று எழுந்த இராவணனுக்கு அவள் மீதுற்ற ஆசையினாலே அக்கோபந் தணிந்து சீதாபிராட்டி யிடஞ்சென்று பெண்ணே! நான் அந்த இரண்டு மனி தருடன் யுத்தஞ் செய்ய அச்சமுற்றவ னல்ல, நான் கைலாயபருவத மெடுத்த புயத்தை யுடையவன் ஆத லால் எனக்கு அந்தமானிடர்கள். இலக்கல்ல, நான் அவர்களை யுத்தஞ்செய்து கொன்று விட்டால் நீயும் ஜீவனை யிழப்பாயென்று எண்ணி அப்படிப் பொய்மா ஞல் உன்னை மயக்கி அவர்களைப் பிரியும்படிச்செய்து உன்னைக் கொண்டு வந்தேன் இப்போது நீ அவர்க ளிடம் போய்ச்சேருவோமென்ற எண்ணத்தையொழித் துவிடு என்று நான் சொல்லியும் இன்னும் நீ அவர்க ளையே புகழ்ந்து பேசுகிருய்? என்னோடெதிர்ப்பவ ருல கத்தில் எவருமிலர், தேவர்களையும் நான் ஏவல்கொண் டவனென்ருல் மற்றும் என் பிரதாபஞ்சொல்ல வேண் டியதல்லவே. இன்னமுங் கொஞ்சம் மனம் பொறுப் பேன் நீ சீக்கிரம் என்னுடைய மனப்படி இணங்கா திருந்தால் அந்த இரண்டு மனிதர்களையுங் கொன்று அயோத்திக்குச் சென்று அங்குற்ற பரதன்சத்துருக்கன் முதலானவர்களையு மடித்து, மிதிலைக்குச் சென்று அங் குள்ள உன்னைச் சார்ந்தவர்களின் ஆயுளையுமொழித்து, முடிவில் உன்னுயிரையும் போக்கிவிடுகிறே னென்று அதட்டிப்பேசி விட்டு அவிடம் விட்டுச் சென்று காவ லிருந்த இராச்சத ஸ்திரீகளுக்கு முதன்மையான விபூ ஷணன் மகள் திருச்சடையை யழைத்து ஜானகிக்குப் புத்திவரும்படியாய்ச் சொல்லி எப்படியும் என் வார்த் தைக் கிணங்கச் செய்ய வேண்டு மென்று கட்டளை யிட் டான்.

அப்போது திரிசடை ஐயா! இந்த ஜானகிக்கு எவ்வளவோ வார்த்தைகள் இணக்கமாகச் சொல்லிப் பார்த்தேன் அவள் ஒரே பிடிவாதமாய்க் கட்டாயமாக இணங்கமாட்டேனென்று மறுத்துப்பேசுகிறாள். ஆகட்டும் இன்னும் என்னா லியன்றவரையில் முயற்சி செய்து பார்க்கிறேன் என்று மறுமொழி சொன்னவுடன், இராவணன் ஆனால் இன்னமும் உன்னாலான பிரயத்தனஞ் செய்து பாரென்று சொல்லித் தன் அரண்மனைக்குச் சென்றான்.

திரிச்சடை இராவணனை யனுப்பிவிட்டுச் சீதாபிராட்டி யிடம் வந்து அம்மா! இராவணன் உன் அந்தரங்கமறியாது வீணே யலைகிறான் நீ யொன்றுக்கும் யோசிக்கவேண்டாமென்று தேறுதல்சொல்லிக்கொண்டிருந்தாள். இதைக்கேட்டுச் சீதை கவலையுற் றிருக்கிறபோது, ஒரு பல்லி சொன்னதைக் கேட்டுத் திரிச்சடையினிடஞ் சொல்ல, திரிச்சடை நீ அதனால் கிஞ்சிற்றுங் கவலையடைய வேண்டாமென்று சொல்லுகிறாள்.

விருத்தம்.

காலைப் பொழுதிற் றென்றிசையிற்
கருதுங் காகக் குரனன்று
மாலைப் பொழுதிற் றென்றிசையில்
மதுரப் பல்லி வரவு சொல்லும்
சோலைத் திசையிற் குயிற்கூவுஞ்
சொன்ன படியே தொட்டெண்ணிக்
கோலந் தவிழ்த்த மணக்கோலங்
கூடு மதியங் கூடியதே.

வசனம்.

அம்மா! இந்தப் பலனுக்கு எந்த விதத்திலும் உன்னயகரிடமிருந்து ஒரு தூதுவன் வந்து சுபச்சமா

சாரம் தெரிவிப்பான் இது நன்மையே யன்றித் தின்மையல்ல தாயே! நீ ஒன்றுக்கும் மயங்க வேண்டாம். நான் நித்திரை செய்யும்போது ஒரு கனவு கண்டேன். அஃது எப்படியென்றால்:—உன்னுயக ரனுப்பிய தூதனை ஒரு குரங்கு திருவாழி கொண்டு, இந்தச் சமுத்திரந்தாண்டி வந்து, உனது கரத்திற் றந்தும் திடமான விசேட வார்த்தைகள் சொல்லவும், இந்த இலங்கை எழுநூறு யோசனைப் பரப்பும் அக்கினி வாதையாகவும் இரண்டு சிங்கம் வந்து இலங்கை யெல்லாம் இடித்து நொறுக்கவும், இராவணன்எண்ணெய்த்தலையுடன்தெற்குநோக்கிப் போகவும், பூரண கும்பமும் மற்றும் சுபகாரியங்கள் என் தகப்பன் அரண்மனையில் நடக்கவும் இப்படி அதிசயமான கனவு கண்டேன், என் கனவு பொய்யாகாது என்று சொன்னதைப்பிராட்டியார் கேட்டு அப்படியாவென் றிருந்தாள்.

அப்பொழுது இராட்சசியர் யாவரும் நித்திரை செய்தார்கள். அத்தருணம் திரிச்சடை சீதையைநோக்கிச் சொல்லுகிறாள். தாயே! இந்த இராவணன் மனச்சம்மதமில்லாத ஸ்திரீகளைப் பலாத்காரஞ் செய்தால், அவன் றலை தெறித்துப்போமென்று ஒரு ரிஷியின்சாபமுண்டு. அதனாலந்த இராவணன் கிட்டிவரப் பயப்படுவானென்று சொல்லி விட்டு அவளும் நித்திரை செய்தாள்.

## உருக்காட்டுப் படலம்.

அப்போது அனுமார் இனி நாம் பிராட்டியாரைக்காண இது தான் சமயமென்று சந்தோஷமாக இருக்கிறபோது,ஜானகியானவள் துக்கத்தினால்மிகுந்த நித்திரை செய்யாமல், அடங்காத் துயரங் கொண்டு நானெவ்வளவு காலம் இப்படிச் சிறை யிருக்கிறது!

சுவாமியும் இது வரை என்னை நினைத்துத் தேடவுமில்லை, அப்படித் தேடி வந்து ராட்சதர்களைச் சம்மாரம் பண்ணி நம்மை மீட்டினாலும், இவள் பிறன் வசப்பட்டிருந்தபடியால், தோஷமுடையவளாயிருப்பாளென்று அவருக்கு ஐயமேற்பட்டால் நாம்என்னசாட்சிகொடுத்துத் திருப்தி செய்யப் போகிறோம்? ஸ்திரீகள் எவ்வளவு கற்புடையவர்களானாலும், தன் கணவரை நீங்கித் தனிப்பட வெளியிற் சென்றால், அவர்கள் கற்பிழந்திருக்கக் கூடுமென்று உலகத்தார் சந்தேகிப்பது இயற்கை; அச் சந்தேகத்தை நிவிர்த்திக்கப் பெண்களால் முடியாது, இவைகளனைத்தும் யோசிக்குங்கால், நம் கவலை எவ்வழியிலும் நிவிர்த்தி யடைவதாகக் காணவில்லை. ஆதலால் நாம் பிராணத்தியாகஞ்செய்துகொள்வதே உத்தமமென நினைத்து, இப்பொழு திந்தராட்சிகள் நித்திரை செய்வதால் அதற்கேற்ற சமயமென்றெண்ணித் துணிவுற்று, தற்கொலைசெய்து கொள்ளும் பொருட்டு ஒரு மரத்தினிடம் போய்ச் சேர்ந்தாள்.

அவளுடைய துணிவைக்கண்ட அனுமார் ஐயோ! இராவணன் உரைத்த பழிச்சொற்களை இன்று கேட்டிருந்த நமக்கே இவ்வளவு துயரமேற்பட்டால், அன்னையாரின் கவலையைக் கேட்கவா வேணும்? நாமிதுசமையம் பிராட்டியாரிடம் சென்று சுவாமிகொடுத்த கணையாழியைக் கொடுப்போமென்று நினைத்து, மரத்தைவிட்டுக் கீழே யிறங்கிப் போய்ச் சீதா பிராட்டியார் முன்பு நின்று இராமஜெயம்! இராமஜெயம்!! என்று துதித்துப் பின்னும் அன்னையின் பாதத்தில் வீழ்ந்து நமஸ்காரஞ் செய்து, அம்மா! லோகநாயகி! புவனகாரணி! சற்றே தாமதிக்க வேண்டும், தாயே! நான் ஸ்ரீ இராமபிரானுடைய தூதன், அவருடைய ஆக்ஞையின்

படியே நான் உம்மைத்தேடி இங்குற்றேன் என்னைப் போலவே அநேகமான வானர வீரர்கள் உலகெலாஞ் சென்று உம்மைத் தேடிக்கொண்டிருக்கிறுர்கள். அடியேன் செய்த தபோபலத்தினுல் தங்கள் பாதசேவை காணப்பெற்றேன். இனிமேல் நீரொன்றுக்கும் யோசிக்கவேண்டாமென்று சொன்னுர்.

## சூடாமணிப் படலம்.

இவைகளைச் செவியுற்ற பிராட்டி இவன் யாரோ இராட்சதாள் மாயைபோ லிருக்கிறதென்று சந்தேக மடைகிற திருவுளக்கருத்தறிந்து அனுமார் சொல்லுகிறுர். அன்னையே! சுவாமி சில அடையாளங்களுஞ் சொல்லி இதையுங் கொடுத்தா ரென்று மோதிரத்தைக் கையிலே கொடுத்தார். அப்போது அம்மன் சரீரம் பதறித் துணுக்கென்று ஆழியைக்கையில்வாங்கித்தன்னிரு கண்களிலும் ஒற்றி, ஆனந்தக் கண்ணீர் பெருக, சரீரமெல்லாம் மயிர்க்கூச்செறிந்து; இத்திருவாழிகொண்டுவர ஆளில்லாமல் வனத்தில்வாழும் வானரத்தினிடம் கொடுத்தனுப்பினுரோ, அல்லதுசுவாமி நித்திரைசெய்கையில் இந்த வானரன் திருடிவந்தானே, சுவாமியின் தூதனென்றுஞ் சொன்னபடியால் நாமறிவோ மென்றெண்ணி, அனுமாரைப் பார்த்து நீயார்? உன் வரலாறும், சுவாமிக்குத் தூதனுயமைந்த விஷயமும், தயவு செய்து சொல்ல வேண்டு மென்று கேட்க அனுமார் ஆதியோடந்தமாகச் சொல்லுகிறுர்.

## விருத்தம்.

நெறிந்தகருங் குழன்மடவாய் நின்னடியேன்
விண்ணப்பம்
செறிந்தமணி முடிச்சனகன் சிலையிறுத்து
நினைக் கொணர்ந்த

அறிந்தரசு களைகட்ட அருந்தவத்தோ
னிடை விலங்க
செறிந்தசிலை கொடுதவத்தைச் சிதைத்ததுமோ
ரடையாளம்.

அல்லியம்பூ மலர்க்கோதா யடிபணிந்தேன்
விண்ணப்பம்
சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்கண்
மடமானே
எல்லியம்போ தினிதிருந்த லிருந்ததோ
ரிடவகையில்
மல்லிகைமா மாலைகொண்டங் கார்த்ததுமோ
ரடையாளம்.

கலக்கியமா மனத்தனளாய்க் கைகேசி வரம் வேண்ட
மலக்கியமா மனத்தனனாய் மன்னவனு மறுதொழிய
குலக்குமரா காடுறையப் போவென்று விடைகொடுப்ப
இலக்குமணன் றன்னொடுமங் கேகியதோ ரடையாளம்.

வாரணிந்த முலைமடவாய் வைதேவி
விண்ணப்பம்
தேரணிந்த வயோத்தியர்கோன் பெருந்தேவி
கேட்டருளாய்
கூரணிந்த வேல்வலவன் குகனோடுங்
கங்கைதன்னில்
சீரணிந்த தோழமைக் கொண்டதுமோ
ரடையாளம்.

மானமரு மென்னோக்கி வைதேவி விண்ணப்பம்
கானமருங் கல்லதர்போய்க் காடுறைந்த காலத்து
தேனமரும் பொழிற்சாரல் சித்திரகூ டத்திருப்ப
பான்மொழியாய்ப் பரதனம்பி பணிந்ததுமோ ரடை
[யாளம்.

சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட [தோடி
அத்திரமே கொண்டெறிய அனைத்துலகுந் திரிந்
வித்தகனே இராமாவோ நின்னபய மென்றழைப்ப
அத்தரமே யதன்கண்ணை யறுத்ததுமோ ரடையாளம்.

மின்னொத்த நுண்ணிடையார்மெய்யடியேன் விண்ணப்
பொன்னொத்தமானென்று புகுந்தினிதுவிளையாட [பம்
நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம் பிரானேக
பின்னேயங் கிலக்குமணன் பிரிந்ததுமோரடையாளம்.

வசனம்.

அன்னையே! இராமபிரானால் அனுப்பப் பட்ட தூதன் நான். என் பெயர் அநுமான் என்றும், சுவாமி சொல்லிய அடையாளங்களையுஞ் சொன்னவுடன்பிராட்டிசந்தேகந் தீர்ந்து, அநுமாரைக் கண்ணுற்று இவ்வளவு சிறிய உருவுடையவன் சமுத்திரங் கடந்து எப்படி வந்தாயென்று கேட்டாள். அப்போது அநுமார் என் சொரூபங் காண்பிக்கிறேன் பாருமென்று விசுவரூபங்கொண்டு ஆகாயமட்டும் வளர்ந்துநின்றார். அவ்வுருவைக்கண்ட பிராட்டியார் ஆனந்தமும் அச்சமுங் கொண்டு முன்போல இருக்கவேண்டு மென்று வேண்டினாள், உடனே சொரூபமொடுக்கி முன்போல நின்று அம்மன் பாதத்திற் சரணமடைந்தார். அப்போது பிராட்டியார் சுவாமி கொடுத்த திருவாழியை இருகண்களிலும் வைத்துக்கொண்டு, அநுமாரே! என்னை ஒன்பது மாதமாய்ச் சுவாமி தேடாது மறந்தாரோ? இளைய பெருமாளேனுஞ் சுவாமிக்குச் சொல்ல வில்லையோ? ஆனால் அவருக் கென்பேரில் கோபமுண்டு எப்படியெனில்: —

பொய்மான் பிறகே சுவாமி போகிறபோது சிறிதுநேரஞ்சென்றவுடன் இலக்குமணாவென்று ஒரு குரல் கேட்டது. அதனால் சுவாமிக்கு ஏதோ ஆபத்துநேர்ந்திருக்கிறது நீர் போய்ப் பார்த்து வாருமென்று, என்னிடங் காவலாயிருந்த இளையபெருமாளிடஞ் சொன்னேன். அவர் அம்மா! இதுஇராட்சதாள்வனம் மாயை

மெத்தவுண்டு, என் அண்ணருக்கு ஒரு தீங்கு மில்லை யென்று எவ்விதஞ் சொல்லியுங் கேளாது அனுப்பி னேன், அதனால் இப்படி வியாகுல முண்டுபண்ணினவ ளென்றெண்ணிவிட்டார்போலும். நானும் இனிமேல் நாட்பட இருக்க மனந்தரிக்க மாட்டேன். ஆகையால் அநுமாரே! நீர் போய்ச் சுவாமி யிடஞ்சொல்லிச் சீக்கி ரம் சிறை மீட்டச் சொல்லுமென்று மனக்கவலையுடன் சொல்லும் பிராட்டியாரைப் பார்த்து அனுமார் சொல் லுகிறார்.

விருத்தம்.

சொல்லியிந்த வகையனுமான் பின்னு மெந்தன்
தோண்மேலே யெழுந்தருள்வா யங்கே பாய்வேன்
அல்லதிலங் கையோடெடுப்பா யெனினுஞ்செய்வேன்
அரக்கரைவேர் பிடுங்கெனினுங் கணத்திற் செய்வே[ன்
பல்லரக்கர் சிறைதனிலே கண்டான் மீட்கப்
பயப்பட்டா னுயிரைக்காப் பாற்றினனென்
றெல்லவருஞ்சொலப்போகேன் தாயே சீதை
எதென்றா னிதற்குவகை யேதென்றானே.

வசனம்.

தாயே! நீர் இவ்வளவு கவலைப்பட வேண்டாம் என்றோளின்மீது தங்கள் திருவடியை வைத்தால் தங் களை யிப்பொழுதே கொண்டுபோய்ச் சுவாமி சன்னிதி யில் விட்டு விடுகிறேன் தேவரீர் சித்தம் எப்படியென்று கேட்கச் சீதாபிராட்டியார் சொல்லுகிறாள்.

விருத்தம்.

எண்ணியனுமானிந்த வார்த்தை சொல்ல
எனையொருவ ருந்தொடப்போ காதுகண்டாய் [டாய்
மண்ணதைத்தொட் டரக்கனெனை யெடுத்தான் கண்—
வலியகோ தண்டபதி யவர்பேர் கண்டாய்
நண்ணியெந்தன் சிறையவரே மீட்டிடாமல்
நடைத்தூதன் மீட்டாலெப் படியாங் கண்டாய்

கண்மணியே மகனேயென் றவனை நெஞ்சம்
கரைக்கின்ருள் சீதைகனிந் துரைக்கின் ருளே.

வசனம்.

அப்பா அனுமானே! இந்த இராவணன்ருன் என்னைக் களவிலே கொண்டு வந்தா னென்ருல், நீயு மப்படிச் செய்வது தகுதியல்ல, என்னுயகர்பராக்கிரமம் இந்தவுலகம் அறிகிற தெப்படி? ஆனதால், பத்துச்சிர முடைய இராவணனைப் புத்திர மித்திர ரோடு குலநா சஞ்செய்து தண்டகவன ரிஷிகளுக்குக் கொடுத்த அப யாஸ்தமு நிறைவேறி, என் கவலையும் நீங்கி நான்வரு கிறதே யல்லாமல் வேறல்ல. இதை உன்னை யனுப்பி வைத்தவரிடம் சொல்லு மென்ருள், அப்போது,

விருத்தம்.

வடித்துவடித் தன்னையிந்த வார்த்தை சொல்ல
மாருதியும் நகைசெய்தான் விழல்கூளத்தை
இடிப்பதுபோ லரக்கர்தம்மை யிடிக்கச் சேனை
எழுபதுவெள் ளமுஞ்சேரு மெனது தோண்மேல்
அடித்தலங்கொண் டென்சாமி சேர்வார் தம்பி
அங்கதன்ருேண் மேற்சேர்வார் அவரம்பாலே
பொடிப்பொடியாய் இராவணனுந் தரையிற் சேரும்
போரும் வரும் பாருமெனப்புகலு வானே.

வசனம்.

அனுமாரானவர் தாயே! நீரொன்றுக்கும் யோ சனைபண்ணவேண்டாம். நான்போய்ச் சுவாமிக்கியறிக் கையிட்டு உடனே அழைத்து வந்து, இந்த இராவண னையும். சேர்ந்த வரையும் சம்மாரஞ்செய்து தங்களை யழைத்துப் போகிருேம்! சுவாமிக்கு ஒரு அடையாளந் தரவேண்டுமென்று கேட்கச் சீதை,

விருத்தம்.

வந்தெனைக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்த விப்பிற விக்கிரு மாதரைச்
சிந்தை யாலுந் தொடேனென்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாம்.

அனுமாரே! முன் மிதிலையில் வில்லை யொடித்து என்னைக்கல்யாணஞ் செய்து, அன்று நாங்கள் பள்ளியறையிலிருக்கிறபோது, நான் பூண்டிருந்த ஆபரணங்களைக் கழற்றினேன். அதை யறிந்த சுவாமி நீ இந்த ரத்னபரணங்களைக் கழற்றுவதேனென்ருர், சுவாமி நீர் மிதிலையை நோக்கி வரும் வழியில் உம்முடைய பாதத் தாட்பட்டவுடனே கருங்கல் நல்ல யௌவன ஸ்திரீயானளென்று கேட்டிருக்கிறேன். ஆனதால் இந்த ஆபரணங்களிற் பதித்திருக்கிற கற்கள் சுவாமி சரீரத்திற்பட்டால், எவ்விதமான பெண்ணுகார்களோ என்று கழற்றினேனென்றேன். அதுகேட்டுச்சுவாமி நகைத்து இந்தச் சென்மத்தில் உன்னையல்லது வேறொருவரைத் தீண்டுகிற தில்லை யென்று உறுதி சொன்னர், இந்த அடையாளமொன்றே உனக்குப்போதுமானது. நீ என்றுஞ் சிரஞ்சீவியா யிருக்கக் கடவாயென்று, ஆசீர்வதித்துச் சூடாமணியுங் கொடுத்து, மறுபடியும் நான் இவ்விடத்திலிராமல் சீக்கிரம் சுவாமியை வந்து அழைத்துப் போகச் சொல், அப்படிச் சுவாமி வரத்தாமதித்தால் நான் பிராணத்தியாகஞ்செய்து கொள்வதில் ஐயமில்லை யென்றும் சொல், அனுமானே போய்வாவென்றனுப்ப ஆஞ்சனேயர் சீதாபிராட்டியா ரிடம் விடை பெற்றுக் கொண்டு அவ்விடம்விட்டு அப்பால் வந்து ஒரு விருட்சத்தின் மீதிருந்து கொண்டு யோசிக்கிருர். என்னவெனில்:—

## அசோகவன மழித்தல்.

நாம் வந்த காரியம் இந்த இராவணன் அறிய வேண்டும் அதற்கு இந்த வனத்தை யழித்தோமானல் நம்மைப் பிடித்துப் போய் இராவணன் முன்பு விடுவார்கள். அங்கு அவன் பராக்கிரமமும், அவன்படைகளின்

பெருக்கமுமறிந்து, அதில் நாலிலொரு பங்கு சேனைகளையு மழித்தால், பின் செய்யும் யுத்தத்திற் கேதுவாகுமென்று நிச்சயித்து அந்த அசோக வனத்திலுள்ள விருட்சங்களையும் ஓமகுண்டங்களையும் அழிந்துஇடித்து நாசம் செய்தனர்.

## கிங்கரர் வதைப் படலம்.

அதைக்கண்டகாவலர்களாகிய அறுபதினாயிரங் கிங்கரர்கள் அவரவர்கள் ஆயுதங்களை அனுமார் பேரிலெறிந்தார்கள். அவ்வாயுதங்களை யெல்லாங்கையினாற் பிடித்துமுறித்தெறிந்து ஓர் மரத்தைப் பிடுங்கி வந்து, அவர்கள் பேரில் வீசி யடித்து வதைத்தார். அதிற் றவறியவரோடி அரண்மனையிற்போய் இராவணனைவணங்கிச் சுவாமி! ஒரு குரங்கு வந்து நம்முடைய அசோக வனமெல்லா மழித்துக், காவலாளிகள் யாவரையுங் கொன்றுவிட்டது. அதில் நாங்கள் மட்டும் உயிர் தப்பி வந்தோமென்று சொல்லக் கேட்ட இராவணனுக்குக் கோபமும் சிரிப்புமுண்டாகி, ஒரு குரங்குக்கு இவ்வளவு திராணியுண்டோ? என்று கேட்கிறபோது, சுவாமி! அதைக் குரங்கென்று அற்பமாக எண்ணலாகாது, மும்மூர்த்திகளும் அதற்கு இணையாக மாட்டார்களென்று சொல்லிக் கொண்டிருக்கிறபோது, ஆஞ்சநேயர் அங்குற்றவர்களின் நெஞ்சந் திடுக்கிடும்படி, அட்டகாசஞ் செய்து ஆர்ப்பரித்தார்.

அந்த முழக்கமானது இராவணனுடைய இருபது செவிகளிலும் நுழைந்தது. அப்போது இராவணன் இதென்ன ஆச்சரியம்? ஒருகுரங்குக்கு இவ்வளவு பலமும் சாமர்த்தியமு மிருக்கிறதா? என்று பெருமூச்சு விட்டு, மிக்க கோபாக்கினியுடன் பக்கம் நிற்கின்ற ஜம்புமாலியை நோக்கினன்.

## ஜம்புமாலி வதம்.

ஜம்புமாலியைப் பார்த்து நீ சென்று அந்தக் குரங்கைக் கொல்லாமற் பிடித்து வரவேண்டுமென்று ஆக்ஞை செய்து அனுப்பினன். அப்படியே விடைபெற்ற ஜம்புமாலி தன் சேனைகளுடன் அசோக வனத்திற்குச் சென்றான். அப்போது அனுமார் இன்னும் இராட்சதாள் ஏன் யுத்தத்திற்கு வரவில்லை யென்று, அந்தச் சோலையிலுள்ள மரத்திலிருந்து தெற்கு நோக்கிப்பார்த்துக் கொண்டிருக்கிறபோது, ஜம்புமாலி தன் சேனைகள் அனைவரையுங்கூட்டிப்போய் அனுமார்மீது ஆயுதங்களை யெறிந்தார்கள் அவைகளை மாருதி தன் கரத்தாற் பிடித்து துண்டு துண்டாய் முறித்தெறிந்து விட்டு, அங்குநின்ற ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கி அடி நுனி யிரண்டையும் முறித்து விட்டு, அந்த மரத்தைக் கரத்திலெடுத்துக் கொண்டு அந்தச் சேனைகளைத் துராத்திமண்டையில் மூளை சிதற அடித்து மாய்த்து விட்டார். அதுகண்ட ஜம்புமாலி தன் றேரை விட்டு அனுமாரை மறித்துக் கொண்டு மகா கோபாவேசனாய் வில்லை வளைத்துக் குணத்தொனி செய்து, குரங்கே! நீ சிறிது பலவான்போல் பாசாங்கு செய்து என்னுடைய சேனைகளைக் கொல்லுகிறவனே! இதோபாரென்று பாணப்பிரயோகஞ் செய்தான், அந்தப் பாணத்தையும் பிடித்து முறித்துவிட்டுத் தன் கைமரத் தண்டத்தால் அவனை ஓரடி போட்டார். அந்த அடிபட்டு அவன் சிரம்போனது இன்னவிடமென்று தெரியவில்லை ஜம்புமாலியும் இறந்தான்.

அவனுடன் வந்த நாற்பதினாயிரஞ் சேனைகளும் மடிந்து யானை குதிரைகளும் இறந்தன. அதிலுண்டானஇரத்த ஆறுகள் பிணங்களை யிழுத்துக்கொண்டுசமுத்

திரம்போய்ச் சேர்ந்தது. சண்டையிற் றப்பிய ஒருவன் ஓடி இராவணனிடத்திற் சுவாமி! அந்தவானரம் ஜம்பு மாலியையும், மற்ற சேனைகளையும் கொன்று விட்டது என்று கூக்குரலிட்டான். அதைக் கேட்ட இராவணன் திடுக்குற்று, இது குரங்கல்ல இதன் செய்தியுந் திடமும் நான் போயறிகிறே னென்று மிகு சினத்துட னெழுந் தான்.

## பஞ்ச சேனாதிபதிகள் வதம்.

அப்போது இராவண னுடைய சேனாதிபதிகளாகிய விரூபாட்சன், யூபாட்சன், துர்த்தாட்சன், பிரகஸ்தன், பாசகர்ண னென்னும் ஐந்து பேர்களும், இராவணனைப் பார்ந்து இலங்காதிபா! ஒரு குரங்கின் மேல் நீர் யுத்தம் செய்யப் போகிறது கேவலம் தேவர்கள் நகைப்பார்கள். ஆனதால் நாங்கள்போய், அந்தவானரத்தைக் கொன்று வருகிறோமென்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு, சேனைகளுடன் ஆயுதமுங் கொண்டு தேர்களி லாரோகணித்துப் பஞ்சசேனாதிபதிகள் யுத்த களத்திற்குப் புறப்பட்டுச் சென்று, தோரண கம்பமேலிருந்த அனுமாரை வளைந்து கொண்டு, இது தானோ சிறிது பலவானான குரங்கு! என்று தங்களுடைய ஆயுதங்களைப் பிரயோகஞ் செய்தார்கள். அப்போது ஆஞ்சநேயர் அவ்வாயுதங்களை யெல்லாம், தன் கரத்திலெடுத்த மரத்தா லடித்து நொறுக்கி விட்டார்.

## விருத்தம்.

ஆறுசெய்தன வானையின் மதங்களவ் வாற்றைச்
சேறுசெய்தன தேர்களின் சில்லியச் சேற்றை
நீறுசெய்தன புரவியின் குரமற்றை நீற்றை
வீறுசெய்தன வப்பரிக் கவினயா விலாழி.

வசனம்.

மற்றும் சூழ்ந்து நின்ற இராட்சத சேனைகளை யெல்லாம் தப்பவிடாமல் சம்மாரம் பண்ணி வருகிற பராக்கிரமத்தைப் பஞ்சசேனாதிபதிகள் கண்டு, நம்முடைய சேனைகளை மடியக் கொல்லுகிற குரங்கினுடைய வல்லமையைப் பாருமென்று அவர்களி லொருவன் தன்றேரை நடாத்தி அனுமார்மீது பாணப்பிரயோகஞ் செய்தான். அதைக்கண்ட ஆஞ்சநேயர் அந்தப்பாணத்தைவிலக்கி அவன் றேரின் மீது பாய்ந்து தன் மர ஆயுதத்தால் ஓரடி போட்டார், அந்த அடிபட்ட வுடனே அவன் தேர் புரவிகளும் சாரதியும் போய் அவன் ஜீவனும் அவனை விட்டுத் துறந்தது,

அதைக்கண்ட நால்வர்களும் கோபங்கொண்டு அனுமார் மீது அளவற்ற பாணங்களைத் தொடுத்தார். அப்போது அனுமாரவர்கள் மேற்பாய்ந்து ஒருவனைத் தேருடன் வாரி நிலத்திலடித்து அவன் கையிலிருந்த இரும்புத் தண்டாயுதத்தையும் பறித்து, அவன் லாகு கொண்டு எழும்புவதற்குமுன் அவன் மண்டை தகரும் படி அடித்தார். அவனும் இறந்தவுடன் மற்றமூவரும் முன்னிலும் அதிகச் சினத்துடன் உக்கிரங் கொண்டு அனுமார்பேரிலே பாய்ந்து மல்லுயுத்தஞ் செய்ய நினைந்து கிட்டிவருகிற பராக்கிரமம் மாருதி கண்டு, இரண்டு பேரைத்தேருடன் இரண்டு கையிலுமெடுத்து ஒன்றோடொன்று மோதியடித்தார், தேர், புரவி, சாரதி, இவைகள் அழிந்தன. அந்தத் தேர்மீதுற்ற இரண்டு சேனாதிபதியும் அதற்குமுன் கீழே லாகுகொண்டுபாய்ந்து அனுமாரைக்கட்டிப் பிடித்துக்கைகளினாலிறுக்குகிற போது அனுமார் சந்தோஷப்பட்டு இது தான் சமய மென்று தன் வாலினால் அந்த இரண்டு பேரையுஞ்

சுற்றி இறுக்கினாரப்போது அவர்களுக்கு விழிபிதுங்கி, எவ்விதம் தப்பிப் போவோமென்று நினைக்கிறபோது அனுமாருடைய வால் அதிக பலத்துடன் இறுக்கினபடியால், அவ்விருவர்களின் ஆவியுந் துறந்தன. அதன்பிறகு அனுமார் மற்றொருவன் பேரிலும் பாய்ந்து, அவன் றலையைத் திருகியெறிந்து விட்டு, அவனுடைய சேனைகளொன்றேனுந் தப்பவிடாமற்கொன்று பின்னுந் தோரண கம்பத்திலேறியிருந்தார்

## அட்சயகுமாரன் வதம்.

அப்பொழுது அதிற் றப்பிய ஒருவன் இலங்கையிற் சென்று இராவணனைக் கண்டு சுவாமி! பஞ்சசேனாதிபதிகளும், கூடச்சென்ற சேனைகளும் ஒரு முகூர்த்த காலத்துள், அனுமானுக் காற்றாது இறந்தார்கள், ஒருவரேனுந் தப்பவில்லை, நான்றான் மீதமென்று விண்ணப்பஞ் செய்தான், அப்போது இராவணன் கேட்டு மகா கோபமாகி, இது எதடா? ஒரு குரங்கு, போகிறவர்களை யெல்லாம் சம்மாரம் பண்ணுகிற தென்றால், நம்முடைய ஆண்மையும் திராணியும் நன்றாயிருந்தது? இனி நானே சென்று அந்தக் குரங்கைக் கொன்று, வருகிறேனென்று எழுமுன், இவ்வார்த்தைகளைச் செவியேற்று நின்ற அவன் இளையகுமாரனாகிய அட்சயகுமாரன் வந்து சொல்லுகிறான்.

ஐயா! நீர் போகவேண்டாம் நான் போய் அந்தக்குரங்கைக் கொல்லாது பிடித்து வந்து உம்முடைய கோபந்தணியச் செய்கிறேன், ஆனதால் என்னையனுப்புமென்று வீரமாய்க் கேட்கிற பராக்கிரமமறிந்து, இராவணன் தன் மகனைப் பார்த்து நீ சென்று அந்தக்குரங்கைக் கொல்லாது பிடித்து வருவாயாக வென்று ஆசிகூறினான், அப்போது அட்சயகுமாரன் இராவணனைப்

பணிந்து விடைபெற்றுக்கொண்டு அவனுடைய அறுபது லட்சசேனைகளையும், பதினாயிரந் தேரும், நாற்பதினாயிரங் குதிரையும், இராவணனா லனுப்பப்பட்டலட்சமல்லர்களுமாகப் புறப்பட்டுக் கோடி கவிகைகள் சூழ, இருநூறு புரவிகள் பூண்ட தேரின் மீது இளஞ்சிங்கம் போன்ற அட்சயகுமாரனேறி, வானர வேட்டைக்குப் போகிறபடியால் யாவர்களும் எச்சரிக்கை பராக்கென்று கட்டியங் கூறிவர வெகு கூட்டமுடன் அனுமார் நிற்கிற இடத்தைக் கிட்டினார்கள்.

அப்போது அனுமார் அவர்களைப் பார்த்து அதோ வருகிறவன் இராவணனோ? அல்லது வேறு எவனோ? தெரியவில்லை; இராவணனாக விருந்தால் நாம் நினைத்தபடி அவனையும், அவன் சேனைகளையுங்கொன்று, இலங்கைப் பட்டணத்தையு மழித்து, என் தாய் சீதாபிராட்டியாரையும் எடுத்துப் போய்ச் சுவாமி யிடம் விட்டுப் பாதத்தில் நமஸ்காரம் செய்வோம். அல்லது எப்படி முடிகிறதோ வென்று, இராமபிரானைத் தோத்திரஞ்செய்து கொண்டிருக்கிற போது, அட்சயகுமாரன் சருவசேனைகளுடன், அனுமார் சமீபத்தில் வந்தான்.

அப்போது ஆஞ்சநேயர் அவனை ஐயமறக்கண்ணுற்று இராவணனல்ல இவன் யாரோ? சிறு வயது உடையவனாயும், மகா பராக்கிரமசாலி போலும் காணுகிறது; வருகிறவன் எவனாயிருந்தாலென்ன பார்க்கலாமென்றிருக்கும் ஆஞ்சநேய ரண்டையிற் சென்ற அட்சயகுமாரன் மாருதியைப் பார்த்துத், தன்றோள் தினவு நீரக் கயிலையங்கிரியை யெடுத்த புஜ பல பராக்கிரமம் பெற்ற என் றந்தை இந்த அற்பக் குரங்கைச்சம்மாரஞ் செய்யவருகிறோ மென்றார்? என் பிராணமொன்றுபோதாதோ வென்று தன் வல்லமையைப் பேசி நின்றான்.

அது சமையம் அவன் சேனைகளெல்லாம் ஆரவாரஞ்செய்து, அனுமாரை வந்து வளைந்து கொண்டு அவரவர்கள் ஆயுதங்களாகிய வாள், அம்பு, இருப்புத் தடி, குந்தம், கப்பணம், முசுண்டி, எறியம்பு, ஈட்டி, சக்கரம், பிறைமுகச்சூலம், தடி, இருப்புச் சங்கிலி, கண்ட கோடரி முதலியவை கொண்டு எறிந்து யுத்தஞ் செய்தார்கள். அந்த ஆயுதங்கள் அனுமார் உடம்பிற் பட்ட வுடன் இரத்தவாருக வெடுத்தது. அந்த உபாதையால் ஆஞ்சநேயருக்கு அடங்காத கோபமுண்டாகிச், சருகுக் கூட்டத்தில் பிரசண்டமாருதம் புகுந்தாற் போலும் குஞ்சரத்திரளில் சிங்கம் பாய்ந்ததுபோலும் கர்ச்சித்து அந்தச் சேனைகள் மத்தியிற் பாய்ந்து, தன் கையிலிருந் தமரத்தடியால் அடித்து நொறுக்கிக் போகிறபோது, சில இராட்சதர் இது மரத்தின் மீது சிறிதாயிருந்த குரங்கு, நிலத்திற் குதித்தவுடன் ஆகாயமுற வளர்ந்து இத்தனை பராக்கிரமத்துடன் யாவரையுங் கொன்றுவருகிறது. என்ன செய்வது? இனி முட்டுண்டு குனிவதிற் பயனில்லை யென்று, துணிந்து நிற்கிறபோது, சம்மாரஞ்செய்து கொண்டு போகிற அனுமார், கிட்ட நெருங்கியதுகண்டு, அந்தஇராட்சதர்கள் அனுமாரைக் குறுக்கே கட்டிமறித்துக் கைப்பிடியாகப் பிடிக்க வேண்டுமென்று ஆச்கிரமித்து வத்தார்கள்.

அது கண்ட ஆஞ்சநேயர் அவர்களின் மீது பாய்ந்து தன் கரத்தினுலும், மரத்தினுலும், அடியினுலும், பிடியினுலும், மல்லினுலும், பல்லினுலும், வாலினுலும், காலினுலும் அந்தச் சேனைகளை யெல்லாம் மடியக்கொன்று திரிகிறதை அட்சயகுமாரன் கண்டு, ஒகோ! நம்முடைய சேனைகளெல்லாம் மடிந்து போகிருர்களென்று சீக்கிரம் தன் றேரை நடத்தி வந்து,

ஆஞ்சநேயர் மீது சில பாணங்களைத் தொடுத்தான். அவைகளை அனுமார் தன் கரத்திலிருந்த ஆயுதத்தால் மறித்துப் பொடியாக்குதற்கு முன், அட்சய குமாரன் கோடி பாணங்களைத் தொடுத்து விடுத்தான். அந்தப் பாணங்களிற் சிறிது, அனுமாருடம்பிலேபட்டு, இரத்த வாருகச் சோபமுண்டாகிப்பின் மூர்ச்சை தெளிந்து, அவன் றேரின் மீது விசைகொண்டு பாய்ந்து வாரி நிலத்திலே யடித்தார். அந்தத் தேரும் சாரதியும் அழிவதற்குமுன் மறுதேரின்மீது பாய்ந்து நின்றுகொண்டு பாணப்பிரயோகஞ் செய்தான். அந்தப் பாணங்களையும் விலக்கி, அவனிருந்த தேரையும் வாரி நிலத்தி லடித்தார்.

இப்படியவன் ஒவ்வொன்ருக ஆயிரஞ் சேமத் தேரேறியும், அவைகளனைத்தும் ஆஞ்சநேயர் கணப் பொழுதில் அதஞ்செய்து, அவன் றேரில்லாம னிற்ப தறிந்து, இவனுடன்வீண் யுத்தஞ் செய்கிறதிற்பயனில் லையென்று நினைத்து ஆர்ப்பரித்தார்.

அதுகண்ட அட்சய குமாரன் ஒரு குரங்குக்கு இத்தனை பராக்கிரமமுண்டோவென்று உக்கிரங்கொண்டு ஒரு இருப்புலக்கையை விட்டெறிந்தான். அந்த வுலக்கையை அனுமார் குறுக்கே பிடித்து ஒடித்தெறிந்துபோட்டு, அவன்மீது பாய்ந்து, அவன் கையில்லைப் பறித்துக் கழுத்திற் கண்ணிபோல் மாட்டி யிழுத்துக் கீழே வீழ்த்தி நெஞ்சிலே ஓர் அறை அறைந்து நிலத்திற் றேய்த்து உயிரை மடித்து விட்டார்.

அப்போது அனுமார் யுத்தத்திற் றப்பிய ஒருவன் இராவணனிடத்தி, லட்சயகுமாரன் இறந்ததைச் சொல்வோமென ஓடுவதற்கு முன், குரங்கைப் பிடித்து

வர மகனை யனுப்பினேமே, என்னமாய் முடிகிறதோ வென்று மேடையின் மீதேறிப் பார்த்து நின்ற தசக்ரீவனானவன், ஓடிவருபவனைக்கண்டு, கீழேயிறங்கிவந்து வந்தவனை யுத்தகளத்தின் செய்தி யென்ன சொல்லடா வென்று பதறிக் கேட்கிறபோது, அவன் கைபதறிக் கால்பதறிச், சொல்லவாய்குளறி நிற்பதைக்கண்ட இராவணன் உள்ளதைச் சொல்லடா வென்று கண்களில் நெருப்புப்பொறி பறக்கக் கோபித்துக் கேட்கிறபோது சொல்லுவான்.

சுவாமி அட்சயகுமாரனுடன் சென்ற சேனைகளைத் தப்பவிடாமல் அனுமான் சம்மாரஞ் செய்து வருகிறதைக்கண்ட நமது இளஞ்சிங்கம் ஆரவாரத்துடன் அநேக பாணங்களைத் தூவுகிறபோது, அந்த அனுமான் சீக்கிரம் தேரிற் பாய்ந்து, அட்சயகுமாரன் கைவில்லைப் பறித்துக் கழுத்திற் போட்டு, இழுத்துத் தள்ளித் தன் கையாலறைந்து கொன்று விட்டதென்று சொன்னான். அப்போது இராவணன் கீழே யடித்து விழுந்து புரண்டு அழுது புலம்பினான். அப்படி அழுகிற சத்தம் இலங்கைப் பட்டண மெல்லாங் கேட்டுச் சருவ சனங்களும் அழுது புலம்பிக் கொண்டுவர, அவர்களுக்கு முன் அட்சயகுமாரன் மாதாவாகிய மண்டோதரி அடித்து விழுந்து புரண்டழுது வந்து, இராவணன் முன் புலம்பும்போது, இராவணன் கண்களில் அக்கினிப் பொறியெழ, அனுமார் மீது அடங்காத கோபங்கொண்டான்.

அப்போது இந்திரசித்து தம்பி அட்சயகுமாரன் இறந்தானென்ற சமாச்சாரந் தெரிந்து சீக்கிரம் தன்னுடைய போர்வீரர்களுடன் வந்து, இராவணனைக் கண்டு ஐயா! தம்பி அட்சயனு மிறந்தானே வென்று

கதறிப் புலம்பிப் பின் கவலைப்படுகிற தகப்பனுக்குத் தேறுதல் சொல்லிச். சிறிது நேரஞ் சென்றதும், தம்பி அட்சயகுமாரனைக் கொன்றவன் யார்? நான் போய்அவ னைக் கணப்பொழுதிற் கொன்று, உம்முடைய பழியைத் தீர்த்துத் தருகிறேன் சொல்லுமையா வென்று கேட்க இராவணன் சொல்லுகிறான்.

அப்பா மேகநாதா! நம்முடைய அதிகாரம் நன் றாயிருந்தது. பிரமாவல்ல, விஷ்ணுவல்ல, உருத்திர னல்ல, நமக்கு எதிராளியான தேவர்களி லொருவனு மல்ல வனங்களிற்றிரிகிற ஒருகுரங்குவந்து, நம்முடை ய அசோகவனத்தை யழித்து, அவ் வனக்காவலாளர் அறுபதினாயிரம் பேரையும், ஜம்புமாலியுடன் நாற்பது வெள்ளஞ் சேனைகளையும், பஞ்சசேனாதிபதிகளுடன் சென்றசேனைகளையும் கொன்று, அதைப்பிடித்து வரப் போன அட்சயகுமாரனையும், துணையாகச்சென்றஇராட் சதப்படைகளையுங் கொன்று போட்டதா மென்று இரா வணன்சொல்ல; இந்திரசித்தன் கேட்டு மனங்கலங்கி, அக்குரங்கு பலவானெனத் தெரிந்தால் அதன் பேரில் சிறு பிள்ளையை யனுப்பலாமோ? ஆயினும் இனிமேல் நான் சென்று அந்தக்குரங்கைப்பிடித்து வருகிறேன் நீ ரொன்றுக்குங் கவலைப்படாதிருக்க வேண்டு மென்று சொல்லி மந்திரிமாரைப் பார்த்து என் தந்தைக்குத் தேறுதல் சொல்லிக் கொண்டிருங்க ளென்று திட்டஞ் செய்துவிட்டு, இந்திரசித்துபோருக்குப்புறப்பட்டான். எப்படியெனில்:—சருவ ஆயுதங்களுடன் இருநூறு புர விபூண்டதேரின்மீது ஆரோகணஞ்செய்து, நூற்றியிரு பது வெள்ளஞ் சேனைகள் சூழ, வெற்றிச்சங்க முழங்க, வெகு ஆடம்பரத்துடனே புறப்பட்டு அசோக வனத் தில் வந்து வளைந்து கொண்டார்கள்.

அப்போது ஆஞ்சநேயர் பார்த்து இவன்றான் இந்திரசித்து போலும், இவனை நாம் கொன்றா லல்லவோ நம்முடைய காரியங்கள் சித்தியாகு மென்று, தன்னிருகைகளையும் மரங்களிலுரசிக் கையைப் பிசைந்து கொண்டிருந்தார்.

அப்போது இந்திரசித்துடன் சென்ற சேனைகளெல்லாம் ஆரவாரஞ் செய்து, அனுமாரைக் கண்டு, அவர்மீது தங்கடங்கள் பாணங்களைப்பிரயோகஞ் செய்தார்கள். அதுகண்ட அனுமார் மரத்தை விட்டுக் கீழே குதித்து, வீரசிங்கம்போலே துள்ளி நடந்து பற்களைக் கடித்து, மராமரத்துத் தடியொன்றைக் கையிற்பிடித்து ஆக்கிரமித்து, வந்த இராட்சதப் பெரும் படையிற் புகுந்து, தன் மரத்தடியைச் சக்கரவளையம்போல் சுழற்றுகிறபோது, இராட்சத வீரர்கள் எய்தபாணங்க ளெல்லாம் நொறுங்கிப் போய்விட்டது. அப்போது சேனாதிபதிகள் இந்திரசித்தைப்பார்த்துத்தேவரீர் எங்கள்வீரத்தை ஒரு குரங்கின் பேரிலேயோ போர்செய்ய விட்டுப் பார்க்கிறதென்று தங்களின் வீரத்தன்மைகளைச் சொல்லிக்கொண்டு அனுமார் பேரிலே பின்னும் பாணங்களையும், இருப்புத்தடிகளையும், எறியீட்டிகளையும், குந்தம் இருப்புலக்கைகளையும், பிரயோகஞ் செய்து ஆரவாரஞ் செய்தார்கள்.

அவைகளைக் கண்ட அநுமார் சற்றே திகைத்துப் பின் அந்த ஆயுதங்களையெல்லாம் தடிகொண்டு விலக்கி, ஒருவன் கையிலிருந்த இருப்புலக்கையைப் பறித்துக்கொண்டு அப்படையினுட் புகுந்து சருவ சேனைகளையும் இருப்புலக்கையால் அடித்து மண்டைகள் தகரும்படிச் செய்துவருகிறபோது, சில வீரர்கள் பின்னும் அநுமார்மீது பாணப்பிரயோகஞ்செய்ய அவ

காசமில்லாததினுல், குறுக்கே கட்டிமறித்து மல்யுத்தஞ் செய்கிறபோது அநுமார்.

விருத்தம்.

பிடித்தனன்சிறிதுபேரைப் பிசைந்தனன்சிறிதுபேரை
அடித்தனன் சிறிதுபேரை யரைத்தனன் சிறிதுபேரை
நடித்தனன் சிறிதுபேரை நசுக்கினன் சிறிதுபேரை
கடித்தனன் சிறிதுபேரைக் கசக்கினன் சிறிதுபேரை.

வசனம்.

இந்திரசித்துப் பின்வந்த நூற்றியிருபது வெள்ளஞ் சேனேகளேயும் சம்மாரம்பண்ணிக்கொண்டு வருகிறதை இந்திரசித்து பார்த்து, இது குரங்கல்ல இதன் காரணம் நாம் பின்னுல் அறியவேண்டுமென்றெண்ணித் திடமாக நிற்கிறபோது, முன்வந்த அநுமாரைக் கண்டு இந்திரசித்து, தன்னுடைய வில்லே வளேத்து, ஆதித்தனளித்த அக்கினியாஸ்திரத்தைத் தொடுத்துத் தோள்புரள வாங்கி எய்தான். அந்த அஸ்திரத்தை அநுமார் ஒதுக்கிப் பிடித்து, இரண்டாய் முறித்து அவன் முன்னே எறிந்து சொல்லுவார்.

வாராய் இந்திரசித்தே! உன்னே மகா சுத்தவீரனென்று கேட்டிருக்கிறேன், இப்போதும் என் எதிரே கண்டேன், இனியுன் வல்லமையை அறிவோமென்ருர். அப்போது இந்திரசித்து ஆக்ரமித்து உன்னே உயிருடன் விடுவேனே குரங்கே! இப்போதே என் சாமர்த்தியம் பாரென்று வச்சிரப்பகழியில் நாலாயிரம் பிரயோகஞ் செய்தான். அந்தக் கணேகள் அநுமார் உடம்பிலேபட்டு இரத்தவாறு எடுத்தது. அப்பொழுது அநுமாருக்கு வேதனேயால் கோபமுண்டாகி, ஆக்கிரமித்து வீரசிங்கம்போலே அவன் தேரிலே பாய்ந்து, வில்லேப் பறித்து இரண்டாயொடித்துச் சாரதி புரவி

களையும் வாலினுற் பிடித்து, உடல்சிதற வடித்துவிட்டுத் தோரணகம்பத்தில் ஏறிநின்ருர்.

இந்திரசித்து தன் சாரதியும் புரவிகளும் இறந்தவுடன் மறுதேறிலேறி நின்றுகொண்டு, இன்று நாம் இந்தக் குரங்கைப் பிடித்துப்போகாதிருந்தால் நம்மை இந்திரசித்து என்று சொல்லுவானேன் என்ற வீரத்தன்மையை மனதில் நினைத்துக்கொண்டு, அந்தத் தேர்த்தட்டிலே கிடந்த பாணங்களை ஒவ்வொன்ருக அநுமார்மீது பிரயோகஞ்செய்தான். அநுமார் வெகு தந்திரமாய் அப்பாணங்கள் அனைத்தையும் தன் இருப்புலக்கையா லடித்துச் சிதறச்செய்து இந்திரசித்தின் தேரிற் பாய்ந்து அவனைத் தேருடன் வாரி ஆகாயத்திலெறிந்தார். இந்திரசித்து லாகுகொண்டு பாய்ந்து மறுதேறில் ஏறினன். இப்படியே அவன் ஏறுகிற தேரையெல்லாம் வாரிவாரி ஆகாயத்திலெறிந்து நொறுக்கிவிட்டார். அப்போது இந்திரசித்துக்குக் கோபம் பிறந்து அநுமார்மீது தண்டாயுதத்தை விசைகொண்டு வீசினன். அந்தத் தண்டாயுதம் வருகிற விசையையறிந்து, தன் கரத்திலிருக்கிற இருப்புலக்கையாலடித்தார். அப்போது இரண்டுபேர் ஆயுதமும் முறிந்து போய்விட்டது. பின்னும் அநுமார் சினந்தீராமல் இந்திரசித்தின் தேர்மீதுபாய்ந்து, அவனை வாலினலே சுற்றி ஆகாயத்தில் எறிந்துவிட்டுத் தோரணகம்பத்திலேறிக்கொண்டார்.

## பாசப்படலம்.

இந்திரசித்து பந்துபோற் கிளம்பிப் பூமியிற் றன் தேர்மீது வந்து நின்றுகொண்டு, அநுமாரின் பராக்கிரமத்தை நினைத்து, இப்படியும் பலவான்களுண்டோ? இவன் சருவ சங்கார ருத்திரமூர்த்தியே யல்

லாமல் வேறொருவனல்ல; நாம் சகல பாணங்களையும் பிரயோகஞ்செய்தும் அவைகள் பயன்படவில்லை இனி இவனைப் 'பிரமாஸ்திரத்தால்' கட்டிக்கொண்டுபோக வேண்டுமென்று நினைத்துப் பிரமாஸ்திரத்தைப் பிரயோகம் செய்தான். அந்த அஸ்திரம் வந்து, அநுமானைப் பந்தகப்படுத்தியது. அதனால் சிறிது மயங்கித் தெளிந்து, இந்த அஸ்திரம் நம்மைப் பந்தகம் பண்ணுவானேனென்று யோசித்துச் சரிதான் முன் பிரமாசொன்ன வாக்கு இன்று நமக்குப் பலித்திருக்கிறது, மேலும் இதற்குக் கட்டுப் பட்டால், நம்மைக் கொண்டுபோய் இராவணன் முன் விடுவான் பின்னால் பார்ப்போமென்று கட்டுப்பட்டு நின்றார்,

அப்போது இந்திரசித்து சந்தோஷமடைந்து பிரமாஸ்திரத்தை யெடுத்து அனுமார் இடுப்பிலே கட்டிப்பிடித்துக்கொண்டு சொல்லுவான். ஏ அனுமானே! நீ நல்ல சேவகன் உன்னை என் தகப்பனார் இராவணேசுரனுக்குக் காண்பிவிப்பதற்குக் கொண்டு போகிறேன் வாவென்று கட்டுடன் இலங்கைக்கு அழைத்துச்சென்றான். அப்போது அனுமார் ஸ்ரீஇராகவருடைய திருவருளால் நாம்இங்கு பிராப்தமாகிச் சீதாபிராட்டியாரையுங் கண்டோம், இன்னும் இராவணன் சமுகத்திலுஞ் சென்று நமது இராமபத்திரருடைய புகழையும், பராக்கிரமத்தையும் சொல்லி எப்படியும் அன்னையாரை மீட்டி, யழைத்துப் போய்ச் சுவாமி முன்னே விட்டுத் தண்டஞ்செய்வதே தகுதி யென்று நினைத்து, இந்திரசித்துடன் போனார்.

அந்த வீதியிலே அனுமாரைக் கண்ட ஆண் பெண் அடங்கலும், இந்தக் குரங்கை, நமது இராஜாவின் குமாரன் இந்திரசித்துக் கொண்டு வந்தான்

நாமெல்லோரும் பிழைத்தோ மென்று சந்தோஷம டைந்து நிற்பாரும், இதைக் கொண்டுபோய் வெட்டிப் போடுங்களென்பாரும், என் அண்ணன், தம்பி, மாமன், சுற்றத்தாரைக் கொன்ற குரங்கிதுவோவென்று திட்டிப் பார்க்க வருவாரும், பயந்தோடிப் போவாரும், பார்க்க வருகிறவர்களைப் பார்த்து, என்ன வேடிக்கை பார்க்கப் போகிறீர்கள், இன்னுமென்ன அவகேடு வருமோ அங் கேபோகவேண்டா மென்பாரும்; இப்படிப் பட்டணத் துச் சனங்கள் அனைவரும் பேசிக்கொண்டு நிற்க, ஒரு புறம் சாமரம் வீசக், கட்டியங்கூற, இப்படி வைபவமா யிருக்கும் சபாமண்டபத்திற் கொலு வீற்றிருக்கிற இரா வணேசுரன் முன்னே, இந்திரசித்து அனுமானைக் கொண்டு வந்து பிரமபாசக் கட்டவிழ்த்து விட்டான்.

## பிணிவீட்டுப் படலம்.

அனுமார் தம்முடைய வாலை வளையமாகச்சுருட் டி, இராவணன் சிம்மாசனத்திற்கு நாலுவிரல் உயரமா கச் செய்து அதன்மீது வீற்றிருக்கிற போது, இராவ ணன் அனுமாரை யேறிட்டுப் பார்த்துச்சொல்லுவான்

### விருத்தம்.

இருந்தரா வணன்முன் பாக இருந்தமா ருதியை
நோக்கிப்
பெருங்குரங் குருவாய் வந்தாய் பிரமன்மால் சிவன்விட்
டாரோ
வருந்திவா னவர்விட் டாரோ மனத்துள கபட்டை
யெல்லாம்
தெரிந்திட விடடா வென்று சீறுவான் கூறு வானே.

### வசனம்.

அடா நீ யார்? உன்னை யிங்கு அனுப்பினவனு ரடா? என்று உத்தண்டமாக அதட்டிக்கேட்டான். அப்

போது ஆஞ்சநேயர் கிஞ்சிற்று மனங்கலங்காமல், ரெகுநாயகர் திருவடியை மனதிலே தியானம் பண்ணிக்கொண்டு இராவணனைப் பார்த்துச் சொல்லுவார். அடா! இங்குற்ற அரக்கர்களில், இராவணனென்பவன் ஆர்? அவனெங்கேயென்றுகேட்டவுடன், இராவணனுக்குக்கோபம்வந்துசொல்லுவான். இந்தஇலங்கைநகர்க்கதிபதியாகியஇராவணேசுரன் நான்றான். உன்னையிங்கு தூதனுப்பினவனாரடா வென்று கேட்க அநுமார் சொல்வார்.

விருத்தம்.

ஈட்டிய வலியு மேனை யியற்றிய தவமும் யாணர் [புந்
கூட்டிய படையுந் தேவர் கொடுத்தநல் வரமுங் கோட்
டீட்டிய பிறவு மெய்தித் திருத்திய வாழ்வு மெல்லாம்
நீட்டிய பகழி யொன்றான் முதலொடு நீக்க நின்றான்.

ஷ

மூலமு நடுவு மீறு மில்லதோர் மும்மைத் தாய
காலமுங் கணக்கு நீத்த காரணன் கைவி லேந்திச்
சூலமுந் திகிரி சங்குங் கரகமுந் துறந்து தொல்லை
ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி
[வந்தான்.

ஷ

அன்னவற் கடிமைசெய்வே னுமமு மநுமனென்பேன்
நன்னுத றன்னைத்தேடி நாற்பெருந் திசையும் போந்த
மன்னரிற் றென்பால் வந்த தானைக்கு மன்னன் வாலி
தன்மக னவன்றன் றூதன் வந்தனென் றனியே
[னென்றான்.

வசனம்.

அடா இராவணா! முன்சொன்ன மூலமும், ஆதியும், அந்தமும், நடுவுமில்லாததாக விருக்கின்ற பரப்பிரமவஸ்துவானது, இவ்வளவுகால மிருக்கிறதென்றகணிதத்தி லீடுபடாமல், காரண மூர்த்தியாய்ச் சிருஷ்டி

திதி, சம்மார மென்ற முத்தொழிலும் செய்யப்பட்ட திரிமூர்த்திகளாய்ச் சூலம், மான், மழு, சங்கு, சக்கரம், தண்டுகமண்டலமும் விட்டுத் திருப்பாற்கடல், செந்தாமரைமலர், கைலயங்கிரிஇந்தமூன்றிருப்பிடமும்விட்டு ஏகநாயகனாக, அயோத்தியாபுரியில், தசரதச்சக்கரவர்த்திக்குப் புத்திரனாக வந்தவதரித்துக், கையிலே வில்லுமேந்தி, இராமனென்ற பெயரும் பெற்றுக் கொண்டிருக்கிறபோது, விசுவாமித்திரரின் வேண்டுகோளின்படிக் கானகம்வந்து, உன் பாட்டியார் தாடகையானவள், அவர்களைக்கண்டு போர்செய்துஇறந்துபோனது நீ கேட்கவில்லையோ?

அதன்பிறகு தந்தையார் தாயார் வாக்கிய பரிபாலனஞ்செய்ய அவரும், அவர் தேவியாரும் தம்பி லட்சுமணருமாக வனத்திலேவந்திருக்கிறபோது,விராதன் கவந்த னென்ற இராட்சதர்களையுங் கொன்று, உனக்கு உபபலமாயிருந்த கரன், தூஷணன், திரிசிரன் முதலான இராட்சதப் பெரும்படைகளையும் சம்மாரஞ்செய்ததும் நீ கேட்க வில்லையோ? இவைகளை நீ அறியாதிருப்பினும், உன் உடன்பிறந்தாளான சூர்ப்பநகியை மூக்குமுலை முதலிய அங்க பங்கஞ் செய்ததை அறிந்திருக்கலா மல்லவா? வாலியானவன் உன்னைப் பத்துத் தலைப்பூச்சி யென்று தன் பிள்ளை அங்கதன் உன்னை வைத்து விளையாட வேண்டுமென்று பிடித்துத் தன் வால் மயிரிற்கட்டிப் போட்டு மறந்துபோக, அதைத் தன் மனைவிகண்டு அவிழ்த்துவிட, நீ பிழைத்தோடினும் அப்படிப்பட்ட வாலியை ஒரு கணையால் உயிரை வானுலகேற்றியதை நீ கேட்கவில்லையோ? அப்படிப்பட்ட பராக்கிரம சாலியான ஸ்ரீராகவருடைய தூதனடா, என் பேர் அநுமானடா என்றும்,

அடா இராவணு! நான் வந்த காரியத்தை இன்னும் சொல்லுகிறேன் கேளென்றும் அனுமார் சொல்கிறார் ஸ்ரீமந் நாராயணனாகிய இராமபத்திர சுவாமியினுடைய தேவியை நீ களவிலே கொண்டு வந்தபடியால், சுவாமி இதோ படைகளுடன் போருக்குப் புறப்பட்டார், என்போன்ற வானரங்கள் எழுபதுவெள்ளஞ் சேனைகள் அவரிடங் கைகட்டிக் காத்துச் சேவகஞ் செய்ய அவர்களில் அடியேன் சக்தியற்றவனானபடியால், நீ முன்பாகப் போய் விசாரித்து வாவென்று அனுப்பினார். ஆனதால் நான் வந்தேன் இப்போது என்ன சொல்லுகிறாயென்றார்.

அப்போது இராவணனுக்குச் சினமும் புன்சிரிப்பும் பிறந்து, தன்னைச் சூழவிருக்கிற மந்திரி பிரதானிகளைப் பார்த்துச் சொல்லுவான். இந்தக் குரங்கு சொன்னதைக் கேட்டீர்களோ? இவன் அந்தப் பரப்பிரமம் அறிந்தவன்போல ஸ்ரீமந் நாராயணன் வந்து அயோத்தியிற் பிறந்தானென்றும், இராமன் என்று பெயர்பெற்று வீரன்போலக் கையில் வில்லெடுத்துப் பெண்களைச் சம்மாரம் பண்ணினானென்றும், சிறிது புகழிப்பாக என்முன்னே சற்றும் சட்டை பண்ணமற் சொன்னானே, வாலியானவன் என்னைப் பிடித்துக் கட்டினானென்றும், அவனை இராமன் சம்மாரம்பண்ணினானென்றும் சொன்னானே, இராமன் மகா பராக்கிரமசாலியென்றால், வாலியுடனே எதிர்த்தல்லவோ யுத்தஞ் செய்யவேண்டும்? அப்படியல்லாமல் ஒளிந்து பாணந் தொடுத்து எய்து கொன்றவனை ஒரு வில்லாளியென்றும், பலவானென்றும் சொல்லி இந்தச் சபையில் என்னை மரியாதையில்லாமல் பேசினான் இவனை விடுவேனோ என்று சொல்லிக் கோபாக்கினியுடன் முன்

னூற்றிருபது பற்களையும் நெறுநெறென்று கடித்து, ஆக்கிரமித்துப் பின்னும் நீ தூதுவனென்றால் என்னிடம் கிரமமாக வந்து பேசத்தக்கது பேசவேண்டுமல்லாமல் என்னுடைய வனத்தையுமழித்துக் காவலாளிகள் மற்ற சைன்யங்களையுங் கொன்றாயே, உன்னை உயிருடன் விடுகிறதில்லை என்று சீறியெழுந்து வாளையெடுத்து வெட்ட ஓங்கினான்.

அப்போது விபூஷணன் பதறியெழுந்து இராவணனைத் தடுத்துத் தேவரீருடைய யோசனை என்னமாகவிருக்கிறது? தூதாக வந்தவன் எதிராளிக்கு அஞ்சிப் பேசுவானோ? நாளை நமக்கும் அப்படியல்லவோ, தூதர்களைத், தானுபதிகளைச், சீடர்களைக், குருக்களை, மாதாபிதாக்களைப், பெண்களை வெட்டினபேருமுண்டோ? அப்படி வெட்டினாலும் உலகத்தார் நகைப்பார்கள், அதனால் நமக்கும் பெருமையல்ல, ஆனால் உம்முடையகோபந்தணியும்படியாய் இந்த அநுமானுக்கு,ஒரு ஆக்கினைசெய்து உயிருடன் விட்டுவிடுகிறது நல்லதேயல்லாமல், இவனை வெட்டுகிறது காரியமல்லவென்றான். அப்போது இராவணன் அந்த ஆக்கினை என்னவென்று கேட்க விபூஷணன் சொல்லுவான்.

இவன் வாலிலே சீலையைச் சுற்றி எண்ணெயிற்றோய்த்து நெருப்பைக் கொளுத்தி விட்டால், வால் வெந்து குறுகிப்போகும். அப்பால் கூழைவால் குரங்கென்று, குரங்குக் கூட்டங்கள் தங்கள் கூட்டத்திற் சேர்க்காமல் தள்ளிவிடும், இவனுந் தேசத்தில் ஒருவனே யல்லாமல் வேறல்ல, என்றுசொல்ல மற்றவரும் விபூஷணர் சொன்னது நல்ல யோசனைதானென்று சம்மதமானார்கள். இராவணனுங் கேட்டு நல்லது அப்படியே செய்யுங்களென்று கட்டளையிட்டான்.

உடனே சில அரக்கர்கள் ஊரிலுள்ள சீலைத்துணிகள் கொண்டு வந்து அனுமார் வாலிலே சுற்றுகிறபோது, அனுமார் தன் வாலைப் பூரித்துக் கொடுத்தார். புடவையெல்லாம் ஒன்றாய் முடிந்து சுற்றினாலும் வாலில் ஒரு சுற்றுக்குமேற் காணவில்லை. பின்னும் வஸ்திரங்களைக் கொண்டு வந்து அவைகளை முடிகிறவர் சிலர், எண்ணெய்க்குடம் நெய்க்குடங்களைக் கொண்டு வந்து ஊற்றுகிறவர் சிலர், இப்படியாகக் கொண்டு வந்து துணிகளைச் சுற்றிப், போதாமல் கிரயத்திற்கும் வாங்கிச் சுற்றியும் பற்றாமல் பட்டணமெல்லாம் கிங்கரைவிட்டு, வீட்டுக்கொரு சேலைதவறாமல் வாங்கிச்சுற்றி முன்னிருந்ததற்கு இப்போதுகொஞ்சம் சாஸ்தியாயிருக்கிறதேபோதுமென்று, அனுமாரைப் புகழ்ந்துகொண்டாடி, அநேக ஆயிர நெய்க்குடம் எண்ணெய்க் குடங்களைக்கொண்டு வந்து, அந்தப் பந்தத்திற் றோய்த்து நெருப்பைக் கொளுத்தினார்கள்.

எண்ணெய்ச்சீலையில் நெருப்புப் பற்றுகிறபோது இராவணன் முதலாகிய சகலரும் பக்கத்தில் விலகிநின்று, அடா குரங்கே! நீ தூதனாக வந்தவன் கிரமமாக நம்மிடத்திற்கு வந்து பேசிப்போகாமல், இந்தப் பட்டணத்தில் வந்து குறும்புபண்ணினபடியால் உனக்கு இந்த ஆக்கினை செய்தோம், ஓடிப் பிழைத்துப் போவென்று போகச் சொன்னார்கள். அப்போது வாலிற் பற்றியெரிகிற அக்கினியானது, இலங்கைப்பட்டணத்திற்கு மேல் கொழுந்து விட்டெரிய, புகையானது ஆகாயமெல்லாம் பரந்து செல்ல வேகிறபோது சில அரக்கிகள் போய்ச் சீதையிடஞ் சொல்ல, சீதை அக்கினிபகவானே! நான் கற்பு நிலை தவறாமல் கணவனே தெய்வமென்றிருந்தால், வந்த அனுமார் வாலிற்கொ

ளுத்திய அக்கினி சுடாமல் குளிர்ந்து அனுக்கிரகஞ் செய்ய வேண்டுமென்று பிரார்த்தனை செய்தாள். அப்போது அனுமாருக்குக் காந்தல் குளிர்ந்து சுகமாயிருந்தது.

அப்போது அனுமார் இதுவு நம்முடைய சுவாமி அனுக்கிரக மென்று மனதிலெண்ணி இனி நம்முடைய திராணியைக் காட்ட வேண்டு மென்று பின்னேயிருக்கிற வாலை யெடுத்துக் கையிற் பந்தம்போற் பிடித்துக்கொண்டு நாம் வந்ததற்குப் பிராட்டியையும் பார்த்தோம், அசோக வனத்தையும் அழித்தோம், வந்த இராட்சதர்களையும் மடித்தோம், இராவணனையுங்கண்டு வார்த்தையாடினேம், பின்வாலிலும் நெருப்பைக் கொளுத்தப் பெற்றோம், இனி யிந்த இலங்காபுரியைச் சுட்டுக் கொட்டை பரத்தினாற்றான் நம்பெயர் சந்திர சூரியாள் உள்ளளவும் நிலை நிற்குமென்று, இலங்கைப் பட்டணத்தில் விபூஷணன் மாளிகை தவிர மற்ற ஒவ்வொரு வீட்டுகளிலும் சுற்றி வாலிலுள்ள நெருப்பை நீட்டிக்கொண்டு போகிறபோது, சேர்ந்து அவ்வளவு வீடுகளும், மண்டபம், சத்திரம், சாவடிகள் முதலியதும் ஒன்றாய்ப்பற்றி யெரிந்து வளைந்து வளைந்து சுடுகிற போது அதில் அநேகம் பேர்கள் இறந்தும், தாயைக் காணமற் றேடுவாரும், தகப்பனைக் காணமற் றேடுவாரும், அண்ணன் தம்பி மாமன் மைத்துனன் உற்றார் பெற்றார் உறவினரைக் காணமற் றேடுவாரும், அழுது அபயமிடுவாரும், இப்படி நாலுதிசையும் புகை மூடிக்கொண்டு போகவழி தெரியாமல் அலைகிறபேரும், மூர்ச்சையாற் கிடக்கிறபேரும்; பொசுங்கிக் கிடக்கிறபேரும், இப்படிப் பட்டணமெல்லாம் நாலுதிசையிலும் அக்கினியாற் றகிக்கிறபோது, இராவணன் இந்திரசித்துமுத

லிய தன் சுற்றத்தாரோடு மேகமண்டலத்திற் போயிருந்தான்.

இப்படியாக இலங்கைப் பட்டணத்தை அக்கினிபகவான் உதவியாலும், தன்னுடைய பராக்கிரமத்தினாலும், சுட்டுக் கொண்டு வருகிற ஆஞ்சநேயரைப் பிடித்துக்கட்ட வேண்டுமென்று மேகமண்டலத்திலிருக்கும் இராவணன் இந்திரசித்தினிடம் சொன்னான். அப்போது இந்திரசித்து சில அரக்கரை, விட்டு அநுமாரை வளைத்து பிடிக்கச் சொல்லி ஏவினான். அப்படியே ஆரவாரஞ் செய்து கொண்டு அநுமாரைக் கிட்டி வருகிற போது, அநுமார் பார்த்துப் பந்தம் போல் எரியும் வாலால் சுருட்டிப் போனதுபோக இவர்கள் தான் மீதம், வலிய அகப்பட்டார்களென்று கடைசியாய்க் கொண்டு போகிற மார்க்கமாகிய கடலில் தூவி யெறிந்து விட்டு, வாலிலிருந்த பந்தத்தையும் உருவி எறிந்து விட்டு, இனிமேல் நாம் நிற்கிறது சரியல்லவென்று ஆகாயத்திற் கிளம்பி வடக்குமுகமாக ஸ்ரீராம் ராமென்று தோத்திரஞ் செய்து கொண்டு போய் நடுக்கடலில் மைநாக பருவதத்தில் வந்து ஸ்நானஞ்செய்து, அநுஷ்டானமுடித்து, விருந்துண்டு புறப்படுகிற போது இக்கரையில் முன் அநுமாருடன் கூடவந்த சேனைத்தலைவர்களும், சேனைகளும் இன்னும் அநுமார் வரவில்லையே இலங்கையில் என்ன காரணம் நடக்கிறதோ, நாம் ஒன்று மறியோமே யென்று கவலையுடனிருக்கிறபோது, ஆஞ்சநேயர் ஆகாய மார்க்கமாக வந்து அந்த இரண்டு வெள்ளஞ் சேனைகளுக்குள்ளே குதித்து நின்றார்.

அப்போது எல்லோருங் கூடிக்கொண்டு அநுமாரே! உயிர்பிழைத்து வந்தீரோ? அம்மனைக் கண்டீ

ரோ சொல்லும்? உம்முடைய உடம்பெல்லாம் இப்ப டிக்காயமாக இருக்கவேண்டிய காரணமென்ன? என்று தடவிக் கொடுத்துக் கேட்கிறபோது, அனுமார் தான் இலங்கைக்குப் போனதும், தேடினதும், அசோக வனத்திற் பிராட்டியாரைக் கண்டதும், அடையாளம் பெற்றதும், அசோகவனத்தை யழித்ததும்; காவலர் இராட்சத சேனைகள் முதல் அட்சயகுமாரனை வதைத் ததும், பின் இந்திரசித்து வந்து பிரமபாசத்தாற்கட்டி இராவணனிடங் கொண்டு போனதும், அங்கு அவனு டன் வாதாடினதும், வாலில் நெருப்பைக் கொளுத்த அதனால் இலங்கைமுழுதும் அக்கினிக்கிரையிட்டதும், இவை யெல்லாம் ஆதியோடந்தமாகச் சொல்ல மற்ற சேனைகள் கேட்டுச் சந்தோஷமடைந்தனர்.

## திருவடிதொழுத படலம்.

பின் அனுமார் மற்றோர்களைப் பார்த்து, இனி நாம் சகலரும் சுவாமியண்டை போவோம் புறப்படுங்க ளென்று, மகேந்திரகிரியைவிட்டு எல்லோருங் கீழிறங் கிச் சந்தோஷமாக, இரவும் பகலுமாக நடந்து காடு மலைகளெல்லாங் கடந்து, சுக்ரீவன் சிங்கார வனத்தில் வந்து தங்கிக் கனிவர்க்கங்களைச் சாப்பிட்டும், தேன்க ளைக் குடித்தும், அழித்துந் திரிகிறவேளையில் அந்த வனக் காவலாளிகள் கண்டு, முன்னே போய், சுவாமி! யாதோ அநேக வானரங்கள் வந்து நம்முடைய வனக் கனிகளை யெல்லாம் பறித்து அழித்துக் கொண்டு திரி கிறதென்று முறை யிட்டார்கள்.

அந்நேரம் அம்மனைத் தேடப்போன மேற்குத் திசை, வடதிசை, கீட்டிசை இந்த மூன்று திசையிலும் போன சேனைகள் அம்மனைக் காணோமென்று வந்து சொல்ல, சுக்ரீவன் மூன்று திசைக்குப் போனவர்களும்

வந்துவிட்டார்கள்; இனித் தென்றிசைக்குப் போன சேனைகள் வரவில்லை என்னமாவருகிறார்களோ என்று கவலையுடனிருக்கிறபோது, காவலர்கள் போய் முறையிட்டதையறிந்து, நம்முடைய வனத்தை ஒருவராலும் அழிக்கத்தகுமோ? ஆனால் தென்றிசைக்குப் போனவர்கள் வந்திருக்கவேணும், அதிலும் போன காரியம் ஜெயமானபடியால், நம்முடைய வனத்தை யழித்துக் கொண்டு வருகிறார்களென்று யோசனை செய்து கொண்டிருந்தான்.

அப்போது அனுமார் முதலாகிய சேனைகள் சமுத்திரகோஷம்போல் முழங்கிச்சுக்ரீவன் சமுகத்தில் வந்து ஜெயம் ஜெயம் அம்மனைக் கண்டோமென்றார்கள். அந்நேரம் சுக்ரீவன் மனமகிழ்ந்து அனுமாரைப் புகழ்ந்து பேசிக்கொண்டு படைத்தலைவர் கூட்டத்துடனே சுவாமியின் சன்னிதி முன்போய்க் கண்டார்கள். அவ்வேளையில் அனுமார் முதலானவர்கள் வந்ததைக் கண்ட இராமசுவாமியும் இலட்சுமணரும் என்னசெய்தி கொண்டு வந்தார்களோவென் றெண்ணுகிற போது, எல்லோரும் நமஸ்காரஞ் செய்தார்கள். அப்போது அனுமார் சுவாமியைப் பார்த்து,

விருத்தங்கள்.

கண்டனென் கற்பினுக் கனியைக் கண்களால்
தெண்டிரை யலைகட லிலங்கைத் தென்னகர்
அண்டர் நாயகவினித் துறத்தி யையமும்
பண்டுளை துயருமென் றனுமன் பன்னுவான்.

ஷ

விற்பெருந் தடந்தோள் வீர வீங்குநீ ரிலங்கை
வெற்பின்
நற்பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டே
னல்லேன்

இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப
தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றுங் களிநடம் புரியக்
கண்டேன்.

வேலையு ளிலங்கை யென்னும் விரிநக ரொருசார்
விண்டோய்
காலையு மாலை தானு மில்லதோர் கனகக்
கற்பச்
சோலையங் கதனி னும்பி புல்லினற் றெடுத்த
தூய
சாலையி னிருந்தாளைய தவஞ்செய்த தவமா நத்
தையல்.

மண்ணொடுங் கொண்டு போனன் வானுயர் கற்பி
னுடன்
புண்ணிய மேனி தீண்ட வஞ்சுவா னுலகம்
பூத்த
கண்ணகன் கமலத் தண்ணல் கருத்திலாட் டொடுதல்
கண்ணின்
எண்ணருங் கூருய் மாய்தி யென்றதோர் மொழியுண்
டென்பான்.

தீண்டில னென்னும் வாய்மை திசைமுகன் செய்த
முட்டை
கீண்டில தனந்த னுச்சி கிழிந்தில தெழுந்து
வேலை
மீண்டில சுடர்கள் யாவும் விழுந்தில வேதஞ்
செய்கை
மாண்டில தென்னுந் தன்மை வாய்மையா லுணர்தி
மன்னே.

வசனம்

நமஸ்காரம் பண்ணி அம்மனைக் கண்டேன் கண்டேனென்று சீதாதேவி கொடுத்த சூடாமணியைக் கொடுத்தார். அதைச் சுவாமி வாங்கி இரண்டு கண்களி

லும் ஒற்றிக்கொண்டு அதி சந்தோஷமானார். பின் சந்தடியெல்லாம் அப்புறம் விலகச்சொல்லி, அநுமாரைத் தனியேவைத்துக்கொண்டு இலங்கைக்குப்போய் வந்த விபரங்கேட்க அநுமார் சொல்லுகிறார்.

விருத்தம்.

தாட்கொண்டேன் றுயரந் தீர்த்தேன் றம்பிரான்
பொருட்டினாலே
வாட்கொண்ட கண்ணா டன்னை மலர்ந்தபூங்
காவிற் கண்டேன்
கோட்கொண்டார் செல்வம் போலக் குலாவிய
விலங்கை மூதூர்
நாட்கொண்டே னிலங்கை சுட்டே னுனுமிப்
போது வந்தேன்.

வசனம்.

சுவாமி! தங்கள் ஆக்ஞையின்படிச் சேனைகளுடன் பல இடங்களிலுந்தேடித் தென் சமுத்திரமடைந்து, மகேந்திரகிரியிற் றங்கும்போது, சடாயுவின் தமையன் 'சம்பாதி' என்பவன் அவ்விடத்துச் சிறகுதீய்ந்து கிடந்தனன். நாங்கள் இராம நாமத்தை யுச்சரித்தோம், அதால் அவன் சிறகு வளர்ந்தது கண்டு எங்கள்விருத்தாந்தமும் விசாரித்துச், சீதாபிராட்டியாரின் விபரமுஞ் சொன்னார். அப்படியே மகேந்திரகிரியிலேறி, இலங்கையிற் றாவிப் பட்டணமெல்லாந்தேடி, அசோகவனத்திலிருக்கும் அன்னையைக் கண்டு, தாங்கள் சொன்ன அடையாளங்களையுஞ் சொல்லிக் கணையாழியையுங் கொடுத்தேன். அன்னையார் வாங்கிக் கண்ணிலொற்றிக் கொண்டு, சுவாமி என்னை மறந்தனரோ வென்றும், சீக்கிரம் வந்து சிறை மீட்டாவிட்டால் உயிரைமாய்த்துக் கொள்வே னென்று சொன்னாளென்றும் போய்ச் சொல்லென்று சூடாமணியுங் கொடுத்தார்கள், வாங்கிக்

கொண்டு பிராட்டியாரிருந்த இடந்தவிர மற்றவ் வனத்தையும் அழித்து, இலங்கையுள் இராவணனைக் கண்டு வார்த்தையாடிப் பட்டணத்தையும் சுட்டுக் கொட்டை பரத்தினேனென்று, தான் போய் வந்தவரை யாவுஞ் சொல்ல சுவாமி கேட்டுச் சந்தோஷமா யிருந்தார்.

பின் சுக்ரீவன் சுவாமி! இனி மேல் நடக்குங் காரியங்களுக்கு உத்திரவாக வேண்டு மென்ன; இராமபிரான் சேனைகளைத் தயாரித்துப் புறப்பட வேணுமெனக் கட்டளையிட்டுச் சுவாமி எழுந்திருக்கிற போது, சுக்ரீவன் சுவாமி! எல்லாம் சித்தமா யிருக்கிற தென்றனன். பின் அறுபத்தெட்டு வெள்ளம் வானரச் சேனைகளும், இரண்டு வெள்ளங் கரடிச் சேனைகளும் ஆக எழுபதுவெள்ளஞ் சேனைகளும், சமுத்திர கோஷம்போல முழக்கிக் கொண்டுபடை யெழும்பின, அதனாலெழுந்த தூளிப்படலம் ஆகாயமெல்லாம் பரந்து, சூரியகிரணங் களுந் தெரியாமல் மறைந்து போகப் புறப்பட்டுப் போய்ச் சுவாமி முதலிய பேர்களுந் தென் சமுத்திரக் கரைபோய்ச் சேர்ந்து சுவாமி தெற்பாசனத்தில் வீற்றிருந்தார்.

சுந்தரகாண்டம் முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

கம்பநாட் டாழ்வார் திருவடிகளே சரணம்.

ஆறுவது

# உயுத்த காண்டம்.



காப்பு.

ஒன்றே யென்னி னொன்றேயாம்
பலவென் றுரைக்கிற் பலவேயாம்
அன்றே யென்னி னன்றேயா
மாமே யென்னி னாமேயாம்
இன்றே யென்னி னின்றேயா
மிலதென் றுரைக்கி னிலதேயாம்
நன்றே நம்பி குடிவாழ்கை
நமக்கிங் கென்னே பிழைப்பம்மா.

## மந்திரப் படலம்.

வசனம்.

பின்னர் இலங்கையில் நடக்கிற வரலாறுஎன்ன வென்றால்:—இலங்கைப் பட்டணந் தீப்பட்டு வேகிற போது, மேகமண்டலத்திற்குப் போயிருந்த இராவணன் முதலியோர், பின்இலங்கையில் ஓரிடத்தில்வந்து ஒன்றாய்த் திரண்டுகூடி ஆலோசனை செய்து கொண்டிருந்தார்கள். அப்போது இலங்கை வெந்து பாழாயிருப்பதை இராவணன் கண்டு கோபமுண்டாகிச் சொல்லுவான். நம்முடையபட்டணமெல்லாம்நெருப்பினால் வெந்து அழிந்துபோனதை மீண்டும் பிரமா வந்து ஏன் சிருஷ்டிக்காம லிருக்கின்றான்? அவனைக் கூட்டி

வாருங்களென, உடனே பிரமா வரப் பார்த்து, இராவணன் இவ்விலங்கையை முன்போல சிருஷ்டி செய்யுமென்றான்.

விருத்தம்.

பூவரு மயனெடும் புகுந்து பொன்னகர்
மூவகை யுலகினு மழகு முற்றுற
ஏவென வியற்றினன் கணத்தி னென்பரால்
தேவரு மருள்கொளத் தெய்வத் தச்சனே.

ஷை

பொன்னினு மணியினு மமைந்த பொற்புடை
நன்னகர் நோக்கின னாக நோக்கினன்
முன்னயி னழகுடைத் தென்று மொய்கழல்
மன்னனு முவந்துதன் முனிவு மாறினன்.

வசனம்.

பிரமதேவர் அப்படியே நல்லதென்று தெய்வத் தச்சனை யழைப்பித்து, வெந்துபோன இந்நகரைமுன்போல உண்டாக்குவாயெனக் கட்டளை யிட்டார். தெய்வத்தச்சன் அந்தப்படியே நல்ல தென்று இலங்கை முழுவதும் அரண்மனை, ஆஸ்தான மண்டபம், மாடமாளிகை, கூடகோபுர முதலிய யாவையும், முன்னிருந்ததிலும் பதின்மடங்கு அலங்காரங்களாக இருக்கும்படிச் சிருஷ்டித்துக் கொடுத்தான். இராவணன் இலங்கை முழுதும் கண்ணுற்றுச் சந்தோஷமுடையவனாய்ப் பிரமாவைப் புகழ்ந்து, தெய்வத் தச்சனுக்கு வேண்டிய சன்மானஞ் செய்து அனுப்ப, அவர்கள் தங்கள் இருப்பிடம் சென்றார்கள். அப்பால் யாவர்களுங் கூடி யோசனை பண்ணுகிறார்கள். என்னவென்றால்:—

இராவணன் எல்லோரையும் பார்த்து மூக்கிலே கையை வைத்துச் சிரித்துச் சொல்லுவான். ஒரு குரங்கானது இந்தச் சமுத்திரந்தாண்டி, அங்காரதாரை, இலங்கணி யிவர்களையுங் கொன்று, கோட்டையேறிப்

பட்டணமெங்குந் தேடிச் சீதையைக் கண்டு திடஞ் சொல்லி, நமது அசோக வனத்தையு மழித்து, அங் குற்ற காவலரையும் மற்ற சம்புமாலி, பஞ்சசேனுதிபதி கள், அட்சயகுமாரன் இவர்களையுங்கொன்று, பிறகு இந் திரசித்துடன் சென்ற நூற்றைம்பது வெள்ளஞ் சேனை களையுங் கொன்று, நம்மிடம் வந்து, நம்மையும் மரி யாதையில்லாமற் பேசிப், பட்டண முழுவதுஞ் சுட்டு, இரண்டு லட்சங் கிங்கரர்களையுஞ் சுட்டுக் கொன்று போட்டு, ஆகாயத்திற் பறந்து மாயையாகப் போன விடந்தெரிய வில்லை. இந்த அதிசயம் நாம் எப்பொழு துங்கண்டதில்லை, எழுபது வெள்ளங் குரங்குகளிருக் கிறதென்றும், அதிலே நான் கடையானபடியால் என் னையனுப்பி வைத்தார்களென்றுஞ் சொல்லிப்போனது இதற்கென்ன செய்யலாம்? நீங்கள் யோசனை செய்து சொல்லுங்க ளென்று எல்லோரையும் பார்த்துக் கேட் டான்.

அது கேட்ட கும்பகர்ணன் எழுந்து இராவண னைத் தண்டஞ்செய்து சொல்லுவான். கேளும் அண்ணு! நான் ஒரு வசனஞ் சொல்லுகிறேன் முடியக் கேட்டுப் பிறகு, உமது மனம்போல் செய்துகொள்ளும் என்னவெனில்:—ஆதிலட்சுமிபோல ஒரு பெண்ணைக் கொண்டு வந்து நீர் சிறையில் வைத்திருக்கிறீரே, அவள் அழுத கண்ணீர் நமது பட்டணத்தில் விழும் வரையில் நாமெல்லோருஞ் சேமமடைவதில்லை, நம் முடைய வம்மிச மெல்லாம் அழிந்து போகிறதற்குச் சந்தேகமில்லை, நமது பட்டணத்தைக் குரங்கு சுட்டுக் கொளுத்தினது போல், நம்மையுஞ் சுடுவதற்கு நீர் நெருப்பைத் தேடி யெடுத்து வந்தீர் இனிமேல் ஒரு கணப்பொழுதேனும், அந்தப் பெண்ணை இங்கு வைத்

திராமற் கூட்டிப்போ யிராமனிடம் விட்டு அறிந்தறி யாமற் செய்த அபசாரம் பொறுக்க வேணுமென்று, உபசாரஞ் சொல்லி வாருமென்று சொன்னான்.

அப்போது அங்குற்ற யாவரும் இராவணன் முகத்தை நோக்கினார்கள். அதுகண்ட இராவணன் சினந்து, கும்பகர்ணனைப் பார்த்துச் சொல்லுவான். மாடுபோலே பருத்துப் பனைபோல வளர்ந்ததே யல்லாமல் உனக்கு ஒரு யோசனையு மில்லை, ஒரு குரங்குக்கும், மானிடருக்கும் பயந்து கொண்டு, நாம் எடுத்து வந்த ஓர் பெண்ணைக் கொண்டு போய் விட்டுவிடு, இல்லையேல், துன்பம் வரப்போகிற தென்று சொல்லுகிறாயே! நீ நல்ல புத்திமான், உனக்கு நித்திரை மயக்கந் தெளியவில்லை, உன்னை யோசனை கேட்டவனாரடா? போடா வென்றான்.

பின்னுங் கும்பகர்ணன் சொல்லுவான் வேண்டாம் அண்ணா! என் வார்த்தையைத் தட்டாதீர், நான் சொல்லச் சொல்ல உமக்குக்கோபமுண்டாகிறது. அவளொரு விளக்கும் நீரொரு விட்டிற் பூச்சிபோலு மிருக்கிறது, அது எப்படி முடிகிறதோ? ஆனதால் விட்டுவிடுமென்றான். அப்பொழுது இராவணனுக்குக் கோபம் வந்து அடா! நீ நல்லவனானால் என்முன் னில்லாதே, இப்பொழுதே சென்று குறை நித்திரையுஞ் செய்போடா இங்கே நில்லாதே யென்றான், அப்போது கும்பகர்ணன் பேசாது நடந்து தன்னரண்மனையிற் போய்ச் சயனித்துக் கொண்டான். அப்பால் இராவணன் மற்றோர்களைப் பார்த்துச் சொல்லுவான். அந்தப் பயந்தவன் யோசனையைக் கேட்டீர்களோ வென்றான். அப்போது 'அரசன் சொன்னது உலகஞ்சொல்லும்' என்ற பழமொழி போல், அவ்வுரையைக் கேட்ட யாவரும்

நல்ல சிறையைக் கண்டாற் கொண்டு வந்து வைப் பது இராஜாக்களுக் குள்ள வழக்கந்தான், அதிலும் தாங்கள் திரிலோகாதிபத்திய முடையவர், தேவதா ஸ்திரீக ளெல்லாம் தங்களுக்கு அடிமையா யிருக்கிற போது இந்த மானிடப் பெண் எம்மாத்திரம்? தங்களை யந்தப்பெண் அடைகிறதற்குஎன்னதவஞ்செய்தாளோ? அப்படி யிருக்கும்போது நாம் வலியக் கூட்டிப் போய் விடுவதென்றால் தங்கள் பெருமைக்கு அழகல்ல, அவர் யோசனை பண்ணாது சொன்னார். அதைப்பற்றிய வருத் தம் வேண்டாம் தங்களிஷ்டம் என்றார்கள்.

அப்போது இராவணன் ஆனந்த சாகரத்தின் மூழ்கினவனாய்ச் சிரித்து நீங்கள் சொல்வது தான் சரி இது தான் ஆழ்ந்த கருத்துடைய பெரியோர்களின் யோசனை அப்படியல்லவோ சொல்லவேண்டும் அதை விட்டு சிம்மத்திற்கு நரி யோசனை சொல்லுவதுபோல் சொல்லுகிறா னென்றான்.

விபூஷணன் புத்திகூறல்.

இரணியன் கதை.

அப்போது விபூஷணன் எழுந்து பணிந்து அண்ணா! நானொரு விண்ணப்பஞ் செய்கிறேன் கிஞ் சிற்று செவிசாயுங்களென்றான். அவ்வுரையைக்கேட்ட இராவணன் நல்லது நீயும் கும்பகர்ணன் தம்பி யல் லவோ உன் கருத்தையும் வெளியிடு வென்றான், அப் போது விபூஷணன் சொல்லுகிறான்.

முன்னொருகாலத்தில் இரணியன் இரணியாட்ச னென்னும் பெயர்களையுடைய அசுரேந்திரர்கள், ஈரே ழுபதினான்கு புவனத்திற்கும் அதிபதிகளாகி யரசாண் டனர். அவர்களில், இளையவனாகியஇரணியாட்சனென்

பவன், மகா அகங்கார முடையவனுய்த், தனக்கு நிக ரில்லை யென்று, பூமியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு பாதாளத்துட் போகும்போது, சாட்சாத் ஸ்ரீமந் நாரா யணமூர்த்தியானவர் வராகரூப மெடுத்து, அந்தஇரணி யாட்சனைச் சங்கரித்துக் கொண்டு வந்து முன்போலப் பூமியை விரித்தார். அதை அறிந்த தமையனுகிய இர ணியன் மகா கவலையுற்று, என் றம் பி யை க் கொன்ற பழிக்குப் பழி வாங்காமல் அந்த விஷ்ணுவை விடுகிற தில்லை யென்று வனத்திற்குப்போய்ப் பிரமனைக்கோரித் தவஞ் செய்தான்.

இவன் றவந்திற்கிரங்கிப் பிரமா பிரசன்னமாகி உனக்கென்ன வரம் வேண்டு மென்று கேட்க, இரணி யன் ஏ தேவனே! இந்த ஈரேழு பதினன் குலகத்திலு முள்ள உன்னுலும், விஷ்ணுவாலும்; சி வ ஞ லும், தேவர்களாலும், முனிவர்களாலும், மனிதர்களாலும், மற்ற யாவராலும், எந்த ஆயுதங்களினுலும், மிருகங்க ளினுல், பட்சிகளினுலும், மற்ற எவ்வகை உயிர்களினு லும், இ ர வி லும், பகலிலும், உள்ளிலும், புறம்பிலும் இறவாத வரந்தரவேணு மென்றுன். அப்போது பிர மதேவரானவர் அப்படியேதந்தேனென்று தன்னிருப் பிடம் சென்ருர். பின் இரணியன் அவ்வரத்தைப்பெற் றுக் கொண்டு வந்தபின் சகல தேவர்களையும், திக்குப் பாலர்களையும் இம்சித்துத் தான் ஏவும் பணிவிடை செய்யும்படி ஆக்கினைசெய்து, கொடுங்கோல் செலுத்தி உலகத்தில் விஷ்ணு ஆலயங்களை யிடித்துத் தாட்பரத் தியும், அவனடியார்களையும், பசுக்களையும், துளசிநந்த வனத்தையும், அறப்போக்கியும், எவ்விதமேனும் அந் த விஷ்ணுவைக் கொல்லவேணு மென்று கங்கணங் கட்டிக் கொண்டு, சகல உலகத்திற்கும்தானே தெய்வம்

தன் பெயரே எங்கும் விளங்க வேண்டுமென்றும், 'ஓம் இரணிய நம' என்னும் மந்திரத்தை யுச்சரிக்கவேண்டு மென்றும் கட்டளை யிட்டு நடத்தி வந்தான்.

இவைகளுக் காற்ருத தேவர்கள் முனிவர்கள் சென்று திருப்பாற் கடலில் ஸ்ரீமந் நாராயணனிடம் முறையிட்டார்கள். அது அறிந்தபகவான் தேவர்காள்! அஞ்சாதீர்கள், உங்கள் இடுக்கந் தீர்த்து வைக்கிறே னென்று, அபயாஸ்தங்கொடுத்து அனுப்பிவிட்டு, இர ணியன் மனைவி லீலாவதிக்குக் கருப்ப முண்டாகும் படிக் கிருபாநோக்கம் பாலிக்க, அப்படியேகெற்பமுண் டாகி, வயிற்றுள் ளிருக்கும் சிசுவுக்கு நாரதர் உபதேசிக் கப் பெற்றுப் பின் குழந்தையைப் பெற்ருள்.

அக்குழந்தையை நாளொரு வண்ணம் பொழு தொரு மேனியுமாக வளர்த்து வந்த பின் இரணியன் அக்குழந்தைக்குப் 'பிரகலாதன்' என்று நாமமிட்டுப் பிறகு ஐந்து வயது நிறைந்தவுடன், தங்கள் குலகுரு வாகிய சுக்கிராசாரியாரை யழைத்து நல்லதினத்திற் பள்ளியில் வைத்துக், கற்பித்துக் கொடுக்கும்படிக் கட் டளையிட்டான்.

அந்தப்படிச் சுக்கிரபகவான் பிரகலாதனைப்பள் ளிக்கு அழைத்துப்போய், நல்ல முகூர்த்தத்தில் எழு திய ஏட்டைக் கையிற் கொடுத்து 'ஓம் இரணிய நமஹ' என்று பிரகலாதனைச் சொல்லும்படிச் சொன்னர். அப் போது பிரகலாதன் 'ஓம் நமோ நாராயணுய நமஹா' என்று சொன்னன். அதைக்கேட்ட சுக்கிர பகவான் திடுக்கமுற்று, அப்பா பிரகலாதா! உன் றந்தை பேர் சகலருந் துதிக்கிருர்கள் நீ அதைவிட்டு ஏதோ சொல் லுகிருயே! நான் சொல்லுகிறபடிச் சொல்லென்ருர். அதைக்கேட்ட பிரகலாதன், நான் சொல்லுகிறேன்

கேளும், சருவலோக தயாபரனும், எங்கும் நிறைந்த வஸ்துவா யிருக்கிற ஸ்ரீமந் நாராயணனை உள்ளத்திற் றியானஞ் செய்து ஹரி ஓம் நமா என்று சொல்லாமல், இன்று அல்லது நாளை யழிந்து போகிற ஒருவனைத் தெய்வமாக நினைத்து, இரணிய நமா வென்று சொல்ல லாகுமா? நீர் இந்தப் பாவந்தீர ஹரி ஓம் நமாவென்று சொல்லுமென்றான்.

அப்போது அவ்விடம் நின்றவர்கள் இவ்வசனங்கேட்டவுடன் ஓடிப்போனார்கள். சுக்கிரபகவானும் மனந்திடுக்க முற்று இரணியனிடத்திற் போய் நின்றார். அப்போதுஇரணியனனவன் குருவைப்பார்த்துக்குழந்தைக்கு ஓதி வைத்தீரா? வென்று வினவினன். அதற்குச் சுக்கிரபகவான் நான்உம்முடைய குழந்தைக்கு ஓதி வைக்கும்போது, அவன் வேறொன்றைச் சொல்லுகிறான், அதை நான் சொல்லக்கூடாது என்சிரம் வெடித்துப் போம் ஆதலால் அவனை யழைத்துக்கேளுமென்றார்.

அப்போது பிரகலாதனைக் கூட்டிவரச் சொல்லி, இரணியன் றன் துடைமீது வைத்துக்கொண்டு, குழந்தாய்! வாத்தியாரிடம் என்னசொன்னை யென்றுகேட்கப் பிரகலாதன் சொல்லுகிறான். ஐயா! நீர் நல்ல குருவைத் தேடிக் கற்பித்துக் கொடுக்கும்படிக் கட்டளை யிட்டீர்? நிலை நிற்கும் பொருளின்னதென்றும், நிலையில்லாத பொருளின்னதென்றும் பகுத்தறிவில்லாதவரா யிருக்கிறார்; எங்கும் பரப்பிரம வஸ்துவாய் விளங்கா நின்ற ஸ்ரீமந் நாராயணனைத் தியானஞ்செய்து, ஹரி ஓம் நமா என்று சொல்லாமல், ஒருகாலத்திலழியநேரும் உம்மை நினைத்து, இரணிய நமா என்று சொல்லச் சொல்லுகிறார். ஆனதால் நீர் இப்பொழுதே இந்த உபாத்தியா

யரை நம்முடைய பட்டணத்தில் வையாமற் றுரத்தி விட்டால், உமக்கும் எனக்கும் மோட்சமுண்டு, இல்லையேல் நமக்கு நரகமே கதியென்று பிரகலாதன் சொன்னான்.

அதைக் கேட்ட இரணியன் மிகவுங் கோபங்கொண்டு இவன் எனக்குப் புத்திரனே அல்ல, இவனைக் கொண்டுபோய் வெட்டிப் போடுங்களென்று கொலைஞர்களிடம் கட்டளை யிட்டான். அப்படியே பிரகலாதனைக் கொண்டு போய் வெட்டுகிறபோது, அந்த வெட்டுத் தவறி, வெட்டினவர் காலிலேபட மகா வேதனையோடு திரும்பி வந்து இரணியனுக்கு அறிக்கை யிட்டார்கள். அதைக் கேட்ட இரணியன் அப்படியா நமது யானை காலால் மிதித்து நசுக்கும்படிச் செய்யுங்க ளென்ருன். அந்தப்படிக் கொண்டு போய்ப் பட்டத்து யானையின் காலால் மிதிக்க விடுஞ் சமயம், பகவனருளால் ஓர் சிம்மம் வந்து யானையை யடித்துக்கொன்று விட்டுப்போய் விட்டது.

அதுகண்ட கொலைஞர்கள் வந்து இரணியனிடம் நடந்ததைச் சொல்லக் கேட்டு அப்படியா! விட்டு விடுவேனு சர்ப்பங்களைக் கடிக்க விட்டுக் கொல்லுங்களென்று கட்டளை யிட்டான். அப்படியேகூட்டிப்போய் நாகங்களை விட்டுக் கடிக்க விட்டனர். வந்த நாகங்கள் பிரகலாதனைச் சுற்றி வலம் வந்து அவன் பாதத்தில் வணங்கின; அதைப்போய் இரணியனிடம் சொல்ல அப்படியா! இனி அக்கினி வளர்த்து அதிலே தள்ளிக் கொல்லுங்க ளென்ருன். அப்படியே கூட்டிப்போய்க் கட்டைகளை யடுக்கி அக்கினி வளர்த்து, அதிற் பிரகலாதனைத் தள்ளினுர்கள்.

அப்போது பிரகலாதன், ஏ ஜெகத் திரட்சகா! ஆபத்சகாயா! கருணாகரக் கடவுளே! இது வேளை அடியேனைக் காக்கவேணும் நாராயணா வென்று பலவாறு தோத்திரஞ் செய்த பிரகலாதனை, அக்கினி பகவான் கையாலேந்தி, வெளியிற் கொண்டு வந்து விட்டுப் போயினன். அதுகண்ட கொலைஞர்கள் இரணியனிடம் வந்துசொல்ல, நல்லது விஷத்தைக்கொண்டு வாருங் களென்று வாங்கிப் பாலிற் கலந்து, தன் மனைவி லீலாவதியை யழைத்து, அவள் கையிற் கொடுத்து, இந்த விஷத்தை உன் மகனுக்குக் கொடுத்துக் கொல்லென்று கொடுத்து விட்டுப் போய் விட்டான்.

பின் லீலாவதி பிரகலாதனைப் பார்த்து அடா என் அருமைச் செல்வனே! உன் றந்தை பேர் சொன்னால் தோஷமென்னடா? சொல்லடா கண்மணி! என்றாள். அப்போது பிரகலாதன் தாயே! அந்த அழியாப் பரம்பொருளின் நாமத்தைத் தவிர அழிந்து போகும் ஒருவன் பெயரை, என்னாவினால் உச்சரிக்க மாட்டேன் என்று, விஷங்கலந்து வைத்திருந்த பாற் சொம்பை வாங்கிக் கடகடவென்று குடித்துக் கீழே விழுந்தான். அதைப்பார்க்கச் சகிக்காமல் லீலாவதி உள்ளே போய் விட்டாள். பின் பிரகலாதன் நித்திரை தெளிந்தவன் போலெழுந்தான். அதனையும் இரணியனிடம் சென்று சொன்னார்கள், அதைச் செவியுற்ற இரணியன் மிகு கோபாவேச முடையவனாய், அவனை மலைமேலேற்றிக் கட்டிக் கீழே யுருட்டி விடுங்களென்றனன்.

அப்படியே கொண்டு போய் மலைமேலேற்றிக் கைகாலைக் கட்டிக் கீழே யுருட்டினார்கள். மேலிருந்து கடகடவென்று உருண்டு கீழே வந்து விழுமுன், பூமிதேவியானவள் முன்னால் வந்து தாங்கி யெடுத்து விட்

டனள். அதையும் போய்ச் சொன்னார்கள். அப்போது இரணியன் பிரகலாதனைக் கூட்டிவரச் சொல்லி அடா கண்மணி! இனியாகிலும் என் பெயரைச் சொல்லடா! வென்றனன். அதுசமயமும் பிரகலாதன் அந்த ஸ்ரீமந் நாராயணன் பெயரைத் தவிர, மற்றவன் பெயரைச் சொல்ல மாட்டேனென்றனன். அப்போது இரணியனுக்கு வீராவேசம் வந்து, இவன் நமது குழந்தையல்ல நமக்குச் சத்துருவே யாவானென்று, அடா! நீ சொல்லும் அந்த ஹரி என்பவன் எங்கேயிருக்கிறான்? அவனைக்காட்டு என்றனன். அப்போது பிரகலாதன் சொல்லுவான்.

விருத்தம்.

சாணினுமுளனோர் தன்மை யணுவினைச்
சதகூறிட்ட
கோணினு முளன்மா மேருக் குன்றினு
முளனிந் நின்ற
தூணினு முளன்முன் சொன்ன சொல்லினு
முளனித் தன்மை
காணுதி விரைவி னென்று னன்றெனக்
கனகன் சொன்னான்.

ஷை

உம்பர்க்கு முனக்கு மொத்திவ் வுலகெங்கும் பரந்து
ளானைக்
கம்பத்தின் வழியே காணக் காட்டுதி காட்டி
டாயேல்
கும்பத்தின் கரியைக்கொன்மாக் கொன்றெண நின்னைக்
கொன்றின்
செம்பொத்த குருதி தேக்கி யுடலையுந் தின்பே
னென்றான்.

ஷை

என்னுயிர் நின்னாற் கோறற் கெளியதொன் றன்றி
யான்முன்

சொன்னவன் ஹெட்ட தொட்ட விடந்தொறுந்
தோன்றூ ஞயின்
என்னுயிர் யானே மாய்ப்பல் பின்னும்வாழ் வுகப்ப
லென்னின்
அன்னவற் கடியே னல்லே னென்றன னறிவின்
மிக்கான்.

வசனம்.

ஐயா! அவர் உம்மைப் போலும் என்னைப்போ லும் ஒருவடிவு கொண்டோ இருப்பார்! கடலுமவர், மலையுமவர், பேச்சுமவர், மூச்சுமவர், பகலுமவர், இரவு மவர், ஒளிவுமவர், வெளியுமவர், நீருமவர், நானுமவர், அவரசையாமல் அணுவு மசையாது, எங்குந்தாஞ நிறைந்த வஸ்துவானவர் இந்தத் தூணிலுமிருப்பார், துரும்பிலுமிருப்பார் என்று சொன்ஞன்.

அதைக்கேட்ட இரணியன் கோபங்கொண்டு, ஆனல் இந்தத் தூணிலே காட்டடா, காட்டாவிட் டால், உன்னை யிந்தக் கட்கத்திற்கு இரையாக்கி உன் இரத்தத்தைக் குடிப்பேன், எங்கே காட்டடா வென்று அந்தத் தூணை யடித்தான். அந்த அடிபட்ட மாத்தி ரமே தூண் வெடித்து, அதன் மத்தியில் ஹரி ஆனவர் நரசிங்கரூபமாகக் காணப்பட்டார். அப்போது இரணி யன் பார்த்து நகைத்து வாடா நரமிருகமே! நீ எனக் குப்பயந்து போனவன் எங்கே போயிருக்கிருய்! அப் படியல்லவோ வரவேணு மென்று எதிர்க்கிறபோது, அந்த நரசிங்கம் உக்கிரமத்துடன் பாய்ந்து இரணிய னைப்பிடித்து மடியிலே வைத்துக்கொண்டு, நகத்தினுல் வயிற்றைக்கீறிக் குடரைப்பிடுங்கி மாலையாகப்போட்டுக் கொண்டது.

இமைப் பொழுதில் அப்படியான இரணியன் மாண்டு போனன் அவனுக்குத் தேவர்களாலும், மானிடராலும், மிருகங்களாலும், சருவ ஆயுதங்களினலும், இரவிலும், பகலிலும், உள்ளிலும், புறம்பிலும், இறப்பில்லாமல் வரம் பெற்றவனனபடியால், அந்த மகா விஷ்ணுவானவர் மாலை நேரம் வந்து பிடித்து, வாசற்படியில் வைத்துக் கொண்டு கைநகத்தால் வயிற்றைக் கிழித்து உபாயமாய்க் கொன்று விட்டுப் பிரகலாதனுக்குப் பட்டங்கட்டி வைத்து வைகுண்டத்திற் கெழுந்தருளினர். அப்படி வரம் பெற்ற இரணியனை வதைத்த மகா விஷ்ணுவினிடத்தில், இப்போது தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் நம்முடைய இடுக்கண் பொறுக்க மாட்டாமற் போய் முறையிட்டபடியால், மும்மூர்த்திகளுங்கூடி ஆலோசனை செய்து, நீர் சகலவரமு மிந்த அதிகாரமும் வாங்குகிற நாளையில், எல்லோருடைய கையினலும் சாவில்லாமல் வரத்தை வாங்கினீர்; அப்போது மானிடரையும், குரங்கையும், அற்பமாக வெண்ணி வரங்கேளாதபடியால், உமக்குச் சத்துரு மானிடரும் குரங்குமென நிச்சயஞ்செய்து, அந்தமகாவிஷ்ணுவானவர் மானிடராக வந்து, அயோத்தியாபுரியில் அவதரித்தும், தேவர்களைக் குரங்குகளாகவும் பிறக்கச் செய்தும், எல்லோரும் ஒன்று சேர்ந்து சேனைகளாக வந்திருக்கிறர்கள்.

நீர் எடுத்து வந்த பெண்ணை யாரோ வென்று நினைக்க வேண்டாம், அந்த இலட்சுமியானவள் இந்த மானிட ஜென்மங் கொண்டு வந்திருக்கிறள், அந்த இலட்சுமி யழுத கண்ணீர் நம்முடைய பட்டணத்தில் விழுந்தது, இனி நாம் பிழைக்கப் போகிறதில்லை. ஒரு

குரங்கு வந்து நடத்திப்போன வல்லமை கண்டும், உமக்கின்னம் புலப்படவில்லை. அண்ணு! என் வார்த்தையைத் தட்டவேண்டாம். இந்தப் பெண்ணையழைத்துக் கொண்டு போய், அவர்களிடஞ் சேர்த்து, நான் அறியாமல் நடத்திவிட்டேனென்று தண்டம்பண்ணினீராஞல். இப்பிழையைப் பொறுப்பார்கள். அதனுல் உமக்கு ஒன்றுங் குறையில்லை. அப்பால் தேவரீர் சித்தம் என்முன்.

விபூஷணன் இந்த வார்த்தை சொல்லக்கேட்ட இராவணனுக்குக் கோபாக்கினி யுண்டாகிச் சொல்லுவான். அடா! நீ நல்ல யோசனைப் புலிதான், நான் சருவலோக நாயகனுக விருக்கிறேன். அந்தக் குரங்குக் கூட்டத்தி லென்னைப்போய் ஒரு மானிடனைக் கையெடுத்துக் கும்பிடச் சொல்லி, இந்தச் சபையிலே என் பெருமையைக் கெடுத்தாயே. நீ என் கண்முன் னில்லாதே, என்கூடப் பிறந்தோமென்று பேரெடுத்தபடியால், இந்தப்பிழை பொறுத்தேன் இரணியனும், அவனுக்கொரு பிள்ளையாம், அவன் றகப்பனைக் கொன்றுதான் பட்டத்துக் கிருந்தாஞம், இது எனக்குச் சொல்லும் புத்தியோ? எல்லோரும் கேட்டீர்களா? என்முன். இராஜ நோக்க மறிந்து மற்றவர் பேசாதிருந்தனர்.

அப்போது விபூஷணன் பின்னும் பாட்டனுகிய மாலியவான்றனை நோக்கி நீர் பெரியவராகவிருந்தும் ஊமைபோலிருக்கிறீரே என்று கேட்டான். அப்போது மாலியவான், இராவணனைப் பார்த்து, அப்பா! இராவணேஸ்வரா! விபூஷணன் சொன்னது நல்ல புத்தியென்முன். உடனே இராவணன் கோபித்து, இந்தக் கிழவனைத் தூக்கிக் கொண்டு போய் அவன் வீட்டிலே போடுங்களென்று சொன்னுன். அப்போது கிங்கரர்கள்

மாலியவானை வீட்டுக்குப் போகச்சொன்னார்கள். மகோதரனாகிய மந்திரி நாம் வாய்திறந்து ஒன்றுஞ் சொல்லக்கூடாதென்று மவுனமாகவிருந்தான். விபூஷணன் பின்னும் என் வார்த்தையைத் தட்டவேண்டாமென்று இராவணனுடைய இருபாதங்களையும் பிடித்துக்கொண்டு மன்றாடினன்.

விருத்தம்.

ஆயவன் வளர்த்ததன் றாதை யாகத்தை
மாயவன் கல்லிய மகிழ்ந்த மைந்தனும்
ஏயுநம் பகைஞனுக் கினிய நண்பு செய்
நீயுமே நிகர்பிறர் நிகர்க்க நேர்வரோ,

ஷை

பாழிசா லிரணியன் புதல்வன் பண்பெனச்
சூழ்வினை முற்றியா னவர்க்குந் தோற்றபின்
ஏழைநீ யென்பெருஞ் செல்வ மெய்திப்பின்
வாழவோ கருத்தது வரவற் றாகுமோ.

வசனம்.

இராவணன் சீறிக் கோபித்து இரணியனாகிய தகப்பனை மகன் கொன்று விட்டுத் தான் பட்டத்துக்கிருந்தானென்று சொல்ல வந்தாயே அப்படிப்போல் நான் இராமன் கையா லிறந்து போனால் நீ இரணியன் மகனைப் போல் பட்டத்துக் கிருக்கலா மென்று நினைக்கிறாயோ? நீ என்முன்னில்லாதே போடா, அடா தூதர்காள்! இவனை வெளியே பி டி த் து த் தள்ளுங்களென்றனன். அப்போது விபூஷணன் பயப்படாமல் நின்று சொல்லுவான்

விருத்தம்.

மட்டுண்ட கைலாய வரை யெடுத்த
வலிமைமிகு திரடோளா வாலி வாலாற்
கட்டுண்டு நீ கிடந்தா யநேகங் காலம்
காகுத்தன் சரத்தினா லவனும் பட்டான்

முட்டுண்டு குனிவதற்கு முன்னே சொன்னேன்
மொய்குழலைச் சிறைவிடா திருந்தா யாகில்
இட்டுண்டு வாழாதார் செல்வம் போல
இலங்கையழிந் துன்னுயிரு மிழக்கின்றாயே.

வசனம்.

அண்ணா! நம்முடைய ஐசுவரியம் ஒருவருக்குமில்லை. இப்படிக் கொத்த பாக்கியத்தைக் கெடுத்துக் கொள்ளவேண்டாம். உம்மைப் பத்துத் தலைப்பூச்சியென்று பிடித்துக் கட்டிவைத்த வாலியும் ஓர் அம்பினாலிறந்து போனான். அப்படிக் கொத்த பராக்கிரமம் பெற்ற வாலி யசைக்கப்படாத எலும்புமலையும் இலட்சுமணன் இடது காற் பெருவிரலால் எற்றத் தூளாய்ப் போய்விட்டது. அதுவுமல்லாமல் ஏழுமராமரமும் ஓர் அம்பினால், சின்னாபின்னமாய்ப் போய்விட்டது. நான் உனக்குப் புத்திசொல்லுகிறேனேயல்லாமல் வேறல்ல, என்வார்த்தையைத் தட்டவேண்டாமென்றுவேண்டிப் பாதத்தில் வணங்கிக் கண்ணீர் மலங்கினான். அப்போது இராவணன் சொல்லுவான்.

விருத்தம்.

சலத்தொடு மகவை வென்ற தடக்கையில் வாளிருக்க
இலக்கமொன் றில்லா வீர ரெம்பிமா ரிங்கி ருக்கக்
குலத்துமா னிடவர் தம்மைக் கொல்வது பார மல்ல
இலக்கமென் றெண்ண வேண்டா மெம்பி நீ யென்ன
[சொன்னாய்.

வசனம்.

அடா விபூஷணா! நீ அந்த இரண்டு மனிதரையும் மகா பராக்கிரமசாலி யென்று சொல்ல வந்தாயே நீ புத்தியில்லாதவன். என் முன்னே இந்த வசனஞ் சொல்லலாமோ? இனி வாய் திறப்பாயானால் உன்னையிரண்டு துண்டாக வெட்டிப் போடுவேன், என்முன்

னும் நில்லாதே போடா வென்முன் அப்போது விபூஷணன் சொல்லுவான்.

விருத்தம்.

தலையொரு பத்துண் டென்றும் சங்கரன் வாளுண்
டென்றும்
மலையொரு ஏழுண் டென்றும் மன்னவா மகிழ
வேண்டாம்
பலகலை யுள்ள மாயன் பகழியைத் தொடுத்தா
னுகில்
தலையொரு பத்துந் துள்ளித் தரணியில் வீழ்வாய்
கண்டாய்.

வசனம்.

இப்படி விபூஷணன் பலவிதமா யெடுத்துரைத்தும் இராவணன் செவிக்கேறவில்லை. எவருக்கும் 'கெடுமதி கண்ணுக்குத் தோற்ருது' என்றதுபோல் விபூஷணன் வார்த்தையைத் தட்டிப்பேசிய பின் விபூஷணன் மனம் வெறுத்து இனிமேல் இவன் நமக்குத் தமயனுமல்ல, நாமிவனுக்குத் தம்பியுமல்ல வென்று அவ்விடத்தில் நில்லாமல் புறப்பட்டுத் தன் மந்திரிமாரில் நீலன், அனலன், கவையன், சம்பாதி, என்கிற நான்கு மந்திரிமார்களையும் கூட அழைத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாகக் கிளம்பிச் சமுத்திரங் கடந்து கரையில் சேனைகளிருக்கும் இடத்திற்கு வந்தான்.

விபூஷணன் அடைக்கலம் புகுதல்.

விபூஷணன் வருகிறபோது முன்னதாக நின்ற வானரங்கள் கண்டு இதோ இராட்சதாள் வருகிருர்கள் பிடியுங்கள், அடியுங்கள், கட்டுங்கள், வெட்டுங்களென்றுசொல்லி ஆரவாரம் பண்ணுகிறபோது, விபூஷணருக்கு முன்னே மந்திரிமார் வந்து, நாங்கள் உங்களுக்குப் பகைவரல்ல, இராவணேசுரனுடைய தம்பிவிபூஷணர் சுவாமியினிடம் அடைக்கலமாக வருகிருர்; இது

காரியம் உங்களுக்குத் தெரியாதபடியால், அனுமாரிடத்திலும் சுக்ரீவனிடத்திலும் போயறிவிப்பீர்களென்று சொன்னார்கள். அப்போது சிறிது வானரச் சேனைகள் அவர்களைச் சுற்றி வளைந்து கொண்டு, அனுமார் சுக்ரீவனிடத்திற் சிறிதுவானரங்கள் போய்ச்சுவாமி! ஐந்து இராட்சதர்கள் வந்து நம்முடைய சாமியிடம் அடைக்கலம்புக வந்தோமென்று, கபடமாகச் சொல்லுகிறார்களென் றறிக்கை செய்தார்கள்.

அவர்கள் அதைச் சுவாமிக்குத் தெரிவித்தார்கள். அப்பொழுது இராமபிரான் கட்டளையின்படி சுக்ரீவன் முதலாகிய படைத்தலைவர்கள் மற்றயாவரும் கூட்டமிட்டு ஆலோசனை கேட்கிறபோது, படைத்தலைவர்களிற் சிலர், சுவாமி! இராட்சதர்கள்பேரில் நாம் போர் புரிவதாய்ப் படைகளுடன் வந்திறங்கி யிருக்கிறதும் சரி, அவர்களுக்கு ஒரு தயவு மில்லை எதிராளியைச் சேர்க்கலாகாது, இது யோசனை யல்ல வென்றார்கள். அப்போது சுக்ரீவன் சொல்லுவான். சுவாமி! இவர்கள் முன் பழகி யிருந்தால் சேர்க்கலாம் சேர்க்கலாகாதென்று திட்டமாய்ச் சொல்லலாம் மற்றபடி இது யோசனையல்லவென்றான். அப்போது அங்கதன் அவர்களை யழைத்து வாய்ப் பிறப்புக் கேட்டறியலா மென்றான். நீலனும் குமுதனும் சொல்லுவார்கள் சீசீ துரோகிகள் முகத்திலே விழிக்கலாகாது தள்ளிவிடுங்களென்றார்கள். இவை யெல்லாங் கேட்ட சாம்புவர் சொல்லுவார் அடைக்கலமென்று வந்தவரை நிந்திக்கலாகாது காவலிலே போட்டு வைக்கலா மென்றார். அப்போது இலட்சுமணர் சொல்லுவார், அடைக்கலமென்று வந்தவன் பிறகொரு சற்பனை பண்ணினால், இந்தப்பெரும் படையில் நான்கு பேர்கள் வந்து என்ன செய்யப்போ

கிறார்கள்? ஆதலால் வந்தவர்களை மரியாதையாக நடத்திவைக்கிறது காரியம், ஆனால் இன்னும் அனுமாரைக் கேட்டாற் றெரியுமென்றார்.

அப்போது அனுமார் சொல்லுவார், அடியேன் இலங்கைக்குப் போய்ப்பிராட்டியாரைத் தேடுகிறபோது இவன் வீட்டில் ஆசார ஒழுக்கமும், மந்திர வேள்வி ஓமகுண்டம் ஜபதபங்கள், நாராயண நாமகீர்த்தனங்களும் வெகு புநிதமாக நடந்தது. மற்றவர்கள் வீடெலாம் அனுச்சாரமா யிருக்கும், இவனு மிகு புத்திசாலி, அந்த இராவணனுக்கு வேண்டிய புத்திமதியுஞ்சொன்னன். அடியேனை இந்திரசித்துப் பிடித்துப்போய் இராவணன் முன்னே விடுகிறபோது, இராவணன் என்னை வெட்டவேண்டுமென்று சினங்கொண்டு எழுந்தபோது, தூது வந்த பேரை வெட்டலாகா தென்று, இவன் விலக்கி விட்டு என்னைக் காப்பாற்றினன். இவனையடிமை கொள்ளலாம், இலங்கையினுடைய துப்புகளும் இவனால் நாம் தெரிந்து கொள்ளலாம் பிறகு சித்தத்தின்படிச் செய்கிற தென்று சொல்லுவார்.

விருத்தம்.

தேவருக்குந் தானவர்க்குந் திசைமுகனே முதலாய
　　தேவ தேவா
மூவருக்கு முதலறியாக் காரியத்தை முடித்து வைப்பாய்
　　மூன்று நீயே
ஆபத்தி னபயமென வடைந்தவனை யாதரித்தால்
　　அருமை யாகும்
கூபத்தின் சிறுபுனலைக் கடலேற்றுக் கொள்ளாதோ
　　கொற்ற வேந்தே.

வசனம்.

தேவேந்திரன்முதலாகிய தேவர்களுக்குந்தானவர்களுக்கு மேலா யிருக்கிற மும்மூர்த்தியாலும் ஆகாத

காரியத்தை எடுத்துச் செய்து முடிக்கிற சாமர்த்தியம் தேவரீருக் குண்டு. அப்படியிருக்க யாவரேனும், ஒருவர் ஆபத்து வந்ததென்று அடைக்கலமாக வந்தால், அவர்களைக் காத்து ஆதரிக்க வேண்டும். அப்படி மலை விழுந்த பாரமல்ல, இவன் நாலு பேருடனே வந்து நமது பெருஞ் சேனைகளை என்ன செய்யப் போகின்றான்? கிணற்றுச் சலத்தைச் சமுத்திர மேற்றுக் கொள்ளப் பயப்படுமோ? தேவரீருக்கு இதுவொரு பொருளோ? அடைக்கலங் கொள்ளலாமென்று அனுமார் சொல்ல சுவாமி மனமகிழ்ந்து சிரக்கம்பஞ்செய்து ஒரு வார்த்தை சொல்லுவார்.

விருத்தம்.

இடைந்தவர்க் கபய மாமென் றிடைந்தவர்க்
　　　கெறிநீர் வேலை
கடைந்தவர்க் காதி யால முண்டவர்
　　　கண்டி லீரோ
உடைந்தவர்க் குதவா னாகி லுள்ளதொன்
　　　றீயா னாகில்
அடைந்தவர்க் கருளா னாகி லறமென்ன
　　　ஆண்மை யென்ன.

வசனம்.

கேளுங்கள் படைத்தலைவர்களே! முன்னமொரு காலத்தில் ஒரு காரிய நிமித்தமாகத் தேவர்கள் அபய மென்றுமுறையிட அவர்களுக்காக, அந்தப் பொருளைலாமெடுக்கத் திருப்பாற் கடலில் மந்தரகிரியை மத்தாக நாட்டி, வாசுகியை வடமாகப் பூட்டித் தேவர்களொருபுறமும், அசுரர்களொரு புறமுமாக நின்று கடைகிறபோது பாம்பு சிரமம் பொறுக்க முடியாமல், நஞ்சைக் கக்கினது. அது அண்டகூடமெல்லாம்பரவி வரும்போது தேவர்களெல்லாம் சென்று முறையிடுகிற

போது பரமசிவன் அந்த நஞ்சையுமுண்டு, தேவரையும் உலகையும் காக்கவில்லையோ? இவனும் அந்த நஞ்சைப் போலப் பொல்லாதவனே யெனினும், தனக்கு ஆபத்து வந்த தென்று அடைக்கலமாக வந்தால் தள்ளப்படாது. அப்பால் ஒருவன் றன்னிலைமை கெட்டுப் போகிற பொழுது, அதை நிலை நிறுத்தாதவனும், உள்ளமட்டும் உதவாமல் இல்லை யென்றவனும், அடைக்கலப்பொருளைக் காவாதவனும், அவனுடைய ஆண்மை குறைந்து போகுமென்றும் பின்னுஞ் சொல்லுவார்.

விருத்தம்.

பேடையைப் பிடித்துத் தன்னைப் பிடிக்கவந்
தடைந்த பேதை
வேடனுக் குதவி செய்து விறகிடை
வெந்தீ மூட்டிப்
பாடுறு பசியை நோக்கித் தன்னுடல்
கொடுத்த பைம்புள்
வீடுபெற் றுயர்ந்த வார்த்தை வேதத்தின்
விழும தன்றோ.

வசனம்.

முன்னடந்த கதை யொன்றைச் சொல்லுகிறேன் கேளுங்கள் அதேதெனென்றால்:—ஒரு ஆலவிருட்சத்தில் இரண்டு புறு பேடுஞ் சேவலுமாகக்கூடி வாழ்ந்திருக்கும். அவ்விருட்சத்தி னடியில், ஒரு வேடுவன் சென்று, அந்தப் பட்சிகளுக்குக் கண்ணி வைத்திருந்தான். அக்கண்ணியில் பேடு அகப்பட்டது. சேவல் பறந்து சென்றது, அப்பெண் புறுவை வேடுவன் சுட்டுத்தின்று பசியாற்றமல் பின்னையும் ஆண் புறுவுக்குக் கண்ணி வைத்துக் கொண்டு அந்த விருட்சத்தி

ணடியிற் சயனித்திருந்தான். அப்போது மழை மிகுதியாய் வருஷித்து, அதனல் வேடுவன் நனைந்து குளிர் தாங்கமுடியாமல், பல்லுங் கிடு கிடு வென்று அடிக்க நின்றான். அப்போது ஆண் புறா தன்னைப் பிடிப்பதற்குக் கண்ணி வைத்திருக்கிற சத்துருவென்று எண்ணாமல் நம் பொருட்டாய்ப் பசியாய் நிற்கிறானே' தருமமே பிரதானமென நினைந்து, ஐயோ! இந்தப்பாவம் பார்க்க முடியவில்லை யென்று, அச்சேவல் பறந்து மூங்கில் வனத்திற்போய் ஒரு கொள்ளியை யெடுத்து வந்து, பட்டவிறகுக் குச்சிகளை மூக்கினாற் பொறுக்கிக் கொண்டு வந்து அந்த நெருப்பிற் போட்டுச் சிறகினால் வீசி, நெருப்பை மூட்டி யெரியச் செய்தது.

அப்போது குளிர் நடுக்கங் கொண்ட வேடன் உடம்பு வெதும்பிக் குளிர் நடுக்கங்க ளெல்லா நீர்ந்து தெளிவாகி யெழுந்தான் அதே சமயஞ் சேவலானது நமது பேடு மிறந்து போய் நாமினி எவ்வளவு காலமிருக்கப் போகிறோம்? ஆதலால் நம்மையுந் தின்று இந்த வேடன் பசியாறட்டுமென்று, அந்த நெருப்பிற் குதித்து இறந்தது. அதையெடுத்து வேடன் பசி தீர்ந்தான். அந்தப் பேடுஞ் சேவலும் வைகுண்டஞ் சேர்ந்ததென்று வேதங்கள் சொல்லும். அதனால் சத்துருவானாலும் ஆதரிக்கவேண்டும், அடைக்கலமென்று வந்த பேரை அடைக்கலங் கொள்ள வேணுமே யல்லாமல் தள்ளுகிறது நீதியல்ல வென்றுசொல்லி, விபீஷணனை இராஜ வரிசையாக அழைத்து வரக்கட்டளை யிட்டார். அப்படியே அனுமார் அங்கதன் மற்றசிலசேனைகளுஞ் சென்று, விபீஷணரே! உம்மைச் சுவாமி அழைத்து வரச் சொன்னார் வாருமென்றார்கள். அப்போது விபீஷணர் ஆனந்த மகிழ்ச்சியாய்ப் புறப்பட்டார்.

விருத்தம்.

என்னரகு ராமனுரைப் படிவாரும் சாமியிட
மெனச்சுக் ரீவன்
சொன்னதைவி பீஷணன்கேட் டுப்புளகித் தான் கண்
ணீர் சொரிய நின்றான்
பின்னையெனுஞ் சீதைதனைப் பிரிவித்த பாவியுடன்
பிறந்த பாவி
என்னையும்வா வென்றரோ சாமியென்றே தொழுகின்
றான் எழுகின்றனே.

ஷ

வசமுடனிப் படிகண்டு நால்வ ரான
மந்திரிகள் வரவிபீ ஷணனும் வந்தான்
நிசமுடன்ரா மச்சந்த்ரன் சன்னி திக்கு
நேராக வரவரக்கண் ணீரா றாகி
அசையுமுடல் ஒடுக்கியையன் பதத்தில் வீழ்ந்தா
னயோத்திரா மாசரண மென்னைக் காப்பாய்
தெசரதரா மாசரணம் சரணென் றேதோத்
திரஞ்சொல்வான் அதிலேயுத் தரஞ்சொல்—
[வானே.

ஷ

அழிந்தது பிறவி யென்னு மகத்தியன் முகத்திற்
காட்ட
வழிந்தகண் ணீரின் மண்ணின் மார்புற
வணங்கினனைப்
பொழிந்ததோர் கருணை தன்னற் புல்லின னென்று
தோன்ற
எழுந்தினி திருத்தி யென்ன மலர்க்கையா லிருக்கை
யீந்தான்.

வசனம்.

சுவாமி வரவேற்று அமருவா யென்ற பின்னும் விபீஷணர் சொல்லுகிறார். ஆலகாலம்போன்ற கொடிய

இராட்சதர்கூட்டத்திலிருந்து, அவர்கள்செய்யும்பாவத் தொழிலை நாடோறும் பார்க்க முடியாமல், செக்கிலாடும் எள்ளி லொன்று தவறி நிலத்தில் வீழ்ந்து உயிர் பிழைத்ததுபோல், இலங்கையென்கிறசெக்கில் இராட்சதரென்கிற எள்ளைப் போட்டு, இராமபாண மென்னும் உலக்கையால் ஆட்டுவதற்குமுன், அந்த எள்ளிலொன்றான அடியேன் றவறித் தேவரீர் முன் வந்து சரணமென்று அடைக்கலம் புகுந்தேன்; என்னைக்காப்பாற்ற வேண்டுமென்று வீழ்ந்து நமஸ்காரஞ் செய்தான்.

அப்படி வந்த விபீஷணனை ஸ்ரீராமச்சந்திரர் தாங்கி யெடுத்து இருக்கச் செய்து ஆசீர்வாதம்பண்ணி நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம் நம்முடைய தம்பிமாருடன் நீயும் ஆறும் பேர். அதனால் நீ நல்லயோகவானென்று சொல்லிப் பின், இலட்சுமணனைப் பார்த்துத் தம்பி இலட்சுமணா! இன்றைக்கு நல்ல சுபதின மானதால் இந்த விபீஷணனுக்கு, இலங்கைக் கரசனாகப் பட்டங் கட்டுவாயென்று சொன்னார். அந்த உத்தரவுப்படி இலட்சுமணர் முதலானவர்களெல்லாங்கூடி, விபீஷணருக்குத் திருமஞ்சனமாட்டி வைத்துச் சருவாபரணங்களால் அலங்கரித்துக் கிரீடந் தரித்துத், தேவ விமானமுந் தருவித்து விபீஷணரை யேற்றி வானரங்களெல்லாஞ் சூழ்ந்து வரவும் மேள வாத்தியத்துடன் சுவாமியையும் சேனையையும் வலமாய்ப் பவனி வந்து இறங்கி விபீஷணர் சுவாமியின் பாதத்தில் நமஸ்காரம் செய்தார். அப்போது சுவாமி உனக்கு இலங்கைப் பட்டணம் அரசாளத்தந்தோம் அதற்கு ஐயமில்லையென்று சொல்ல, விபீஷணர் கேட்டுச் சந்தோஷமாயிருந்தார்.

## இலங்கைக் கேள்விப் படலம்.

பிறகு இலங்கையின் வரலாறு விவரமாய்ச் சொல்லென்று சுவாமி கேட்க விபீஷணர் சொல்லுகின்றார். இலங்கை எழுநூற்றுக் காதவழி விஸ்தீரணம், அதற்குச் சமுத்திரமே அகழாகச் சூழ்ந்திருக்கிறது, நவரத்னங்களா லழுத்தப்பட்ட செம்பொன் கோட்டை ஏழு மதிளுண்டு, அது வல்லாமல் இராவணனுக்கு இரண்டாயிர வெள்ளஞ் சேனைகளுண்டு, அவனுடன் பிறந்தவன் கும்பகர்ணன் அடியேனுக்கு மூத்தவன், அவன் பிரமாவை நோக்கி, அகோரமான தவம் பண்ணினான். அதைத் தேவர்கள் கண்டு பயந்து பிரமாவிட முறையிட அவர் வேண்டுகோளுக்கிரங்கி மூத்தவளையழைத்து அவனிடமிருந்து நித்திரைத்துவம் வேண்டுமென்று கேளென அனுப்பி விட்டுக் கும்பகர்ணனிடம் வந்து உனக்கு என்ன வரம் வேண்டுமென்று கேட்டார்,

அப்போது கும்பகர்ணன், நித்தியத்துவம் வேண்டுமென்பதை மறந்து, நித்திரைத்துவம்வேண்டுமென்று கேட்டான். அப்படியே பிரமாவும் தந்தோமென்றார். ஆகையால் அவன் எப்பொழுதும் நித்திரை தான் செய்வான். அவனை யாதாமொரு காரியங்களாயெழுப்பினால், அவர்கள் அவ்விடத்தில் மரணமாகிறதேயல்லாமல் பிழைக்கிறதில்லை. கும்பகர்ணனும் மகா பராக்கிரமசாலி அவனுக்கு நித்திரையில்லாதுபோனால் அவனுடன் ஒருவரும் போராடமுடியாது. இவன் வரலாறு இப்படி இனிமேல் இராவணன் வல்லமையும் வரமும் சொல்லுகிறேன். கேளுங்களென்று சொல்லுகிறான்.

இராவணன் தவம் பண்ணுகிற காலத்தில் வருஷத்துக்கு ஒரு தலையாக ஒன்பது தலையையும் அறுத்து

அக்கினியிலே போட்டு ஆகுதி பண்ணிப் பத்தாவது சிரசை யறுக்கும் போது பரமேசுரன் வந்து, அவன் கையைப்பற்றிக் கொண்டு உனக்கு என்ன வரம்வேண்டுமென்று கேட்டார். அப்போது இராவணன் அறுபட்ட ஒன்பது சிரமும் உண்டாகவும் பின்பு பத்துச் சிரமும் அறுபட்டகாலத்தில், திரும்ப உண்டாக வேண்டுமென்றும், மூன்றரைக்கோடிவயதும், தேவர்கள் தனக்குப்பணிவிடை செய்யவேண்டுமென்றும், வரங் கேட்டான். பரமேசுரனும் அப்படியே வரங் கொடுத்துச் சென்றார். அவ்விதம் வரம் பெற்ற இராவணன், கும்பகர்ணன், அவர்களுக் கிளையவன் அடியேன், எனக்கிளையவள் சூர்ப்பநகி, அவளையும் சுவாமியவர்கள் சித்தம் அறியும் இன்னும் இராவணனுக்கு அறுபதினாயிரம் பிள்ளைகளுண்டு அதிலொருவன் இந்திரனை ஜெயித்து வெற்றிகொண்டபடியால் அவனுக்கு இந்திரசித்து என்ற பெயரும், பிறந்தவுடன் சப்தமேகம் குமுறினது போல் சத்தம் பிறந்தபடியால் மேகநாதனென்ற பெயரும் பெற்றிருக்கிறான்.

அவனே யுத்தமுகங்களில் மகா பராக்கிரமசாலியாயிருப்பான். இப்படிப் புத்திர சம்பத்துக்களோடும் இராட்சதச் சேனையுடனும் இராச்சிய பரிபாலனஞ்செய்துகொண்டிருக்கிற இராவணனுடைய திறமை எப்படியெனில்:— வாயுபகவான் வாசற் பெருக்கவும், வருணன் வந்து நீர் தெளிக்கவும், அக்கினி வந்து அரண்மனையில் விளக்கேற்றவும், பிரமதேவர் வந்து பஞ்சாங்கஞ்சொல்லவும், தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் திக்குப் பாலகர் மற்ற சகல லோகத்தார்களும், இராவணன் ஆக்ஞையின்படி நடக்க, இப்படி அதிகாரஞ் செய்து கொண்டிருக்கிறவனிடத்தில், தருமமில்லாமல் அதர்மமிஞ்சியபடியால், எவ்வளவு பலமும், செல்வமு

மிருந்தாலும் அவைகள் அழிந்து போவதற்குச் சந்தேகமில்லையென்று, பின்னுஞ் சொல்லுவான்.

இப்போது அனுமார் இலங்கையில்வந்து அம்மனை நேரிற் கண்டு வருகிறபோது இராவணனுடைய அசோக வனத்தையு மழித்து, அதைக் காத்திருந்த அறுபதினாயிரங் கிங்கரர்களையுங் கொன்று, பிறகு ஜம்புமாலியும் அவனுடைய நாற்பது வெள்ளஞ் சேனைகளையுங்கொன்று, அதுவுமல்லாமல் பஞ்சசேனாதிபதிகளையும், அவர்களுடைய எண்பது வெள்ளஞ் சேனைகளையுங் கொன்று, இராவணன் மகன் அட்சய குமாரனுடைய நூறு வெள்ளஞ் சேனைகளையுங் கொன்று, அவனையும் நிலத்திற் றேய்த்துக் கொன்றார். பிறகு இந்திரசித்துடன் சென்ற இருநூறு வெள்ளஞ் சேனைகளையுங் கொன்று, அவன்கைப்பிரமாஸ்திரத்தால் கட்டுப்பட்டு, இராவணன் சமுகத்தில் வந்து, அவனையு மரியாதையின்றிப் பேசியும், அவன் சமுகத்தில் அநேக ஆயிரம் இராட்சதரையுங் கொன்று, இலங்கை எழு நூற்றுக் காதவழியையுஞ் சுட்டுக் கொட்டை பரப்பிவந்த அனுமார் சேதி தேவரீர் சித்தம் தெரிய வந்திருக்கலாமென்று விபீஷணர் சொன்னார்.

சுவாமி முதலானவர்களுங் கேட்டு மூக்கில் கை வைத்து நாம் சிலது அறிவோமென்று அநுமாரைச் சுவாமி சமீபத்தில் அழைத்து வைத்துக்கொண்டு, இப்படியோ நீ நடத்திவந்தாயென்று முதுவைத் தடவிக் கொடுக்க, அநுமாரும் புன்சிரிப்புற்றிருந்தார். ஒருவனால் இத்தனை அதிசயம் வந்ததென்றால், அவனிடத்தில் நீதியல்லாததே காரணமென்றும், இராவணன் சேனைகளிற்பாதி அநுமார் மாய்த்துவிட்டாரோவென்றும், அதிசயமாகக்கொண்டாடி; அநுமாரைச் சுவாமி

நோக்கிச் சொல்லுவார். அனுமானே! இலங்கையில் நீ இத்தனை சாமர்த்தியஞ்செய்து வந்த உனக்குச் சீதையைக் கொண்டுவருகிறது பாரமல்லவே, ஆனால் என்னுடைய வில்லின் வல்லமை யறியவேண்டியதாய் நினைத்துவந்தாய் போலும் என்று மிகுதியும் புகழ்ந்துகொண்டு சந்தோஷமா யிருந்தார்கள்.

வருணன் அடைக்கலப்படலம்,

அப்பால் இனிக் காலதாமதஞ் செய்யாமல் இலங்கைக்குச் செல்லவேண்டியபடியால், அந்தச் சமுத்திரங்கடந்து போவதற்கு வழிகாட்டும்படியாகச் சமுத்திர ராஜனாகிய வருணனை நோக்கி நாம் தவம் பண்ணியழைக்க வேண்டு மென்று, சுவாமி சொல்லித் தம்பி லட்சுமணா! தருப்பை யாசனம் கொண்டுவாவென்று வாங்கிப் போட்டு அதிலிருந்து வருணனை நோக்கி ஆறு நாள் வரையிலுந் தவஞ்செய்தார். தவஞ் செய்தும்வருணன் வராதபடியால், சுவாமிக்குக்கோபம் பிறந்து சொல்லுவார்

விருத்தம்.

மறுமை கண்டமெஞ் ஞானியர் ஞாலத்து வரினும்
வெறுமை கன்டபின் யாவரும் யாரென விரும்பார்
குறுமை கண்டவர் கொழுங்கன லென்னினுங் கூசார்
சிறுமை கண்டவர் பெருமைகண் டல்லது தேறார்.

வசனம்

இம்மை மறுமைகண்ட மெய்ஞ்ஞானிகள் இப்பூமியில் வந்தால், அவர்களை வெறுமையாள னிவனென்று யாவருங் கிஞ்சிற்று மதியார்கள். அக்கினியானது மெத்தப் பெருத்த காலத்தில் ஒருவரும் நாடார். அது சிறு பொறியாகக் கிடந்தால், அதற்கஞ்சாமல் அதைக் கையினாலுங் காலினாலுந் தேய்த்துக் கரியாக்கு

விடுவார்கள். அப்படிப் போல் இந்த வருணனை நோக்கி நாம் ஏழு நாள் வரை தவஞ்செய்து அழைத்தும் வராதபடியால் நாம் மானிட ஜென்மமாய்ப் பிறந்து நமது இராச்சியத்தையும் விட்டுக் காடுறைந்த படியாலும், நம்முடைய சிறுமையையும் நன்றாகப் பார்த்து, இவர்கள் எம்மாத்திரமென்று எண்ணியல்லவோ கேவலமாக நினைத்திருக்கின்றான். இப்படி நினைத்த வருணனுக்கு நமது பெருமையைக் கொஞ்சங் காட்டவேண்டும் அப்படிக்காட்டினாற்றான் நம்மை யறிவானென்று இலட்சுமணனை நோக்கி, தம்பி இலட்சுமணா! கோதண்டத்தைக் கொண்டு வாவென்று வாங்கி நாண் ஏற்றிச் சிறு நாணொலிகாட்டி அகோரமுகமாகிய அக்கினியாஸ்திரத்தை வருணன் மீது பிரயோகம் பண்ணி விட்டார்.

விருத்தம்.

அண்டமூ லத்துக் கப்பா லாழியுங் கொதித்த தேழு
தெண்டிரைக் கடலின் செய்கை செப்பியென் றேவன் சென்னி
பண்டைநா ளிருந்த கங்கை நங்கையும் பதைத்தாள் பார்ப்பான்
குண்டிகை யிருந்த நீருங் குளுகுளு கொதித்த தன்றே

வசனம்.

அந்தக்கணையானது ஏழு கடலையும் வற்றச் செய்து திடலாய்ப்போனதை வருணன் கண்டு திகைத்து நிற்கிறபோது மிகவிசை கொண்டு வருகிற அக்கினியாஸ்திரத்தைக் கண்ணுற்று மனம் பயந்துதேகம் நடுநடுங்கி, இந்தப்பாணம் வரக்காரணமேதென்றுபார்க்க இராமசுவாமியானவர் இராவண சம்மாரத்திற்கு வந்த காரணமும், கடற்கரையிற் றன்னை நோக்கி ஏழுநாள்

வரையிலும் தருப்பைப்பாசனத்தின் மீதமர்ந்து தவஞ் செய்ததுந் தெரிந்து அச்சங்கொண்டு வருணன் ரத்னாபரணங்களையுங் காணிக்கையாக எடுத்துக் கொண்டு, சீக்கிரம் இராமபத்திரர் முன்பாகவந்து, உமது பாதமே கெதியென்று, தான் கொண்டு வந்த காணிக்கையை வைத்துச் சரணாகதியடைந்து சொல்லுவான்.

விருத்தம்.

பாயிருள் சீக்குந் தெய்வப் பரிதியைப் பழிக்கு மாலை
யாயிருங் கரத்தான் மண்மே லடியுறை யாக வைத்துத்
தீயன சிறியோர் செய்தாற் பொறுப்பது பெரியோர்—
மேற்றே
ஆயிர நாமத் தையா சரணமென் றடியில் வீழ்ந்தான்.

வசனம்.

தீவினையாகிய தொழிலை யறிவில்லாதவர் செய்தால் ஞானசத்தி வாய்ந்த பெரியோர்கள் மனம் பொறுத்து, இரட்சிக்க வேண்டிய கடனாகையால், தாங்கள் சகத்திரநாமம் பொருந்திச் சருவசீவன்களையும் இரட்சிக்குங் கடமை போல, அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று பின்னும் பாதத்தில் வீழ்ந்து தண்டஞ் சமர்ப்பித்து, நான் இது நாள் வரை அயற்சியா யிருந்த காரணமென்னவெனின்:— நல்லதண்ணீர்க் கடலில் இரண்டு மகரமீன்கள் யுத்தஞ் செய்து சமுத்திர மெல்லாங் கலக்கிச் சேருக்கினபடியால், அந்த இரண்டு மீன்களுக்கும் வழக்குத் தீர்க்கும் பொருட்டுப் போயிருந்ததே யல்லாமல், வஞ்சனையாக அடியேன் இருந்ததல்ல; ஆகையால் அடியேனைக் காக்கவேண்டுமென்று வருணன் சொன்னான்.

அச்சமயம் அக்கினி யாஸ்திரம் வந்து சுவாமியைப்பார்த்து இவன் எதிர்த்த சத்துருவென் றிருந்

தேன், இப்பொழுது தேவரீர் பாதமே கெதி யென்று வந்து வணங்கி நிற்கிறபடியால், அடியேனுக்கு வழி யென்னவென்று கேட்டது. சுவாமி வருணனைப்பார்த்து இந்த அக்கினி யாஸ்திரத்திற்கு இலக்கு எங்கே யென்று கேட்டார், அப்போது வருணன் சுவாமி! இந்த ஏழுகடலுக்கு மப்பால் சக்கரவாளகிரியை யடுத்த பெரும்புறக்கடல் மத்தியில் காந்தாரத்தீவுண்டு, அதில் பதினெண்ணுயிரங்கோடி, இராட்சதர்களிருந்துகொண்டு, அடியேனை யந்தக் கடலிற் புகவிடாமல் இடுக்கம் பண்ணுகிறபடியால், அந்த இடுக்கந் தீர்த்துத்தரவேண்டுமென்று கேட்டான்.

உடனே அந்தப் பாணத்தைச் சுவாமி நோக்கினர். அதையறிந்த பாணம் ஆகாயத்திற் கிளம்பி ஏழுகடலும், சக்கரவாளகிரியுந்தாண்டிப் பெரும்புறக் கடலின் மத்தியிலிருக்கிற பதினெண்ணுயிரங்கோடி இராட்சதர்களையும் ஒரு முகூர்த்தத்துள் சம்மாரஞ் செய்து, ஆகாயக் கங்கையிற் றீர்த்தமாடிச் சுவாமியின் முன்பாக வந்து தண்டஞ்செய்துஅம்பறுத் தூணியிற் புகுந்தது. அப்பால் வருணனை நோக்கி இந்தச் சமுத்திரங்கடந்து நாமும், நமது வானரச் சேனைகளும் இலங்கைக்குட் பிரவேசிக்கவேண்டியதிருப்பதால், இந்தச் சமுத்திரத்தினளவு எப்படி யென்று கேட்டார். அப்பொழுதுவருணன் சுவாமியைப் பார்த்துச் சொல்லுவான்.

விருத்தம்.

மடக்கொடி மனதையும் வானி னீளமும்
அடற் பெருங் கடலையு மளக்க லாகுமோ
கிடக்கிறேன் கடலுமா கிரிகள் முட்டவே
நடக்கவென் முதுகினி னம்பி நாரணா.

வசனம்.

சுவாமி! பெண்களுடைய மனதையும், ஆகாயத்தின் அளவும், கடலின் ஆழமும், ஒருவராலும் அளவிடக்கூடாதபடியால் அடியேன் இக்கரையிற் சிரமும், அக்கரையிற் பாதமுமாகப் படுக்கிறேன், சுவாமி யவர்கள் நம்பிக்கையாய்ச் சைன்யங்களை நடத்திச் செல்லுங்களென்று சொன்னான். அப்போது இராமபிரான் மனமகிழ்வுடன் சுக்கிரீவனை யழைத்து, அணைகட்டி முடிப்பதற்குக் கட்டளை யிட்டார்.

---

## சேதுப்படலம்.

அப்பால் சுவாமி சொன்ன உத்திரவுப்படியே எழுபது வெள்ளஞ் சேனையும், இருபத்தினாலு படைத் தலைவரும், சந்தோஷத்துடன் ஆரவாரமாகவெழுந்து பரவிச் சென்று மரங்கள் மலைகள் அவரவர்கரங்களுக் கெட்டியவரையிற் கொண்டு வந்து அணைக்கு முகூர்த்த மிட்ட தெய்வத் தச்சனாகிய நளன் கையிற் கொடுக்க, அந்த மலைகளையும் மரங்களையும் வாங்கி நல்ல முகூர்த்தத்தில் வருணனைச் சார்பாக வைத்துக் கொண்டு பக்கத்திலடுக்கி அணைகட்டினான்.

அந்தத் திருவணை கட்டுகிற சம்பிரதாய மெப்படி யெனில்:—வானரங்கள் கொண்டு வந்து யெறிகிற மலைகளெல்லாம் அம்மானைபோலும், விசுவகர்மா வித்தையாடுகிறவன் போலும் இருக்கும். அதுவல்லாமல் அனுமார் மலைகளைக் கொண்டு வருகிற ஒருமிப்பும் ஆங்காரமு மெப்படியெனில்:—ஒரு மஹா பருவதத்தைப் பிடுங்கிச் சிரமேல்வைத்துக்கொண்டும், இரண்டுபெரிய மலையைத் தோளில் வைத்துக் கொண்டும், ஒரு பாரமானமலையை வாலில் முடிந்து தோளில் தொங்கவிட்டுக் கொண்டும், இரண்டுகாலுக்கும் இரண்டுமலையை எற்றிக்

கொண்டும் வருகிறபோது, தலைமேலிருக்கிற மலை தேவலோகத்தை உரசிக்கொண்டு வர அந்த மலையிலிருக்கிற மரங்கள் தேவலோகத்துக் கற்பக விருட்சங்களிலடிபட்டு முறிந்து போகும்படியாக விசை கொண்டு நடந்துவந்து எறிந்த மலையை நளன்வாங்கிச் சமுத்திற்போடுகிறபோது அந்த மலையானது தண்ணீரில் அமுங்கினவுடன் அதிலுள்ள மரங்களின் கனிகளை மச்சங்கள் புசித்துத் தொத்தி விளையாடிக் கொண்டு, இந்த மலையானது தானிருக்கிற இடத்திலும் சகலருக்கும் உபகாரம்பண்ணும் தன்னுடைய நிலைமை விட்டு எடுபட்டு வந்தோமென்கிற எண்ணமில்லாமல் இந்தச் சமுத்திரத்துளிருக்கிற நமக்கும் உதவி செய்த தன்மை போல் கொடுக்கிற தாதாக்களெங்கே யிருந்தாலும் கொடுக்கிற மனது போகாதென்று பேசிக்கொண்டிருந்தது.

அப்போது அனுமார் பின்னும் ஒரு மலையைக் கொண்டுவருகிற அதிசயம் எப்படியெனில்:—ஆகாயத்தில் நீண்டு வளர்ந்திருக்கிற மலையின் பேரிலுண்டாகிய கனிகளை யேறிப் பறிக்க வழியில்லாமல் தனியே பழுத்து உதிர்ந்து உலர்ந்து ஒருவருக்கும் பிரயோசனமில்லாமற் கிடக்கும். அப்படிக்கொத்த மலையைப்பிடுங்கி வந்து சமுத்திரத்திற்போட்டவுடன், மரங்களின் கனிகளெல்லாம் தண்ணீரில் மூழ்கித் தலைகீழாய் நின்றது, அப்போது மச்சங்கள் கூடிச்சிரித்துச் சொல்லும் இந்த மலையானது சகல பதார்த்தங்களையும் வைத்துக் கொண்டு ஒருவருக்கும் உதவி செய்யாமல் சேற்றில் மூழ்கிக்கொண்டபடியால், இந்த மலையானது சகலமும் வைத்துக் கொண்டு தானும் உண்ணுமல் பிறருக்குங் கொடாமலிருக்கிற உலோபிக்குச் சமானமானதென்றுஞ் சொல்லிக் கொண்டிருக்கிற போது, குமுதனுகியபடைத்

தலைவன் மகா மேருபோல ஒரு மலையைக் கொண்டு வந்து போட்டது எப்படியெனில்:—

விருத்தம்.

குமுத னிட்ட குலவரைக் கூத்தரின்
றிமித மிட்டுத் திரையுந் திரைக்கடல்
துமித மூர்புக வானவர் துள்ளினர்
அமித மின்னு மெழுமெ னு மாசையால்.

வசனம்.

குமுதன் எறிந்தமலை விழுந்த அதிர்ச்சியில் திரையெழுந்து பொங்கி, ஆகாயத்தி லடித்துத் திவலைத்தண்ணீர் தேவலோக மெல்லாஞ் சிதறியபடியால் முன்னஞ்சமுத்திரங் கடைந்து தேவர்களுக்கு அமுதங் கொடுத்த விஷ்ணுவானவர் இப்போது இராமாவதாரமாய் வந்து அமுதங் கடைகிறதுபோலிருக்கிறதென்று தேவர்கள் சந்தோஷமா யிருந்தார்கள். அப்பொழுது நீலன்என்றொரு படைத்தலைவன் ஒருமலையைக்கொண்டுவந்து போட்டான் அது எப்படியெனில்:—

விருத்தம்.

மூசு வண்டின மும்மத யானையின்
ஆசை கொண்டன போற்றொடர்ந் தாடின
ஓசை யொண்கடற் குன்றொட வைபுக
வேசை மங்கைய ராமென மீண்டவே.

வசனம்.

இப்படியாக நீலன் எறிந்த மலையின் மேலிருக்கிற பலாக்கனிகளில் பிரியா வண்ணமாய் வண்டுகள் மொய்த்துக் கொண்டிருந்தது. அந்த மலையானது சமுத்திரத்தில் அமுங்குகிற போது வண்டுகளானது இனிமேல் இந்தமலை யிடத்தில் நமக்கு ஒன்றுஞ்சோலி

யில்லை யென்று பறந்தோடிப் போனது எத்தன்மை யெனில்:—திரவியமுள்ளவனிடம் தேவதாசிகள் உறவு பண்ணித் திரவியம் செலவளிந்த பிறகு உறவும் மனமும் விட்டுப்போனது போலாயிற்று.

அதே சமயம் மாருதியானவர் ஓர் பெரிய மலையைக் கரத்தினுலும், வாலினுலும் விசை கொண்டுபிடுங்கிவந்து சமுத்திரத்திற் போட்டார். அந்த மலை விழுந்த அதிர்ச்சியால், கடற் கரையில் வெள்ளம் புரண்டு இலங்கை வடக்குக் கோட்டை வாசலிலடித்து, வீதிகடோறும் சலம் உருண்டது. அந்த மலையானது சமுத்திரத்தில் அமுங்கிப்பாதாளத்திற் போகிறபோது, அந்தக்கடலில் ஒரு திமிங்கலமென்னு மீன் ஆயிரயோசனை அகல நீளமுள்ளதாய்க் கிடந்தது, அதன் முதுகின் மேல் இந்த மலை போய் விழுந்தவுடன் நமது முதுகில் என்னவோவந்து விழுந்ததென்று அற்பமாக நினைத்துக் கொண்டு, அவ்விடம்விட்டு வடகடலுக்குப் போகிறபோது, அந்த மலையுங் கூடவே திருவணைக்கு உதவாமற் போய்விட்டது.

அப்போது அனுமார் பின்னுமொரு மலையைக் கொண்டு வந்து போடுகிறபோது, அந்தத் திவலையானது ஆகாயத்தி லெழும்பித் திருவணைகட்டுகிற சம்பிரதாயம் பார்க்க வந்து, ஆகாயத்தில் விமானங்களினின்றுவேடிக்கை பார்த்திருந்த தெய்வப் பெண்கள் பேரிற்றெறித்து, வஸ்திர மெல்லாம் நனைந்து உடம்பில் ஒட்டிக்கொண்டபடியால், நாணித் தலைகவிழ்ந்தபடியே ஓடிப்போனுர்கள். அப்பால் அனுமார் மற்ற வானரச் சைன்யங்கள் இன்னும் எவ்வளவு தூரமிருக்கினும் கணப்பொழுதில் மலைகளைக் கொண்டு வந்து சேர்க்கிரேமென்று விசுவகர்மாவினிடம் விருது சொல்லிக்

கொண்டு, கானகங்களெங்கும் பரந்து சென்று, ஆங்காங்கு அவரவர் கைகளுக்கெட்டியவாறு மலைகளைப் பிடுங்கிவந்து சமுத்திரத்திற் போடுகிறதற்கு நளன் கையிற் கொடுக்க மலைகளை யெல்லாம் ஒரு கரத்தாற் றாங்கித் தாங்கிச் சமுத்திரத்திற் போடுகிறது எப்படி யெனில்:—

விருத்தம்.

மஞ்சினிற் றிகழ்தரு மலையை மாக்குரங்
கெஞ்சுறக் கடிதெடுத் தெறிய வே நளன்
விஞ்சையிற் றாங்கினன் சடையன் வெண்ணெயிற்
றஞ்சமென் றோர்களைத் தாங்குந் தன்மைபோல்.

வசனம்.

திருவெண்ணெய்நல்லூர் சடையப்பன் பசித்து வந்த பேருக்கு அன்னமும் பாக்கியமுங் கொடுத்து, இளைப்பாற்றுகிறதுபோல விருந்தது. அநுமார் மலைகளைப் பிடுங்கி விசைகொண்டு வருகிற பராக்கிரமத்தை இராமசுவாமி கண்ணுற்று, விசுவகர்மாவினிடம் சென்று, ஏ விசுவகர்மாவே! உமது பராக்கிரமத்தை நாம் அறிந்ததே, ஆகையால் இப்போது அநுமாரானவர் மிகுதியுங் கோபங்கொண்டு வருகிறபடியால், அவர் கொண்டுவருகிற மலைகளை இரண்டு கரத்தாலும் வாங்கிச் சமுத்திரத்திற் போடுமென்று சுவாமி கட்டளையிட்டார்.

அப்படியே விசுவகர்மா அநுமார் கொண்டுவருகிற மலைகளை யெல்லாம் வலது கரத்தை நீட்டி, இடது கரத்தைத் தன் மார்புவரை கொஞ்சம் மரியாதையாக நீட்டி வாங்கிப் போட்டுச் சமுத்திரம் நூறுயோசனை அகலமும் நூற்றைம்பது யோசனை நீளமும் திருவணை கட்டி முடித்துச் சுவாமிக்கு அறிக்கை யிட்டார்கள்.

அப்போது சுவாமி விசுவகர்மாவுக்கு வேண்டிய சன்மானங்கள் செய்து அனுப்பிவிட்டுச் சுக்கிரீவன் முதலான இருபத்தினாலு படைத்தலைவரும் எழுபது வெள்ளம் வானரச் சேனைகளும் இராமசுவாமியும் லட்சுமணப் பெருமாளும், விபீஷணர் முதலியோர் திருவணையிலேறி நடந்து அக்கரை சேர்ந்து பவளமால் வரையில் வந்து தங்கினார்கள்.

## ஒற்றுக்கேள்விப் படலம்.

சூரியன் அஸ்தகிரி யடைந்தான். அந்தவேளையில், சுவாமியின் சேனைகளின் றன்மையறிந்து வரும்படி இராவணன் 'சுகன், சாரணன்' என்னும் தன்றூதுவர் இருவரையும் அழைத்து நீங்கள் போய் வந்திருக்கும் சேனைகளின் வேவு பார்த்து வாருங்களென்று அனுப்பினான். அவர்கள் வானர ரூபங்கொண்டுவந்து இராமசுவாமியின் சேனைகளைச் சுற்றிப்பார்த்து வருகிறபோது, விபீஷணர் கண்டு அந்த இரண்டு பேரையும் பிடித்துக் கொண்டு வந்து, சுவாமி முன்பாக நிறுத்தினார். அப்போது சுவாமி கண்ணுற்று நீங்கள் யாரென வினவினர்.

அதற்கு அவர்கள் எங்கள்எசமான் பிரதாப லங்கேஸ்வரன் அனுப்பி இவ்விடத்துத் தன்மையைப் பார்த்துவரச் சொல்லியபடி வந்து சேர்ந்தோமென்று சொன்னார்கள். அவ்வுரையைக்கேட்ட சுவாமியானவர் பின்னும் ஒருமுறை சேனைகளை நன்றாய்ச் சுற்றிப்பார்த்துஉங்கள் எஜமானனிடம் போய்ச்சொல்லுங்களென்று அனுப்பி வைத்தார். அவர்களும் அப்படியே சென்று மறுமுறையும் சுற்றிப் பார்த்து இராவணனிடம்போய்த் தெண்டஞ்செய்து சொல்லுகிறார்கள்.

சுவாமி! அடியேங்கள் போய்ச் சேனைகளைச் சுற்றிப்பார்த்து வந்தோம். தங்கள் தம்பியாகிய விபீஷணர் அவர்களைக் கண்டு சந்தித்து அவர்களும் இராஜ வரிசையாக அழைத்து இலங்கைப் பட்டணத்துக்கு அரசனாக மகுடஞ்சூட்டி வேண்டிய வெகுமதியுஞ் செய்து வைத்திருக்கிறார்கள். அப்போது வருணன் வந்து கண்டு, கடலினுடைய ஆழப்பிரமாணமுஞ் சொல்லி மலைகளைப் பிடுங்கிக் கடலில் அணைகட்டி இதோ பவளமால் வரையில் வந்து சேனைகளும் தங்கி யிருக்கிறார்கள். நாங்கள் அந்தச் சைன்யங்களைச் சுற்றிப் பார்த்து வருகிறபோது, தங்கள் தம்பியாகிய விபீஷணர் கண்டு, எங்களைப் பிடித்துக் கொண்டுபோய், இராமசுவாமிக்கு முன் நிறுத்தினர். அப்போது அவர் எங்களை நோக்கி நீங்கள் யார்? எங்கு வந்தீர்களென்று கேட்க நாங்கள் உள்ளபடி சொன்னோம் அதைக் கேட்டுச் சரி நீங்கள் சேனைகளை இன்னும் நன்றாய்ச்சுற்றிப் பார்த்து உங்கள் எஜமானனிடத்திற்போய்ச் சொல்லுங்களென்றனுப்பி வைத்தார். ஆனல் அவர்கள் இரண்டுபேரையும் பார்த்தபேருக்குக் கண்குளிர்ந்திருக்கும். அவர்கள் ஆயுதங்களையும், பராக்கிரமங்களையுங் கண்ணுற்றால், கெற்பங் கலங்கிப்போம். அப்படிக் கொத்த பராக்கிரமசாலிகளென்று தூதுவர்கள் சொன்னார்கள்.

அதைக் கேள்வியுற்ற இராவணன் இருபது புயங்களும் குலுங்கக்குலுங்க நகைத்துத் தூதர்காள்! உங்கள் பார்வைக்கு அப்படித் தோணிற்றோ? நல்லது போய் வாருங்களென்று அனுப்பி விட்டு, மந்திரிமார் காரியக்காரர்களை நோக்கி அடா! இந்த இரண்டு மானிடர்களும், சிறிதுவானரங்களும், சமுத்திரத்தில் அணைகட்டி இக்கரை சேர்ந்து, நம்மைக் கொஞ்சமேனும்

சட்டை பண்ணாமல் நமக்கு எதிராளியாக வந்தார்களே பார்த்தீர்களோ? மந்திரி பிரதானிகளே யென்று சிறிது ஆலோசித்திருந்து பிறகு தனது அரண்மனை சேர்ந்து நித்திரை செய்து எழுந்து ஆதித்தன் உதையமான வுடன், தனது உப்பரிக்கையின் மீது ஏறி நின்று சுவாமியினுடையசேனைகளிருக்கிற சம்பிரமங்களைப்பார்த்து நின்றான்.

## மகுட பங்கப் படலம்.

அவ்வேளை இராமசுவாமி, இலட்சுமணர், விபீஷணர், சுக்ரீவன், அநுமார், அங்கதன் முதலாகிய பேர்களும் பவளமால் வரையில் உச்சியிலேறி, இலங்கைப்பட்டணத்து அலங்காரத்தைப் பார்த்து நின்றார்கள். அப்பொழுது இராவணனுடையஉப்பரிக்கையைச் சுவாமி கண்ணுற்றவுடன் விபீஷணரைப்பார்த்து இப்படிப் பதினொரு சூரியர்கள் உதையமாகி யிருக்கிறதே தென்று கேட்டார். அதற்கு விபீஷணர் சொல்லுவார் வடக்கே உதையமாகிறது தான் சூரியன், தெற்கே பத்தும் ஒரேமுகமாகத் தெரிகிறது, இராவணன் தனது உப்பரிக்கையி னின்று நமது படைப் பெருக்கைப் பார்த்துக் கொண்டு நிற்கிறான், அவன் சிரத்தி லணிந்திரா நின்ற கிரீடத்திற் பதித்திருக்கிற பத்து மாணிக்கக் கல்லின் பிரகாசமே தவிர சூரியனல்லவென்று சொன்னார்.

அதைச் சுவாமியானவர் சூரியனுக்குச் சமானமாய்ப் பிரகாசியாநின்ற மாணிக்கக் கற்கள் எப்படியுள்ளதோவென்று சொல்லிக் கொண்டு நிற்பதைச் சுவாமியண்டையில் நின்ற சுக்ரீவன் கேட்டு, என் செவியில் அந்தக் கல்லின் பெருமையைப் பேசலாச்சுதோவென்று, ஆக்ரமித்து ஆகாயத்திற் கிளம்பி வடக்கு வாசல்

உப்பரிக்கையி னிற்கின்ற இராவணன் முன்பாகத் திடீ ரென்று குதித்து, இராவணன் மீது பாய்ந்து கட்டிச் சேர்ந்து, இருவரும் மடிபிடியாய்ச் சுற்றித் திரிந்து, உயர நின்று அகழ்க்கிடங்கினுள்ளேவீழ்ந்து, சேற்றிற் கிடந்து புரண்டு இராவணனைச் சுக்ரீவன் கிழே புரட்டித் தள்ளி அமுக்குகிறபோது, இலங்கைப் பட்டண மெல்லாம் கோவென்றலறி இனிஇராவணன்பிழைப்ப தரிதென்று யாவரும் பார்த்து நின்றார்கள்.

அங்கு இரண்டு பேரும் அகழ்க் கிடங்கினுட் கிடந்து ஒருவரை யொருவர் புரட்டித் தள்ளிச் சலனப் படுகிறபோது சுக்ரீவன் இராவணனைக் குழியுளமுக்கி அவனுடைய பத்துக்கிரீடத்தையும் கரம்பற்றிக்கொண் டுமேலே கிளம்பிப்பவளமால் வரையில் வந்துகுதித்து, இராமசுவாமியினுடைய பாதத்தில் வைத்துத் தண்ட ம்பண்ணிச் சுவாமி! தேவரீர் அதிசயப்பட்ட கல்லையும் பிரகாசமா யிருக்கிற கிரீடத்தையும் நன்றாய்ப் பாருங்க ளென்று சொல்லி நின்றான்.

அது கண்டு சுவாமி இலட்சுமணர், விபீஷணர், அனுமார் அங்கதன், சாம்புவந்தர் மற்ற வானரவீரர்க ளும், சுக்ரீவனுடையபராக்கிரமத்தைப்புகழ்ந்துபேசிக் கொண்டாடிக்கொண்டு நிற்கிறபோது, சுவாமியானவர் மிகவுங்கலையுடன சுக்ரீவன் முதுகைத் தடவிக்கொ டுத்து, இப்படித் துடுக்கு பண்ணலாமோ? என்று சுக்ரீ வனையும் மற்ற வானரங்களையும் அழைத்துக் கொண்டு சேனையின் பக்கம் போய்ச் சேர்ந்தார்கள்.

பின்பு அகழ்க்கிடங்கினுள் வீழ்ந்து எழுந்து வரமுடியாமல் கஷ்டத்துடன் கிடக்கிற இராவணனை மகோதரன் முதலாகிய மந்திரிமார்களுங் கண்டு மனம் பதறி யோடி வந்து மெல்லத் தாங்கி யெடுத்துச் சேறு

களையெல்லாம் சலங்கொண்டு கழுவி, உயர்ந்த பனி நீரால் ஸ்நானம் செய்வித்து, வேறு ஆடை உடுக்கச் செய்து, கைலாகா யழைத்துப் போய் இராவண னரண்மனையிற் சேர்த்தார்கள். அப்போது இராவணன் தாக சாந்தி செய்து களை தெளிந்து சிம்மாசனத் தமர்ந்து, தலை கவிழ்ந்தபடியே குடுமியை யுணர்த்திக் கொண்டு நகைத்து அடே! இதுமுன் வந்த குரங்கல்லவே இது புதிதாயிருக்கிறதென்று சொல்லிவிட்டுத் தன் குடுமியை முடித்துக் கொண்டு நவரத்ன கசிதமாகிய வேறு கிரீடங்கொண்டு வரச்செய்து, பத்துச் சிரத்திலும் ஆதித்த கிரணம்போற் பிரகாசிக்கும்படியாய்த் தரித்துக்கொண்டு சபாமண்டபத்தில் மகோதரன் மற்ற மந்திரிமார்களும் புடைசூழக் கொலுவமர்ந்திருந்தான்.

## அணி வகுப்புப் படலம்.

இப்பால் சுவாமியானவர் சுக்ரீவன் விபீஷணரை யழைத்துச் சேனைகளை வெகு எச்சரிக்கையுடன் நான்கு புறமும் அணிவகுத்து வைக்கவேண்டுமென்று சொல்ல, அப்படியே சுவாமி கட்டளையிட்டபடி நடத்திவைக்குறோமென்று விடைபெற்றுக் கொண்டு, தெற்குவாசலுக்கு அங்கதனுடனே ஐந்து படைத்தலைவரும் பதினேழு வெள்ளஞ் சேனையும், வடக்கு வாசலுக்கு வசந்தனுடனே ஐந்து படைத்தலைவரும் பதினேழு வெள்ளஞ் சேனையுமாக நான்கு வாசலுக்கும் வகுத்து வெகு சாக்கிரதையாக இருக்க வேண்டு மென்று திட்டஞ் செய்து, அந்த இருபத்தி நான்கு படைத்தலைவருக்கும், அறுபத்தெட்டு வெள்ளஞ் சேனைகளுக்கும் காய்கனி தேன் கிழங்கு பதார்த்தங்கள் கொண்டுவந்து வேளா வேளை தவறாமற் கொடுக்கும்படியாக அதற்கு இரண்டு வெள்ளஞ் சேனைகளையுந் திட்டப்படுத்திச் சுக்ரீவர் சுவாமியிடம் வந்து வணங்கி நின்றார்.

அப்போது சுவாமி அகமகிழ்ந்து இலட்சுமணர், சுக்ரீவர், விபீஷணர் இவர்களுடன் வடக்கு வாசலிற் சேனைகளுட னிருந்தார்கள். இப்படிச் செய்திருப்பதை இராவணனுடைய தூதுவர்கள் கண்டு, ஓடோடியும் மந்திரி பிரதானிகள் மற்ற இராணுவ தளத்துடன் கொலுவிலிருக்கின்ற இராவணனைக் கண்டு தெண்டஞ் செய்து, சுவாமி! அந்த வானரப் படைகள் இலங்கைக் கோட்டையைச்சூழ நான்கு புறமும் படையணி வகுத்துவெகு பராக்கிரமத்துடன் எச்சரிக்கையாக விருக்கிருர்களென்று சொன்னுர்கள்.

அதைச் செவியுற்ற இராவணனுக்குக் கோபம் பிறந்து சொல்லுவான். கைலையங் கிரியைப் பேர்த்தெடுத்த நமது புஜபலபராக்கிரமங்களிருக்க, நமக்குத் துணையாக கும்பகர்ணன், அதிகாயன், இந்திரசித்து மற்ற இரண்டாயிர வெள்ளம் இராட்சதாளும் நம்மைச் சூழ்ந்திருக்க,இரண்டுமானிடர்கள் நமக்கெதிரியென்று பெயரிட்டுக் கொண்டு, சிறிது வானரச் சேனைகளுடன் மலைகளையும் மரங்களையும் பிடுங்கிக் கடலடைத்து இக்கரைக்குக் கிஞ்சிற்றும் அஞ்சாமல் வந்து சேனைகளைப் படை வகுத்து இருப்பதைப் பார்த்தீர்களோ வென்று பெருமையாகச் சொல்லுகிருனே பயந்தவன், என்று சொல்லிப் பின்னு மகோதரனையழைத்து நமது கோட்டைவாசல் நான்குபுறத்திலும் படைகளை யணிவகுத்து வையுமென்று சொன்னுன்.

அப்படியே ஒவ்வொரு பக்கத்திலும் இருநூறு வெள்ளஞ் சேனைகளுடன் வீரசூர பராக்கிரமமுள்ள சேனைத்தலைவராகிய வீரர்களையும் சாக்கிரதையுடன் இருக்க வேண்டுமென்று திட்டஞ்செய்து வந்து, இராவணனைத் தொழுது, கட்டளையின்படிச் செய்து வைத்

திருக்கிறேனென்றுசொன்னான். உடனே கொலுக்கலைந்துபோய்ச் சயனித்திருந்தார்கள்.

பிறகுஆதித்தனுமுதையமாகினான்; அப்போது சுவாமியும் இனி இராவணன் யுத்தத்திற்கு வருவான் என்று ஒரு சாமம் வரையிலும் பார்த்திருந்தார் அப்பொழுதும் இராவணன் வராததால், இவன்இந்நேரம் வரை யுத்தத்திற்கு வராதகாரண மென்னவென்று சுவாமி சுக்ரீவர் விபீஷணர் இவர்களுடன் யோசனை செய்ய, அவர்கள் யாதோ தெரியவில்லை யென்றார்கள். சுவாமியானவர் இராவணனிடம் இன்னும்ஒருதூது அனுப்பி வைக்கவேண்டுமென்று சொல்லி அவனிடம் இப்போதும் அனுமாரை யனுப்பினால், அனுமார் போனவுடன் அங்குள்ள இராட்சதர்கள் அவர்களிடம் அனுமாரல்லது வேறு வீரர்களில்லை யென்று நினைப்பார்கள். இவரும் போனால் சும்மாவருகிறவரல்லர்; ஆகையால் இனி அங்கதனை யனுப்ப வேண்டு மென்று அங்கதனை யழைத்துச் சமீபத்தில் வைத்துக் கொண்டு சொல்லுகிறார்.

விருத்தம்.

என்னவர்க் குரைப்ப தென்ன வேந்திழை
யாளை விட்டுத்
தன்னுயிர் பெறுத னன்றே வன்றெனிற்
றலைகள் பத்துஞ்
சின்னபின் னங்கள் செய்யச் செருக்களஞ்
சேர்த னன்றே
சொன்னவை யிரண்டி னொன்றே துணிகெனச்
சொல்லி டென்றான்.

வசனம்.

நீ இராவணனிடஞ் சென்று இவ்வளவு நேரம் யுத்தத்திற்கு வராமலிருப்பதென்ன? யுத்தஞ்செய்யத்

திராணியுண்டானாலுன்னுடைய படைகளையுந்திரட்டிக் கொண்டு இமைப்பொழுதிற் குள்ளாக யுத்தகளம் வர வேண்டும்; இல்லையானால் சீதாதேவியை யழைத்து வந்து சுவாமியிடஞ் சேர்ப்பித்து, அறியாமற் செய்த அபசாரத்தைப் பொறுத்து ரட்சிக்கவேண்டுமென்று விபீஷணர் சொன்ன வாக்கின்படி நம்மை வணங்க வேண்டும். இவை யிரண்டிலொன்று திட்டமாகக்கேட்டுச் சீக்கிரம் வாவென்று அங்கதனை அனுப்பினார்கள்.

அங்கதன் தூதுப்படலம்.

அங்கதன் சுவாமியை வணங்கி விடைபெற்றுக் கொண்டு சிவ்வென ஆகாயத்திற் கிளம்பி, இலங்கையை நோக்கி வருகிறதை வடக்குக்கோட்டை வாசற்காப்போர் கண்டு இதோ ஒரு குரங்கு வருகுதடாவென்று மிகவும் அச்சங்கொண்டு கதவையடைத்துத் தாள்ப் போட்டு அப்பால் ஓடிப்போனார்கள். வெகு பராக்கிரமத்துடன் சென்ற அங்கதனானவன், கதவுகள் அடைத்திருப்பதைக்கண்டு, அவர்கள் கண்ணிற்படாமல் ஆகாயத்திற் கிளம்பிக் கோட்டையைக் கடந்து இராவணன் கொலுக்கூடியிருக்கிற சபாமண்டப முன்பாக வருகிற போது, அங்குள்ள காவலாளிகள் கண்டு, அங்கதனை யழைத்துப்போய்த் தசக்ரீவன் முன்பாக நிறுத்தினார்கள். அப்போது இராவணன் அங்கதனை நோக்கி, நீ யாரடா? நீ வந்த காரியங்கூறடா? என்று அதட்டி உத்தண்டமாகக் கேட்டான்.

விருத்தம்.

இந்திரன் செம்மல் பண்டோ ரிராவணனென்பான்றன்
சுந்தரத் தோள்க ளோடும் வாலிடை தூங்கச் சுற்றிச்
சிந்துரக் கிரிக டாவித் திரிந்தனன் றேவருண்ண
மந்தரக்கிரியால்வேலை கலக்கினான் மைந்தனென்றான். [னைச்

வசனம்.

அதற்கு இளஞ்சிங்கமாகிய அங்கதன் கிஞ்சிற் றும் அஞ்சாமனின்று கொண்டு வாலி வீரனின் குமா ரன், என் பெயர் அங்கதன், எங்கள் சுவாமி யனுப்பி வைத்தார் அது ஏனென்றால்:—நாங்கள் சேனையோடு வந்து மூன்று நாளாகியும், நீ யுத்தத்திற்கு வராமலிருக் கிறபடியால், சுவாமி மிகவுங் கோபாக்கினியுடன், நீ படையுடனே வந்து யுத்தஞ்செய்யத் திராணி யுண்டா னல் படையுடன் புறப்பட வேண்டும், இல்லையானல் சீதையம்மனைக் கொண்டு வந்து சுவாமியிடம் விட்டு, அறியாமற் பிழை செய்தேனென்று உன்னுடைய தம்பி விபீஷணர்சொன்னபுத்திப்படியேசுவாமியைச்சரணஞ் செய்து கொள்ளவேண்டும். இவை இரண்டிலொன்று திட்டமாய்க்கேட்டு வரச்சொல்லி யனுப்பினர். ஆகை யால், உன்னுடைய சேதி என்னடாவென்று அங்கதன் கேட்டான்.

விருத்தம்.

உந்தையென் றுணேவனன்றே யோங்கறஞ் சான்று—முண்டால்
நிந்தனே யிதன்மே லுண்டோ நீயவன் றாத னுதல்
தந்தன னினக்கி யானே வானரத் தலைமை தாழா[ருன்.
வந்தனே நன்றுசெய்தா யென்னுடை மைந்தவென்—

ஷை

தாதையைக் கொன்ருன் பின்னே தலைசுமந் திருகை நாற்றிப்
பேதைய னென்ன வாழ்ந்தா யென்பதோர் பிழையுந் தீர்ந்தாய்
சீதையைப் பெற்றே னுன்னைச் சிறுவனு மாகப் பெற்றேன்
ஏதெனக் கரியதென்று னிறுதி நாற் கெல்லை கண்டான்.

வசனம்.

அதைக்கேட்ட இராவணன் வாடா தம்பி! அங்கதா! நீ யொருமுறைக்கு எனக்கு மகன்; எப்படியென்றால்:—உன் பிதாவான வாலியும் நானும், தமையனுந் தம்பியுமாக விருந்தோம். அப்படியிருக்க உன் பிதாவைக் கொன்ற சத்துரு விடத்திலிராமல் நீ இவ்விடம் வந்ததே நல்லகாரியமாச்சுது. ஆகையால் நீ இவ்விடத்திற்றானே யிருவென்று சொன்னான்.

விருத்தம்.

வாய்தரத் தக்க சொல்லி யென்னையுன் வசஞ்செய்வா—[யேல்
ஆய்தரத் தக்க தன்றே தூதுவந் தரச தாள்கை[ணின்
நீதரக் கொள்வேன் யானே யிதற்கினி நிகர்வே றெண்
நாய்தரக் கொள்ளுஞ் சீய நல்லர சென்று நக்கான்.

வசனம்.

அதைக்கேட்டு அங்கதன் சிரித்து வாடா இராவணா! உன்னை என் பிதாவானவர் வாலின் உரோமத்தினாற்கட்டிப் போட்டிருக்கிறபோது, நான் உன்னைப் பத்துத்தலைப் பூச்சியென்று வைத்து விளையாடியதை மறந்துவிட்டாயோ? சிங்கத்தின் குட்டியானது நரியினிடஞ் சேருமோ? ஆதலால் மாறான வார்த்தை பேசுவதை விட்டு, நான் வந்த காரியத்திற்கு வகை சொல்லடா வென்று கேட்டான்.

அப்போது இராவணனுக்குக் கோபம் பிறந்து சமுகத்தில் நிற்கிற கிங்கரர்களையேவி அங்கதனை வளைத்துப் பிடிக்கும்படிச்செய்தான். அப்படியே அட்டகாசத்துடன் நெருங்கிய கிங்கரர்களை அங்கதன் வாலிற்பிடித்துக் கடலிலே தூற்றிவிட்டு, இராவணன்முன்பாக ஒவ்வொரு தலையிலுங் குட்டி, மார்பிற்குத்தி மூர்ச்சையாகச்

செய்து சொல்லுவான். நீ நல்ல சுத்தவீரனேயானால் உன்னுடைய தளத்துடன் வெளியேறிப் புறப்படடா வென்று சொல்லிவிட்டு, மின்னொளிபோல் மறைந்து ஆகாயத்திற் கிளம்பி இராமசுவாமி முன்பாக வந்திறங்கித் தெண்டனிட்டுச் சொல்லுவான்.

விருத்தம்.

உற்ற போதவ னுள்ளக் கருத்தெலாங்
கொற்ற வீர னுணர்த்தென்று கூறலு
முற்ற வோதியம் மூர்க்கன் முடித்தலை
யற்ற போதன்றி யாசை யறு னென்றான்.

வசனம்.

சுவாமி! அவன் யுத்தத்திற்கு வருகிறவனல்ல, தேவரீர் சித்தத்தின்படிச் செய்ய வேண்டுவதுதானென்றான்.

---

இராவணன் முதல் நாள் உயுத்தப் படலம்.

அங்கதன் வந்தபின்பு இராவணனானவன் கோபாக்கினியுடன் எழுந்து வானரப்படை கொண்டுவந்தவன் வல்லபத்தை இனி அறியவேண்டுமென்று, ஆரவாரத்துடன் ஆயிரஞ்சேமத்தேரும், நூறு கோடி குதிரையும், இருநூறு வெள்ளஞ் சேனைகளுஞ்சூழ்ந்து வர, இரண்டாயிரம் புரவி பூண்ட தேரிலாரோகணித்துக்கொண்டு, கொடி குடைகள்சூழ, விருது கட்டியங்கள்கூற, முப்பத்திரண்டுவகைமேளவாத்தியங்களுடன் வெளியே புறப்பட்டு, இராமசுவாமியின் சேனைகளுக்கு எதிராகவந்தான். அதையறிந்தசுவாமி, ஆயுதத்துடன் இளையபெருமாள் படைத்தலைவர் சேனாதிபதிகளெல்லாஞ்சூழ வெளியிற் புறப்பட்டு யானைக்கூட்டத்தைக் கண்டசிங்கம்போலத்துள்ளி நடந்து புஜங்கள்பூரித்து

இருகரத்தையுந்திமிர உதறி, வில்லைவளைத்து நாணேற்றிக்கொண்டு வந்து, இராவணன் படைக்கு நேராக நின்றார்கள்.

அப்பொழுது இராவணன் படையும் எதிராக நின்று, வானரச்சேனையும் இராட்சதச்சேனையும் கைகலந்து, வானரச்சேனைகள் அவரவர்க்கியன்றபடிமலைகள், மரங்கள், செடிகளையுங்கொண்டெறிய, இராட்சதச்சேனைகள் முப்பத்திரண்டு வகை ஆயுதங்களையும் பிரயோகஞ்செய்து யுத்தம் பண்ணுகிறபோது, வானரப்படைகள் நிர்வகிக்க முடியாமல் தட்டழிகிறதை இராமசுவாமியும் லட்சுமணருங் கண்ணுற்றுப், பாணங்களைப் பிரயோகஞ்செய்கிறபோது, இராவணன் கண்டு, மறித்துப் பாணப்பிரயோகஞ் செய்து வானரச் சேனைகளைச் சிதற அடித்தான்.

அதுகண்டு சுக்கிரீவன் ஒரு மலையைப் பிடுங்கி வந்து இராவணன் பேரில் விசைகொண்டெறிந்தான். அந்த மலையை இராவணனொரு பாணந்தொடுத்து உடைத்து நொறுக்கினான். அதன்பிறகு சுக்ரீவன் மிகுதியுங் கோபங்கொண்டு, இராவணனின்ற தேரிற்பாய்ந்து, அதை நிலத்தில் வாரியடித்துத் தேர்ப்பாகனையுங் கொன்றுதிரும்பினான். அக்கணமே இராவணன் வேறு தேரேறி நின்றுகொண்டு, சுக்ரீவன் பேரில் ஒருபாணந் தொடுத்து, அவனை மூர்ச்சையாய் விழச்செய்தான்.

அதற்குள்ளாக நீலன், குமுதன், சாம்புவன், முதலாகிய படைத்தலைவர்கள் மலைகளையும் மரங்களையுங்கொண்டெதிர்த்தார்கள். அவர்களையும் அந்தப்படியே, இராவணன் அஸ்திரத்தால்விழப்பண்ணினான். அப்பொழுது அங்கனுமாரோடி வந்து, இராவணன் றேரைத் தன் றடியாலடிக்கிறபோது, தேருடன் றடியும்

நொறுங்கிப் போய்விட்டது. உடனே இராவணன் மறு தேரேறி நின்று ஆர்ப்பரித்தான். அப்போது அனுமார் இவன் மலைகளுக்கும் மரங்களுக்கும் மலைக்கிறவனல்லவென்று சீக்கிரம் அவன் றேரிற் பாய்ந்து, இராவணனைப் பார்த்து நான் ஒரு சபதஞ் சொல்லுகிறேன் கேளென்ருன். இராவணன் அது என்ன சபதம் சொல்லென்றவுடன், அனுமார் இப்போது நாம் இரண்டு பேரும் மல் யுத்தம் செய்ய வேண்டும், நான் உன் மார்பில் ஓர் அறை அறைகிறேன், அதை நீ தாங்கினுயாகுல் நானுன்னுடன் பொருதுகிறதில்லை நீ என்னை அறைகிறது நான் அதைத் தாங்கிக் கொண்டால் நீ என்னுடன் பொருதுகிறதில்லை இது சபதம் என்று அனுமார் சொன்னர்.

இராவணன் இதுதானே சபதம்! அப்படியே செய்வோமென்று சம்மதித்து, நானுன்னை முதலில் அறைகிறேனென்ருன். அனுமார் சம்மதித்துத் தன் மார்பைக்காண்பித்தார், அப்போது இராவணன்கைலாயகிரியைப் பேர்த்துப் பிடுங்கின கரங்களை விசைகொள்ளும்படியாகக் கையோடு கையை யுரசிக்கொண்டு, பத்து இடது கரத்தாலும் அனுமார் தோளைப்பற்றிக்கொண்டு பத்து வலது கரங்களினுலும் அனுமாருடைய மார்பில் ஓங்கி அறைந்தான். அந்தச் சத்தமானது சத்தமேகத்தின் இடிமுழக்கம்போற்கேட்டது. அனுமார்கிஞ்சிற்று மூர்ச்சையாயிருந்து பிறகு தெளிந்து கொண்டு, இனியுன்னை நான் அறைகிறேனென்று ஆக்ரமித்துத் திடதைரியம் பொருந்திய இராவணனுடைய மார்பில் அனுமார் அறைந்தார்.

அப்போது முன் அஷ்டகயங்களையுந் தன்மார்பிற் பாயச்செய்து, அந்த எட்டு யானைக்குள்ள முப்பத்

திரண்டு தந்தங்களையும் மட்டமாய் நறுக்கி, அதில் ஒன்பதுவகைரத்தினங்களையும் அழுத்தி அலங்காரஞ் செய்திருந்தான். அந்தமுப்பத்திரண்டு கொம்புகளும் அனுமார் அறைபட்ட மாத்திரமே இராவணன் முதுவின் வழியாய்ப் பிற்பட்டு ஓடிப்போய் விட்டது. அதனல் இருபுறமும் பலகணி வாசலாய்க் காணப்பட்டது. இராவணனுக்குச் சற்றேமயக்கமுண்டாய்த்தெளிந்து அனுமாரைப்பார்த்து, இதில் வெற்றி தோர்வை யார்க்கென்று கேட்டான், அப்போது அனுமார் நாம் இரண்டு பேரும் சீவனுடனிருப்பதால் சமமென்று சொல்லியப்பால் போனர்.

அதன்பின்பு லட்சுமணர் வந்து இராவணன் பேரில் பாணப்பிரயோகஞ் செய்தார். அதை இராவணன் அறுத்து, இலட்சுமணர் பேரிற் பாணப்பிரயோகஞ் செய்தான், அதை இலட்சுமணர் அறுக்க, இப்படிச்சம கர்சியாக நடக்கிறபோது இலட்சுமணர்சிறிது கைச்சித்திரமாகப் பாணப்பிரயோகஞ் செய்து இராவணனை விழித்துப் பார்க்க வொட்டாமல் உயுத்தம் பண்ணுகிறபோது, இராவணன் கண்டு சந்தோஷமடைந்து இம்மட்டும் வல்லபமுள்ளவனென்று மனதிலெண்ணிக்கொண்டு, இனி அஸ்திரங்களைப் பிரயோகஞ்செய்ய லாகாதென்று பிறைமுகவேலை விட்டு இலட்சுமணர் விடுகிற கணைகளை யெல்லாம் எடுத்து விழுங்கும்படிச் செய்து தான் பின்னுற் சிறிது வடவாமுகாக்கினி போன்ற பாணங்களையும் பிரயோகஞ் செய்து ஆரவாரத்துடனின்றான்.

இராவணன்விட்ட பிறைமுகவேலானது இலட்சுமணர்விட்ட கணைகளை யெல்லாம் எடுத்து விழுங்கிக் கொண்டு கார்காலத்து இடிபோல் ஆக்ரமித்து வந்து

இலட்சுமணர் மார்பிற்பட்டு உருவிப்போய் விட்டது. உடனே இலட்சுமணர் மூர்ச்சையாக விழுந்தார். அப்போது இராவணனேடி வந்து, இன்றைய யுத்தம் இம்மட்டும் போதுமானதென்று, இலங்கைக்கு இலட்சுமணரைக் கொண்டு போக வந்து எடுத்தான். அப்பொழுதெடுக்கமுடியாமல் திகைத்து நிமிரும்பொழுது அனுமார்கண்டு ஓடிவந்து இராவணனை அப்புறந் தள்ளிவிட்டு, ஆவின்கன்றைப்போல் இலட்சுமணரை யெடுத்துவந்து, இராமசுவாமியின் முன்பாக வைத்துப்பிறைமுகவேலின் விஷயமுஞ் சொல்லித் தெண்டஞ் செய்து நின்றூர்.

சுவாமி அப்போது உடம்பு பதறி ஐயோ தம்பி! உன்னையும் இழந்து உய்வேனேவென்று மிகுதியுங் கிலேசத்துடன் புலம்பி வாரியெடுத்து முகத்தோடணைத்து முத்தமிட்டார். அப்போது சுவாமியினுடைய கண்ணருவியானது இலட்சுமணர் உடம்பிற்பட்டவுடனே, வேல்பட்ட சோபந்தீர்ந்து திடீரென்று எழுந்து சுவாமியைத் தெண்டஞ் செய்து நின்றூர். அப்பொழுது சுவாமிக்குக் கோபாக்கினி மூண்டு தம்பி! உன்னை யிப்படித் துயர்செய்தவனை உயிர் கொண்டுபோக விடுவேனேவென்று ஆக்ரமித்து எழுந்து இளஞ்சிங்கம்போலத்துள்ளி நடந்து, இராவணனைக் குறுக்கே கட்டிமறித்துக் கொண்டு அஸ்திரப்பிரயோகஞ் செய்ய எத்தனப்படுகிற போது, அனுமாரோடிவந்து சுவாமி! இராவணன் றேரின் பேரில் நிற்கத் தேவரீர் பூமியில் நிற்கலாகாது எனது தோளின் மேலேறிக் கொள்ள வேண்டுமென்று, சுவாமியைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டு இராவணன் றேருக்கு இரண்டு விரற்கடை உன்னதமாய்ப் பூரித்து வளர்ந்து இராவணன்றேரும்,

அனுமாரும் இடசாரி வலசாரி வருகிறபோது, இராவணனும் இராமசுவாமியும், ஒருவரை யொருவர் நேர்முகநோக்கி நின்றார்கள்.

அப்போது சுவாமி சொல்லுவார் நன்றாச்சுது நம்முடைய சேவகத் தன்மை! இன்னும் நீ ஜீவனுடனிருக்கிறாயோ என்று சொல்கிறதை யறிந்த தசக்கிரீவன் நகைத்து இராமா! என்னுடைய ஓர் அஸ்திரம் வருகிறது அதை நீ தடுத்துக்கொள் பார்க்கிறேனென்று பராக்கிரமத்துடனே ஒருபாணந்தொடுத்தான். அந்தப் பாணத்தை இராமசுவாமி ஓரம்பினால் விலக்கி மறுபாணந்தொடுத்தார். அப்போது இராவணனும் ஓரம்பு தொடுத்து அறுத்துப் பின் எழுபாணந் தொடுத்தான். சுவாமியும் அப்படியே வந்த எழு அம்பையும் அறுத்துவிட்டார். பிறகு இராவணன் பதினான்கு பாணந் தொடுத்துஆரவாரஞ்செய்தான். அவைகளையுஞ்சுவாமி யறுத்தார். அப்போது இராவணனுக்குக்கோபம்வந்து சரமாரியாகத் தொடுத்தான். அந்தச் சரங்களை யெல்லாம் அறுத்து இராவணன் றேரையும் உடைத்துப் போட்டார்.

பின் இராவணன் மறுதேரிலேறிக் கொண்டு, அளவற்ற பாணங்களை மண்ணும் விண்ணுந் தெரியாமற் பிரயோகஞ்செய்து விட்டான், சுவாமியும் அந்தக் கணைகளையுமறுத்து அவனுடன் வந்த ஆயிரந்தேரையும், இருநூறு வெள்ளஞ் சேனைகளையும், அவன்றேர்ப் பாகனையும், அறுத்துச் சம்மாரஞ் செய்து விட்டார் இவைகளைக் கண்ணுற்ற இராவணன் இந்த மானிடவனோ நம்முடைய சேனைகளைக்கொல்லுகிறவனென்று ஆக்கிரமித்துச் சுவாமி பேரிலும், அனுமார்பேரிலும், பிறைவாய் அம்புகளைப் பிரயோகஞ் செய்து விட்டான்

சுவாமி அந்தப்பாணங்களையு மறுத்து, இனி இவனிடம்நின்று பாராட்டலாகா தென்று, ஒரு பாணந்தொடுத்து, அவனின்றதேரையும் அறுத்து, அவன்கவசத்தையுமறுத்து விழச்செய்தார்.

அவன் மறுதேரேறவும் அம்பருத்தூணியில் மறுபாணம் எடுக்கவும் முன்பின் கண் விழித்துப்பார்க்கவும் விடாமல், அஸ்திரங்களாலே கைச்சித்திரமாகப் பிரயோகஞ்செய்து தனுசாஸ்திர வல்லமை செலுத்தினர். அந்தச் சித்திரத்தைக்கண்ணுற்ற இராவணன் திகைத்துப் பத்துக்கரங்களிலிருந்த பாணங்களும், அம்பருத்தூணியும் அறுபட்டுப்போய் நிராயுதனாய் மறுதேரேற மெய் மறந்து நின்றான். அதை இராமபிரான் கண்டு இராவணா! நீ இப்போது நிராயுதனாக நிற்கிறாய் இப்பொழுதுன்னைக் கொல்லுகிறது தருமமல்ல ஆகையால் விபீஷணன் முன்சொன்ன புத்தியின்படியேசீதையைக் கொண்டு வந்து விட்டு, உன்னுயிர் பிழைத்துச் சுக வாழ்க்கையுட னிருந்தாலுஞ் சரி, அல்லது உனக்கின்னம் வீரத்வமுண்டானால், இன்று போய் உன்னுடைய மனவருத்த மெல்லாந் தீர்த்துக்கொண்டு நாளை யுத்தத்திற்கு வந்தாலுஞ் சரி யென்றார்.

விருத்தம்.

ஆளையாவுனக் கமைந்தன மாருத மறைந்த
பூளையாயின கண்டனை யன்றுபோய்ப் போர்க்கு
நாளைவாவென நல்கின னிளங் கமுகின்
வாளைதாவுறு கோசலை நாடுடை வள்ளல்.

வசனம்.

இப்படியாகச் சொன்ன சுவாமியின் வாக்கை நோக்கிய இராவணன் மகா வெட்கத்துடன் றலையைக்

கவிழ்ந்து பூமியை நோக்கி நடந்து இலங்கைக்கு வரு கிறது எப்படியெனில்:—

விருத்தம்.

வாரணம் பொருதமார்பும் வரையினை யெடுத்ததோளும்
நாரத முனிவற் கேற்ப நயம்பட வுரைத்த நாவும்
தாரணி மவுலி பத்துஞ் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமுங் களத்தே போட்டு வெறுங்கையோ டிலங்கை-
[புக்கான்.

வசனம்.

இப்படியாகக் கவலையுடன் இலங்கைக்குச் சென் ற இராவணனைக் கண்ட ஜனங்கள் நம்முடைய இரா ஜா இன்றைக்கு இராமசுவாமியுடன் படைபொருதி அபஜெயமடைந்து வருகின்றாரென்று சொல்லவும், அநேகமாயிரந் தளங்கள் படைத்தலைவர்கள் சூழ்ந்து வர, ஆலாத்திப் பெண்கள், கட்டியக்காரர், சங்கீதக்கா ரர் முதலாகிய வீரர்கள் எதிர்கொண்டு வந்தவர்களையும் கண்ணுற் பாராமற் றலையைக் கவிழ்ந்து நடந்துபோ ஞன். எப்படியெனின்:—

விருத்தம்.

மாதிரமெவையு நோக்கான் வளநகர் நோக்கான்வந்த
காதலர்தம்மை நோக்கான் கடற்பெருஞ் சேனை நோக்-
குதவிழ்கூந்தன்மாதர் தனித்தனி நோக்கத்தானப்[கான்
பூதலமென்னு மங்கை தன்னையே நோக்கிப் புக்கான்.

ஷை

மந்திரச் சுற்றத் தாரும் வாணுதல் சுற்றத் தாரும்
தந்திரச் சுற்றத் தாருந் தன்கிளைச் சுற்றத் தாரும்
எந்திரப் பொறியி னிற்ப யாவருமின்றித் தானோர்
சிந்துரக் களிறு கூடம் புக்கெனக் கோயில் சேர்ந்தான்.

## வசனம்.

இப்படியாக இராவணன் போய்த் தன்னரண் மனையில் பள்ளியறையிற் போய்ச் சயனித்துக்கொண்டு மகாதுக்கமுள்ளவனு யிருந்தான். இங்கு இராமசுவாமி முதலான சேனைகளுந் தங்கடங்கள் இடம் போய்ச் சேர்ந்திருந்தார்கள். பிறகு இலங்கை வேந்தன் மயக் கந்தெளிந்து சபாமண்டபத்தில் வந்திருந்தான். அப் போது மகோதரனுகிய மந்திரியும், மாலியவானுகிய பாட்டனும் வந்து, இராவணனைக்கண்டுபேசிக்கொண் டிருந்தார்கள். அப்போது மாலியவான் இராவணனை நோக்கி அப்பா இராவணேசுவரா! இன்றைக்கு நம்மு டைய சேனைகள் யுத்த முகத்தில் அபஜெய மடைந்து வந்ததாகக் கேள்வி யுற்றேன் ஆகையாலே அங்கே நடந்த விபரஞ் சொல்லென்று கேட்டான்.

மாலியவான் கேட்கும்போது இராவணன்வெட் கத்தோடும் மகாதுக்கத்தோடும் தொண்டையைச் செரு மிக்கொண்டு சொல்லுவான். அந்தஇராமஇலட்சுமணு ளிரண்டு பேரும் யுத்தகளத்தில் ஓடித்திரிகிற கால் கை வேகமும், தனுசாஸ்திர வல்லமையும் இன்னமட் டென்று சொல்லமுடியாது. அன்றைக்கு நம்முடைய பட்டணத்தைச் சுட்ட குரங்கு யுத்தகளத்தில் வந்து, அந்த இராமனைத் தோளிலே தூக்கிக்கொண்டு, என் னுடைய தேர்க்கடுமைக்கு மேலாகவும், இடசாரி வல சாரியாக ஓடித்திரிந்து அவன் சூருவளிக் காற்றைப் போலவும், நம் படைகளெல்லாம் சருகுக் கூட்டம் போலவும் இருக்கிறதே யல்லாமல், வினைமுகப்போல் ஒருவரை யொருவர் ஒருங்கிட்டுப் பேசிக்கொள்ள அவ காசமில்லை. இப்படி அதிக வீரசூர பராக்கிரமமுள்ள வனை நாம் கண்டதேயில்லை. இது என்ன அதிசயமா யிருக்கிற தென்றான்.

விருத்தம்.

சங்கம்வந் துற்ற கொற்றத் தாபதர் தம்மோ டெம்மோ
டங்கம்வந் துற்றதாக வமரர்வந் துற்ற தாற்றூர் [வாப்
கங்கம்வந் துற்ற செய்ய களத்துநங் குலத்துக் கொவ்-
பங்கம்வந் துற்ற தன்றிப்பழியும்வந் துற்ற தென்றான்.

வசனம்.

மாலியவான் இவை யெல்லாங் கேட்டுச் சொல்லுவான் நான் முன்னமே அவர்களின் வல்லமையுந் திராணியுஞ் சொன்னேன், நீ உன்னுடைய பராக்கிரமத்தையும், வாழ்க்கையின் செல்வத்தையும் உத்தேசித்து என் வார்த்தையை நிராகரித்து விட்டாய். இன்னமும் அவர்களைச் சாமானிய பலமுள்ளவர்களென்று அலட்சியமாய் நினைக்க வேண்டாம். நாலு வகையிலும் அளவிட்டல்லவோ விபீஷணன் உனக்கு வேண்டிய புத்திகள் சொன்னான். நீ அவைகளை யனுசரியாமல் அவனைக் கடிந்து பேசியபடியால், அவனும் புறப்பட்டுப் போய் அவர்களிடம் அடைக்கலமாகச்சேர்ந்துகொண்டான். ஆதலால் நாம் சுகமான வாழ்க்கையுடனே ஜீவனிருக்கவேண்டு மென்றால், சீதையின் சிறையை நீக்கி அழைத்துப்போய் அவர்கள் முன்பாக விட்டுவிடு வென்று சொன்னான்.

அதைக்கேட்ட இராவணனுக்குக்கோபம்வந்து சும்மாகிடடா கிழடா என்றான். அப்போது மகோதரனாகிய மந்திரி சொல்லுவான்.

விருத்தம்.

வென்றவர் தோற்பர் தோற்றோர் வெல்குவ ரெவர்க்கு
மேலாய்
நின்றவர் தாழ்வர் தாழ்ந்தோ ருயர்குவர் நெறியு
மஃதே

என்றனா ரறிஞ ரன்றே யாற்ற லுக் கெல்லை
யுண்டோ
புன்றவ ரிருவர் போரைப் புகழ்தியோ புகழ்க்கு
மேலோய்.

வசனம்.

இப்படியாக மகோதரன் சொல்லுகிறான். வெல்வதுந் தோற்பதும் விதிவசமே யல்லாமல் வேறல்ல, யுத்தமுகத்தில் வெற்றியடைவது ஒருவன் பங்கேயன்று, இன்று நம்முடைய சேனைகளிறந்தால் நாளையவன் சேனைகள் இறக்கும், இது வழக்கமாயிருக்க இதையொருபொருட்டாய் நினைத்து யோசனை செய்வார்களோ? என்றான். அப்போது இராவணனுள்ளத்திற் குதூகலமடைந்து, இப்படியல்லவோ சொல்ல வேண்டுமென்றான்.

பின்னு மகோதரன் சொல்லுவான் கும்பகர்ண இராஜாவை எழுப்பினால், அவரைக் கண்ட வுடனே வானரப்படைகள் யாவும்பயந்து நடுங்கி ஓடிப்போவார்கள், அல்லது எதிர்த்தாலும் அவர் பசிக்குத் தக்கபடி பட்சணஞ் செய்து விடுவார் என்று சொன்னான்.

கும்பகர்ணன் வதைப் படலம்.

அதைக் கேட்ட இராவணன் இது நல்லயோசனையென்று மந்திரியைக் கொண்டாடி அநேக கிங்கரர்களையனுப்பிக் கும்பகர்ணனை யெழுப்பி வரும்படியாய்க் கட்டளையிட்டான். அரசன் கட்டளைப்படிக் கிங்கரர்கள் போய்க் கும்பகர்ணன் பள்ளிகொண்டிருக்கு மிடத்தில் இருப்புத் தடியாலடித்து எழுப்புகிறார்கள்.

விருத்தம்.

உறங்குகின்ற கும்பகன்ன வுங்கண்மாய வாழ்வெலாம்
இறங்குகின்ற தின்றுகா ணெழுந்திரா யெழுந்திராய்

கறங்குபோல விற்பிடித்த காலதூதர் கையிலே
உறங்குவா யுறங்குவா யினிக்கிடந் துறங்குவாய்.

ஷடி

என்றுமீறி லாவரக்க ரின்பமாய வாழ்வெலாஞ்
சென்றுதீய னும்முனோன் றெரிந்துதீமை தேடினான்
இன்றிறத்த றிண்ணமாக வின்னுமுன் னுறக்கமே
அன்றலைந்த செங்கையா லலைத்தலைத் துணர்த்தினார்.

வசனம்.

இந்தப்படியாகக் கிங்கரர்கள்எழுப்பியும் எழுந்திராமற் பின்னும் நித்திரை செய்கிறதை யறிந்து மந்திரியிடம்போய்ச் சுவாமி எங்களாற் கும்பகர்ணராஜாவை யெழுப்பக்கூடவில்லை யென்று சொன்னால் நம்மை ஏளனஞ் செய்வார்களென்று யாவரும் யோசனை செய்து சுவாசம் போகிற வாசலைத் திறந்து அந்த வழியாக வந்தார்கள். அப்போதுகும்பகர்ணன் சுவாசத்தை மூக்கின் வழியாக உள்ளே இழுக்கிறபோது அந்த விசையிலே அவ்வளவு பேரும் மூக்கினுழைந்து மண்டையிலேறுகிற பேரும், சுவாசம் விடுகிறபோது, வெளியில் வருகிறபேரும், இப்படியாய்மிகச் சிரமப் படுகிறபோது, இது அலக்கழிவாகயிருக்கிறதென்று திடீரென்று அந்தவாசலையும் அடைத்து இராவணனிடம் வந்து எங்களால் எழுப்பக்கூட வில்லை யென்று சொல்லித் தெண்டனிட்டு நின்றார்கள்.

விருத்தம்.

[தென்று
இங்கிவன் றன்னை யாமின் றெழுப்பலாம் வகையே—
துங்கபேழ் வாயு மூக்குங் கண்டுமெய் துணுக்கமுற்றார்
அங்கைக டண்டவஞ்சி யாழ்செவி யதனி னூடு
சங்கொடு தாரைசின்னஞ் சமைவுறச் சாற்ற லுற்றார்.

வசனம்.

அப்போது இராவணன் யோசித்து பதினெட்டு வகை மேளவாத்தியக்காரர்களையும் அழைத்து அவன் காதிற் புகுந்து முழக்கச் சொல்லியனுப்பியதுடன் அநேகம் பெயரையும் அனுப்பிக் குரவையிட்டு அஷ்டகாசஞ் செய்யும்படி ஆச்ஞாபித்தான். அந்தப்படியே கும்பகர்ணன் இருசெவியிலும் புகுந்து குரவையுடன் வாத்தியங்களை முழக்குகிறபோது அந்த ஓசையாலே அவன் காதிற்குடியிருந்த அளவில்லாத வெளவாலும் பாம்பும் பூச்சிகள் புழுக்களும், இப்படிக்கொத்த ஜீவாத்துமாக்களெல்லாம் ஓடிப்போய்விட்டது. பின்னுங் கும்பகர்ணன் எழுந்திராதபடியால் மந்திரிக்குத் தெரிவித்தார்கள்.

அப்பால் அநேக ஆயிர ஆட்டுக் கூட்டத்தை அவன் மார்பிலேற்றி நடத்தச்சொன்னான் அப்படியே ஆட்டின் கூட்டத்தை அவன்மார்பிலேற்றி அங்குமிங்குமாக நடத்தினார்கள் அப்போது கும்பகர்ணனுக்கு உடம்பு முறுக்கினது போல அதிக நித்திரை செய்கிறதையறிந்து பின்னும் மாறிமாறி அவன் தேக ஆதியந்தமும் ஓட்டியடிக்கிறபோது சற்றேநித்திரைதெளிந்து என்னமோ கடிக்கிறதென்று தன்னிருகரத்தாலும் மார்பைத் தேய்த்துக் கொண்டு கண் விழித்தான்.

அப்போது ஆடுகளெல்லாம் மடிந்து அவன் ரோமத்துவாரங்களில் ஒட்டிக் கொண்டது. உடனே அங்கு நின்ற பேர்கள் பயந்தோடிப் போனார்கள். சில இராட்சதாள் ஐயாயிரம் சட்டிகளில் சோறு கறி மற்ற பதார்த்தங்களும் பதினாயிரம் மதுக்குடங்களுங் கொண்டுவந்து கும்பகர்ணன் முன்பாக வைத்தார்கள். அவைகளை யெல்லாம் புசித்து வயிற்றுக்குப் பற்றாமல் அந்த

வண்டி யிழுத்து வந்த எருமைக் கடாக்களையும் எடுத்து விழுங்கினான். அப்பொழுதுங் கிஞ்சிற்று பசியுடனே யிருக்கிறபோது போசனங் கொண்டு வந்த இராட்சதர்கள் சுவாமி பெரிய மகாராஜா அவர்கள் அழைத்து வரும்படி யாக்ஞாபித்தா ரென்றார்கள்.

அதைச் செவியுற்ற கும்பகர்ணன் சீக்கிரம் எழுந்து இராவணன் கொலுவில் வந்து இராவணனைத் தெண்டம்பண்ணி நின்றான். அப்படி நின்ற தம்பியை இருக்கச் செய்து அரண்மனையி லிருந்து போசனங்கள் கொண்டு வரச்சொல்லிச் சாப்பிடும்படிச் செய்தான் பிறகு இளைப்புத் தீர்ந்ததும் போர்க்கோலஞ் சமைத்தான். அதை நோக்கிய கும்பகர்ணன் இது எதுபோர்க் கோலம் எங்கே படை வந்திருக்கிறது என்று கேட்டான். அப்போது இராவணன் சொல்லுவான் சில வானரங்களும் இரண்டு மானிடர்களும் நமக்கு எதிரி யென்று வந்திருக்கிறார்க ளென்று சொன்னான் அப்போது கும்பகர்ணன் நீர் ஒரு பெண்ணை யெடுத்து வந்தீரே அது காரியம் என்ன வாயிற்று? சிறைவிட்டு நீக்கினீரோ இல்லையோ வென்று கேட்டான்.

அப்போது இராவணன் சினந்து நீ யதை விசாரிக்கவேண்டியதென்ன நான் ஏவியஇடத்திற்குப்போய் வா வென்றான். அதைக்கேட்ட கும்பகர்ணன் சொல்லுவான். சில குரங்குக்கும் இரண்டு மானிடருக்கும் நம்முடைய பட்டணத்தி லிருக்கிற ஒரு இராட்சதவீரன் போதாதோ என்னைப்போன்ற பேர்களையோ அனுப்ப வேண்டும்? அதுவும் எழுபது வெள்ளஞ் சேனையென்றும் இருபத்தினாலு படைத்தலைவரென்றும் சமுத்திரங் கடந்து வந்தார்களென்றும் கேள்விப்பட்டோம் ஒரு குரங்கின் பராக்கிரமம் இலங்கை யெழுநூற்றுக்காதவழி

யுஞ் சுட்டுக் கொட்டை பரப்பிவிட்டுப் போயிருக்கிறதே இன்னும் எழுபதுவெள்ளங்குரங்குகளும் ஒன்ருய்ச் சேர்ந்தால் எப்படியாகுமோ அது நிற்க, அந்த வானரங்களுக்கு அதிபதியாய் வந்த அந்த இரண்டு மானிடவர்களின் பராக்கிரமங்களுக்கு இந்த ஈரேழு பதினுன்கு புவனங்களிலும் ஒருவரையும் ஒப்புச் சொல்லத் தக்கதல்ல. இப்படி யெல்லாம் எதிரியின் பலம் நமக்குத் தெரிந்திருந்தும் இந்த மகோதரனென்கிற துன்மார்க்கன் மந்திரித்தனம் பண்ணுகிறதும், மங்கையர் மயக்கமேபெரிதாய்க்கொண்ட நீர் துரைத்தனம் பண்ணுகிறதும், நமக்கு வந்திருக்கிற கெடுதிகளும் அறியாமல் இப்படி உனக்குமதி விளைந்திருக்கிறது. அண்ணு! இனியாகிலும் என் வார்த்தையைத் தட்டாமல் அந்தப் பெண்ணைக் கூட்டியனுப்பிவிடு மென்ருன்.

அதைக்கேட்ட இராவணன் சினந்து பார்த்து சீ கள்ளப்பயலே! உன்பெரிய வயிற்றுக்குப்போதுமான படி நிரப்பிக்கொள்வதும், நன்ருய் நித்திரை செய்வதும் இந்த இரண்டு தொழிலும் உனக்குத்தெரிந்ததேயல்லாமல். ஒரு போர் முகத்தினின்று திராணி செலுத்தி யுத்தம்பண்ணத் தெரியாது உன்னைப் புத்தி கேட்கவோஇங்கு அழைத்தேன்? நீ நித்திரைசெய்யப்போடா வென்ருன். அப்போது கும்பகர்ணன் நகைத்துச் சொல்லுவான் நான்படைக்குப்போக அஞ்சிச்சொன்ன வார்த்தையல்ல, நான் உமக்கு முன்னேநின்று போர்க்களங்களிற் றிராணி செலுத்தினதை நீர் அறிந்திருந்தும் என்னை இந்தச் சபையில் ஏளனஞ் செய்யலாமோ? இனி என்னுடைய திராணியைக் கண்டறியு மென்று சொல்லிவிட்டுத் தன்னுடைய பெரிய சூலாயுதம், கத்தி

கேடய முதலான ஆயுதங்களை யெல்லாங் கொண்டுவரச் சொல்லிக் கட்டளை யிட்டான்.

அப்படியே பதினாயிரங்கிங்கரர்கள் கும்பகர்ணன் ஆயுதசாலைக்குச் சென்று சூலம் கத்தியுடன் மற்ற ஆயுதங்களையுந் தாங்கி யெடுத்துச் சுமந்து கொண்டு வந்து கும்பகர்ணன் முன்பாகப் போட்டார்கள். கும்பகர்ணன் அந்த ஆயுதங்களை யெடுத்துக் கொண்டு, இராவணனிடஞ்சென்று அண்ணா! இனி என்னுடைய திராணியை நமது உப்பரிக்கையின் மேலேறிப் பார்த்துக் கொண்டிரும்மேலும்என்னிலும் அதிகவல்லமைசெலுத்துவோமென்பதை விட்டுவிடும், நான் இப்போது யுத்தத்திற்குப் போகிறது சரி, திரும்பி வந்து உம்முடைய முகத்தில் விழிக்கிறதில்லை, நான் யுத்தகளத்தில் இறப்பது நிச்சயம் பிறகு உம்மாலே அவர்களைச் செயம் பண்ண முடியாது, அப்போதாகிலும் நல்ல புத்தியுடன் யோசனைசெய்து கொள்ளுமென்று சொல்லிவிட்டுத், தமையன் நாம் சொன்ன புத்தி கேட்கிறா னில்லையேயென்று உள் விசாரத்தோடும் மிகுந்த பராக்கிரமத்துடனே யுத்த களத்தை நோக்கிப் புறப்பட்டான்.

அச்சமயம் இராவணனும் பின்னே தொடர்ந்து கும்பகர்ணனைத் தேரேறிக் கொள்ளும்படிச் சொல்லிப் பதினாயிரம் புரவிபூண்ட தேரையுங் கொடுத்து அநேக ஆயிரக் கணக்கான நால்வகைச் சேனைகளையுங் கூட்டி யனுப்பிவிட்டுத், தம்பி போருக்குப் புறப்படுகிறது எப்படியாகுமோ வென்று மனக்கலக்கத்துடன் தன்னரண் மனைக்குச் சென்றான்.

இப்பால் கும்பகர்ணனை இராவணன் அனுப்பி வைக்க முப்பத்திரண்டு வகை வாத்தியங்கள் முழங்க, விருதுக்கொடிகளுடன் மண்ணும்விண்ணும் அதிரும்

படியாக நடத்திப் படைப் பெருக்குடன் யுத்தகளத்தில் வந்து நின்றான். அதுகண்ட இராமசுவாமியானவர் விபீஷணரைப் பார்த்து இப்போது யுத்தகளத்தில் வந்து நிற்பவன் யாரென்று கேட்க விபீஷணர் சொல்லுகிறார்.

விருத்தம்.

ஆரிய னனைய கூற வடியினை யிறைஞ்சி யைய [னேன்
பேரிய லிலங்கை வேந்தன் பின்னவ னெனக்கு முன்-
காரியல் கால னன்ன கழற்கும்ப கருண னென்னுங்
கூரிய சூலத் தானென் றவனிலை கூற லுற்றான்.

வசனம்.

சுவாமி! இங் கிரணகளத் துற்றவன் இராவணனுக்கு இளையவன், அடியேனுக்கு முன் பிறந்தவன். இவன் பெயர் 'கும்பகர்ணன்' இவனே மகாவரம்பெற்றவன், இந்தப்பதினான்குலகமும் இவனுக்குள்ளடக்கம். இராவணனுக்கு இவன் வேண்டிய புத்திகள் சொல்லியிருக்கிறான். அவனைப்போல் இவன் வெகுளியல்ல வெகுபுத்திசாலியென்றார். அதைக்கேட்டசுவாமி இரக்கங்கொண்டு அப்படிப்பட்ட மதியூகியை உன்விழிக்கு முன்பாகக் கொல்லுவது தருமமல்ல, ஆதலால் நீ போய் அவனை யழைத்துவா வென்று அனுப்பினார்.

அனுப்பியவுடன் விபீஷணர் மகா சந்தோஷமாகித் தமையனென்ற வாஞ்சையினால் நடந்து செல்லுகிறபோது, எதிராக நின்ற கும்பகர்ணனுடைய சேனைகளெல்லாம் இருகரங்களையுங் கூப்பித்தெண்டஞ் செய்ய, விபீஷணர் நெருங்கிச் சென்று கும்பகர்ணனுடைய பாதத்தில் வீழ்ந்து தண்டஞ் செய்த தம்பியைக் கும்பகர்ணன் தாங்கி யெடுத்து மார்போடணைத்துக் கொண்டு, எங்களுக்குக் கதிமோட்சம்பண்ணுகிறதம்பி!

இங்கே யேன்வந்தாயென்று கேட்டான். அதற்கு விபீஷணர் சுவாமி உம்மை யழைத்து வரும்படியாக ஆக்ஞாபித்தாரென்று சொன்னார்.

அது கேட்ட கும்பகர்ணன் நகைத்துச் சொல்லுவான். தம்பி! தமையன் ஒருவனை மட்டும் எதிராளியிடங்காட்டிக் கொடுத்துத்தம்பிமா ரிரண்டுபேரும்பகைவரிடத்திற் சேர்ந்து கொண்டார்களென்று உலகஞ்சிரிக்கும். நமது புத்திகேளாத பாவியுடன் பிறந்த பாவத்திற்கு இந்தச் சரீரத்தை வைத்திருக்கிறதில்லை. தம்பி! நீசீக்கிரந்திரும்பிப்போய்ச்சுவாமியிடஞ்சேர்வாயென்று அனுப்பிவிட்டுத் தான் யுத்தகளத்திற்குத் தயாராயிருந்தான். அவைகளைக்கேட்ட விபீஷணர் அழுதுகொண்டு சுவாமியிடத்தில் வந்து நடந்தசம்பாஷணையைச் சொல்லி நின்றான்.

அக்கணமே கும்பகர்ணன் வானரச் சேனைக்கு முன்பாகத் தேரை நடத்தினன். அது கண்டு வானரச் சேனைகள் பயந்து இது பூதமோ! அல்லது இராட்சதாள்மாயையோவென்று நினைத்துப் படைத்தலைவரின் பிறகே நின்றார்கள். படைத்தலைவருங் கண்டு அச்சமுற்று இலட்சுமணர் மறைவில் நின்றார்கள். அந்நேரம் இலட்சுமணர் வானரச்சேனைகளுக்குத்திடஞ்சொல்லிச் சுவாமியும் இளையபெருமாளுமாகத் தனுசாஸ்திரப்படி ஆயுதத்துடன் எச்சரிக்கையாக நின்றார்கள். அப்போது கும்பகர்ணன் முன்பாக இலட்சுமணர் வந்து எதிர்த்தார். அதேசமையம் வானரச் சேனைகளும், இராட்சதச் சேனைகளும் பொருதி யுத்தம் செய்தார்கள். கும்பகர்ணன் இலட்சுமணர் மீது நூறுயிரம் பாணங்களைப் பிரயோகஞ்செய்து ஆரவாரித்து நின்றான். அந்தப் பாணங்களை இலட்சுமணர் அறுத்துவிட்டுக் கும்ப

கர்ணன்மீது சில பாணங்களைத்தொடுத்தார். அதைக் கும்பகர்ணன் அறுத்தான். அப்போது அனுமார் ஒரு பெரிய பாரமான மலையைப் பெயர்த்தெறிந்தார். கும்பகர்ணன் அதை ஒரு பாணத்தால் உடைத்து நொறுக்கி விட்டான். அதைக் கண்ணுற்ற வசந்தன் ஒரு பருவதத்தைப்பிடுங்கி யெறிந்தான். அந்த மலையைத் தன் புஜத்தா லெற்றினான், அது நொறுங்கித் தூளாய்ப் போய்விட்டது. உடனேவசந்தனைக் கும்பகர்ணன் தன் கரத்தால் எட்டிப்பிடித்துக் கொண்டு அவனைக் கீழே போட்டுத் தேய்த்துக் கொன்றான்.

அதைக்கண்ட சுக்ரீவன் ஒரு மலையைக் கொண்டெறிந்தான். அந்த மலையைக்கும்பகர்ணன் தெண்டாயுதத்தால் நொறுக்கி விட்டு ஒரு பாணத்தைப் பிரயோகஞ்செய்து விட்டான். சுக்ரீவன் அந்தப் பாணத்தை எட்டிப்பிடித்து இரண்டாய் முறித்தெறிந்து போட்டுக் கும்பகர்ணன் றேரிற் பாய்ந்து, அவனுடன் மல்யுத்தம் செய்கிறபோது, கும்பகர்ணன் குபீரெனச் சுக்ரீவனை வாரிக் கக்கத்தி லடக்கம் பண்ணிக் கொண்டான். அப்போது சுக்ரீவனுக்குக் கண்விழி பிதுங்கி மகா வருத்தப்படுகிறபோது கும்பகர்ணன் இன்றைக்குயுத்தம் இம்மட்டேபோதும் நாம் வெற்றி கொண்டு போகவேண்டுமென்று, இலங்கையை நோக்கி நடந்தான்.

அப்போது வானரச் சேனைகள் கண்டு ஓடிச் சுவாமியிடஞ்சென்று, எங்கள் சுக்ரீவராஜாவைக் கும்பகர்ணன் கக்கத்தி லிடுக்கிக் கொண்டு, இலங்கைக்குப் போகிறானென்று விண்ணப்பஞ் செய்தார்கள். அதைக் கேட்ட சுவாமி அவன் போகாதபடி நான்கு திசையிலும் சரக்கூடங் கட்டிவிட்டுக் கடு நடையுடன் வருகிறபோது கும்பகர்ணன் இலங்கைக்குப் போகவழி யில்லா

மற் சரக்கூடமா யிருப்பதைக் கண்டு, தன் காலினுலெற் றினன். அது கிஞ்சிற்றும் அசைவில்லா திருந்தபடி யால், யுத்தகளத்தை நோக்கித் திரும்புகிறபோது இரா மசுவாமியைக் கண்டான்.

கண்டவுடனே இராமா! இப்போது இந்தச்சுக்ரீ வனை மீட்டவோ வருகிருய்? அப்படி இவனை மீட்டிக் கொண்டாற் சீதையின் சிறையை மீட்டுகிறது உண்மை தான் என்று சொன்னன். அதைக் கேட்ட சுவாமி இதோ கணப்பொழுதிற் சுக்ரீவனை மீட்டிக் கொள்ளா திருந்தால், நான்எடுத்த ஆயுதங்களைக் கீழேபோடுவே னென்று சொல்லி விட்டு, ஒருஅக்கினியாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்து, கும்பகர்ணன் நெற்றியைக் குறி பண்ணி விட்டார். அந்தப்பாணம் அவனெற்றியில் ஊடுருவிச் செல்லாமல், பம்பரம்போற் கரகர வென்று நின்று ஆடுகிறபோது, பருவதத்திலிருந்து அருவி புறப்பட்டது போல் இரத்தம் புறப்படுகிறபோது, இதேது இரத்தமென்று நெற்றியைத் தடவிப்பார்க்கக் கைநெகிழும்போது, இதுதான் சமையமென்று சுக்ரீ வன் உன்னியெழுந்து, இரண்டு கரத்தாலும் அவன் இரண்டு செவியையும், வாயினல் மூக்கையும் கடித்துப் பிய்த்துக் கொண்டு ஆகாயத்திலுன்னிக் கிளம்பிவந்து சுவாமி பாதத்தில் வைத்துத் தெண்டனிட்டு நின்ருன்

அப்போது கும்பகர்ணன் கக்கத்திற் கைபோட் டுப்பார்க்கும்போது சுக்ரீவனைக் காணுதபடியால் அடடா ஓடிப்போனனே வென்று தன் செவியையும் மூக் கையுந் தடவிப்பார்த்துச் சீ இது என்ன லச்சைக்கேடு நமது தங்கை சூர்ப்பநகைக்குள்ள ஆக்கினையல்லவோ நமக்கும் நேர்ந்திருக்கிறது, ஆனல் இனிமேல் நமது சீவனிருந்தும் பயனென்ன வென்று ஆக்ரமித்து மகா

கோபத்துடன் தன்னுடைய தேரை நடத்திச் சுவாமி பேரிற் சரமாரியாகத் தொடுத்தான். அதைக் கண்ட சுவாமி அந்தச் சரமாரி யெல்லாம் அறுத்து மறு பாணந்தொடுத்தார். அதைக் கும்பகர்ணன் அறுத்தான். அப்போது சுவாமி ஒரு அம்பைத்தொடுத்துத்தேரையும் உடைத்துத் தேர்ப்பாகனையுங் கொன்றார்.

அது கண்டு கும்பகர்ணன் நிலத்திற் குதித்து சூலத்தை யெடுத்து மானத பூஜைசெய்து சுவாமிபேரி லெறிந்தான். சுவாமி அந்தச் சூலாயுதத்தையு மறுத்துச் சூலமெறிந்த கரத்தையு மறுத்தார். கும்பகர்ணன் அறுபட்ட வலது கரத்தை இடது கரத்தாலெடுத்துக் கொண்டு, வானரச் சேனைகளை மோதியடித்துக் கொன்றான். அப்போது சுவாமி மறுகணை தொடுத்து அவனிடது கரத்தையு மறுத்து வீழ்த்தினார். அப்படி இரண்டு கரங்களும் அறுபட்டவுடன் ஆயுதமெடுக்க அவகாசமில்லாமல், தன்னிரண்டு காலினாலும் வானரச் சேனைகளை மிதித்துச் சூறாவளிக் காற்றுப்போ லோடித்திரிந்தான்.

அக்கணம் இராமசுவாமி ஒரு பாணந்தொடுத்து ஒரு காலை யறுத்து வீழ்த்தினார். மற்றொருகாலால் கெந்திக்கெந்தி நடந்துஅடித்துக் கொன்றான். சுவாமி அந்தக்காலையுமறுத்து விழச்செய்தார். பிறகு நிலத்தில்விழுந்துபூமியொரு அம்மியாகவும், தான் ஒருகுழவியாகவும் உருண்டு வானரவீரர்களைச் சேறுபடஅரைத்து வதைத்தான் அதைக் கண்ட சுவாமி மிகவுஞ் சந்தோஷமாகி, இவன் இவ்வளவு வீரனேவென்று புகழ்ந்து, அவன் சிரத்தையறுக்கும்படியாகக் கணை தொடுப்பதற்கு முன்னே, கும்பகர்ணனுக்குக் கிஞ்சிற்று மயக்கம் பிறந்து

பிறகு தெளிந்து நல்ல ஞானம் வந்து சுவாமியை நோக்கிச் சொல்லுவான்.

ஏ இராமா! உம்முடைய பராக்கிரமங்கள் முற்றும் நான் அறிந்தவனே, ஆனால் புத்திகெட்ட என்றமையன் முகத்தில் விழித்துக் கொண்டிராமல் இறந்து போகவேண்டுமென்று வந்ததேயல்லாமல், உம்மைச் செயம்பண்ணி வெற்றிகொண்டு போக வந்தவனல்ல, அது நிற்க இப்பால் நீ ரெனக்கு இரண்டு வரந் தரவேண்டும் அது என்னவெனில்: --உமது அடைக்கலமாக வந்த தம்பி விபீஷணனைக் கைவிடாது காக்கிறது ஒரு வரமும், என் சிரத்தைத் தேவர்கள் கண்டு நகையாமல் ஒரு பாணந் தொடுத்துச் சிரத்தை யறுத்துச் சமுத்திரத்திற் போடுகிறது ஒரு வரமும் தரவேண்டுமென்று கேட்டான்.

அப்படியேதந்தோமென்று சுவாமி ஒருபாணந் தொடுத்துக் கும்பகர்ணன் சிரசை யறுத்துச் சமுத்திரத்திற்போட்டார். அந்தச் சிரசானது பெரிய மலைபோற் சமுத்திரத்தில் வீழ்ந்து நாசியிலும் செவியிலும் தண்ணீர் வாங்கின ஓசை, மேகம் சமுத்திர நீரை மொள்ளுகிறசத்தம் போலிருந்தது. சமுத்திரத்துத் தண்ணீரும் ஓரடி வற்றிவிட்டது. அப்போது கும்பகர்ணனை நினைந்து விபீஷணர் அழுதார். சுவாமிமுதலான யாவர்களும் விபீஷணர் துக்கத்தை மாற்றிச் சந்தோஷமாக இருந்தார்கள்.

---

## மாயா ஜனகப் படலம்.

அப்பால் இராவணன் கும்பகர்ணனை யுத்தத்திற்கு அனுப்பிவிட்டுச் சீதை யென்ற மயக்கத்தால் மகோதரனை யழைத்து ஒரு இராட்சதனை மாயா ஜனக

ளை வடி வெடுக்கச் சொல்லி, அவனைப்பின் கட்டாகக் கட்டி மிதிலாபுரியிலிருந்து கொண்டு வருகிறதுபோல அசோக வனத்திற்குநேரே கொண்டு வாருங்களென்று சொல்லிவிட்டு, இராவணன் முன்னே சென்று சீதாபி ராட்டியாரின் முன்பாக ஆசனத்திலமர்ந்து கொண்டு சொல்லுவான். ஏ பெண்ணே! சீதா! ஏன் வீண் காலங் கழிக்கின்ருய்? வேண்டாம் நல்ல சுகபோகத்தை யனு பவிக்காமல், உன் வகை இரண்டு மானிடரும், சில வானரங்களும் வந்திருக்கிருர்க ளென்று, மகத்துவ மடைந்து கெட்டுப் போகவேண்டாம். என்னுடைய தம்பி கும்பகர்ணனைப் போருக்கனுப்பி வந்தேன், அவன் இதற்கு முன்னே அவர்களைப் பிடித்துப் பட்ச ணம் பண்ணி யிருப்பான். உன் பிதாவாகிய ஜனகனை யுங் கொண்டு வரச்சொல்லித் தூதர்களை யனுப்பியிருக் கிறேன், அவர்களும் இதோ கணப்பொழுதில் வந்து விடுவார்கள். நீ என் வார்த்தையைத் தட்டவேண்டாம், என்னைத் திரும்பிப்பார் பெண்ணே யென்ருன்.

அதுசமையம் ஜனகராஜாவையும் பிடித்து வந் தோமென்று கட்டுடனே கொண்டு வந்து முன்னே நிறுத்தினுர்கள். அந்த மாயாஜனகன் ஆ சீதா! நான் பெற்று அருமையாய் வளர்த்த செல்வமகளே! நீ இப் படிச் சிறையிருக்க விதித்ததோ? தெய்வமே யென்று புலம்புகிறவனைச் சீதை பார்த்து உடம்புபதறி என் றந் தையே! உமக்கிந்தவிதி வந்ததே? நான் பாவி பெண் பிறந்த நேரம் எல்லோருக்கும் இப்படி விதிவரலாமோ என்னைச் சீராட்டிப் பெருமையாய் வளர்த்த பிதாவே! இனி என்ன செய்வோமென்று புலம்புகிற சீதையைப் பார்த்து மாயாஜனகன் சொல்லுவான்.

அம்மா! சீதா! நானொரு புத்தி சொல்லுகிறேன் அது எப்படியெனில்:—இந்த இராவணேசுரன் மகா மண்டலாதிபதியா யிருக்கிறான், இவனுக்கு எதிரான பேரில்லை, நீ இவனுக்குப் பாரியாயிருந்தால், உனக்கும் எனக்கும் வேண்டிய பெருமை என் வார்த்தையைத் தட்டவேண்டாந் தாயே யென்றான். இந்த வாக்கியத்தைக்கேட்ட சீதை தன் இரு செவிகளையும் பொத்திக் கொண்டு இவன் நமது பிதாவல்ல, நமது பிதா ஜனக ராஜாவானால், மனுநீதியுள்ளவர். இப்படிக் கபடமான வார்த்தை ஒருபோதும் சொல்லமாட்டார். இதுஇராட் சதாள் செய்கின்ற மாயைக்குச் சந்தேசமில்லை யென்று அறிந்து கொண்டு மாயாஜனகனைநோக்கி அநீதியான வாக்கியம் பகர்ந்தபடியால் நிர்மூலமாய்ப் போவா யென்று சினந்து சொல்லிய பின்பு, இராவணனைப் பார்த்து உன் தம்பி கும்பகர்ணன் போரிலிறந்தானென் று கணப்பொழுதில் அறிந்துகொள்வாயென்றுசொன் னாள்.

அப்போது இராவணன் பக்கத்தி லிருந்தவன் நகைத்து இவள் மகா புத்திசாலி தன் றகப்பனல்ல வென்று அறிந்து கொண்டாளே, முதனாட் போரில் நாம் அபஜெயத்துடன் வந்ததை யறிந்ததினால், நம் மைக் கிஞ்சிற்றுஞ் சட்டை பண்ணவில்லை. இனிமேல் இவள் மனதைத் திருத்துகிற உபாய மெப்படி யென்று மகோதரனுடனே யோசனை செய்து கொண்டிருக்கிற போது, யுத்தகளத்திலிருந்து ஒருவன் ஓடிவந்து இரா வணன் காதில் மெல்ல ரகசியமாகக் கும்பகர்ண மகாரா ஜா யுத்தத்தில்இறந்து போனாரென்று சொன்னான். அ தைக்கேட்டஇராவணன் திடுக்கமுற்று முகத்திலறைந் துகொண்டு அழுது இனி எப்பொழுது காணப்போகி

றேன். தம்பி தம்பி யென்றுவிழுந்து புலம்பித்தவித்து அரண்மனையிற்போயிருந்து கொண்டு, ஐயோ! திரும்பி வந்து உம்முடைய முகத்தில் விழிக்கிறதில்லை யென்ற வார்த்தையை முடித்துக்கொண்டாயோ தம்பி! யென்று பிரலாபித்து மஹா துக்கப்படுகிறவனை மாலியவான் கண்டு இராவணன் றுக்கத்தை மாற்றி அப்பா! உனக்கு இனிமேலாகிலும் புத்திவந்ததோ வென்றான். அப்போது இராவணனுக்குக் கோபம் பிறந்து ஓ கிழவா! உனக்குப் பரிகாசமா யிருக்கிறதோ? இந்தக் கிழவனைப் பிடித்துத் தள்ளிவிடுங்களடா வென்றான். உடனே அங்குற்றவீரர்கள் மாலியவானை அரண்மனைக்குளனுப் பிவிட்டார்கள். இப்படியாக இராவணன் மஹா துக்க சாகரத்தி லாழ்ந்திருக்கிறபோது,

## அதிகாயன் வதை.

இளைய மகன் அதிகாயன் ஓடி வந்து ஐயா! உம்முடைய தம்பி கும்பகர்ண ராஜாவைக் கொன்றவன் பழியை நான் வாங்கித் தருகின்றேன். நீர் ஒன்றுக்கும் வருத்தமுற வேண்டாமென்று தைரியஞ்சொல்லிவிட்டு நான் போருக்குப் புறப்படுகிறேன் என்னை யனுப்பு மென்று கேட்டான். அப்போது இராவணன் சந்தோஷமாகி அதிகாயனுக்கு வீரப்பட்டஞ் சாத்தி, வேண்டிய ஆடையாபரணங்களுநங் கொடுத்து, அவனுடைய போர் வீரர்களில் பதினெட்டுக் கோடி குமாரர்களும், கும்பன், நிகும்பன், போர்மத்தன், கலைமத்தன், வச்சிர சித்தன், பசாசன், புகைக்கண்ணன், மகரக்கண்ணன், அவர்களுடைய போர்வீரர்களையுங்கூட்டியனுப்பினான். அதிகாயனும் அப்படியே போர்க்கோலங் கொண்டு, ஆயிரஞ்சேமத்தேரும் அவைகளில், மாயக்கணை, வாட்கணை, குந்தம்,ஈட்டி,இருப்புலக்கை, வயிரத்தண்டு, உள்

படத் தேரிற் போட்டுக் கொண்டு அந்தத் தேர்களில், யாளி ஆயிரம், சிங்கமாயிரம், பூதம் ஆயிரம், தெய்வப் புரவியாயிரம் பூண்டு கொண்டு, வெகு ஆடம்பரத்துடனே புறப்பட்டு நிற்கிறபோது படைத்துகை எத்தனையென்றால்:—

அதிகாயன் கச்சிவீதம் அறுபது வெள்ளஞ் சேனை, அறுபதாயிரம் படைத்தலைவர், இலட்சம்யானை ஐந்து இலட்சங் குதிரை, இருபதினாயிரந்தேர், காலாட்கள் இவைகளெல்லாங்கூட வருகிறபோது, பதினெட்டுக்கோடி குமாரர்களும், நாற்பது வெள்ளம் இராட்சதாள், நாலாயிரம் படைத்தலைவர்கள், இரண்டு லட்சம் யானை, ஆறு லட்சங் குதிரை, இருபத்து நாலாயிரந் தேர், காலாட்கள் ஆக இப்படிப் பெரும்படையுங்கூடச் செல்ல, அதிகாயன் அரண்மனையிற்சென்று, தன் ஆபரணப் பொக்கிஷத்தைத்திறந்து, தோள்வளை, கைவளை, முன்கை முதாரி. அஸ்தகடகம், வச்சிரமணிக் கடகம், தரித்துக் கொண்டு, வீரதண்டை வீரக்கழல் தரித்து, உடைவாள் அறையிற் சேர்த்துக் கொண்டான். கவசமுந்தரித்து, இப்படிப் போர்க்கோலத்துடன் தேரின்மீதாரோகணித்துப் புறப்பட்டான்.

மற்றுமுண்டான குமாரவர்க்கங்களும் படைமன்னரும் அவரவர்கள் தேர்களின் மீதும், வாகனங்களின் மீதும் ஏறிப்புறப்பட்டார்கள், அப்போது வில்லணி, வாளணி மற்ற பதினெட்டு வகை ஆயுதக்காரர்களும்அணியணியாகப் புறப்பட்டார்கள். அவரவர்கள் யானைக்கூட்டம், புரவிக்கூட்டம்இரண்டருகுஞ்சூழ்ந்து வர, இப்படிவெகுஆடம்பரத்துடனேஇலங்கைக்கோட்டையைக்கடந்து செல்ல, அவர்களுக்குமுன்பாக நாதசுரம்,தித்தி,சின்னம், தாரை,கொம்பு, முழங்க;வெற்றிக்

கொடிகள் பிடித்துவர, வெண்சாமரம்வீசக், கொற்றக் குடை நிழற்ற இப்படியுள்ளவாத்திய விருதுகளுடனே அதிகாயன் படைகளோடு யுத்தகளத்தில் வந்து நின்றான்.

அப்போது ஒரு இராட்சதனை யழைத்து, உனக்கு இராஜாவாகப் பட்டாபிஷேகஞ் சூட்டிவைக்கிறேன் ஆடையாபரணங்கள்வேண்டியபடி தருகிறேன், அவைகளெல்லாந் தருவதேதென்றால்:—நம்முடைய சிறிய தகப்பனைக்கொன்றதற்கு, இராமன்றம்பி இலட்சுமணனைப்பழிகொள்ளவேண்டும். இல்லாதிருந்தால்என்னை அதிகாயனென்று சொல்லுவானேன்? ஆதலால் நீ இராமனிடஞ் சென்று ஒரு விசேடஞ் சொல்லி வர வேண்டும், உன்னை இராட்சதனென்று வரவிடார்களென்றால், வண்டுரூபமாய்ப் பறந்துபோய் இராமன் முன்பாக உன் சுயரூபமாய் நில்லு, அப்போது இராட்சதன் வந்தானென்று வானரப்படைகள் உன்னைப் பிடிக்கவும், அதட்டியடிக்கவும் வந்தால் உங்களுக்கு ஒரு சோபனஞ் சொல்ல வந்தேனென்று சொல்லு, அதன் பிறகு அந்த வானரப்படைகளை விலக்கி என்ன சோபனமென்று இராமன் கேட்பான். அப்பொழுது இராவணன் றம்பி பட்டதற்கு, இராமன் றம்பியைப் பழிவாங்குவதாய் அதிகாயன் வந்திருக்கிறானென்று சொல்லு, அந்த இலட்சுமணன் தனியே போருக்கு வரப் பயந்தானானால், தன் றமையனையும், எழுபது வெள்ளம் வானரச் சேனைகளையும், இருபத்திநாலு படைத்தலைவரையும் கூட்டிக் கொண்டு வரச்சொல்லு, அதற்கும் அவர்கள் பயந்தால் வானுளோர்களையுங் கூடத்துணையாகக் கூட்டிக் கொண்டு வரச்சொல்லு, இன்று பகற்பொழுதிற்குள் நான் வெற்றிமாலை சூட்ட

வேணும். ஆதலால் சீக்கிரம் யுத்தத்திற்கு வரச்சொல்லி அழைத்துவா வென்று அனுப்பினன்.

அவனும் அப்படியே வண்டு ரூபமாகப்பறந்து இராமசுவாமி முன்பாகவந்து நின்ருன். அப்பொழுது வானரச்சேனைகள் கண்டு சினந்து பிடியுங்கள் அடியுங்களென்று ஆரவாரஞ் செய்துவந்தார்கள். அப்படி வந்த சேனைகளைப் பார்த்து நான் உங்களுக்குச் சந்தோஷ வார்த்தை சொல்லவந்தேன் என்று அந்த இராட்சதன் சொன்னுன்.

அப்பொழுது சுவாமி அந்த வானரச் சேனைகளை விலக்கி என்ன சந்தோஷ வார்த்தை கொண்டு வந்தாயென்று கேட்டார். அதற்கு இராட்சதன் சொல்லுவான். இராவணனுடைய குமாரன் அதிகாயனென்று நாமம் படைத்தவன், இராவணன் கயிலேயங்கிரியை யெடுத்தான். இவன் மகாமேருகிரியை யெடுக்க வல்லவனென்றும், அதிகாயன் சொல்லி யனுப்பிய வாக்கியத்தில் ஒன்றேனும் தவருதுரைத்தான்.

அது கேட்ட இலட்சுமணர் மகா பராக்கிரமத்துடனெழுந்து அவனுடன் போர்புரியச் சிறிதுதுணை வேண்டுமோ வென்று ஆயுதத்துட னெழும்போது, விபீஷணரெழுந்திருந்து சுவாமி! அடியேன் ஒரு விண்ணப்பஞ் செய்கிறேன். அதைச் செவியுற்றபிறகு யுத்தத்திற் கெழுந்தருளலாமென்று இலட்சுமணரைக் கையமர்த்திச் சுவாமி யிடத்தில் விண்ணப்பஞ் செய்வார். அதிகாயன் கொஞ்சப்பலமுள்ளவனல்ல, அவன் கும்பகர்ணனிலும் அதிகப்பலவான் அவர்கள் பூர்வ விபரம் விண்ணப்பம் செய்கிறேன் கேளுங்களென்று சொல்லுகிருன்.

ஒரு காலம் 'மதுவனென்றும், கைடவனென்றும்' இரண்டு பேர் இராட்சதர் சுவர்க்க மத்திய, பாதலமெல்லாம் தங்களுடைய பராக்கிரமத்தினால், எட்டுத்திக்கும் வென்று, கைலாய பருவதத்திற் போய் மகாதேவரைப் போருக்கு வரச்சொல்லி யழைத்தார்கள். அப்போதவ ரறிந்து நான் உங்களோடுபோருக்குவரப் பலமில்லை, திருப்பாற் கடலில் மகா விஷ்ணு பள்ளிகொண்டிருக்கிறார் அவரிடஞ் சென்றால், அவர் உங்களுடனே எதிர்த்துநிற்பார் அங்கேசெல்லுங்களென்று அனுப்பினார்.

அவர்கள் அப்படியே சென்று திருப்பாற்கடலிலிறங்கினார்கள் அந்தக்கடல் முழங்கால் மட்டுங் கண்டது. அதைச் சேறாய்க் கலக்கி விட்டுத் திருவனந்தாழ்வார் பேரிற் பள்ளிகொண்டிருப்பவரைக் கண்டு எழுப்பினார்கள். அவர் இரண்டாயிரங்கரங்களுடன் எழுந்திருந்து இவர்களிருவரையும் நோக்கி, நீங்கள் யாவர்? இங்குற்ற விசேட மென்ன? என்று கேட்டார். அப்பொழுதிவர்கள் சொல்லுவார்கள். இந்த ஈரேழு பதினான்கு புவனங்களிலும் எங்களுடன் போருக்கு எதிர்ப்பாரில்லாமல், திருப்பாற் கடலில் மகாவிஷ்ணு பள்ளிகொண்டிருக்கிறார் அவரிடம் சென்றால், உங்களுடனெதிர்த்துப் போராடுவார் அங்கேசெல்லுங்களென்று சிலரனுப்பினதால் இங்கு வந்தோம் இப்போது எங்களுடன் போருக்கு வாருமென் றுரைத்தார்கள்.

அதைக் கேட்ட மகாவிஷ்ணு நீங்களிரண்டு பேருந்தானே வருகிறீர்க ளென்று கேட்டார். அப்போது அவர்கள் இலட்சைப்பட்டு ஒருவன் பேரில் இரண்டு பேர் பொருதுவார்களோ வென்று, மதுவன் எழுந்து சென்று மகா விஷ்ணுவுடன் ஆயிர வருஷம்

பொருதினன். வெற்றியுந் தோர்வையு மில்லாது சம மான கட்சியானர்கள். பிறகு கைடவன் சென்று ஆயிரவருஷம் பொருதியும் சமமான கட்சியானர்கள். அப்போது மகா விஷ்ணு இவர்களிருவரையும் பார்த்து நீங்களிரண்டு பேரும் இரண்டாயிரவருஷம் சரி போராகப் பொருதினபடியால் உங்களுக்கு வேண்டிய வரத்தைக் கேளுங்கள் தருகிறேனென்றார். அப்போது அந்த இராட்சதாளிருவரும் உமக்கு வேண்டிய வரத்தைக் கேளும் தருகிறோமென்றார்கள். அதைக்கேட்ட மகாவிஷ்ணு, நீங்களிருவரும் இறக்கவேண்டுமென்று கேட்டார். அப்படியே மகா விஷ்ணு பாதத்தில் இருவருமிறந்தார்கள். அவர்களில் மதுவனென்கிறவன் கும்பகர்ணனுகவும், கைடவன் அதிகாயனுகவும் பிறந்தார்கள். அதிகாயனே மகா சுத்தவீரன் கபடமானபோரில் மிகுந்த நிபுணன், ஆனதால் இலட்சுமணருக்குத் துணையாகச் சுவாமியும் எழுந்தருள வேண்டுமென்று சொன்னர்.

அப்படிச் சொல்லிய விபீஷணரை நோக்கிச் சுவாமி சொல்லுவார். அந்த அதிகாயனைப்போல்எண்ணயிரங்கோடி அதிகாயனும், விண்ணரும், வேறு லோகத்தாரும், ஒருமுகங் கூடி இலட்சுமணன் மீது எதிர்த்து வந்தாலும், அவர்கள் யாவரையும் கண நேரத்திற் பஞ்சாப்பரத்தி விடுவான். தம்பியின் விற்றெழிலை நீயுங் கூடப்போய்க் கண்டு வாவென்று அனுப்பினர். அப்பால் அதிகாயன் அனுப்பி வைத்த தூதனையும், இவ்விடம் நடந்த விசேடங்களெல்லாம்போய்ச் சொல்லென்று அனுப்பினர்கள். அப்படியே தூதன் சென்று இதோ இலட்சுமணர் யுத்தத்திற்கு வருகிறர் என்று சொன்னன். அவனுக்கு அதிகாயன் வேண்டிய

ஆடையாபரணங்கள் கொடுத்துச் சந்தோஷமா யிருந்தான்.

அப்பால் இலட்சுமணர் அகஸ்தியர் கொடுத்த வில்லும் அம்பாறுத் தூணியும் வாளாயுதமும் எடுத்துக் கொண்டு சுவாமிபாதத்தில் நமஸ்காரம்பண்ணி விடைபெற்றுக் கொண்டு, அதிகாயனை நோக்கிப் புறப்பட்டார். அப்போது இலட்சுமணருடன் சுக்ரீவன் சாம்பவர் அனுமார் அங்கதன் முதலான இருபத்து மூன்று படைத்தலைவர்களும், எழுபது வெள்ள வானரச்சேனைகளும் புறப்பட்டு யுத்தகளத்திற்கு வந்தார்கள்.

உடனே நூறு வெள்ள இராட்சதச்சேனைகளும் எழுபது வெள்ள வானரச் சேனைகளுமாக எதிர்த்துப் போர்புரிந்தார்கள். அப்போது இராட்சதாள் விடுகிற கணைகளாலும், சக்கரத்தாலும், எறி யீட்டியாலும், அநேகவானரங்கள் அறுபட்டன. வானரங்களெறிகிற மலையினாலும், மரத்தினாலும், மிகுந்த இராட்சதப்படைகளின் ஆவி துறந்தன. இப்படிக்கு மகா உக்கிரமத்துடன் பொருதுகிறபோது, இராட்சதப்படை முரிந்து படைத்தலைவரிடம் ஓடிப்போனார்கள். அதைக்கண்ட அறுபதினாயிரம் படைத்தலைவரும் வானரங்களை யெதிர்த்துப் போர் செய்தார்கள். பின்னும் வானரச் சேனைகள் வீரகர்ச்சனை செய்து மகா புஜபல பராக்கிரமத்துடன் மலைகளையும் மரங்களையும் கொண்டெதிர்த்து இராட்சதப் படைத்தலைவரை மூளை சிதறக் குடல்சரியக் கை கால் முரிய அடித்துப் பொருதுகிறபோது, அதில் இறந்த இராட்சதாள்போக மீதமுள்ளவரோடி அதிகாயனிடத்தில், சுவாமி வானரச் சேனைகள் நமது சேனைகளையும், சேனைத்தலைவர்களையும் அநேக மாயிரம் பெய

ரையுங் கொன்றுவிட்டு இன்னும் உத்தண்டமாக நிற்கி ருர்களென்று சொன்ஞர்கள்.

அதிகாயன் அது கேட்டுச் சீக்கிரமாய்த் தேரை நடத்தி வந்து, எழுபது வெள்ள வானரச்சேனைக்குள் ளேபுகுந்து, கணைகளா லறுத்துக் கொல்லுகிற போது வானரச் சேனைகள் முரிந்து இருபத்திமூன்று படைத் தலைவரிடஞ்சென்று முறையிட்டார்கள். அதையறிந்த சேனைத்தலைவர்கள் அவரவர்க்குத் தக்கபடி மலைகளையும் பிடுங்கி யெறிந்து அஷ்டகாசஞ் செய்கிறபோது, அதி காயன் அவர்கள் பேரிலும் பாணப்பிரயோகஞ்செய்து விட்டான்.

அதைக்கண்ட அனுமார், அங்கதன், சுக்ரீவன் சாம்பவர் இவர்கள் பேருக்கொரு பருவதத்தைப்பேர்த் தெடுத்து அதிகாயன்பேரிலெறிந்தார்கள். அப்போது அதிகாயன் ஒரு வாளி தொடுத்து, அந்த மலைகளைத் துண்டந்துண்டமாக்கிச் சுக்ரீவனை நோக்கி, ஒகோ சுக் ரீவா! மலைகளையு மரங்களையுங்கொண்டு என்னை வெற்றி கொள்வோமென்று எண்ணவேண்டாம் இந்தப் பருவ தங்களெல்லாம் எனக்கு ஒரு திரணமாத்திரம், என்னு டைய கணையைக் குரங்குகள் பேரிற் பிரயோகஞ்செய்து பிரயோசன மென்ன? நான் இலட்சுமணனைத் தேடியல் லவோ வந்தேன், அவனைச் சீக்கிரம் வரச்சொல்லென் ருன்.

அதைக்கேட்ட சுக்ரீவன் அதிகாயனை நோக்கிப் பகர்வான். அதிகாயா! நான் உன்னைத் தேடிவரவில்லை உன்னுடனேயும் பொருதுகிறதில்லை, கும்பகர்ணன் மக் கள், கும்பன், நிகும்பன் மற்றபதினெட்டுக்கோடி குமா ரர்களையுந் தேடி வந்தேனென்று சொன்ஞன்.

அப்பொழுது கும்பன், நிகும்பன் முதல் பதி னெட்டுக்கோடி குமாரர்களும் வந்து, அவர்களில் கும்பன் சுக்ரீவனுடனேயும், நிகும்பன் அனுமாருடனேயும், போர்மத்தன் அங்கதனுடனேயும், கலைமத்தன் சாம்பவருடனேயும் பொருதினார்கள். இப்படிப்போர் புரிந்து மகா ஆரவாரங்களாகிறபோது, வானரவீரர்கள் கை ஓய்ந்த சமையம் விபீஷணர் இலட்சுமணரிடஞ் சென்று, இப்போது நமது சேனைகள் போர் முரிந்து நிற்கிற சமையமாகையால், தேவரீர் சீக்கிரம் எழுந் தருளவேண்டு மென்று சொன்னார்.

அதுகேட்டு இலட்சுமணர், சீக்கிர மெழுந்து வந்து கும்பன், நிகும்பன், போர்மத்தன், கலைமத்தன், இவர்கள் விட்ட கணைகளையு மறுத்து அம்பறுத்தூணியு மறுத்துவிட்டார். அதன் பிறகு அவர்கள் பேருக்கொரு இருப்புலக்கையை எடுத்தெறிந்தார்கள், அந்த இருப் புலக்கையையும் பொடித்து, அந்த நான்கு பேர் சிரத் தையுந் துணித்து விட்டார். அப்பால் பதினெட்டுக் கோடி குமாரர்களும் இருப்புலக்கைகளை யெடுத்துப் புறப்பட்டார்கள். அவர்களையும், இராட்சதாள் நூறு வெள்ளஞ்சேனையும் கணப்பொழுதிற் சம்மாரஞ்செய்து வில்லை நாணேற்றிச் சப்தங்காட்டினார். அந்த நாணோசைகேட்டு அதிகாயன் சீக்கிரத்திற் றேரை நடத்திக் கொண்டு வந்து இலட்சுமணரைக் கண்டெதிர்த்தான்.

அதைக்கண்ட அனுமார் வந்து அடியேன் றோளின்மீது ஆரோகணிக்க வேண்டுகிறே னென்று பணிந்து இலட்சுமணரைத் தன்றோளின் மீதேற்றிக் கொண்டு, அதிகாயன் றேரைக்கண்டு மறித்து நெருங்கினார். அப்போது தேவர்கள் புட்பமாரி பொழிந்தார்கள். அதிகாயன் இலட்சுமணரைப் பார்த்துச் சொல்லு

வான். இராவணன் றம்பி பட்டதற்கு இராமன் றம்பியைப் பழிகொள்ள வேண்டு மென்று உன்னைத் தேடி வந்தேன், அப்போது சுக்ரீவன் சில வானரச் சேனைகளையு மழைத்துக் கொண்டு வந்து, மலைகள் மரங்களைக் கொண்டெதிர்த்தார்கள். அந்தப் பருவதங்களையும் பொடியாக்கி, உங்களோடு பொருதுகிறதில்லை, வரம் பெற்று வாங்கிய பாணங்களை உங்கள் பேரில் எய்ய வேண்டுமோ? உங்களைக் கொன்றும் பயனில்லை, இராமன் றம்பி இலட்சுமணனைக் காட்டிக் கொடுத்து நீங்கள் உயிர்பிழைத்துச் செல்லுங்களென்று சொன்னேன் அப்போது நீ வரவில்லை, இப்போது நான் சொன்னபடிக்கு நீ என் கண் முன்னாக வந்து எதிர்ப்பட்டாய். இனிமேல் நான்செப்பிய சபதப்படி முடிப்பேனென்று ஆரவாரஞ்செய்து வில்லைச்சிறு நாணொலி கொண்டான்.

விருத்தம்.

அன்னது கேட்ட மைந்த னரும்பியன்
முறுவ ரூேன்றச்
சொன்னவர் வாரார் யானே தோற்கினுந்
தோற்கத் தக்கேன்
என்னை நீ பொருது வெல்லி னவரையும்
வென்றி யென்னு
மின்னினு மிளிர்வ தாங்கோர் வெஞ்சரங்
கோத்து விட்டான்

வசனம்.

அப்போது இலட்சுமணர் வாடா அதிகாயா! உன்னைப்போல் வாயினாற் பிதற்ற மாட்டேன் கையினாற் கண்டறிவாயென்று வில்லைச் சிறு நாணொலி கொண்டு ஒரு கொடிய பாணத்தைப் பிரயோகித்து விட்டு

நின்றார். அப்போது இலட்சுமணர்பேரில் அதிகாயன் இரண்டாயிரங் கணைகளைப்பிரயோகஞ் செய்தான். அந்தக் கணைகளை யெல்லாம் இலட்சுமண ரறுத்து நாலாயிரங்கணையை அதிகாயன் பேரில் ஏவினார். அந்தக்கணைகளை அதிகாய னறுத்துப் பதினாயிரங் கணையை விட்டான். அவைகளையும் இலட்சுமண ரறுத்தார். அதன் பிறகு அதிகாயன் இந்தப் பாணங்களினால் இவனைச் செயம்பண்ண முடியாதென்று, வாயு வாஸ்திரம், வருணாஸ்திரம், அக்கினி யாஸ்திரம், சக்கரம், முப்புரமெரித்தகணை, மாயக்கணை, வர்க்கக்கணை, மற்ற ஆயுதங்களையும் ஒவ்வொன்றாய்த் தொடுத்து ஆரவாரஞ் செய்தான்.

அந்தக் கணைகளை யெல்லாம் இலட்சுமணர் அறுத்து விட்டார். பிறகு மிகுதியுங் கோபங் கொண்டு ஒரு இருப்புலக்கையை எடுத்துச்சுழற்றிவீசினான். அது ஆகாயத்திற் கிளம்பி கார்காலத் திடிபோல் சத்தமிட்டு வருகிறபோது, வானரச் சேனைகள் பயந்து இலட்சுமணர் மறைவில்நின்றார்கள். அப்போது இலட்சுமணர் பயப்படாதீர்களென்று திடஞ்சொல்லிக் கொண்டு ஒரு பாணப்பிரயோகஞ்செய்து, அந்த இருப்புலக்கையும் இரண்டாய் முரித்தெறிந்து விட்டார். அதைக் கண்ட அதிகாயன் இவன் வீரம் இவ்வளவோ? இன்னுமறிவோமென்று ஐமுகப்பகழியிற் சிலதொடுத்துவிட்டான்.

அந்தக் கணைகள் வந்து இலட்சுமணரையும், அனுமாரையும் மூடிக்கொண்டது. அனுமார் தேகத்திலும் பாணங்கள் தைத்து இரத்தப் பிரவாகமானதை இலட்சுமணர் கண்டு கடுங்கோபங் கொண்டு, ஆயிரம் பதிலம்பு தொடுத்து அதிகாயன் விட்ட பாணங்களையும், அவன் பிடித்திருந்த வில்லையும், அம்பறாத்தூணி கவ

சத்தையும், தேர், குதிரை, சாரதி இவைகளையும் அறுத்துச் சின்னபின்னஞ் செய்தார். அதைக்கண்ட அதிகாயன் மறுதேரேறிக் கொண்டு ஆயிரங்கோடிபாணங்களை இலட்சுமணர் பேரிலும், அனுமார் பேரிலுந் தூவினன்.

அந்தப் பாணங்களையு மறுத்து, அவன் றேரையும் தட்டுத் தட்டாயுடைத் தெறிந்தார். உடனே அதிகாயன் வேறு தேரேறிக் கொண்டு சில பாணங்களைத் தூவி ஆரவாரஞ்செய்தான். அப்போது இலட்சுமணர் அந்தப்பாணங்களையு மறுத்து, அந்த ரதத்தையுமுடைத்துவிட்டார். இப்படித் தன்னுடைய சேனைகள் சின்ன பின்னமாகி இரதங்கள் ஒன்றேனு மில்லாததை நோக்கிய அதிகாயனுக்கு மிகவுங் கோபாக்கினி யுண்டாகி ஓர் இருப்புலக்கையை எடுத்துக்கொண்டு, இலட்சுமணரை ஓரடியா யடித்துக் கொல்ல வேண்டுமென்று ஓடி வருகிறபோது, வாயுபகவான் வந்து இலட்சுமணரைப் பார்த்துச் சுவாமி இவன் பிரமாஸ்திரத்தால் இறப்பானே யன்றி மற்றபாணத்தா லிறக்கமாட்டானென்று சொல்லி மறைந்துபோனர் பின்பு,

விருத்தம்.

நன்றென வுவந்துவீர னன்முகன் படையைவாங்கி[ன்
மின்றனிதிரண்ட தென்னச் சரத்தொடுங்கூட்டிவிட்டா
குன்றினு முயர்ந்ததீயோன் றலையினைக் கொண்டவாளி
சென்றது விசும்பி னூடு தேவருந் தெரியக்கண்டார்,

ஷை

பூமழை பொழிந்து வானோர் போயதெம்
பொருமலென்றார்.
தாமழைத் தலறி யெங்கு மிரிந்தன ரரக்கர்
தள்ளித்

தீமையுங் களிப்பு நீங்கித் திகைத்தனர்
குரங்குச் சேனைக்
கோமகன் றேளி னின்றுங் குதித்தனன்
கொற்றவில்லான்.

வசனம்.

அப்படியே பிரமாஸ்திரத்தை யெடுத்து மானத பூஜை கொடுத்து வில்லிற் றெடுத்து விட்டார். அந்தப் பிரமாஸ்திரமானது விண்ணிற் கிளம்பி கிறு கிறுவென்று சுழன்று வந்து அதிகாயன் சிரத்தை யறுத்து விட்டது. அதைக்கண்டதேவர்கள் கூத்தாடிப் புட்பமாரி பொழிந்தார்கள். அதன் பிறகு மகரக் கண்ணன் மட்டுந் தப்பித்து ஓடி விட்டான். இப்படி அதிகாயனும், பதினெட்டுக் கோடி குமாரர்களும், மற்றுமுள்ள இராட்சதச்சேனைகளும் கரி, பரி, இரதங்களும் அறுபட்ட இரணகளத்திலே குருதி வெள்ளம் பாய, அலகைகள் கவந்தங்கள் கூத்தாட, வேடிக்கை பார்த்துக்கொண்டு இலட்சுமணர், விபீஷணர், சுக்ரீவன், அங்கதன், அனுமார் சாம்பவர் மற்ற வானரச் சேனைகளும், இராவணன் இன்னும் மேற்படை யனுப்புவானென்று நின்றார்கள்.

அப்போது சில தூதுவர்கள் ஓடோடியும் இராவணனிடம் சென்று பணிந்து சுவாமி! அதிகாயனும் கூடச் சென்ற பதினெட்டுக் கோடி குமாரர்களும், மற்ற இராட்சதவீரர்களும், இலட்சுமணனுடைய ஓரம்பினால் கண நேரத்திற்குள் மடிந்தார்கள். இன்னும்மேற்படை வருமென்று கட்டின கச்சையுடன் இலட்சுமணன் இரணகளத்தில் நிற்கிறானென்று சொன்னார்கள்.

அந்த விசேஷம் இராவணன் செவியிற் புகவே திடீரென்று முகத்திலறைந்து கொண்டு மகா துயரத்தோடு அழுதான் அந்தச் சத்தந் தான்யமாலை கேட்டு

ஓடி வந்து, இராவணன் பாதத்திலடித்து விழுந்து புலம்பி அழுதாள். மற்ற பதினெட்டுக்கோடி குமாரர்களும், நூறு வெள்ளம் இராட்சதச் சேனைகளும், அநேகபடைத்தலைவர்களும் இப்படி வெகு ஜனங்களிறந்தபடியால் இலங்கைப்பட்டணம் எழுநூற்றுக் காதவழி முழுதும், கோவென்று அழுகைச் சத்தமாகவே கேட்கப்பட்டது.

---

## இந்திரசித்துவதைப் படலம்.

மேலக்கோட்டை வாசலிலிருந்த இந்திரசித்து அதைச் செவியுற்றுத் தன்னுடைய தேரேறிக்கொண்டு நாற்பது வெள்ளஞ் சேனையோடு புறப்பட்டு, இராவணன் அரண்மனைக்குச் சமீபமாக வந்தவுடன், தேர்விட்டிறங்கி இராவணனைக் கண்டு முகத்தி லறைந்துகொண்டழுதான். அப்படியழுது புலம்பிய மகனை இராவணன் றேறுதல் சொல்லி, அப்பா இந்திரசித்தே! அந்த இராமன் றம்பி இலட்சுமணன், அதிகாயனையும் அவனுடன் சென்ற சேனைகளையுங் கொன்றுபோட்டு இன்னம் மேற்படை வருமென்று இரணகளத்தில் நிற்கின்றானும், ஆதலால் நீ சென்று உன்னுடைய நாகபாசத்தினால் அந்த இலட்சுமணனையும், இராமன்மற்ற வானரச் சேனைகளையும் கட்டிக்கொண்டு வாவென்று அனுப்பினான்.

அப்படியே இந்திரசித்து தன்பிதாவைப்பணிந்து விடை பெற்றுக் கொண்டு, தன்னரண்மனை சென்று நீராடி விலையதிகம் பெற்ற வஸ்திரங்களுந் தரித்து, அஸ்தகடகம் பூண்டு வச்சிரக் கிரீடமும், வச்சிரக் கவசமுமணிந்து, போர்க்கோலங்கொண்டு, இரண்டாயிரஞ் சேமத்தேரையும் அலங்காரத்துடன் கொண்டு வரும்

படிச் செய்து, அதில் வில்லுகள் அம்பறுத்தூணிகள், மாயக்கணை, வருக்கக்கணை, மற்ற முப்பத்திரண்டாயுதங்களும் வைத்துக் கொண்டு, மிகு அலங்காரஞ் செய்து கொண்டு வந்த தேரின் பேரில் இந்திரசித்து ஆரோகணித்துக் கொண்டு, வீரவாத்திய முழங்க, தேவர்கள் நடுநடுங்கும்படியாக, இலங்கையை விட்டு இரணகளை நோக்கிப் புறப்பட்டான்.

அப்பொழுது அவனுடன், துணையாக வருகிற நாற்பது வெள்ளஞ் சேனைகளும், நாற்பது இலட்சம் சேனைத்தலைவரும், முப்பது நாறுயிரந் தேரும், பத்து நாறுயிரங் குதிரை, ஐந்து நாறுயிரம் யானை; இவைகளை அணியணியாக வகுத்துக் கொண்டு கட்டியங் கூறிவர, மேகங்கள் ஊர்வதுபோல சகல தளத்துடனும் வந்து இந்திரசித்து யுத்தகளத்தில் நின்றான்.

விருத்தம்.

யாரிவன் வருபவ னியம்பு வாயென
வீரவெந் தொழிலினன் விளம்ப வீடணன்
ஆரிய விவனிக லமரர் வேந்தனைப்
போர்கடந் தவனின்று வலிது போரென்றான்

வசனம்.

அதை இலட்சுமணர் கண்ணுற்று விபீஷணரை நோக்கி இதோ வந்து நிற்பவன் யாரென்று கேட்டார், அப்போது விபீஷணர் சொல்லுகிறார். சுவாமி! இவன் இராவணனுடைய மகன், இவன் மேகநாதனென்றும், இந்திரசித்தனென்றும், நாமமுடையவன். விற்போரிற் சமர்த்தன், பாதல பூமி சுவர்க்க முழுவதும் இவன் பெயர் சொன்ன மாத்திரமே நடுங்கும். பூமியினின்று போர்புரிகிறபொழுதே விசும்பிற்பாய்ந்து

மேகத்தில் ஒளிந்து கொண்டு யுத்தஞ் செய்வான் அதனால் இவனுக்கு மேகநாதனென்றும், தேவேந்திரனைப் பிடித்து ஐநூறுவருஷம் சிறைச்சாலையில் வைத்தான். அவரை மீட்டும் பொருட்டாய் வந்த பிரமாவினிடத்தில் நாகபாசமும், பிரமாஸ்திரமும், நிகும்பலை வேள்வியும், அதற்கு மந்திரங்களும் பெற்றுக்கொண்டு அமரர்க்கரசனை விடுவித்தான்.

ஆதலால் அன்று முதல் இந்திரசித்தென்றும் பெயர் விளங்கியது; இவன் பொருதுகிற போர் கபடமாயிருக்குமே யல்லாமல் கும்பகர்ணன் அதிகாயனைப் போல் நேர்முகமாக நின்று பொருதான். ஆகையால் அவன் மாயமும் வஞ்சமுங் கண்டு பொருதவேண்டும். தேவரீர் அவனைச்செயிக்க வேண்டுமே யல்லாமல் மற்றொருவரால் செயிக்கலாகாதென்று விபீஷணர் சொன்னார். அதைக்கேட்ட இலட்சுமணன் வெகு பராக்கிரமத்துடன்எழுந்து இருகரத்தையும்உதறி, வில்லையெடுத்து வளைத்துச் சிறு நாணொலி கொண்டார். அந்தச் சப்தங் கேட்ட இந்திரசித்தும், வில்லைக் குணத்தொனிசெய்து வீரகர்ச்சனையுடனின்றான்.

அப்பொழுது வானரச்சேனைகளும் இராட்சதச் சேனைகளுங்கலந்து பொருதினார்கள். வானரங்கள் பருவதத்தினாலும் மரங்களினாலும் மோதியடித்துப் பொருத, இராட்சதர்கள் வில், வாள், குந்தம், ஈட்டி, இருப்புலக்கை மற்ற முப்பத்திரண்டாயுதங்களையும் பிரயோகஞ் செய்துபொருத, இவ்விதம் மகாயுத்தங்களாகிறபோது, அதில் வானரச்சேனைகளுக்குக்காலறுந்தும், வாலறுந்தும், கரமுரிந்தும், சிரமறுந்தும் இப்படிச் சின்னபின்னப்படவும், இராட்சதர்கள்குடல்சரிந்தும், சிரமுடைந்தும்,கை கால்முறிந்தும், விழ இந்தப்படியாக அநேக

வானரங்களும் இராட்சத வீரர்களும் ஆவி துறந்தனர். அப்பொழுது இராட்சதச் சேனையில் அநேகம் சிரச்சேதமானவுடன் மற்றவர் வெருண்டு சேனைத் தலைவர்களிடம் ஓடினார்கள். அதுகண்ட நாற்பது இலட்சம் சேனைத்தலைவரும், தங்கள் தங்கள் இரதங்களைச் சீக்கிரம் நடத்திக் கொண்டு வந்து வில்லை வளைத்து வானரச்சேனைகள் பேரிற் சரமாரியாகப் பொழிந்து துண்டந்துண்டமாயறுத்து விழுத்தினார்கள். எஞ்சிய வானரங்கள் மிகவும் நடுநடுங்கி ஓடி வருகிறதறிந்த இருபத்து மூன்று சேனைத்தலைவரும் மஹா உக்கிரமத்துடன் புறப்பட்டு, பேருக்கொரு பருவதங்களைப் பேர்த்தெடுத்துக் கொண்டு வந்து இராட்சதச் சேனைத்தலைவர்கள் பேரிலெறிந்து பொருதினார்கள்.

அப்போது இராட்சத வீரர்களில் மாய்ந்தவர் போக மீந்தவர் இந்திரசித்து நிற்கிற பேரணியை நோக்கி யோடி வருகிறபோது, அதை இந்திரசித்துக் கண்டு அக்கணமே தன்னிரதத்தை நடத்தி வில்லை வளைத்துச் சரத்தைத் தொடுத்து. எதிராக நின்ற இருபத்து மூன்று சேனைத்தலைவர் மீதும் விடுத்து ஆரவாரஞ் செய்தான். அப்போதுசேனைத்தலைவர்களும் நெடுநேரம் பருவதங்களையும் மரங்களையுங்கொண்டெறிந்து உயுத்தஞ் செய்ய, இந்திரசித்து வந்தமலைகள் மரங்களையெல்லாம் அறுத்து உடைத்துத் தூளாக்கிவிட்டுச் சில பாணங்களால் இருபத்து மூன்று சேனைத்தலைவரையுஞ் சின்னபின்னஞ்செய்கிறபோது, அவர்கள் இனிக்கணப்பொழுதேனும் நாம் இவனுடன் எதிர்த்துப் போராட இயலாதென்று சுக்ரீவனண்டை ஓடினார்கள்.

அதுகண்ட சுக்ரீவன் சாம்பவர் அனுமார் அங்கதன் இந்நான்கு பெயர்களும் அவரவர்க் கியன்றபடி

பருவதங்களைப் பிடுங்கிக் கொண்டு வந்து இந்திரசித்தின் பேரில் எறிந்து வீரகர்ச்சனையுடன் ஆரவாரித்தார்கள். அந்தப்பருவதங்களை இந்திரசித்து ஓர்பாணத்தாலே தூட்பரத்திவிட்டுச் சொல்லுவான்; ஓகோவானரங்களே! எதற்காக வீணில் மாய்கிறீர்கள். வேண்டாம். இராம இலட்சுமணனைக் காட்டித் தந்து நீங்கள் மலைகள் வனங்களிற் சென்று பிழையுங்களென்று சொன்னான். அதைக்கேட்ட அனுமாருக்கு மிகவுங் கோபமுண்டாகிச் சொல்லுவார். இந்திரசித்தே! எங்கள் கரத்திலிருக்கின்ற பருவதங்களை யெறிகின்றோம், அவைகளை நீ தாங்கினையானல் மகா சுத்தவீரன்றோ னென்றார். அவ்வாக்கியத்தைக் கேட்ட இந்திரசித்துச் சொல்லுகின்றான்.

விருத்தம்.

நில்லடா சிறிது நில்லடாவுனை நி
  னைந்து வந்தனன் முனைக்குநான்
வில்லெடாமைநின தாண்மைபேசியுயி
  ரோடு நின்று விளையாடினாய்
கல்லடா நெடும ரங்களோவருக
  ருத்தினேன் வலிகடப்பநீ
சொல்லடாவென வியம்பினானிகல
  ரக்கனையனிவை சொல்லினான்.

வசனம்.

இப்படி இந்திரசித்துத் தன்னுடைய பராக்கிரமத்தைப் புகழ்ந்து சொல்லியதைக் கேட்ட அனுமார் சொல்லுவார். ஏ இந்திரசித்தே! வில்லெடுக்கவும் வீரருண்டு, அவ்வில்லினால் நீங்களிறந்த காலத்தில் உங்களுக்குக் கல்லெடுக்கவும் விபீஷணரிருக்கிறா ரென்று பரிகாசமாகச் சொன்னார் அவ்விஷயத்தைக் கிரகித்த இந்திரசித்துச் சொல்லுகின்றான்.

## விருத்தம்.

எங்கு நின்றனனி லக்குவப்பெயரவ்
 வேழையெம்பி யதிகாயனும்
சிங்கம் வந்தவனை வென்றுதன் னுயிரெ
 னக்குவைத்த தொர்சிறப்பினுன்
அங்கவன்றனை மலைந்துகொன்றமுனி
 வாறவந்தனன தன்றியும்
உங்கடன்மையின டங்குமோவுலகொ
 டுக்கும் வெங்கணை தொடுப்பனே.

## வசனம்.

அடா! என் றம்பியைக் கொன்ற உங்களை விடுவேனென் றெண்ணுதீர்கள் என்று இப்படியாக இந்திரசித்து வீரம்பேசிக் கொண்டு எழுநூறுயிரம் ஐமுகப்பகழியைத் தொடுத்தான் அவைகளை அனுமாருடலிலடக்கிக்கொண்டு மகாஉக்கிரமத்துடன் வீரகர்ச்சனை செய்து அனுமார் அங்கதன் மற்ற நான்கு பேரும் நான்கு பருவதத்தைப் பேர்த்தெறிந்தார்கள் மகா விசை கொண்டு வருகின்ற நான்கு பருவதங்களையும் ஓரஸ்திரத்தினுற் பொடியாக்கி, அந்த நான்கு பெயரையும் அம்புமாரியாகத் தொடுத்துப் பூமியில் வீழ்த்தினுன். மற்றவானரப்படைகள் பயந்து ஓடி விட்டார்கள். அப்பொழுது விபீஷணர் ஓடிவந்து இலட்சுமணரின் அடிபணிந்து சொல்லுகின்றூர்.

## விருத்தம்.

அய்யவீ தன்ன தேயா லாயிரங் கோடி தேவர்
எய்தின ரெய்தினுரே யீடுபட் டிரிந்த தல்லால்
செய்தில ரிவனை யொன்று நீயிது தீர்ப்பி னல்லால்
உய்திற னுண்டோ வேறிவ் வுலகினுக் குயிரோ டென்-
 [றுன்.

என்பது சொல்லக் கேட்ட விந்திர வில்லி னேடும்
பொன்பொரு மேக மொன்று வருவது போல்கின்றனை
முன்பனை முன்பு நோக்கி யிவன் கொலாம் பரதன்முன் [னேன்
தன்பெருந் தம்பி யென்று மெனச்சாரன் சொன்னான்

வசனம்.

சுவாமி சீக்கிரம் எழுந்தருளா திருப்பதால் நமது படை வெகுவாக முரிந்து ஓடுகிறார்கள் மோசம்வருமென்று விபீஷணர் பகர்ந்த வாக்கியத்தைக் கேட்ட இலட்சுமணர் நம்முடன் போருக்கு வந்த இந்திரசித்தின் சரத்தையும், அவன் சிரத்தையுந் துணித்து வருகின்றேன். இனிக்கண்டறியுமென்று மகா பராக்கிரமத்துடன் வேழத்தைக் கண்ட கோளரி போற் றுள்ளியெழுந்து ஆயுதத்துடன் உயுத்தகளத்தில் வந்து நின்றார். அதைக்கண் ணுற்ற இந்திரசித்தும்தன்னிரதத்தை நடத்திக்கொண்டு வந்து இலட்சுமணர் முன்பாக நின்றான். அவனுடன் வந்த இராட்சதாளுஞ் சுற்றிவளைந்து நின்றார்கள். அது எப்படியென்றால்:—மும்மதங்களையுடைத்தாகிய ஒரு யானையைப் பல கொசுக்கூட்டங்கள் வந்து சூழ்ந்து வளைந்து கொண்டது போலிருந்தது. அப்படியான இராட்சதப்படைகளைக்கணப் பொழுதில் காலாக்கினி ருத்திரனைப்போல ஓரம்பினாற் றுணித்துப் பொடியாக்கினார்.

அதைக்கண்ட இந்திரசித்து அதிசயித்து இவனேஒருமனிதன் இவனுடையகரவேக சரவேகம்போல் நாம் கண்டதில்லை. நமக்குத் துணையாக வந்த சேனைகளில் ஒன்றேனுந்தப்பவில்லையே. என்றுமனதிற்பிரமைகொண்டு பிறகு தெளிந்து நமது வல்லமையை இனியல்லவோ காண்பிக்க வேண்டுமென்று வீரகர்ச்சனையுடன் வில்லைக் குணத்தொனி செய்தான்.

அப்பொழுது அனுமாரோடி வந்து இலட்சும ணரின் அடிபணிந்து சுவாமி இந்திரசித்து இரதத்தி னின்றுபொருதுகிற போது தேவரீர் பாதசாரியாய் நிற் கலாகா தென்று இலட்சுமணரைத் தன்றோள் மேல் வைத்துக் கொண்டு இந்திரசித்தின் இரதத்திற்கு முன் பாக நின்று ஆர்ப்பரித்தார்.

இந்திரசித்தன் முன்பாக நின்ற இலட்சுமண ரைக் கண்டவுடன் நூறு கோடி பாணங்களைப் பிரயோ கஞ் செய்தான். அவைகள் ரிவ்ரிவ் வென்னும் ரீங்கா ரத்துடன் வந்து இலட்சுமணரின் கவசத்திற் பட்டு முனை தெறித்துப்போனதே யல்லாமற் கவசத்தை ஊடு ருவிக் கொண்டு போகவில்லை. அப்பொழுது இலட்சும ணர் மிகவும் கோபாக்கினியுடன் நான்கு பாணங்களைப் பிரயோகஞ் செய்து இத்திரசித்தின் கவசத்தையறுத்து வீழ்த்தினர். அறுபட்ட கவசம் பூமியில் விழுமுன்பாக பிரமாகொடுத்த கவசத்தை யெடுத்துக் கட்டிக்கொண்டு பதினன்கு கோடி பாணந் தொடுத்தான் அந்தப்பா ணங்களை இலட்சுமணரறுத்தார். பிறகு வச்சிரப் பகழி யிற் கோடிதொடுத்தான். அந்தப்பாணங்களையும் இலட் சுமணரறுத்தார். அதைக்கண்ட இந்திரசித்து இவனே நம்முடைய பாணங்களை யெல்லாம் அறுக்கிறவனென் று கடுஞ்சினங் கொண்டு இலட்சுமணர் மீதும் அனு மார்மீதும் பலகோடி பாணங்களையள்ளிச் சரமாரியாகப் பொழிந்து ஆரவாரித்தான்.

அந்தப் பாணங்கள் அனுமார் உடலிற் றைத்து இரத்தப் பெருக்கெடுத்தது, அதைக்கண்ட இலட்சும ணர் மூர்க்கங் கொண்டு சில பாணங்களைப் பிரயோகஞ் செய்து அவன் இரதம், சாரதி, புரவி, இவைகளையறுத் தார் அதன்பிற கிந்திரசித்து வேறு இரத்திற் பாய்ந்து

நின்று கொண்டான். அப்பொழுது அனுமாருக்குச் சோபந்தெளிந்து வீராவேசங் கொண்டு இந்திரசித்தின் இரதம் சாரதி புரவி இவைகளைத் தன் வாலினற் கட்டி நிலத்திலடித்துச் சிதறி விட்டுக் கர்ச்சித்துப்பின்னும் ஐயனேறிய சிங்கம்என்னசெய்ததென்றல், எஞ்சி நின்ற இரதங்களை யெடுத்துக் குப்புறப் போடுகிறதும், சேனைகளை வாரி வாரி ஆகாசத்தி லெறிகிறதுமாய்த் திரிந்து ஆரவாரஞ்செய்தது.

இப்படிச் செய்கிற அனுமாரின் பராக்கிரமத்தைக்கண்ட இந்திரசித்துத் திகைத்து இவ்வளவு புஜவலிமை யில்லாமலோ இலங்கை யெழுநூற்றுக் காதவழியுஞ் சுட்டுக் கொட்டை பரப்பி, அநேக மாயிரம் இராட்சதச் சேனைகளையுஞ் சம்மாரஞ்செய்து வந்தானென்று எண்ணிப் பிறகு இலட்சுமணர் மீதும், அனுமார் மீதும் ஆயிரங்கோடி பாணந்தொடுத்து ஆரவாரஞ் செய்தான். அந்தப் பாணங்களை இலட்சுமணரறுத்து மிகுந்த சினத்துடன் ஓர் பாணந்தொடுத்து இந்திரசித்தின்வில்லையும், அம்பருத்தூணியையுங், கவசத்தையும், இரதம் சாரதி புரவிகளையும், அறுத்துச் சின்னபின்னஞ்செய்தார். இப்படி இந்திரசித்து இரண்டாயிரம் இரத்தில் ஏறியேறி யிறங்குகிறதேயல்லாமல் இலட்சுமணரை யொன்றுஞ் செய்தவனல்ல. தன்னுடைய இரதங்களெல்லாம் உடைந்து நொறுங்கியவுடன் பாதசாரியாக நின்றுகொண்டு பதினயிரங்கோடி பாணங்களைத் தூவி யாரவாரஞ் செய்து, விசும்பிலே பாய்ந்து மேகத்துக்குள்ளே மறைவாக நின்றான்.

விருத்தம்.

அழித்ததே ரழுந்தா முன்ன மம்பொடு கிடந்து வெம்பி
உழைத்துயிர்விடுவதல்லா லுறுசெருவென்றேமென்று

பிழைத்திவர்போவரல்லர் பாசத்தாற் பிணிப்பினென்று
விழித்திமை யாதமுன்னம் வில்லொடும் விசும்பிற் சென்
[றான்.

வசனம்.

அப்பொழுதுஇலட்சுமணர்இங்குற்றஇந்திரசித்துப் போருக்காற்றாமல் இலங்கையை நோக்கிச் சென்றான். ஆதலால் நாம்சேனையோடு போய்ச்சேரவேண்டுமென்று அனுமாரின் தோள் விட்டுக் கீழே யிறங்கிக் குதைச்சரடும் விற்சரடுங் கழற்றி வில்லும் அம்பறாத் தூணியும் அங்கதன் கரத்திற் கொடுத்துக் கச்சையும் அவிழ்த்து இராமசுவாமி யிருக்கிற பவளமால் வரையைநோக்கிப் புறப்பட எத்தனிக்கும் போது, இந்திரசித்து மேகமண்டலத்திலே யிருந்து நாகபாசத்தைப் பிரயோகஞ் செய்து விட்டான்.

அந்த நாகபாசமானது இந்திரசித்தின் கரத்தினின்று விடுபட்டு வடவாமுகாக்கினி போற் சீறிப்புறப்பட்டு வந்து விபீஷணர் நீங்கலாக இலட்சுமணர் முதல் இருபத்தி மூன்று படைத்தலைவரையும் எழுபது வெள்ளம் வானரச் சேனைகளையும் சங்கிலிப் பின்னலாகக்கட்டி யிறுக்கிக் கொண்டது.

அப்போது அனுமார்காலினாலுதைப்பார், காலைச் சுற்றிக் கொள்ளும். கரத்தினாற் றள்ளுவார் கரத்தையுஞ் சுற்றிக் கொள்ளும். இப்படியாகச் சகல சேனைகளும் அந்த நாகபாசத்திற்கட்டுப்பட்டு அரைக்கண்பார்வையாக அடங்கிப் போனார்கள். அப்பொழுது மேகமண்டலத்திலிருந்து இந்திரசித்துக் கீழே யிறங்கி வந்து இலட்சுமணர் முதல் சகல சேனைகளையும் பார்த்து முட்டம்புகளாக விட்டுநிரைத்து வெற்றிச் சங்க முழக்கி

இலங்கையிற் சென்று, இராவணனைக் கண்டு பாதம் பணிந்து இராமனும் விபீஷணனும் நீங்கலாக இலட்சுமணன் மற்ற வானரச் சேனைகளை யெல்லாம் நாகபாசத்தினாலே கட்டி, அம்புகளாற் குதை மூடி விட்டு வந்தேன், நாளைக்குச்சென்று அந்தஇராமனையும், பிரமாஸ்திரத்தினாலே சம்மாரஞ் செய்து வருகின்றேன். அப்பால் உம்முடைய பழியும் நீங்கினதோவென்று கேட்டான். அப்போது இராவணன் இந்திரசித்தை மிகவுங் கொண்டாடி அவனை அவன் அரண்மனைக்கு அனுப்பி விட்டுக் குதூகலத்துடன் களியாட்டம் பார்த்துக் கொண்டிருந்தான். இப்பால் விபீஷணன் திடீரென்று பதறியோடிப் பவளமால் வரையிற் சென்று இராமசுவாமியின் பாதத்தி லடித்துவிழுந்து புரண்டு அழுது சுவாமி அதிகாயன் இறந்த இரணகளத்தில் இன்னம் மேற்படை வருமென்று இளையவர் நின்றார். அப்பொழுது இந்திரசித்து வந்தான் அவன் அளவற்றகோடி சேனைகளுடன் வந்து போர்புரிந்தான் இலட்சுமணர் வந்தெதிர்த்த இராட்சதச் சேனைகளை யெல்லாங்கணப் பொழுதில் ஓர்பாணத்தினல் மடித்து விட்டு இந்திரசித்தின் வில்லையும் அம்பறுத் தூணியையும் கவசத்தையுமறுத்து அவனையும் விழித்துப் பார்க்க வொட்டாமல் கைச்சித்திரத்துடன் தனுசாஸ்திரவல்லமையைக்காட்டினார் அப்போது அவன் நிலத்தில் நிற்கமாட்டாமல் விசும்பிற் பாய்ந்து மேகத்தில் மறைந்துகொண்டு நாக பாசத்தைப் பிரயோகஞ்செய்து அடியேன் நீங்கலாக இலட்சுமணர் முதலான சகல வானரச் சேனைகளையுங் கட்டி விட்டு இலங்கை சென்றானென்று விபீஷணர் சொன்னவுடனே இராமசுவாமி மெத்த மனது கலங்கி மகா துக்கத்துடன் சொல்லுகின்றார்.

விருத்தம்.

எடுத்தபோ ரிலங்கை வேந்தன் மைந்தனோ டிளைய
கோவுக்
கடுத்ததென் றென்னை வல்லை யழைத்திலை யமரர்
பாசந்
தொடுத்தகை தலையி னோடுந் துணித்துயிர் துடைக்க
வென்னைக்
கெடுத்தனை வீடணா நீ யென்றனன் கேடிலா
தான்.

வசனம்.

இப்படிச் சுவாமி கவலையுடன் புலம்பிச் சீக்கிரம் உயுத்தகளத்தில் வந்து நாகபாசத்தினாற் கட்டுண்டு கிடக்கிற தம்பியையும் வானரச் சேனைகளையுங் கண்ணுற்று மதிமயங்கித் தம்பி இலட்சுமணா! சுக்ரீவா! அனுமா! அங்கதா! சாம்பவரே! யென்று கூப்பிடுகிற போது அவர்களுக்கு ஏனென்று கேட்க நினைவு மட்டு மல்லாமல் வாய் திறக்கக்கூடாமல் அலகைக் கெட்டியாக நாகபாச மிறுக்கிக்கொண்டது ஆயினும் சுவாமி வந்து விட்டார் இனிமேல் எப்படி யேனும் நம்மை விடுவித்துக் கொள்வாரென்று சகலருஞ் சந்தோஷத் துடனிருந்தார்கள். அப்போதுசுவாமியும் மெத்தமயக் கத்துடன் விபீஷணரை நோக்கிச் சொல்லுகின்றார் விபீஷணரே! இந்திரசித்துக் கபடப் போர்க்காரனென் று என்னிடம் முன்னமே சொன்னால், அவன் நாகபாசத்தையும் நாகபாசம் பிரயோகஞ் செய்த கரத்தையும் அறுத்து வீழ்த்தியிருப்பேனே என்று மிகவும் புலம்பிப்பின்னும் இந்த நாகபாசங் கொடுத்தவனா ரென்று கேட்க விபீஷணர் சொல்லுகின்றார், சுவாமி! இந்த நாகபாசம் பிரமாகொடுத்தது இதைக் கொடுத்தவன் வந்து விடுக்க வேண்டுமே யல்லாமல் மற்றெவராலும்

ஆகா தென்றார். அதைக்கேட்ட சுவாமியுங் கோபித்து இந்த நாகபாசங் கொடுத்த பிரமா தானென்ன, தேவர் கள்தானென்ன, என் தம்பியும் இறப்பானே நாம்யாருக் காக இராட்சதர்களுடன் போர் புரிகிறோம். யாவரை யும் எரித்துப் போடுகிறேனென்று ஆக்கிரமித்துப் பிர சண்டகோதண்டத்தை யெடுக்கிறபோது பிரமா முதல் சகலரையுஞ் சம்மாரஞ்செய்வாரென்று.மிகவும்பயந்து தேவர்களெல்லாங்கூடிக் கருடாழ்வாரிடத்திற்சென்று சுவாமி இலங்கையில் இராவணன் உயுத்தகளத்தில் இந்திரசித்து விட்ட நாகபாசத்தினால் இலட்சுமணர் மற்ற வானரச் சேனைகள் கட்டுண்டதையறிந்த இராம சுவாமியும் தம்பியின் மயக்கத்தால் நாம் எல்லோரை யுஞ் சம்மாரம் பண்ணுகிறோமென்று கோபாக்கினியுட னிருப்பதால் தேவரீர் இந்த வேளையிற்சென்று, அந்த நாகபாசத்தின் கட்டறுக்க வேண்டுமென்று மிகவும் வேண்டிச் சொன்னார்கள். அதைக்கேட்ட கருடாழ் வார் பிரமதேவர்களுக்கு அஞ்சலி சொல்லி ஆகாயத் திற் கிளம்பி இரண்டுசிறகும் இரண்டுதிசையையுமறைத் துக்கொண்டு வட்டமிட்டுச் சிறகடி கொண்டு பறந்து உயுத்தகளத்தில் வந்தார். அப்பொழுது கருடாழ்வா ரின் நிழற்பட்டமாத்திரமே நாகபாசங் கட்டுகள்விட் டுத் திசைகெட்டோடினது. உடனேஎழுபதுவெள்ளம் வானரச்சேனையும் இருபத்திமூன்று படைத் தலைவரும் இலட்சுமணரும் நித்திரைசெய் தெழுந்தவர் போல் எழுந்து இராமசுவாமியின் பாதத்தில் வீழ்ந்து பணிந் தார்கள். அப்பொழுது இந்த ஆபத்துக்காலத்தில் உத வியவர் யாரென்று ஆகாயத்தை நோக்கினார். அங்கு கருடாழ்வாரைக் கண்டு சுவாமி சொல்லுகின்றார்.

இப்படிப் புகழ்ந்து ஐயா நீ எங்களுக்கு உதவி செய்யக் காரணமேதென்று கேட்டார் அப்பொழுது

கருடாழ்வார் சுவாமியைமனதிலே வணங்கிக்கொண்டு உமக்கும் நமக்கும் உற்வுண்டு அதைப்பிறகு சொல்லுகிறேமென்று பறந்து வைகுண்டஞ் சென்றார். அதன் பிறகு வானரச்சேனைக ளெல்லா மெழுந்து ஆரவாரஞ் செய்தார்கள். அந்தச் சத்தம் இராவணன் கேட்டு இந்திரசித்தை யழைத்து இலட்சுமணன் மற்ற வானரங்களையும் நாகபாசத்தினுற் கட்டி விட்டு வந்தேனென்று என்னிடம் பகர்ந்தாயே, இப்போது அவர்கள்எழுந்து ஆரவாரஞ் செய்கிறார்களே அதன் காரண மென்ன? என்று கேட்டான். அப்போது இந்திரசித்து இராவணனை நோக்கி என்னுடைய நாகபாசங் கட்டுவிட்டபோதே அவர்களை நம்மால் வெல்ல முடியாது ஆயினும் என்னிடம் பிரமாஸ்திர மிருக்கின்றது. அதற்கு ஆயுதபூஜை செய்து முடிந்தவுடன் வகைசொல்லுகின்றேன். அந்த ஆயுதபூஜை முடியும் வரையில் மகரக்கண்ணனையும் வச்சிரசித்தனையும் சிறிது சேனைகளையும் அனுப்பிச் சீராட்டுப் போராகச் செய்யச்சொல்லுமென்றனுப்பி வைத்துக் கொண்டு சென்றான். அப்போது இராவணன் இரண்டுலெட்சம்படைத்தலைவருடன் ஆறுலட்சம்புரவிபனிரண்டு லட்சம்யானை தேர் காலாட்களையும் உயுத்தத்திற்கு அனுப்பினுன். அப்படியே யாவரும் ஆயுதத்துடனே உயுத்தகளத்தில் வந்து நிறைந்தார்கள். அப்பொழுது சுவாமியும் விபீஷணரை யழைத்து நம்முடைய சேனைகள் இரண்டு நாளாக உயுத்தத்தில் காய் கனி தேன் கிழங்கு ஒன்றேனும் அருந்தாமல் மிகவும் இளைப்பாக இருக்கிறபடியால் நீர் இரண்டு வெள்ளஞ் சேனைகளை யழைத்துப்போய்க் காய் கனி கந்தமூலங்கொண்டு வாருமென் றனுப்பினர். அப்படியே இரண்டு வெள்ளஞ் சேனையுடனே விபீஷணர் சென்றார்.

அப்பொழுது உயுத்தகளத்தில் மகரக்கண்ணனும் வச்சிரசித்தனும் சிறிது சேனைகளுடனே வந்து வானரச் சேனைகளுடன் பொருதினார்கள். இப்படி இருவகைச் சேனையும் பொருதுகிறபோது, வானரங்களால் குதிரைகள் தலையுருளக், காலாட்கள் பட்டுவிழ யானைகளின் மேல் மாவுத்தமார் புரள, இப்படிச் சின்ன பின்னங்களாகச் செய்கிறதை யறிந்த மகரக்கண்ணன் சீக்கிரம் தன்னுடைய இரத்தைத் தூண்டி நடத்திக் கொண்டு இராமசுவாமி முன்பாக வந்து நின்றுகொண்டு இராமா! என் பிதாவாகிய கரனைக் கொன்றாயே. அந்தப் பழி வாங்கவந்தேன். இனியல்லவோ உன்னுடையதிராணியும் என்னுடைய திராணியும் அறியவேண்டுமென்று சொன்னான். அப்பொழுது அனுமாரோடி வந்து சுவாமியினடி பணிந்து தன் தோளின் மீதேற்றிக் கொண்டு அஷ்டகாசஞ் செய்தார்.

அப்பொழுது இலட்சுமணர் முன்பாக வச்சிரசித்தனும் பசாசனும் தங்களிரதத்துடன் வந்து நின்றார்கள். அக்கணம் அங்கதனோடி வந்து இலட்சுமணரடிபணிந்து தன் தோளின் மீதேற்றிக் கொண்டு ஆரவாரித்தான். இப்படி இராமசுவாமி அனுமார் தோளிலும் இலட்சுமணர் அங்கதன் தோளிலுமாக ஆரோகணித்து வில்லைவளைத்து சிறுநாணொலிகொண்டவுடன் தேவர்கள் பூமாரி பொழிந்தனர்.

அப்பொழுது மகரக்கண்ணன் ஆயிரம் பாணந் தொடுத்து இராமசுவாமியுடைய நெற்றியிலும் பட்டத்திலும் கவசத்திலும் விடுத்து ஆரவாரஞ் செய்தான். அதுகண்ட கிருபைக்கடலாகிய சுவாமி நகைத்து நான்கு பாணந்தொடுத்து, அந்தப்பாணங்களையறுத்து அவனுடைய இரதம் சாரதி புரவியுமறுத்து, அவன்

கவசத்தையு மறுத்து வீழ்த்தினர். அப்பொழுது மகரக்கண்ணன் மிகவுஞ் சினங்கொண்டு இருப்புத் தடியையெடுத்துவீசினன். அந்த இருப்புத்தடியையும், அவன் சிரத்தையும், அறுத்து விழச்செய்தார்.

அப்படி மகரகண்ண னிறந்தவுடன் இலட்சுமணருடனே வச்சிரசித்தனும் பசாசனும் வந்தெதிர்த்து இலட்சுமணா! நீ அதிகாயனையுங் கும்பன் நிகும்பனையுங் கொன்றாயே அந்தப்பழி வாங்காமல் விடுகிறதில்லையென்று வச்சிரசித்தன் இலட்சுமணர் பேரில் பதினலு கோடி பாணந்தொடுத்தான். அக்கணமே பசாசனும் பதினலு கோடி பாணங்களைத்தொடுத்தான். ஆகஇருபத்தெட்டுக்கோடிபாணங்கள் இரைந்துகொண்டு இலட்சுமணரைத் தேடி வருகிறபோது இலட்சுமணர் மிகுந்தபராக்கிரமத்துடனே ஒரு பாணந் தொடுத்து வந்த பாணங்களையுமறுத்து அவர்கள் வில்லையும் அம்பறாத்தூணியையும் தேர் புரவி சாரதியையு மறுத்து விழச்செய்தார். அப்பொழுது தேரழிந்தவுடனே பூமியினின்று கடுஞ்சினத்துடன் தங்கள் சூலத்தைக் கொண்டு ஓடி வந்தார்கள். அப்போது இலட்சுமணர் ஒரு அஸ்திரந் தொடுத்து அந்தச் சூலத்தையு மறுத்து, வச்சிரசித்தன் பசாசன், இருவர் சிரத்தையு மறுத்துவிழச் செய்தார். அந்த வேளையில் மட்டுப்படாத இராட்சதச் சேனைகள் இலங்கையை நோக்கி ஓட்டம் பிடித்தனர்.

அதன் பிறகு இராமசுவாமியும் இலட்சுமணரும் அனுமார் அங்கதன் தோளை விட்டுக் கீழேயிறங்கி இலட்சுமணர் சுவாமி யிடத்தில்வந்து தெண்டனிட்டு நின்றார். அப்போது சுவாமி இலட்சுமணரை யழைத்து தம்பி அந்தப் பாதகனுகிய இராவணன் இன்னும்மேற் படை வரக்காட்டுவான். நீயும் இந்த உயுத்தகளத்திலே

நில்லுவென்று நிறுத்திவிட்டுச் இராமசுவாமி பவள மால்வரையிற்சென்று ஆயுதபூஜைசெய்துகொண்டிருந் தார், அதன் பிறகுமுன் இலங்கையை நோக்கிச்சென்ற இராட்சதர்கள் இராவணனிடஞ்சென்று சுவாமி மகராக் கண்ணன், வச்சிரசித்தன், பசாசன், மற்ற சேனைகளும் உயுத்தகளத்தி லிறந்தார்க ளென்று சொன்னான்.

அதைக்கேட்ட இராவணன் மிகவும் மனோவே தனையுடன் முன்னூறு வெள்ளஞ்சேனை முப்பதுகோடி சேனைத்தலைவரையும் பன்னிரண்டு கோடி தேர்காலாட் களுடன் அனுப்பினான். அவர்களும் அப்படியேசென் று உயுத்தகளத்தில் நிற்கின்ற இலட்சுமணரையும் மற்ற வானரங்களையும் வந்து வளைந்து கொண்டார்கள். இப் படி முன்னூற்றுக் காதவழி விஸ்தீரணம் வளைந்து நிற் கின்ற இராட்சதச் சேனைகளை வானரங்கள் கண்டு மலை யினாலும் மரத்தினாலும் அடித்துக் கொன்றார்கள். அது எப்படி இருந்ததென்றால்:—

சுக்கிரீவன் நாற்பதிங்காதம், அங்கதன்ஐம்பதிங் காதம், சாம்பவர் அறுபதிங்காதம், அனுமார் எழுபதிங் காதம், இலட்சுமணர் நூற்றிக்காதவழி பரப்பாகச்சருவ சம்மாரம் பண்ணி வருகிறபோது ஒருவர் போனவழி யொருவரறியாமல் இருளானதால் சாம்பவர் அங்கதன் சுக்ரீவர் அனுமார் இன்னால்வரும் ஒன்றாய்க்கூடி இலட் சுமணரைத் தேடுகிறபோது அவரைக் காணாததால் மிக வருந்தின மனத்தராய் யோசனைசெய்து அவராறுத்துக் கொண்டு போனவழியிற் சென்று இலட்சுமணரைக் கண்டார்கள். கண்டவுடன் சுவாமி இந்த இராட்சதப் பெரும் படையை இப்படியறுத்துக் கொன்றும் இன் னும் வெகு திரளாக நிற்கின்றார்களே இதற்கு வகை எப்படியென்றுகேட்டார்கள். அப்போதுஇலட்சுமணர்

மிருந்த பராக்கிரமத்துடன் அக்கினிக்கணையையெடுத்து மானத பூஜை கொடுத்து நம்முடைய சேனைகள் பேரிலும் இலங்கைக் கோட்டையிலுஞ்செல்ல வேண்டாம். இங்குற்ற இராட்சதச் சேனைகளை மட்டுஞ் சம்மாரஞ் செய்து வரவேண்டு மென்று உபதேசமுஞ் செய்து ஏவினர்.

அப்படியே அந்த அக்கினியாஸ்திரஞ் சென்று கணப்பொழுதில் உயுத்த களத்திலின்ற இராட்சதரை யெல்லாம் எரித்துப் பஸ்பமாய்ச் செய்து விட்டது. அப்பொழுது தூதுவர்களோடோடியும் இராவணனைக் கண்டு தண்டஞ் செய்து சுவாமி! இலட்சுமணன் ஒருவனே நம்முடைய சேனைகளை யெல்லாஞ் சணப்பொழுதில் ஓர்பாணத்தால் வதைத்தானென்று பகர்ந்தவுடன் இராவணன் ஏதடா தூதுவர்களே! அந்த இலட்சுமணன் ஒருவனுகவே நம்முடைய சேனைகளை யெல்லாம் எப்படிக் கொன்றானென்று கேட்டான். அப்போது தூதுவர்கள் சுவாமி அவன் கரவேக சரவேகத்தை யாங்கள் செப்பத்தரமன்று. நம்முடைய சேனைகளெல்லாம் ஓர் வைக்கோற் படப்பு போலவும் அந்த இலட்சுமணனுடைய கோபம் அக்கினியாகவு மிருந்ததேயொழிய வேறல்ல, இது உண்மையே நாங்கள் கண்ணுரக்கண்டு ஓடி வந்தோமென்று சொன்னர்கள்.

அதைக்கேட்ட இராவணன் இருபது கண்களிலும் நெருப்புப் பொறி பறக்கத் தக்கதாய்க் கோபம் பிறந்து மகோதரனுகிய மந்திரியையழைத்துச் சொல்லுகின்றான். கேளாய் மந்திரி! நம்முடைய சேனைகளை யெல்லாம் அவன் நிர்த்தூளி செய்வதால் அவர்களைச்

சம்மாரஞ் செய்யும்படி நம்முடைய குமாரனுன இந்திரசித்து ஆயுத பூஜை செய்கின்றுன் ஆனதால் நீர் இப்பொழுது சிறிது சேனைகளுடன் உயுத்தகளத்திற்சென்று சீராட்டுப்போராகப் பாராட்டி மாயை செய்துகொண்டு நில்லும். ஆதித்தன் மறைந்தவுடன் இந்திரசித்துப் பிரமாஸ்திரத்தா லறுத்துச் சின்னுபின்னஞ்செய்துவிடுவான் சீக்கிரம் புறப்படுமென்று அனுப்பினுன்.

அப்படியே மகோதரன் ஐம்பது வெள்ளஞ் சேனை, பன்னீராயிரங் கோடி சேனைத்தலைவர், ஆறுலட்சம் யானை. பன்னிரண்டு லட்சம் குதிரை, முப்பதினுயிரந் தேர்,காலாட்கள் இவர்களுடனேமகோதரன் உயுத்தகளத்தில் வந்து ஒரு மாயைசெய்தான். அது எப்படியெனில்:-மகோதரன்தேவேந்திரனைப்போலவும், மற்ற இராட்சதர்களைத் தேவர்களைப் போலவும் வடிவுகொள்ளச் சொல்லி, இலட்சுமணரிடஞ்சென்று ஐயா! இளைய பெருமாளே! இந்த இராவணேசுரன் எங்களுக்குத் தாயாதிவர்க்க மாகையால் எங்கள் பொருட்டாக அவர்களைச் சம்மாரஞ் செய்வது சரியல்ல வென்று சொல்லுகிறபோது இலட்சுமணர் திப்பிரமை கொண்டு இஃது என்ன காரணம்? தேவேந்திரனும் மற்ற தேவர்களுமிப்படி வந்தார்களே யென்று எண்ணிப், பாணம் விடாமல் பார்த்துக்கொண்டு நிற்கிறபோது ஆதித்தன் அஸ்தகிரியை யடைந்தான்.

அந்தவேளையில் இந்திரசித்து மேகமண்டலத்திலிருந்து பிரமாஸ்திரத்தை யேவினுன். அந்த அஸ்திரமானது கார்காலத்திடிபோல் முழங்கிக் கொண்டு அநேக பாணங்களாகவந்து இலட்சுமணர் சேனையில் வீழ்ந்து இலட்சுமணர் முதலிய வானரச் சேனைகள் யாவும் அசைய விடாமல் தைத்து மூடிக்கொண்டது.

அதைக்கண்ட இந்திரசித்துமேகமண்டலத்திலிருந்து கீழேயிறங்கி வெற்றிச்சங்கை மூழக்கிக்கொண்டு இலங்கையிற்சென்று, தன்பிதாவைக்கண்டு ஐயா! இராமனும் விபீஷணனும் நீங்க மற்றுமுள்ளவர்களை யெல்லாம் பிரமாவ்ஸ்திரத்தாற் சம்மாரஞ்செய்து விட்டேன், அந்த இராமனையும் நாளைப்போரில் வதைத்துவிடுகின்றேன், உம்முடைய பகையுமுடிந்த தல்லவோவென்று சொன்னான்.

அப்போது இராவணன் மகா சந்தோஷமாகி அப்பா இந்திரசித்தே! உன்னாலாகாத காரியமுண்டோ வென்று மிகவுங் கொண்டாடி யனுப்பி வைத்தான். இந்திரசித்துப் பிதாவினிடம் விடைபெற்றுக்கொண்டு தன்னரண்மனையை நோக்கிச் சென்றான். அப்பால் இராவணன் சீதைக்கு இலட்சுமணர் மற்ற வானரங்களும் இறந்த படுகளத்தைக்காண்பிக்க வேண்டுமென்று சில இராட்சதரை யனுப்பித் தம்முடைய இராட்சதப் பிணங்களை யெல்லாஞ் சமுத்திரத்தில் வாரிப்போடச் சொல்லி அனுப்பினான், அப்படியே சென்றார்கள்.

அப்பொழுது பவளமால் வரையில் இருக்கிற இராமசுவாமி உயுத்த களத்திற் றம்பியுடைய வில்லோசையும், நாணொலியும், வானரங்களுடையஆரவாரமும் ஒன்றுங் கேட்கவில்லையே ஏதோ, இராட்சதர்களுடைய மாயைதானெப்படியோ வென்று, மிகவுங் கிலேசத்துடன் புறப்பட்டு இருளானபடியால் அக்கினியாஸ்திரத்தைவில்லிற் பூட்டிக் கொண்டு உயுத்தகளத்தில் வந்து பார்க்கிறபோது, எல்லோரும் இறந்து கிடப்பதையுங் கண்டு ஐயோ! உங்களுக்கு இந்த அவகேடு வரலாயிற்றேயென்று அந்தப் பிணங்களுடையஇரத்தச்சேற்றை யெல்லா மூடறுத்து, இலட்சுமணரைத் தேடித்திரிகிற

போதுகாணுமல், தம்பி இலட்சுமணு! வென்றுஅழைத் தும், ஐயா என்னைவிட்டிறந்தாயோ தம்பி! தம்பி! யென் றுபிரலாபித்தும், படுகள மெல்லாந் தேடிப்பார்க்கிற போது இலட்சுமணர் இறந்து கிடப்பதைக்கண்டு, மன துபதறி வாரி யெடுத்து மார்போடணைத்துக் கொண்டு, என் பிறப்பே! இனி யென்ன செய்வேனுன், என்னரு மை நாயகியான சீதையும்பறிகொடுத்து, உன்னையுமிழந் தென்னுயிர் வைத்திருப்பேனே வென்று சொல்லுகின் ருர்.

விருத்தம்.

உழைக்கும்வெய் துயிர்க்கு மாவி யுருகும்போ யுணர்வு
சோரும்
இழைக்குவ தறித ரேற்ரு னிலக்குவா விலக்கு
வாவென்
றழைக்குந்தன் கையை வாயின் மூக்கின்வைத் தயர்க்கு
மையா
பிழைத்தியோ வென்னு மெய்யே பிறந்தேயும் பிறந்தி
லாதான்.

ஷ

தாமரைக் கையிற் ருளைத் தைவருங் குறங்கைத்
தட்டும்
தூமலர்க் கண்ணை நோக்கு மார்பிடைத் துடிப்புண்
டென்னு
ஏமுறும் விசும்பை நோக்கு மெடுக்குந்தன் மார்பி
னேற்றும்
பூமியின் வளர்த்துங் கள்வன் போயகன் ருனே
வென்னும்.

வசனம்.

இப்படியாகச் சுவாமிபுலம்பி இலட்சுமணரோடு பூமியில் வீழ்ந்து அழுதவுடனே சுவாமிக்கு மூர்ச்சை யாகி யுணர்ச்சிமாறினது. அந்தவர்த்தமானம் தூதுவர்

களாற் கேள்விப்பட்ட இராவணன் உயுத்தகளஞ்சென்று பார்த்து இவர்கள் இறந்துகிடப்பதைச் சீதைக்குக் காண்பிக்க வேண்டுமென்று அதிசீக்கிரமாக இலங்கையிற்சென்று, அசோக வனத்தி லிருக்கிற திரிசடையை அழைத்துச்சொல்லுகின்றான். இராமன் இலட்சுமணன் மற்ற வானரப்படைகளும் இறந்து கிடக்கிற இரணகளத்தைநோக்கிசீதையைப் புஷ்பவிமானத்திலேற்றிக் கொண்டு போய்க் காண்பித்துவா வென்று அனுப்பி விட்டுச் சந்தோஷமா யிருந்தான்.

அப்பால் திரிசடையும் இராட்சதிகளுஞ் சொல்லக்கேட்ட சீதையம்மன் முகத்தி லறைந்து கொண்டு பூமியில் விழுந்தழுது, மகா துயரத்தோடு நம்மையும் இந்த விமானத்தி லேற்றிக் கொண்டு போய்க்காண்பிக்கும்பொழுது நாம் அவர்கள் பேரில் வீழ்ந்து, நமது பிராணனைத் தியாகஞ்செய்துகொள்வோமென்று நிச்சயித்துக் கொண்டு விமானத்திலேறிய வுடனே ஆகாயத்திற்சென்று உயுத்தகளத்தின் முன்பாக வந்துவிமானம் நின்றது. அப்போது சீதையானவள் இரணகளத்திற் சுவாமியும் இலட்சுமணரும் சோபமாய்க் கிடப்பதைக் கண்டு, முகத்திலறைந்து கொண்டு அழுது நிலத்திற் பாயுமுன், அம்மனைத் திரிசடை கட்டிப் பிடித்துக் கொண்டு சொல்லுகிறாள்.

தாயே! நீ யொன்றுக்கும் மயங்க வேண்டாம்? உன்னுயகர் இந்த அவகேட்டி லகப்படவில்லை. அந்தக்குறி என்னென்றால்:- இந்த விமானம் சுபமங்கிலிய ஸ்திரீயைத் தாங்குவதே யொழிய அவமங்கிலிய ஸ்திரீயைத் தாங்குவதில்லை. ஆதலால் என் வார்த்தையை நம்பும் அம்மா! சுவாமிக்குப்பழுதில்லை யென்றுசொன்னாள்.

இப்படியாகத் திரிசடை அம்மனுக்கு அநேக திடஞ்சொல்லி மனந்தேற்றுகிறபோது அம்மன் மிகவும் அழுதுபுலம்பிச் சொல்லுகின்ருள். ஐயோ! அடியாள் பொருட்டாக ஆருயிர் மாண்டீர்களோ? சுவாமி! உங்களுக்கு அடியாளொரு கூற்றுவனு யிருந்தேனே! அதேதென்ருல்:—நாம் அயோத்தியிலிருக்கிறபோது, தேவரீர் வனவாசஞ் சென்று பதினுன்கு வருடத்தில் வருகின்றேன் நீ பட்டணத்தி லிருவென்று சொல்லுகிறபோது, நான் அப்படியே இராமல், தங்கள்கூடவே வருகிறே னென்று பிரதிக்கினையுடன் வந்தபடியால் இந்த இராட்சதன் என்னைக் களவிலெடுத்து வந்து சிறையில் வைத்தான். அதன்பொருட்டுத் தேவரீரனுப்பிய தூதனுன அனுமான்வந்து என்னைப் பன்னகசாலையுடனே பேர்த்தெடுத்துக்கொண்டு போகிறேனென்று சொல்லுகிறபோது அதுவுங் கேளாமல் நானிருந்தபடியால் இந்தப்படி மோசம் வந்ததேயென்று மிகவும் புலப்பி அழுகின்ருள்.

விருத்தம்.

மங்கை யழலும் வானுட்டு மயில்க ளழுதார் மழ
          விடையோன்
பங்கி னுறையுங் குயிலழுதாள் பதும மலர்மேன்
          மாதழுதாள்
கங்கை யழுதாள் நாமடந்தை யழுதாள் கமலத்
          தடங்கண்ணன்
தங்கை யழுதா ளிரங்காத வரக்கி மாருந்
          தளர்ந்தழுதார்.

வசனம்.

அப்போது அம்மன் கூடவே அஷ்ட லட்சுமிகளும் அழுதார்கள். தேவஸ்திரீகளும் அழுதார்கள். பார்வதியும் அழுதாள். சரஸ்வதியும் அழுதாள். அது

சகியாது திரிசடை சொல்லுகின்றாள். அம்மா சுவாமிக்கு ஒருக்காலும் விக்கினம் வராது மூர்ச்சை மாத்திரமேயல்லாமல் வேறொன்றுமில்லை, நீர் மயங்க வேண்டாமென்று சொல்லுகிறதைச் செவியிற் கேட்ட சீதாபிராட்டி சொல்லுகிறாள்.

அம்மா திரிசடையே! நான் இதுவரையிலும் உன்னுடைய வார்த்தையே மெய்யென்று நம்பி விசுவாசமாயெண்ணியதுஞ் சரியே, இப்போது ஆதித்தன் உதையமாவதற்குள் என் சுவாமி உயிருடனிருப்பதாக எனக்குத் தெரியவேண்டும், அல்லவென்றால் உதையாதியில் நான் பிராணத்தியாகஞ் செய்து கொள்வது நிச்சயமாகுமென்று உறுதிமொழியுங்கூறி, விமானத்துடன் அசோகவனஞ் சென்று கூடுவிட்டுப் பிறிந்தும் பிறியாத ஜீவனைப்போ லிருந்தாள்.

இப்பால் சுவாமியின் சேனைகளுக்குக் காய்கனி கொண்டுவரச் சென்ற விபீஷணரும் மற்ற இரண்டு வெள்ளஞ் சேனையும் உயுத்த களத்தில் வந்துபார்க்கிற போது, சுவாமியும் இளையபெருமாளும் சேனைகளுங் கிடக்கிறதுகண்டு விபீஷணர் அடித்து விழுந்து புரண்டழுது ஐயோ! சுவாமி! அடைக்கலப் பொருளைக் கை விட்டீர்களோ வென்று புலம்பிக்கொண்டு, ஆனால்சாம்பவருக்குச் சாவில்லையே அவரெங்கே யென்று தேடிப் பார்த்து, அவர் தேகத்திற் பாய்ந்திருந்த பாணங்களையும் பிடுங்கி யெறிந்து முகத்திற்ஜலங்கொண்டு தெளித்து, மெள்ளத் தாங்கி யெடுத்தணைத்துச், சாம்பவரே! யென்று கூப்பிடுகிறபோது, சாம்பவருக்குக் களைதெளிந்து கண் விழித்துப்பார்த்து வாரும் விபீஷணரே! சுவாமி யெங்கேயென்று கேட்கிறபோது, சுவாமி தம்பியின் பேரில் மெத்தமயக்கமாக இருக்கிறாரென்று விபீஷணர்

சொல்ல, அப்போது அனுமாரைத் தேடிப் பார்ப்போமென்று இருவருஞ்சென்று பார்க்கிறபோது, அவரெப்படிக் கிடக்கிருரென்ருல்:-மிகவும் ஒடித்தவித்து இளைத்தவன்போலப் பற்களைக் கடித்துச் சிறிது பிணங்களைத் தலையணையாக வைத்துக்கொண்டு, சிறிது பிணங்கள் பேரிற் கால்களை யுத்தண்டமாக நீட்டிக்கொண்டு, அஸ்திரத்தின் காயத்தாற் சோபமாகிக் கிடக்கிறவரைக் கண்டார்கள்.

கண்டவுடன் அவர்பேரிற் பாய்ந்த பாணங்களையும் பிடுங்கி யெறிந்து ஆகாயக் கங்கையை அவர்முகத்திற்றெளித்து, அனுமாரே! என்று கூப்பிடுகிறபோது, அனுமாருக்கு மூர்ச்சை தெளிந்து கண் விழித்துப் பார்த்து விபீஷணரைக் கட்டிக்கொண்டழுது, விபீஷணரே! சுவாமி எங்கே? என்று எழுந்திருக்கும்பொழுது அவர் சுவாமியும் இலட்சுமணர் மீது சாய்ந்து உணர்ச்சி யில்லாதிருக்கிருர் நாம் இனிமேல் அசந்திருப்பது காரியமல்ல வென்று மூன்று பேரும் ஒன்ருய்க் கூடி யோசனை செய்கிறபோது, சாம்பவர் சொல்லுகின்ருர். யாவரும் உயிர்பெற்றெழவேண்டுமானல், அனுமானலாகவேண்டுமே யொழிய, மற்ருெருவரா லாகிறதில்லை. அதேதென்ருல்:-ஆதித்த னுதையமாகுமுன்னமே மருத்துமாமலையிற் சென்று மருந்து கொண்டுவந்தால் எல்லோரும்பிழைப்பார்கள். ஜீவதாரை வார்க்கவேண்டியது, அனுமார்தா னென்ருர்.

---

## சஞ்சீவி கொண்டு வருதல்.

அதுகேட்ட அனுமார் சந்தோஷமாயெழுந்து சுவாமியின் ஆபத்துக்குதவாத சரீரம் வைத்திருப்பேனே? நான்மருத்துமாமலையிற்சென்றுமருந்துகொண்டு

வருவதற்கு வழிமார்க்கஞ் சொல்லு மென்று வீர சூர பராக்கிரமத் துட னின்றார். அதுகண்ட சாம்பவர்சொல் லுகின்றார்.

அந்த மருத்துமாமலையானது வடக்கே திருப் பதியிருக்கின்றது. அதுகடந்தால் கிட்கிந்தாபருவதம், அதற்கப்பால் நான்கு பருவதமிருக்கிறது, அது கடந் தால் மகாமேரு, அதுகடந்துஒன்பதினாயிரங்காதவழிக் கப்பாற் சக்கரவாளகிரி, அதன் ஈசானியமூலையில் மருத் துமாமலை யிருக்கிறது. அது ஆயிரங்காதவழி உயரமும் ஆயிரங்காதவழி அகலமுமாக விருக்கும், அந்த மலை யைச் சக்கரத்தாழ்வார் காத்திருப்பார், அவர் உம்மைக் கண்டு மறிப்பார் அப்படி மறித்து வந்தாலும் உம்முட னெதிர்க்கமாட்டார். அப்பால் அந்த மலையிலிருக்கிற "சந்தானகரணி, சல்லியகரணி, சௌபாக்கியகரணி," என்ற மூன்று மருந்தையும் ஆதித்தனுதையமாகு முன் னே நீர் கொண்டுவந்தால் எல்லோரும் உயிர்பெற்றெழு வார்கள். இவிடமிருந்து அந்த மருத்துமாமலையானது பனிரண்டு லட்சங்காதவழிக் கப்பாலிருக்கிறது. ஆகை யால் அனுமாரே! நீர் தான்சென்று சீக்கிரம்வரவேண்டு மென்று சொன்னார்.

அனுமாரும் ஸ்ரீரெகுநாயகர் திருவருளால் எப் படியுமருந்து ஒரு நாழிகையிற் கொண்டு வருகிறே னென்று விசுவரூபங் கொண்டு வாலைப் பூமியிற் றட்டி ஆகாயத்தி லெழும்பி வடக்குமுகமாக நின்று ஸ்ரீ ராமா ராமா ராமாவென்று மனத்தியானஞ் செய்து கொண்டு திருப்பதிமலையுங் கடந்து கிட்கிந்தா பருவதமுங் கடந் து, வழியில் நான்கு பருவதத்தையுங்கடந்து அப்பால் மகாமேருங் கடந்து அப்பாற் போகிறபோது ஒரு

பொய்கையைக்கண்டு அதன் கரையினின்று பார்த்தார். அப்போது அனுமாருக்கு முன்பாக இராவணனுடைய பாட்டன்ரிஷியைப்போலத்தவஞ்செய்துகொண்டிருந்தான்.

அதை அனுமார் கண்டு அவனிடஞ் சென்று ஐயா பெரியவரே! இந்தப்பொய்கையின் விர்த்தாந்தம் என்ன? நீர் தவம் பண்ணுகிறதேதென்று கேட்டஅனுமாரைப் பார்த்துச் சொல்லுகின்றான். இந்தப்பொய்கை மும்மூர்த்திகளாலும் அழைக்கப் பட்டது; யாரேனும் தாம் நினைத்தகாரியங்கைகூட வேண்டுமென்றால் என்னிடத்தில் இன்னகாரியமென்று உள்ளது சொன்னவுடன் இந்தப்பொய்கையில் ஸ்நானஞ்செய்தால்உடனே சித்தியாகுமென்றனன். அப்போதுஅனுமார் சொல்லுகின்றார், சுவாமி! என் பெயர் அனுமான், நான் இராமசுவாமியுடைய தூதன், இப்போது அவருடைய தம்பி இலட்சுமணர் இலங்கையில் இராவணன் உயுத்தகளத்தில் இந்திரசித்து விட்ட பிரமாஸ்திரத்தா லிறந்து போனார், அதற்காக நான் இந்த மருத்துமாமலையில் இருந்துமருந்துகொண்டுபோகவந்தேன், அதற்குவழி சொல்ல வேண்டுமென்று கேட்டார்.

அப்போது தவசி சொல்லுகின்றான், ஆனால் இந்தக் கங்கையிற் றீர்த்தமாடிப் போய்வாரும் நீர் நினைத்த காரியஞ் செயமாகுமென்றான். அதுகேட்ட அனுமார் ரிஷியின் வாக்கியந் தப்பலாகாதென்று கங்கையிலிறங்கியவுடனே ஒரு முதலை வந்து குபீரென்றுபாய்ந்து அனுமாரைவிழுங்கியது. அப்போது அனுமார் அந்த முதலை வயிற்றைப் பீறிக் கொண்டு வெளியேறி வந்து அஷ்டகாசஞ் செய்தார். அப்பொழுது அந்த முதலையானது பெண்சொரூபமாகி அனுமாரைத்

தெண்டம் பண்ணினுள்; அப்போதனுமார் நீ முதலை யாக இருந்து இப்போது பெண்ணுக வந்தகாரணம் விபரமாகச்சொல்ல வேண்டுமென்று கேட்டார். அதற் கந்தப்பெண் சொல்லுகிருள்.

ஐயா! நான் ரிஷிபத்தினி இந்த வாவியில்வந்து தண்ணீரின் வளம் பார்த்து நின்று தாமதித்து ஜலங் கொண்டு போய் ரிஷியாருக்குச் சேர்ப்பித்தேன், அவர் இவ்வளவு நேரஞ் சென்ற காரண மென்னவென்று கேட்டார். சுவாமி அடியாள் அந்தப் பொய்கையின் வளம்பார்த்து நின்று வந்ததாற் ருமதமென்று சொன் னேன். அவர் கோபித்து என்னை நீ அந்தப் பொய்கை யில் முதலையாய்ப் பிறப்பாயென்று சபித்தார். அடியா ளுக்கு விமோசனகாலம் எப்பொழுதென்றுகேட்டேன். அதற்குச் சிலகாலஞ்சென்று இராமசுவாமியின் தூத ஞன அனுமான் வருவான், அவனை நீயெடுத்துவிழுங் குவாய் அப்பொழுது அனுமனுல் விமோசனமாகி நம் மிடம் நீ வருவாயென்று சொன்னுர். அந்தப்படியே தேவரீர் கிருபையால் எனக்குச் சாப விமோசனமான தென்ருள். அப்போது இந்தப் பொய்கைக் கரையில் தவம் பண்ணுகிறவனுரென்று அனுமார்கேட்கச்சொல் லுகின்ருள்.

அனுமாரே! இவன் இலங்கையாளுகிற இராவ ணன் பாட்டன், யாரேனும் இராவணனுடன் போர் செய்தால் இராவணன் வெற்றிகொள்ள வேண்டுமென் று, பிரமதேவரை நோக்கி இவன் றவஞ் செய்கின்ரு னென்றுசொல்லி, விடைபெற்றுக்கொண்டு ரிஷியிடஞ் சென்ருள். அதைக்கேட்ட அனுமார் அஷ்டகாசஞ் செய்து சென்று தவசியை நீயாரென்று கேட்க அவன் பயந்துஉள்ளபடிசொல்லவே, அவன் தலையைத்திருகி

எறிந்து விட்டு, அந்தப் பொய்கையிற் றீர்த்தமாடிக் கொண்டு, ஆகாயத்திற் கிளம்பி ஸ்ரீராமா ராமாவென்று அஷ்டகாசத்துடனே பாய்ந்து கைலாயபருவதம், நீலகிரி, சக்கிரவாளகிரி, இவைகளையுந்தாண்டி மருத்துமாமலையிற் சென்றார்.

அப்போது ஆதித்தன் உதையமாகின வெளிச்சங்கண்டு சற்றுதியங்கி, இப்பால் மகாமேருவுக்கு வடக்கு உதையமென்கிற தறிந்து அப்பால் அந்த மலையில் மருந்து தேடுகிறபோது, மருந்தின் பெயரும் அடையாளமுந் தெரியாமற் றிகைத்து நின்றார். அப்போது அந்த மலையைக் காவல் செய்பவர்களாகிய கிங்கரர்கள் கண்டு பயந்து திசை தப்பி ஓடிப்போனார்கள். அப்பால் அந்தமலையைச் சுற்றிப் பார்த்து ஆயிரம் யோசனை உயரம் ஆயிரம்யோசனை அகலமிருக்குமென்றுகணக்கிட்டு, அந்த மலையை வேரோடு பிடுங்கி ஒரு கையில் வைத்துக்கொண்டு அதிலிருக்கும் மருந்துகள் கீழே விழாதபடி மற்றொரு கையாலணைத்துக்கொண்டு, மஹா பராக்கிரமத்துடனே தெற்குமுகமாக விசை கொண்டு பாய்ந்து வருகிறதைக் கண்ட, கைலையங்கிரியி லிருக்கிற பார்வதி பரமேசுரனிடத்திற் சுவாமி! இதோ ஒரு வானரம் பெரிய பருவதத்தைத் தூக்கிக்கொண்டு வெகு உக்கிரத்துடன் செல்லுகின்றது, அதன் விபரமென்னவென்று கேட்க மகாதேவர் சொல்லுகின்றார்.

கேளாய் உமையவளே! இலங்கையில் இராம இராவண உயுத்தத்தில் இந்திரசித்தின்பிரமபாசத்தால் இலட்சுமணன் மற்றவானரச் சேனைகளும் இறந்தார்கள். அவர்கள் பிழைக்க வேண்டு மென்று, அஞ்சனையின் புத்திரனை அனுமான் சஞ்சீவிகொண்டு போகின்றான். அதனால் சகலரும் பிழைத்து நாளை நல்லயுத்தம்

நடக்கும் நாமும் பார்க்கப் போகலாமென்று திருவாய் மலர்ந்தருள உமையவளுங் கேட்டுச் சந்தோஷமாக விருந்தாள்.

அப்பால் அனுமாரும் ஆகாயமார்க்கமாய் வருகிறபோது, சாம்பவரும், விபீஷணரும்தம்பியின்பேரில் உணர்ச்சி யில்லாமல் வீழ்ந்து கிடக்கும் சுவாமியைத் தாங்கி யெடுத்துச் சயித்யோபசாரம் செய்து கொண்டிருக்கிறபோது, சுவாமிக்கு மயக்கந்தெளிந்து இவர்களை ஏறிட்டுப்பார்த்துவிபீஷணரே! வந்திரோ? சாம்பவரே! பிழைத்திரோ? என்று கேட்கப் பெற்ற இருவரும் பணிந்துதேவரீர் கடாட்சத்தாற் பிழைத்தோ மென்று சாம்பவர் சொன்னர்.

அப்போதுசுவாமி விபீஷணரை நோக்கி, நமது தம்பியையும் வானரங்களையும், இப்படி வதை செய்தானே இந்த அஸ்திரம் யார் கொடுத்ததென்றுகேட்க விபீஷணர்வணங்கிச்சொல்லுகின்றார். சுவாமி! இந்திரசித்துத் தேவேந்திரனைப் பிடித்துச் சிறையிட்டான். அவரை விடுவித்துக்கொள்ளப்பிரமா வந்தார். அவரிடத்தில்நாகபாசமும், பிரமாஸ்திரமும், நிகும்பலைவேள்விக்குபதேசமும் பெற்றுக்கொண்டான். அவைகளில் நாகபாசம் முன்னமே எரிந்துபோய் விட்டது. இப்போது பிரமாஸ்திரத்தால் யாவரும் அறுப்புண்டார்களென்று சொன்னர். அதைச் செவியுற்ற சுவாமியும் மிகவுங் கோபங் கொண்டு பின்னும் தம்பிபேரிலிருக்கும் மயக்கத்தாற் றியங்கிக் கொண்டிருக்கச் சாம்பவர் சொல்லுகின்றார்.

சுவாமி! தேவரீர் மயங்கவேண்டியதில்லை. அனுமார் மருத்துமாமலையிற் சென்று, மருந்து கொண்டுவரப்போயிருக்கிறார், அவரும் இதோ கணப்பொழுதில்

இவ்விடம் வந்து அனைவரும் பிழைக்கப் போகிறார்களென்றுசொன்னார். அப்போது மருந்துமாமலையானது எங்கிருக்கிறதென்று சுவாமி கேட்கச் சாம்பவர், அந்த மலையின் விர்த்தாந்தமும், அதன் மார்க்கங்களும் சொன்னார். அதைக்கேட்ட சுவாமி இத்தனை ஆயிரக்காதவழியுங்கடந்து மருத்துமாமலையிற்சென்று,மருந்துகொண்டுவரப் போகிறதேது? யாவரும் பிழைக்கப் போகிறதேதென்று மிகவும் கவலையுடனிருக்கிறபோது, அனுமார் ஆகாயமார்க்கத்தில் நின்று ஸ்ரீராமா ராமா ராமாவென்று அஷ்டகாசஞ் செய்து உயுத்தகளத்தின் வடபாரிசத்தில் வருகிறபோது, இறந்துகிடந்தவர்கள்மீது மருந்துவாடை யடித்து, இலட்சுமண ரெழுந்து சுவாமிபாதத்தில் வீழ்ந்து தெண்டஞ்செய்தார்.

அப்போது சுவாமி தம்பியைத் தாங்கியெடுத்து மூத்துதிர்த்தார். அனுமாரும் யுத்தகளத்தில் வந்தார். சாம்பவரும் அந்த மருத்துமாமலையி லிருக்கிற மூன்று மருந்தையும் பிடுங்கிச்சுக்கிரீவர் கரத்திற்கொடுத்துயுத்தகளத்தைச் சுற்றிக்கொண்டோடி வரும்படியாகச்சொன்னார். அப்படியேசுக்கிரீவரும் அந்த மருந்தைக்கொண்டுயுத்தகளத்தைச்சுற்றி வந்தவுடன், மருந்துக் காற்று வீசப்பட்டு வானரச்சேனைக ளனைவரும் உயிர்பெற்றெழுந்து, சுவாமியின் பாதத்தில் வீழ்ந்து பணிந்தெழுந்தார்கள். அப்பொழுது சாம்பவர் அந்த மூன்று மருந்தையும் வாங்கி அடக்கம் பண்ணிக்கொண்டு, அனுமாரே! இந்த மலையை முன்னிருந்த இடத்திற் கொண்டு வையுமென்றார்.

அதைக் கேட்ட அனுமாரும் விசுவரூபங் கொண்டு மலையை முன்னிருந்த இடத்தில் விழும்படியாக விசைகொண்டெறிந்தார். அந்த மலையும் பழைய

தானத்தில் வீழ்ந்தது. அப்பால் சுவாமி யிடம் வந்து தெண்டம்பண்ணினர். சுவாமி அநுமாரை வாரி மார் புடனணைத்துக் கொண்டு எங்களுக்குப் பிராணதாரை வார்த்த தெய்வம் நீயேயல்லாமல் வேறில்லையென்றும், நீ எப்பொழுதும் சிரஞ்சீவியா யிருப்பாயென்று, அனுக் கிரகஞ்செய்து யாவரும் சந்தோஷமா யிருக்கிறபோது, நமது சேனைகளெழுந்த விஷயம் இராவணனறிய வேண்டுமென்று சுவாமி வானரச்சேனைகளை ஆரவா ரஞ்செய்யும்படிக் கட்டளை யிட்டார்.

அப்படியே வானரச்சேனைகள் கோட்டையேறி நின்று அஷ்டகாசஞ்செய்து, அடாஇராவணா! நீ சுத்த வீரனேயானால் இந்திரசித்தைப் போருக்கனுப்படா வென்று கூறியழைத்தார்கள். அந்தச் சத்தம் சீதையம் மனும் கேட்டுச் சந்தோஷமா யிருந்தாள். அப்போது வானரங்களின் கோஷ்டத்தையறிந்த இராவணன் மிக வியப்புற்று இந்திரசித்தின் அரண்மனையிற் சென்று இந்திரசித்தே! நமது பகை முடிந்ததென்றுஞ்சொல்லி வந்தாயே, இப்போது வானரங்களெல்லாம்கோட்டை யேறி நின்று யுத்தத்திற்கு வரும்படிக் கூறியழைக்கின் றூர்களே அதன்காரண மென்னவென்றான். அப்பொ ழுது சில தூதுவர்கள் ஓடி வந்து சுவாமி! அநுமான் கொண்டு வந்த சஞ்சீவி மருந்தினால் இராமன், றம்பி இலட்சுமணன் மற்ற வானரச் சேனைகளும் உயிர் பெற் றெழுந்தன ரென்றூர்கள்.

அதுகேட்ட இந்திரசித்துச் சொல்லுகின்றான், என்னுடையபிரமாஸ்திரமும் வீணாய்ப்போய்விட்டதென் றால்இனிமேல் நாம்அவர்களை எப்படிச்செயம்பண்ணு வதென்றுபிரமைபிடித்துஒன்றும்சொல்லாதிருந்தான். பிறகு கிஞ்சிற்றுத்திடம் பிறந்து இராவணன் தைரியப்

படச் சொல்லுகின்றான். ஐயா! நிகும்பலை வேள்வியொன்றிருக்கின்றது. அந்த வேள்வியை முடித்தால் அவர்களை வெல்லலாம், ஆயினும்தேவரீருடையதம்பி நமது எதிராளி யிடத்திற் சேர்ந்து கொண்டு துப்பு சொல்லுகின்றபடியால் இப்போது நான்செய்யும்வேள்வியை யாரும் அறியா வண்ணம் ஒரு சூழ்ச்சி செய்கின்றேனென்று எழுந்து மேலக்கோட்டை வாசலிற்சென்று ஒரு இராட்சத ஸ்திரீயை,

மாயா சீதை வதை

மாயையால் சீதைபோ லுண்டாக்கி அவளின் றலைமயிரைப் பிடித்துக்கொண்டு அங்குசேனையிலிருந்த அனுமார் முன்பாக வந்து நின்று இதோ பார் அனுமானே!

விருத்தம்.

வந்திவள் காரண மாக மலைந்தீர்
எந்தை யிகழ்ந்தனன் யானிவ ளாவி
சிந்துவ னென்று செறுத்துரை செய்தான்
அந்தமின் மாருதி யஞ்சி யயர்ந்தான்.

வசனம்.

இவளாலே எமது அநேக இராட்சதர்களிறந்து போனதாலும், இவளை என் பிதா விரும்பியபடியாலும், இனி உங்களிடம் விடுவதுமில்லை இப்போது ஒரே வெட்டாக வெட்டுகிறேனென்று வாளை ஓங்கினான்.

அப்போது அனுமாரின் உடல் பதறி அடே பாதகா! நாச்சியாரைவெட்டாதே, வெட்டாதே, ஸ்திரீ வதை செய்யலாமோ? வென்று மிகவும் மன்றாடினார். இவ்விதம் அனுமார் எவ்வளவு சொல்லியுங்கேளாமல் மாயா சீதையை ஓங்கிய வாளால் வெட்டிச் சிரத்தை அந்தக்கோட்டை மதிலில் வைத்து உடலை அகழ்க்

கிடங்கிற்றள்ளிவிட்டுச்சொல்லுகின்றான். அனுமானே! இத்தோடு போய்விட்டதோ? இதோ நான்கணப்பொழுதில் அயோத்தியிற்சென்று, பரதர் சத்துருக்கர் மற்றுங் கிளை வர்க்கங்களையுங் கொன்று திரும்பி வந்து, உங்களுக்கு வகை சொல்லுகின்றேனென்று வடக்கே போக்குக்காட்டி, மேகமண்டலத்திற் சென்று நிகும்பலை வேள்வி வளர்ப்பதற்காக இராவணனால் அனுப்பப்பட்ட முன்னூறு வெள்ளஞ் சேனை, முப்பதினாயிரம் யானை, அறுபதினாயிரங்குதிரை, இருநூறாயிரங் காலாட்கள் இவர்கள் தன்னைச் சூழ அணியணியாக நிறுத்திக்கொண்டு, அவர்களுக்கு நடுவில் இந்திரசித்து அமர்ந்து கொண்டு பூரணகும்பம் வகித்து வேள்வி வைத்துக் கொண்டிருந்தான்.

இந்தக்கபட நாடக சூத்திரம் அனுமார் அறியாமல் சீதையம்மனை வெட்டிப் போட்டானே இனி என்னசெய்வோமென்று அலறிப் பூமியிலடித்துவிழுந்து புரண்டு அழுது ஓடி வந்து, சுவாமி! இந்திரசித்து அம்மனை வெட்டி யெறிந்து விட்டு அயோத்திக்குப் போய், அங்குள்ள ஆண் பெண் சருவசனங்களையுஞ் சம்மாரஞ்செய்து வருகிறேனென்று வடக்கே போய் விட்டானென்று சொன்னவுடனே வானரச்சேனைகளெல்லாம் கோவென்று அலற, சுவாமியும்மிகு மனவேதனையுடன் சொல்லுகின்றார். நான் ஒருவன் செய்தபாவத்தால் சீதையையும் இறக்கக் கொடுத்து, அயோத்தியாபுரி. கோசலைநாடு இவைகளிலுள்ள பந்து வர்க்கங்களுக்கும் இடையூறு ஏற்பட்டதோவென்று மதிமயங்கி, நாம் சீதையைக்காக்கும்பொருட்டல்லவோ இவிடத்தினின்று இராட்சதருடன் யுத்தஞ்செய்தோம். அவனும்

ஆவி துறந்தபடியால், இனி யாரைக்காக்கப் போகின்றோம் என்று சீக்கிரம் அயோத்திக்குப் போகவேண்டுமென்று எழுந்து நிற்கும்பொழுது, அனுமாரும் அடிவணங்கி சுவாமி! அடியேன் தோளின் மீதமர்ந்தால் அந்த இந்திரசித்து அயோத்திக்குப் போகுமுன்னமே அடியேன் கொண்டுபோய் விடுகிறேனென்று பகர்ந்தார்.

சுவாமி என்னைச் சீக்கிரம் கொண்டு போய்விடும் அனுமாரே! யென்று ஆரோகணிக்க எத்தனப்படுகிற போது, விபீஷணர் வந்துசுவாமி! இதெல்லாம் இராட்சதாளின் கபடமே யல்லாமல் மெய்யான காரியமல்ல. அம்மன் திருமேனிக்கு அழிவில்லை. இது விஷயம் மெய், பொய், என்பதற்கு அடியேன் போய் விசாரித்து வருகின்றேன் என்று, சுவாமியிடம் விடை பெற்றுக் கொண்டு வண்டு ரூபமாகப் பறந்து அசோகவனத்திற் சென்று, அம்மன் முன்பாக நின்று தெண்டம் பண்ணினார். அப்போது திரிசடை அம்மா! என் பிதா வந்தன ரென்று உரைத்தாள். சீதை விபீஷணரைப்பார்த்து நீர் அடைக்கலமாகச் சுவாமியிடஞ் சென்றவர் இப்போது நீர் இங்குற்ற காரணம் உரைப்பீரென்ன, அப்போது விபீஷணர் பணிந்து அம்மா! இந்திரசித்து உம்மைப் போல் மாயா சீதை யுண்டுபண்ணி, மேலக்கோட்டை வாசலினின்று வெட்டிப்போட்டான், ஆதலால்சுவாமி மெத்தத் துக்கத்துட னிருக்கின்றார், அதை நிவர்த்தி செய்ய உம்மைப்பார்த்துப் போகவந்தேன். ஆனதால் சீக்கிரம் ஓரடையாளந் தாரும், கொண்டுபோய்க் காட்டுகிறேனென்று கேட்கச் சீதை மனமகிழ்ந்து சூடாமணியை விபீஷணர் கரத்திலீய்ந்தாள்.

அதைப் பெற்றுக் கொண்டு இலங்கைச் சமாசாரமென்னவென்று விசாரித்து, இந்திரசித்து நிகும்பலை வேள்விக்குச் சென்றதும், இராவணன் வேள்விக்கு வேண்டிய சாமான்களனுப்புவதும் தெரிந்து, சீக்கிரம் விபீஷணர் சுவாமியிடம் வந்து தெண்டம் பண்ணிச் சுவாமி! பிராட்டியார் சுகமாயிருக்கிறார்களென்று சூடாமணியுங்கொடுத்து, நிகும்பலையிற் சென்ற இந்திரசித்தின் விஷயங்களுஞ்சொல்லி, சுவாமி! தேவரீர் இப்பொழுதே நிகும்பலையிற்சென்று அவன் வேள்வியை யழித்து, அவனையும் வெல்லவேண்டும். இனிக்கணப் பொழுதேனும் தாமதித்தால் வேள்வியை நிறை வேற்றிக் கொள்ளுவான். பிறகு அவனைப் பதினான்குவருடத்திற்குள் ஜயிக்கமுடியாதென்று விண்ணப்பஞ் செய்தார்.

அப்போது சுவாமி இலட்சுமணரைப் பார்த்து தம்பி! நீ எழுபது வெள்ளஞ் சேனைகளையும் சுக்ரீவன் முதலான சேனைத் தலைவர்களையும், விபீஷணனையும் அழைத்துக் கொண்டு சென்று இந்திரசித்தின்வேள்வியை யழித்து, அவன் சிரத்தையுந் துணித்து வருவாயென்று ஆசி கூறி, அவன் வாயுவாஸ்திரம், வருணாஸ்திரம் மற்றெந்தக் கணைகளை யேவினாலும், நீயும் அப்படியே அஸ்திரப்பிரயோகஞ்செய்து அறுத்துவிடு; நாராயணாஸ்திரத்தைப்பிரயோகஞ் செய்தானால், நீபாணந் தொடாமல் மூல மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு நில்லு, அந்த அஸ்திரம் உன்னை வலஞ் சுற்றிப்போய் விடும். பின்னர் உன்னுடைய பிறைமுகாஸ்திரத்தைத் தொடுத்து அவன் சிரத்தையும் அறுத்து வருவாய் தம்பி யென்று மார்புடனணைத்து, உள்ளன்பாற் கொண்டாடி, அகஸ்தியர் கொடுத்த வில்லும் அம்பறாத் தூணியும் சுரிகைவாளும், சுவாமி கையினாற் கட்டியனுப்புகிற

போது சுவாமியின் இருவிழிகளிலும் நீர்ததும்ப விசாரத்துடனிற்கின்றதை யறிந்த இலட்சுமணர் சொல்லுகின்றார்.

விருத்தம்.

பொலங்கொண்ட லனையமேனிப் புரவலன் பொருமிக் கண்ணீர்
நிலங்கொண்டு படரா னின்ற நெஞ்சழி வானைத் தம்பி
வலங்கொண்டு வயிர வில்லி னிடங்கொண்டு வஞ்சன் மேலே
சலங்கொண்டு கடிது சென்று தலைகொண்டு வருவே னென்றார்.

வசனம்.

இப்படியாக இலட்சுமணர் சுவாமிக்குத் திடஞ் சொல்லி, அவர் பாதத்தில் வீழ்ந்து தெண்டஞ் சமர்ப்பித்து, விடை பெற்றுக் கொண்டு யாவரும் மகா ஆரவாரத்துடன் நிகும்பலையை நோக்கிச் சென்றார்கள்.

---

நிகும்பலையாகம்.

அப்பொழுது இந்திரசித்து முன்னூறு வெள்ளஞ் சேனைகளையும் மற்ற சேனைத்தலைவர்களையும் தாமரைத் தடாகம் போல் தன்னைச்சூழ முப்பதினாயிரம் யோசனைக்கப்பால் அணியணியாக நிறுத்திக்கொண்டு, ஓமம்வளர்த்து ஆகுதிபண்ணிப்பூரண கும்பம்வைத்து, வெகு கருத்துடனே ஜெபஞ் செய்து கொண்டிருந்தான்.

அப்போதுசுக்ரீவன், சாம்பவர், அனுமார், அங்கதன் மற்ற எழுபது வெள்ளஞ் சேனைகளும் குரவையிட்டு அஷ்டகாசஞ் செய்து நின்றார்கள். அந்த ஓசை

கேட்டு இராட்சதச்சேனைகள் எதிர்த்துப் பொருதினார்கள். அதில் வானரங்கள் கண்ட துண்டமாய் அறுபட்டும், கால் கரங்கள் அறுந்தும் இப்படிச் சின்னபின்னமாயின. வானரங்களெறிந்த மலையினாலும், மரத்தினாலும், இராட்சதப்படைகள் குடல்சரிந்தும், மூளைசிதறியும், கால் வேறு கரம் வேறு சிரம் வேறாக அற்று விழுவாருமாய் அநேகம் பேர் இறந்தார்கள். அப்போது இராட்சதச் சேனைகள் யுத்தஞ் செய்யத் திராணியில்லாமற் றட்டழிவதைக் கண்ட சேனைத் தலைவர்கள் வானரங்களுடன் எதிர்த்து அஸ்திரப் பிரயோகஞ் செய்து வானரங்களைத் திசைகெடத் துரத்தினார்கள்.

அதைநோக்கிய சுக்ரீவன், சாம்பவர், அனுமார், அங்கதன் இவர்கள் பேருக்கொரு மரங்களைப் பிடுங்கி கரத்திற்கேற்ற சரமென்று மனமகிழ்ந்து இராட்சதச் சேனைத்தலைவர்கள் கூட்டத்திற் பிரவேசித்துக் கண்ட கண்டபேரை யெல்லாம் மூளைசிதற, அடித்துக் கொன்றார்கள். இப்படிச் சருவசம்மாரம் பண்ணியுந் தொலையாமல் மீந்தும் இராட்சதர்கள் நின்று பொருதுகிறதைக்கண்ட விபீஷணர், இலட்சுமணரிடஞ் சென்று சுவாமி! இக்கணமே எழுந்தாலாச்சுது இல்லையேல் இந்திரசித்து வேள்வியை முடித்துக் கொள்வான், அது முடிந்தால் நம்மால் அவனை இப்போது ஜெயிக்க முடியாதென்று சொன்னார்.

அப்பொழுது இலட்சுமணர் திடீரென்றெழுந்து வந்து வில்லைக்குணத்தொனி செய்து சரமாரியாகப் பொழிந்தனர். அதில் கரி, பரி, தேர், காலாள், இருநூறு வெள்ளம் இராட்சதர், பனிரண்டு கோடி படைத்தலைவர், மற்றயாவரும் மடிந்தனர். அந்தக்குருதிவெள்ளத்தால், யாகத்தின் அக்கினியும் அமர்ந்தது. பிறகு

சிறிது இராட்சதர்களின் சிரத்தை யறுத்து அந்தப் பூரணகும்பத்தையும் உடைந்து விட்டார். அப்பொழுதும் இந்திரசித்து கண் மூடி மந்திரதியானத்திற் கருத்தாயிருப்பதைக் கண்ட அனுமார், இந்திரசித்திடஞ் சென்றுவாடா, இந்திரசித்தே! நீ சீதாப்பிராட்டியாரை வெட்டினதும், அயோத்திக்குச்சென்று பரதர் சத்துக்கருடன் மற்ற கிளைவழிகளையுங் கொன்று வந்ததும், வெகுகடுமைதான். நீ அயோத்திக்குச் சென்றிருந்தால் உன் சிரம் அவிடத்தில் அறுபடும். ஆனதால் நீ அங்கு சென்றவனும் அல்ல, உன்னுடைய பொய்யும் கபடமும் இன்றுடன் சரி. போருக்குப் புறப்படடாவென்று அழைக்கிற ரீங்காரச் சத்தமுங் கேட்கவில்லையோ? இப்போது எங்களுடைய வீரசிங்கமாகிய இளையபெருமாள் திருக்கரத்தின் சரத்தாலறுபட்ட அரக்கர் சிரத்திற் களவில்லாதிருந்தும், அதனாற் பூரண கும்பம் உடைந்து கிடப்பதும் நீ பாராமல் மௌனமாகக் கண்மூடி யிருந்தால் இந்தயாகத்துக்கு உயிருண்டோ இல்லையோவென்று விழித்துப் பாரடா வென்றும் பரிகாசமாகச் சொன்னார்.

அப்போது இந்திரசித்து கண் விழித்துப் பார்த்துப் பூரணகும்பம் உடைந்திருப்பதும், இராட்சதர்கள் அநேகம் பேர் இறந்து கிடப்பதையுங் கண்டு, ஓகோ இதற்குத் துப்பு விபீஷணன் கொண்டு வந்து விட்டானேவென்று திடுக்கிட்டெழுந்து, அனுமார் முகத்தை நோக்கி அடா அனுமானே! நீ மிகவுங் கொண்டாட்டமாடுகின்றாய், நான் நாகபாசத்தாலும் பிரமாஸ்திரத்தாலும் இரண்டுமுறை உங்களை யறுத்துச் சின்னபின்னஞ் செய்தபோது திண்டாடிமதிமயங்கி அவஸ்தையடைந்ததை மறந்து விட்டாயோ? என்று சொன்னான்.

விருத்தம்.

[ரூனும்
விடந்துடிக்கின்ற கண்டத் தண்ணலும் விரிஞ்சன் —
படந்துடிக்கின்ற நாகப் பாற்கடற் பள்ளியானும்
சடந்துடிக்கிலராய் வந்து தாங்கினுஞ் சாத றிண்ணம்
இடந்துடிக்கின்ற துண்டே யிருந்திரோ வியம்புவீரே.

ஷ

கொல்வனென் றுன்னைத் தானே குறித்தொரு சூளுங்
கொண்ட
வில்லிவந் தருகு சார்ந்துன் சேனையை முழுதும்
வீட்டி
வல்லை நீ பொருவா யென்று விளிக்கின்றான் வரிவி
ஞணின்
ஒல்லொலி யையய செய்யு மோமத்துக் குறுப்பொன்
ருமோ.

வசனம்.

அப்போது அனுமார் எங்கள் சுவாமி கரத்தால் உன் வம்மிஷ முற்றுங் கருவறுக்கப் போகின்றார் அதற்குள் நீ யேன் வீணைப் பிதற்றுகின்றாய்? இப்போது கிஞ்சிற்றுந்தாமதியாமற் போருக்குப் புறப்படாவென்றார். அதைக்கேட்ட இந்திரசித்து அடா வாடா அனுமானே! உங்களுக்கு மரங்களும், மலைகளும் ஆயுதமேயல்லாமல் வேறென்றுண்டோ? நீங்கள் இனிமேல் மருந்தினலு, மற்றெந்த வுபாயத்தாலும், பிழையாமல் உங்களை வானுலகமட்டுந் துடர்ந்து கொல்லுகின்றேன் பாரடாவென்று இடியேறு போன்ற முழக்கத்துடனெழுந்து,போர்க்கோலமணிந்து, இரதத்திலேறிக்கொண்டு வில்லெடுத்துச் சிறுநாணொலி கொண்டான்.

அந்தச் சத்தங்கேட்டு வானரச்சேனைகள் திசைகெட்டோடினர். அப்பொழுது வானரப்படைத்தலைவர் சென்று எஞ்சிய இராட்சதப் படையுடன் பொருதி,

மண்டை தகரும்படியாக அடித்துக் கொன்றார்கள். இராட்சதச் சேனைகள் ஆற்றாமல் இந்திரசித்திடம் ஓடினார்கள். அப்பொழுது இந்திரசித்துச்சீக்கிரமாகத் தன்னுடைய இரதத்தை நடத்திக்கொண்டு வந்துவானரச் சேனைகள் மீது பாணப்பிரயோகஞ் செய்தான், அதில் பட்டபேர் போக மற்ற பேர் ஓடினவர்களைக் கண்ணுற்ற அனுமார் ஒரு பெரிய பருவதத்தைக் கொண்டோடி வந்து, இந்திரசித்தின் இரதத்தின் மீதெறிந்து ஆர்ப்பரித்தார்.

அந்த மலையை ஒரே வாளினால் உடைத்துத் தூளாக்கிச் சொல்லுகின்றான். நில்லடா அனுமானே! நீயோ என்முன்பாக வந்து சாமர்த்தியம் பேசிக்கல்லினாலும், மரத்தினாலும் என்னைச் செயிப்பவன்! இதோ பாரடாவென்று, அனுமார்மீது தொளாயிரங் கணைகள் தொடுத்து ஆரவாரஞ்செய்தான். அந்தக்கணைகள்பட்டு அனுமார் மூர்ச்சையாய்ப் பூமியில் வீழ்ந்தார். அப்பொழுது அங்கதன் ஒரு பருவதத்தை யெடுத்து இந்திரசித்தின் பேரில் எறிந்தான்.

அந்த மலையையும் பொடியாக்கி அனுமானிலும் நீ பெரிது வல்லவனோ வென்று பதினாயிரங் கோடி பாணந் தொடுத்து அங்கதன் உடம்பைச் சல்லடைக் கண்போற் றுளைத்துவிட்டான். அங்கதனும் விழுந்தவுடன் சுக்ரீவன் வந்தெதிர்த்தான். அவனையும் அப்படியேபாணத்தால் விழச் செய்து வீர கர்ச்சனையுட னின்றான்; இவைகளைக்கண்ட வானரங்களும் வெருண்டோடினார்கள்.

அப்பொழுது விபீஷணர் இலட்சுமண ரிடஞ் சென்று தெண்டஞ் செய்து சுவாமி! நம்முடையசேனைகளெல்லாம் போர் முரிந்து ஓட்டம் பிடித்தன; இந்த

வேளையில் தேவரீரெழுந்தருள வேண்டுமென்று பணிந்தான். அப்பொழுது இலட்சுமணர் சீக்கிரம் எழுந்து வில்லிற் பாணந்தொடுத்து இராட்சதப் படைகளையும் கரி, பரி, தேர், காலாட்களையும் சம்மாரஞ் செய்தார். அந்தத் தனுவோசை கேட்ட இந்திரசித்து தன் இரதத்தைச் சீக்கிரந்தூண்டி நடத்திக் கொண்டு வந்து இலட்சுமணர் முன்பாக நின்றான்.

அப்பொழுது அனுமார் மூர்ச்சை தெளிந்து எழுந்து, சுவாமி! யடியேன் றோள்மீதாரோகணிக்கவேண்டுமென்றுபணிந்து, இலட்சுமணரைத் தோளின்மீதமர்த்திக் கொண்டு ஆரவாரித்தார். அப்பொழுதுதேவர்கள் பூமாரிபெய்து இலட்சுமணர் ஜெயிக்கவும், இந்திரசித்து அபஜெயமடையவு மென்று ஆசீர்வாதஞ் செய்தார்கள். அப்பால் இருவரும் வில்லைச்சிறு நாணொலி காட்டிய சத்தம் அண்டங்களும் பிளந்து தேவர்களு மருண்டு செவி பொத்தினார்கள்.

அப்போது இந்திரசித்து இலட்சுமணரைப்பார்த்துச்சொல்லுகிறான். முன்என்னுடைய நாகபாசத்தால் உன்னையும் உன் சேனைகளையுங் கட்டினேன், அதற்குக் கருடனாற் பிழைத்தீர்கள்; பிறகு பிரமாஸ்திரத்தாலறுத்துச் சின்னபின்னஞ் செய்தேன், அதற்கும் மருந்தினாற் பிழைத்தீர்கள். இனிமேல்ஒருவகையாலும்பிழையாமற் போகும்படிச் சம்மாரஞ் செய்கின்றேனென்று சொன்னான். அதற்கு இலட்சுமணர் வாடா இந்திரசித்தே! நீ கீழே நின்று நாகபாசம் பிரயோகஞ் செய்திருந்தால், நாகபாசந்தொட்ட கரத்தையுஞ், சிரத்தையும் அறுத்து வீழ்த்தி யிருப்பேன். பிரமாஸ்திரம் விட்டபோதும் மாயப்போருண்டாக்கி மேகமண்டலத்தில் மறைந்து

நின்று பிரயோகஞ் செய்தாய்; ஆனால் அதிற் சிறிது வெற்றி கொண்டோமென்று மகத்துவமடைய வேண்டாம், நீயும் இது வரையில் மறைவாகவிருந்து மாயப் போராயும், வஞ்சகம் கபடமாயும் போர்புரிந்து, சீவனுடனிருந்தாய், இல்லையேல் உன் பிதாவுக்கு நீ இறந்த விசனஞ் சொல்ல ஆள் அனுப்பியிருப்பேன், அதுவும் இன்றுடன் சரி, இதோ கணப்பொழுதில் உன் சிரத்தைத் துணிக்கின்றேனென்று சொன்னார்.

அதுகேட்ட இந்திரசித்து, நம்மிருவரின் ஆண்மை இன்றல்லவோ தெரியுமென்று ஆக்கிரமித்து அனந்தங் கோடி வச்சிரக்கணைகளை இலட்சுமணர் மீது பிரயோகஞ் செய்தான். இலட்சுமணர் அந்தக் கணைகளையெல்லாம் அறுத்துவிடப், பிறகு நாகக்கணைகளில் ஆயிரம் வாளி தொடுத்தான். அவைகளையும் அறுத்து, இலட்சுமணர் நாலாயிரந் தாமரைப்பூ வாளியை ஏவினர். அந்த வாளியையு மறுத்து அனுமார் பேரிற், சில அஸ்திரங்களைப் பிரயோகித்தான். அதை இலட்சுமணர் அறுத்து மறுபாணந்தொடுத்து, இந்திரசித்தின்வில்லையுங், கவசத்தையும் அறுத்துவீழ்த்தினர். பிறகு அருதவில்லையும் எடுத்துக் கவசத்தையுங் கட்டிக் கொண்டு இலட்சுமணர்வில்லையும், கவசத்தையும் அறுக்கும்படியாகப் பதினாயிரம் பாணந்தொடுத்தான். அந்தப்பாணங்கள் கவசத்திற்பட்டு, முனைதெறித்துப்போய் விட்டது. அப்போது இலட்சுமணர் மிகுந்த கோபாக்கினியுடன், சில பாணங்களைத் தொடுத்து இந்திரசித்தின் தேரையுஞ், சாரதி புரவிகளையுந் துணித்து விட்டார். மறுதேரேறிக் கொண்டு இலட்சுமணர் மீதும், அனுமார் மீதும், அம்புமாரியாகத் தூவி ஆரவாரித்தான். அந்த அம்புமாரிகளையும் அறுத்து, அவன்றேர் சாரதி

யையும் அறுத்தார். இப்படியே அவன் ஏறுகிற தேர்க்களை யெல்லாம் தூளாக்கினுர்.

பிறகு இந்திரசித்து எஞ்சிய இரத மொன்றில் ஆரோகணித்துக்கொண்டு, அதிலிருந்த மாயக்கணைகளிற் சிறிதைப் பிரயோகஞ்செய்து, இலட்சுமணரையும் அனுமாரையும் நிலைகுலைய விட்டான். அவைகளையெல்லாம் இலட்சுமணர் அறுத்து வெளியாக்கினுர். அதுகண்ட இந்திரசித்து அதிசயித்து, இவ்வளவு வில்லாளியோவென்று, மனதில் உள்ளிட்டுக்கொண்டு, மிகுந்த பராக்கிரமத்துடன்வாயுவாஸ்திரத்தைக்கையிலெடுத்து மானதபூஜை கொடுத்து, வில்லிற்றெடுத்து விரைவாய் விடுத்து, உத்தண்டத்துடனின்றுன். அந்த வாயுவாஸ்திரமானது, ஊழிக்காற்றடித்தது போல் வீசிக்கொண்டு வருகிறதைக் கண்ணுற்ற இலட்சுமணர், தம்முடைய அம்பறுத்தூணியி லிருக்கிற வாயு வாஸ்திரத்தை எடுத்து, மானதபூஜை கொடுத்து அந்த அஸ்திரத்தை மட்டும் அறுத்துவிட்டு வாவென்று, ஆக்ஞாபனஞ் செய்தனுப்பினுர். அந்த அஸ்திரஞ்சென்று வந்தவாயுவாஸ்திரத்தைத் துணித்து வந்தது.

பிறகு அக்கினியாஸ்திரத்தைத் தொடுத்து விட்டான். அதற்கும் இலட்சுமணர் தம்முடைய அக்கினியாஸ்திரத்தால் அறுத்து விட்டார். அப்பால் வருணுஸ்திரந்தொடுத்தான், அந்தப்பாணத்தையும் அறுத்தார். பிறகுபிரமாஸ்திரத்தையேவினுன், அதையுந்துணித்து விட்டார். அதை நோக்கிய இந்திரசித்துப் பிரமை யுற்றுன். நாம் முன்னமே நாகபாசம், பிரமாஸ்திரம், நேர்முகமாக நின்று விட்டால், அவைகளை இவன் கணைகளாற் துணிக்க வல்லவனே; இவன் ஆதி பரப்பிரமமேயல்லாமல் வேறல்ல இனி யாராலுலென்ன. விஷ்ணு

வாஸ்திரம் ஒன்றிருக்கின்றதே இதற்குபிரமா, விஷ்ணு உருத்திரன், மற்ற தேவர்கள் வந்தாலும் எதிரல்லவே இது இலட்சுமணன், வானரச் சேனைகள், இராமனுள்பட எரித்துவிடும். நமது பகையுமுடிந்ததென்று அக மகிழ்வுடன் விஷ்ணு வாஸ்திரத்தை யெடுத்து விடுத்தான்.

அந்த அஸ்திரமானது கோடி சூரியப்பிரகாசம் போலவும், சந்திரகாந்தி போலவும் விளங்கிக்கொண்டு வருகிற வேகங் கண்டு, தேவர்கள் மதிகலங்கி ஓடிப்போனார்கள். வானரச் சேனைகளெல்லாம் நடுநடுங்கி இலட்சுமணர் பாதத்தில் வீழ்ந்து அபயம் அபயம் காக்க வேண்டுமென்று, உரத்த சத்தத்துடன் கூவினர். அவர்களுக்கும் அபயாஸ்தங் கொடுத்து மிகுந்த பராக்கிரமத்துடனின்று பார்த்து இதுவிஷ்ணுபாணமெனத் தெரிந்து, அதற்கு மறுபாணந் தொடாமல் நின்று இலட்சுமணர் மூலமந்திரத்தைத் தியானித்துச், சுவாசத்தை யுள்ளே யிழுத்து நாசியாற் சுவாசம் விட்டமாத்திரத்தில், அந்த அஸ்திரம் இலட்சுமணரை வலஞ்சுற்றித் தெண்டஞ் சமர்ப்பித்துச் சென்றது.

அதைக்கண்ட தேவர்களும், வானரப் படைகளும் ஆனந்தக் கூத்தாடினார்கள். அப்போது இந்திரசித்துத்திகைத்து, இவனை மனிதனென்றெண்ணி இவனுடன் போர்புரிவது நமதுமதியீனம். பிரமாஸ்திரம், விஷ்ணுவாஸ்திரம், நிகும்பலை வேள்வி யுள்பட, ஒன்றேனும் பிழையாமற் போனபடியால், இனிமேல் நாம் இவனை எப்படிச் செயம் பண்ணப் போகின்றோமென்று தனக்குட்டானே பலபலவிதமாக நினைத்து, ஆனால் நம்முடைய ஆண்மைதானென்ன? நாம்முன்னமேமகாதேவரை நோக்கித் தவம் பண்ணுகிறபோது முப்புர

மெரித்த கணையை மகா தேவர் தந்து, நாம் எதிர்த்த போதும்ஜெயிக்கும், சருவலோகத்தையும் எரிக்குமென்று பிரதிக்கினையுடன் தந்தாரே, ஆயினும் எந்தலோகத்தையெரித்தாலுஞ் சரி, நமது பகை முடிந்தாற் போதுமென்று, சிவாஸ்திரத்தைக் கரத்திலெடுத்துமனத்தால் வணங்கி இலட்சுமணர் மீது பிரயோகித்தான்.

அந்த அஸ்திரம் வருகிறதெப்படி யென்றால்:- ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், இலட்சம், கோடியாகவும் ஒவ்வொரு முனையிற் பதினாயிரங் கோடி பசாசும், பதினாயிரங்கோடி பூதமும், பதினாயிரங் கோடி மழுவும், பதினாயிரங்கோடி ஆயுதமும் விளங்க, யுகாந்தகாலத்துப்பிரளயமானது போலும், இடியு மின்னலுடன் அக்கினியும் புகைமண்டி யெரியச் சீறிக்கொண்டும், அநேகங்கோடி இராட்சதாள் ஆயுதக்காரருமாகப் புறப்பட்டு, இலட்சுமணன் எங்கே எங்கே யென்று தேடிக்கொண்டு வருகிற அஸ்திரத்தை நோக்கிய தேவர்கள், இன்று இலட்சுமணர் இந்த அஸ்திரத்திற்கு எப்படித் தப்பித்துக்கொள்வாரோ நாம் அறியோமென்று, நடுக்கத்துடன் அவ்விடம் விட்டு அப்பாற் சென்றனர். வானரங்களும் இந்தக் கணையை இலட்சுமணர் ஆயுதங் கொண்டு தடுப்பதுமில்லை; நாம் தலை யெடுப்பது மில்லை யென்று, எங்கே ஓடிப்பிழைப்போ மென்றாலும், இந்த அஸ்திரம் அண்டபுவனங்களிலுந்துடர்ந்து கொல்லுமென்றுபயந்து, மதிகலங்கி மெய்மறந்து இலட்சுமணர் பாதத்திற் சரணமே கெதி யென்று வீழ்ந்தார்கள்.

அவர்களையும் அஞ்சாதீர்களெனத் திடஞ்சொல்லித், தமக்கு முன்பாக வருகிற பாணத்தைச்சிவாஸ்திரமென்றுணர்ந்து, தம்முடைய சிவாஸ்திரத்தை யெடுத்து மானத பூஜை கொடுத்து, இந்திரசித்துத் தொடுத்த

அஸ்திரத்தை மட்டும் அறுத்துவரும்படியாக உபதேசமுஞ்சொல்லிப் பிரயோகஞ் செய்தார். அந்த அஸ்திரமானது இந்திரசித்தின் கணைக்கு மேலாக, அக்கினிக் கொழுந்து விட்டெரியவும் புகைமண்டிக் கொண்டும், அதிக உக்கிரத்துடன் சென்று அந்த அஸ்திரத்தை விழுங்கி விட்டது.

அதைக்கண்ட தேவர்களெல்லாம் ஆனந்தக் கூத்தாடினார்கள். வானரங்களெல்லாம் பிழைத்தோம் பிழைத்தோமென்று எழுந்து, மகா கெம்பீரத்துடன் இந்திரசித்தே! இனி யுன்னால் ஆனமட்டும் பாரடா வென்று ஆர்ப்பரித்தார்கள். அதை நோக்கிய இந்திரசித்து, மதிமயங்கித் திகைத்து இனி நாம் இவன் கரத்தின் சரத்தால் உயிர் துறப்பது திண்ணமே, ஆனால் இந்த நிகும்பலைக்கு வழியுந்திசையுஞ் சொல்லி, இவர்களை இங்கு அழைத்து வந்தது விபீஷணனல்லவோ. இவனைக் கொன்றால், சிறிய பிதாவைக்கொன்றதோஷமென்பது நமக்கில்லை யென்று, தேரைச் சீக்கிரத்தில் நடத்தி விபீஷணரை நோக்கிச் சில வார்த்தையாடுகின்றான்.

நான் யாரும் அறியாமல் இரகசியமாய் முடிக்கிற நிகும்பலை வேள்விக்குந் தந்து சொல்லி, அயோத்திக்குச் சென்றவர்களையும் நிறுத்தி, உண்மை சொல்லிப் படையைச் சேகரித்து வந்து காட்டிக் கொடுத்தாயே, இப்போது இலட்சுமணன் பாணத்தால் என் ஆவி துறப்பது நிச்சயம். பின் இராவணனும் இராமனுடன் போர் செய்து இறந்தால் வானரங்கள் குதூகலங் கொண்டாடுகிறபோது, நீயும் சந்தோஷத்துடனிருப்பாயோ? தமையன் இறந்து போனானென்று துக்கப்படுவாயோ வென்று கேட்டான்.

அப்போதுவிபீஷணன்சொல்லுகின்றான். நான் உன் பிதாவுக்கு வேண்டிய நீதிகளை யெடுத்துரைத்துங் கேளாமல், நீஎன் முன்பாகக் கணநேரமேனுந் தருகி நின்றால் உன்னைச் சிரச்சேதஞ்செய்வேனென்று துரத்தினபடியால், அடியேனும் நாம் வீணில் என் மனோவேதனையடைய வேண்டு மென்று, ஸ்ரீ ராகவரிடஞ் சென்று சரணமடைந்தேன், அவரும் என்னை அங்கீகரித்து என்னுடன் பிறந்தவர்களில் நீ யொருவனென்று, நட்புக்கொண்டாடியபடியால், நான் அவர்களிடம் உண்மை சொல்லிக் கொண்டிருக்கிறேனென்று சொன்னமொழியைக்கேட்ட இந்திரசித்து, நீ யொரு சார்பாக விருக்கவேண்டுமே யல்லாமல், எதிராளியிடத்தில் வந்திருக்கலாமோ? உன்னை உயிருடன் விடுவேனோ இதோ பாரென்று ஆக்கிரமித்து ஒரு சூலத்தை எறிந்தான்.

அந்தச் சூலத்தைத் தன் கரத்திலிருந்த தெண்டாயுதத்தால், ஓரடியிற் சுக்கலாய்முறித்துவிட்டு, நமது சிரத்தைத் துணிக்கவல்லவோ சூலமெறிந்தானென்று மிகுந்த கோபாக்கினி சித்தமுடையவனுய்ப் புறப்பட்டு, அவன் தேர் சாரதி புரவியும் அடித்துப் பொடியாக்கி விட்டு, நீ எனக்கு மைந்தனுனபடியால் உன்னை வதை செய்யலாகாதென்று பின் வாங்கிச் சென்றார்.

அப்போது இந்திரசித்தின் இரதம் அழிந்தவுடன் அதிலிருந்த ஆயிரங் கோடி பாணங்களையுமெடுத்து, இலட்சுமணர், சுக்ரீவர், சாம்பவர், அனுமார் அங்கதன் மற்ற வானரச் சேனைகள் மீதும் பிரயோகஞ் செய்து, அண்டாண்டங்களும் பிளக்கும்படியான ஆரவாரத்துடன் மேகத்திற் பாய்ந்து, அவ்விடம் நிற்பது போல் இலங்கையில் வந்து இராவணனைக் கண்டு, தெண்டனிட்டுநின்றான். அப்படி நின்ற இந்திரசித்தை

நோக்கிய இராவணன் செப்புகின்ருன். நீ வேள்வியை முடிக்கச் சென்றவன், இப்போது அடங்கிய அம்பு தோன்ற அம்பருத் தூணியுடன் வில்லுங் கைப்பிடித்துத் தேகமெல்லாம் இரத்த மொழுகப் போரில் முறிந்தோடி வந்ததுபோலிருக்கிறதே, என்னகாரணம் எனக்குச் சொல்லென்று கேட்ட பிதாவை நோக்கி, இந்திரசித்துச் சொல்லுகின்ருன்.

நான் நிகும்பலையில் யாகஞ் செய்து கொண்டிருக்கிறபோது, உமதுதம்பி விபீஷணன் வழியுந் திசையுஞ்சொல்லி,இலட்சுமணனையும் வானரச்சேனைகளையும் அங்கு அழைத்து வந்து, இராட்சதாளையெல்லாஞ்சம்மாரம்பண்ணிப், பூரண கும்பத்தையு முடைத்தார்கள். பிறகு அடியேனும் போர்க்கோலங் கொண்டு, எதிர்க்க என்னுடைய கணைகள் ஒவ்வொன்றையும் பிரயோகஞ் செய்தேன். அவனும் அப்படியே அறுத்தான் அப்பால், விஷ்ணுபாணத்தைத் தொடுத்தேன். அதுவும் அவனை வலஞ்சுற்றிச் சென்றது. பிறகு விபீஷணன் மீது கோபங் கொண்டு சூலத்தை யெறிந்தேன். அதையும் பொடியாக்கினன். அப்பால் ஆயிரங்கோடி பாணத்தை ஒரே முகமாக யாவர் மீதும் பிரயோகஞ் செய்து மேகமண்டலத்திற் பாய்ந்து இப்பால் உமக்கு ஒரு புத்திசொல்லிப்போக வந்தேன் அது என்ன வென்ருல்:-

விருத்தம்.

நிலஞ்செய்து விசும்புஞ் செய்து நெடியவன் படை நின்ருனை
வலஞ்செய்து போவ தானுன் மற்றினி வலிய துண்டே
குலஞ்செய்த பாவத்தாலே கொடும்பழி தேடிக் கொண்டோம்
சலஞ்செயி னுலக மூன்று மிலக்குவன் முடிப்பன் ருனே.

விருத்தம்.

முட்டிய செருவின் முன்ன முதலவன் படையை
முன்பா
விட்டில ருலகை யஞ்சி யாதலால் வென்று
மீண்டேன்
கிட்டிய போதுங் காத்தா ரின்னமுங் கிளர
வல்லார்
சுட்டிய வலியி ஞலே கோறலைத் துணிந்து
நின்றூர்.

ஷ

ஆதலா னஞ்சி னேனென் றருளலை யாசை தானச்
சீதைபால் விடுதி யாயி னனையவர் சீற்றந் தீர்வர்
போதலும் புரிவர் செய்த தீமையும் பொறுப்பருன்மேல்
காதலா லுரைத்தே னென்று ஞுலகெலாங் கலக்கி—
[வென்றூன்

வசனம்.

இப்பால் நம்முடைய வம்மிசத்தா ரெல்லோரு மாண்டனர். தேவரீரும் அடியேனு மல்லாமல் வேறொருவருமில்லை. நாமும் அந்த மனிதர்கள் காத்தினுலிறப்பது நிச்சயம். ஆதலால் அந்தச் சீதையை யனுப்பி வைத்தோ மானுல் நீண்ட செல்வத்துட னுண்டுவரலாம் என் பிதாவே! உமது கருத்தென்ன வென்று வணங்கிக் கேட்ட இந்திரசித்தைச் சினந்து இராவணன் சொல்லுகின்றூன்.

விருத்தம்.

இயம்பலு மிலங்கை வேந்த னெயிற்றிள நிலவு
மெய்கப்
புயங்களுங் குலுங்க நக்குப் போர்க்கினி யொழிதி
போலாம்
மயங்கினை மனிசன் றன்னை யஞ்சலை வருந்த
லைய
சயங்கொடு தருவே னின்றே மனிசரைத் தனுவொன்
றுலே.

ஷை

வென்றில னென்ற போதும் வேதமுள் ளளவும்
யானும்
நின்றுளெ னன்றே மற்றவ் விராமன்பேர் நிற்கு
மாயின்
பொன்றுத லொருகா லத்துந் தவிருமோ பொதுமைத்
தன்றே
இன்றுளார் நாளை மாள்வார் புகழுக்கு மிறுதி
யுண்டோ.

வசனம்.

கேளடா இந்திரசித்தே அப்படியே மானிடவர் போருக்காற்றுமல் மரித்தோமானல் மண்ணும் விண்ணும் வேதமு முள்ள நாள் வரைக்கும் இராமா வென்றுரைக்கும்போதெல்லாம் இராவணு வென்கிற வார்த்தையும் நிற்குமே ஆதலாற் சீதையை விடுகிறதில்லை, நீ உன்னுடைய அரண்மனையிற் சென்று, உன்னுடம்பு வருத்தம் நீங்கத்தக்க சகாயத்துடனிருடாவென்று தம்முடைய இருபது விழிகளிலும் நெருப்புப் பொறிகள் பறக்க இராவணன் சினந்து சொல்லி விட்டு இன்று நான் போருக்குப்புறப்பட்டு இலட்சுமணனையும் நாளை இராமனையுஞ் சம்மாரம் பண்ணி வருகின்றேனென்று, மகா உத்தண்டத்துட னெழுந்தான்.

அப்போது இந்திரசித்து வணங்கி ஐயா! அடியேனிருக்கையில் தேவரீரெழுந் தருளுவது சரியல்ல, நான்சென்று இன்றையப் பொழுதுக்குள் அந்தஇலட்சுமணனைக் கொன்று திரும்பி வருகின்றேன் அல்லது நான் படுகின்றேன், இவை இரண்டிலொன்று திட்டமென்று விடைபெற்றுக்கொண்டு, தன்னுடைய அழியாத இரதத்தைக் கொண்டு வரச்சொல்லி, அருதகவச

முங்கட்டி, ஆபரணங்களும் பூண்டுகொண்டு, மேளத்தொனிகள் முழக்கத்துடனே அந்த இரதத்திலாரோகணித்து, யுத்தகளத்தை நோக்கிப் புறப்பட்டான்.

அப்போது இலட்சுமணர் விபீஷணரை நோக்கி இவ்விடம் நின்ற இந்திரசித்து போருக்காற்றுமல் மேகத்துள் மறைந்துகொண்டானே, அவிடத்திலிருந்துகொண்டு என்ன வஞ்சனை செய்கின்றுனோ வென்று, ஆகாயத்தை நோக்கி நிற்கிற்போது, தேர் வருகிற ஆரவாரங்கேட்டுத் திரும்பிப்பார்த்து, இந்திரசித்து வருவதைக் கண்ணுற்றவானரங்கள் ஆர்ப்பரித்து, அவரவர் கரங்களுக் கெட்டியவாறு மலைகளையும், மரங்களையும், பிடுங்கி எதிர்த்து நின்றுர்கள். அப்பொழுது இந்திரசித்துடன் சென்ற இராட்சதர்கள், பதினெட்டாயுதங்களையுஞ் சரமாரியாகப்பொழிந்தனர். வானரங்களெறிந்த மலையினுலும் மரத்தினுலும், இராட்சதர்குடல்சரிந்தும், காலறுந்தும், கரமுறிந்தும், சிரந்துறந்தும் இப்படிப் பலவாருகச் சின்னுபின்னங்களாயினர்.

அதைக்கண்ட இந்திரசித்து சீக்கிரமாகத் தம்முடைய இரதத்தை நடத்தி வந்து வில்லை வளைத்து, அநேக பாணங்களைப்பிரயோகஞ்செய்து, வானரங்களை மூர்ச்சையாய் விழச்செய்தான். அப்போதுஇலட்சுமணரிடம் விபீஷணர் சென்று சுவாமி! இந்திரசித்து நம்முடைய சேனைகளையெல்லாம் விழச்செய்தான், இவனைப் பாராட்டலாகாது ஆதித்தனும் அஸ்தகிரியை நாடினுன், ஆதலால் இனிக்கணப்பொழுதேனுந் தாமதியாமல் இவனைச் சம்மாரஞ்செய்ய வேண்டுமென்று பணிந்தார்.

அதைச்செவியுற்ற இளையபெருமாள் இன்னும் இவனுக்கொரு போக்குமுண்டோ, இதோ இவன் சிரத்தைத்துணிக்கின்றேன் பாருமென்றார். அப்பொழுது இந்திரசித்து சீக்கிரம் இரதத்தைத் தூண்டி நடத்திக்கொண்டு வந்து இலட்சுமணர் மீது பதினான்குகோடி பாணந் தொடுத்தார். அதை இந்திரசித்து அறுத்து ஆயிரம் தாமரைப்பூ வாளியைப் பிரயோகித்தான். அவைகள் இலட்சுமணர், மார்பிலுந் தோளிலும்பட்டு மூளை மழுங்கிப்போய்விட்டது. அதன்பிறகு இலட்சுமணருக்கு மிகுந்த கோபாக்கினி யுண்டாகிச், சில பாணந் தொடுத்து, இந்திரசித்தின் உடம்பெல்லாம் பலகணி வாசலைப் போலத் துளைத்து விட்டார்.

அப்பொழுது இரத்தவாறெடுத்து அவனுக்குச் சோபமாகினதையறிந்தவிபீஷணர், இலட்சுமணரிடத்திற்சென்று சுவாமி! அவனுடைய இரதமும் வில்லும் அறுதென்றார். அதைக்கேட்ட இலட்சுமணர் இரதம் அறுதென்றால்ஆணிவேறு, அச்சுவேறாய்க்கழறுதோ? வில்லறுதென்றால் விற்பிடித்த கரமுமறுதோ? வென்று கேட்டார்.

அப்போது இந்திரசித்து மூர்ச்சை தெளிந்து தன்னுடைய இரதத்தை நடத்திக் கொண்டு வந்தான். அப்போது இலட்சுமணர் எட்டுமுரட்டம்பைத்தொடுத்து, அந்த வல்லிசாதகக் கொடித்தேரைத் தட்டுத்தட்டாய்ப் பேர்த்தெறித்தார். அதை நோக்கிய இந்திரசித்து மிகுந்த ஆக்கிரமத்துடனே நின்று கொண்டு, ஆயிரம் ஐமுகப்பகழியைப் பிரயோகித்தான். அந்தப் பகழியை இலட்சுமணரறுத்து எண்ணாயிரங்கோடி அகிலம்பைப்பிரயோகித்தார். அந்த அம்புகளானது இந்திரசித்தை நிரைத்துக் கொண்டது எப்படி யென்றால்;—

ஒருவனை மழையும், காற்றும், இடியும், மின்னலும், இருளும் ஒன்றாய்க் கலந்து மூடிக்கொண்டது போலிருந்தது. அதில் இந்திரசித்துத் தரிகொண்டு நிற்க முடியாமல், லாகுகொண்டு மேகமண்டலத்திற் றுவினன். ஆதித்தனும் அஸ்தகிரியை நாடிய நேரமாகையால் அவனிருக்கிற மேகமண்டலத்திற் குருதிபெருகிச் சிவந்த மேகம்போற் காணலாயிற்று. அப்போது இலட்சுமணரும் மற்ற வானரங்களும், ஆகாயத்தை நோக்கி, இந்திரசித்து இதோ நிற்கின்றனென்றறிந்து, இலட்சுமணர் பிறைவாயம்பைப் பிரயோகித்தார். அந்தப்பாணம் ரிவ்ரிவ்வென்னும் ரீங்காரத்துடன்சென்று, இந்திரசித்து விற்பற்றிய கரத்தை யறுத்துப் பூமியிற் றள்ளினது.

அதன் பிறகு இந்திரசித்து வலக்கரத்தினுற் சூலத்தை யெடுத்து விரைந்தெறிந்தான். இலட்சுமணர் அந்தச்சூலத்தையு மறுத்துப்பிறகு பிரமாஸ்திரத்தைத்தொடுத்து அவன் சிரத்தையுமறுத்து வரும்படியாக ஏவினர். அந்தஅஸ்திரஞ்சென்று இந்திரசித்தின் முடியைத் துணித்துப் பூமியில்விழச் செய்தது

விழுந்தவுடனே அங்கதன் கண்டு அந்தச் சிரத்தைத் தூக்கிக்கொண்டான். அப்போது இலட்சுமணர் விபீஷணரைப் பார்த்து; நாம் சுவாமியிடம் போக வேண்டுமென்றார். அப்படியே அனைவோரும்புறப்பட, அனுமார் இலட்சுமணரைத் தூக்கித், தன்றோளிலேற்றிக்கொண்டு, வட்டமிட்டுக் கூத்தாடினர். மற்றவானரச் சேனைகள் தரவையிட்டு, அஷ்டகாசஞ்செய்தனர். தேவர்களும் வெகு மகிழ்ச்சியுற்றுப் பூமாரி பெய்தனர். அங்கதன் இந்திரசித்தின் சிரத்தைக்கொண்டுவரத், தேவர்களாற் சொரிந்த புஷ்பங்களின் மீது அனைவர்களும்

நடந்து சென்று சுவேதமால் வரையிலிருக்கிற சுவாமியைக் கண்ணுற்று, யாவரும் இருகரங்களையுங் கூப்பி அஞ்சலி செய்துவர, அங்கதன் இந்திரசித்தின் சிரத்தைச் சுவாமியின் பாதத்தில் வைத்துத் தெண்டனிட்டான். அப்போதுஇலட்சுமணரும் அனுமாரின்றோள் விட்டிறங்கிப் பணிந்தார். அவரை மார்புடன் கட்டிக்கொண்டு ஆனந்தக்கண்ணீரால் நீராட்டிவைத்து, விபீஷணரைப் பார்த்து, இந்த வெற்றி நீதந்ததே யல்லாமல் வேறல்லவென்று சந்தோஷமாகிச், சுக்ரீவன்,சாம்பவர், அனுமார், அங்கதன் மற்ற வானரங்களையுங் கொண்டாடி, யாவருக்கும் அருள் கொடுத்து ஆனந்த மகிழ்வுற்றிருந்தார்கள்

அப்பால் இராவணனுடைய தூதுவர்கள் மேகமண்டலத்தி லிருந்து ஓடோடியும் இராவணனிடஞ் சென்று பணிந்து சுவாமி! இந்திரசித்தும் இறந்து போனரென்று சொன்னர்கள். அதைக் கேட்டவுடனே இராவணனுக்குக்கோபாக்கினியுண்டாகி, இரண்டு தூதுவர்களை வெட்டிப் போட்டான். மற்றவர் ஓட்டம் பிடித்தனர். அவர்களையும் அழைத்து வரச்சொல்லி, நடந்ததைவிபரமாகச் சொல்லுங்க ளென்றான். அப்போது தூதுவர்கள் சுவாமி! சமுகத்தில் தப்பு விண்ணப்பஞ் செய்வோமோ? நம் நகரைத் தீக்கொளுத்திய குரங்கு அந்த இலட்சுமணனைத் தோளில் வைத்துக் கொண்டு இத்திரசித்துடன் இடசாரி வலசாரி சுற்றிச், சமபோராய் நடந்து கொண்டிருக்கிறபோது, இந்திரசித்துச் சிலகணைகளைத் தூவி, யாரவாரித்துமேகத்துள்மறைந்து நின்றார். அப்பொழுது இலட்சுமணன் ஒருபாணந் தொடுத்து இந்திரசித்தின் சிரத்தை யறுத்து, பூமியில் விழச் செய்தான். அச்சிரம் பூமியில் வீழ்ந்து எழும்பு

முன் அங்கதனோடி வந்து பந்தைப்போற் பிடித்து அமுக்கித் தூக்கிக்கொண்டு, யாவரும் சுவேதமால் பருவதத்தை நோக்கிச் சென்றார்கள். இவையனைத்தும் நாங்கள் கண்டது மெய்யென்றார்கள். அதைக்கேட்ட இராவணன் திடுக்கமுற்று ஏங்கி, இடிவிழுந்தாற்போல் சிம்மாசனத்தி லிருந்தவன் பூமியிற் குப்புற வீழ்ந்து புரண்டழுது, துக்கந்துடனிருந்தான். அந்தவர்த்தமானம் வண்டோதரி கேட்டு, மனது கலங்கி வயிற்றிலடித்துக்கொண்டு புலம்பிவந்து, இராவணன்பாதத்தில் வீழ்ந்து ஐயோ பாதகா! நமது சிரேஷ்ட புத்திரனாகிய இந்திரசித்தும் இறந்து போனானே யென்று, அஷ்டகுலகிரிகளு முருகும்படியாகப்புலம்பி, இருவரும்எழுந்துமேகமண்டலத்தில் யுத்தகளத்தை நோக்கிச்சென்று, அங்கு சிரத்தைக் காணார்களாய், ஒரு பாரிசத்தில் ஆக்கையையும் வில்லுடன் கிடக்கிற கரத்தையுங் கண்டு அதன் பேரில் அடித்து விழுந்து புலம்புகின்றார்கள்.

அப்பா இந்திரசித்தே! நீ பிறந்த பனிரண்டா நாள் சந்திரனைப் பிடித்துத் தொட்டிலிற்கட்டி விளையாடினாய். இரண்டு வயதிற் சிங்கத்தைப் பிடித்து வந்து தூணிற்கட்டி வேடிக்கை பார்த்தாய், பிறகு தேவலோகத்தை யழித்துத் தேவேந்திரனைப் பிடித்துச் சிறையிலடைத்துத்தேவர்களுக்கெல்லாம் இராஜாவாக விருந்தாயே. இப்போது உனக்கு மனிதன் சத்துருவா யிருந்தானோ? நீ எட்டுத்திக்கும்வென்றவன் மனிதன்போருக்காற்றாமலிறந்தனையோ? மகனே! மகனே! என்று மிகவும் பிரலாபித்து, அந்த முண்டத்தையுங் கரத்தையும் எடுத்துத் தன் னரண்மனைக்குச் சென்றார்கள்.

அதைக்கண்ட இராட்சதர்கள் அனைவோரும் அண்டங்களுருகத்தக்கதாக அழுதார்கள். அப்போது

இராவணனுக்குக் கோபாக்கினி மூண்டு, இந்தச் சீதையாலல்லவோ என் மகனும் மற்றவர்களும், இறந்தார்களென்று வாளை யுருவிக் கொண்டு, அசோகவனத்தை நோக்கிச் சென்றான். அதைக்கண்ணுற்ற மகோதரனாகியமந்திரி ஓடோடியும் வந்து, ஐயா! உமதுமனோவீரம் பெண்ணிடத்திற் காட்டுகிறதோ? தேவர்கள் நகைப்பார்களே, அதுவுமல்லாமல் இப்போது உம்முடைய குமாரன் இறந்த கோபத்தாற் சீதையை வெட்டிப் போட்டீரானல், நாளை யுத்தத்தில் இராமன் சிரத்தைத் துணித்தவுடன், நாம் சீதையை அறியாமல் வெட்டினேமென்று, உமது புத்தி விசாரமாகநினைக்குமே, ஆயினும், ஸ்திரீவதை செய்யலாகாது. இது யோசனையல்லவென்று விலக்கினான்.

அப்போது மாலியவான் வந்து அடா பாவி இராவணா! உன் மூத்த குமாரனும் இறந்தானே? நீ ஒருவர் புத்தியுங் கேட்டாயில்லையே யென்று இராவணனிடந் துக்கத்துடனிருந்தான். பின்னும் இராவணன் திடமுற்று, அந்த ஆக்கையையுங் கரத்தையும் எண்ணெப்பத்தலிற் போட்டு வைக்கச்சொல்லி, இயமனையும், பிரமதேவனையும் அழைத்து இந்திரசித்தைச்சிருஷ்டிக்கச் சொன்னோமானல், இப்போது நாம் இருக்கிற சிறுமைக்கு அவர்கள் நமது ஆக்கினைப்படி நடவார்கள். பிறகு ஆகட்டுமென்று, எவ்விதமும் என் மகன் பழியும் மற்ற பேர் பழியும், வாங்காமல் விடுவேனோ வென்று ஆக்கிரமித்து,இருபதுகண்களிலும் நெருப்புப்பறக்கத் திசையைநோக்கி முன்னூற்றிருபது பற்களையும்நெறுநெறுவெனக் கடித்து இரண்டாயிரங் கிங்கரர்களையும், அழைத்துச் சொல்லுகின்றான், நீங்கள் சத்த சமுத்திரம் தீவு தீவாந்தரங்களிற் சென்று அங்குள்ள மூலபல

இராட்சதச் சேனைகளை யெல்லாம் கணப்பொழுதில் அழைத்து வாருங்களென்று ஆக்ஞாபித்தான்.

---

## மூலபலம் வதைப் படலம்.

அவ்வுரையைக்கேட்ட தூதுவர்கள் சமுத்திரமு மற்ற இடங்களிலுஞ்சென்று ஆங்காங்குள்ள மூலபலங் களுக்கு இராவணேசுவரன் அருளிய உத்திரவென்றுஞ் சொல்லி அவர்களுக்குத் தலைவனான வன்னியிடமுஞ் சொல்லிப் புறப்படுங்க ளென்றார்கள்.

அப்படியே வன்னியும் ஆமோதித்து, அவன் தளமாகிய ஆயிரம் வெள்ளம் மூலபலங்களையுங் கணக் கிட்டு, யாவரையுமொன்றாய்த் திரட்டிக்கொண்டு, இலங் கையை நோக்கிஆவலுடன்சென்று, இலங்கைக்கோட் டைவாசல்வழியில் நுழையமுடியாதென்று, கோட்டை யைத்தாண்டி வந்து வெகுசன சமூகமாக நின்றார்கள். அப்போது வன்னியும், சிறிது படையுடன் இராவண னிடஞ்சென்று தெண்டம் பண்ணி நின்றான். அவர்க ளுக்கும் உபசாரஞ்செய்து, இருக்கும்படியாக ஆக்ஞை யிட்டான். அப்படியே அனைவோரும் அமர்ந்து நிறை கொலுவா யிருக்கிறபோது, வன்னி என்பவன் இராவ ணனை நோக்கி சுவாமி! எங்கள் எஜமான் கும்பகர்ணர் எங்கே? மற்றஇராட்சதவீரர்களும்எங்கே? உமது முகார விந்தங்களுக்கு விகாரமேற்படக் காரியமேது? அடியே னுக்கு விவரமாக உரையுமென்று கேட்டான்.

அதுகேட்ட இராவணன் கேளாய் வன்னி! கும் பகர்ணன் போர் புரிந்து உயுத்தகளத்தில் மடிந்தான். மற்ற இராட்சதர்களு மடிந்தன ரென்றான். அதைச் செவியேற்ற வன்னி, யுத்தமேது? தேவரீருக்குஎதிராளி

யாரென்றுகேட்டான். அப்போது இராவணன், அதை நான் என்னென்று சொல்லுவேன், இரண்டுமனிதரும், சிறிது வானரங்களும், அதோபார் அந்தப் பவளமால் வரையில் வந்து பாளையமிறங்கிக்கொண்டு, அநேகஞ் சாமர்த்தியஞ் செய்கின்றார்கள். நமது சேனைகளில் அநேகம்பே ரிறந்து போனார்கள். இதுவுமொரு விந்தையாக விருக்கிறதென்றான்.

அதைக்கேட்ட வன்னியும் தேவரீர் திருவுளம் பற்றுகிறது, ஏதோவியப்புறத் தக்கதாக விருக்கிறது. இரண்டு மானிடரும், சிறிது வானரங்களும் வந்து, தேவரீருடன் உயுத்தம்பண்ணத் திராணியேது? அதன் மூலகாரணந்தெரியவில்லை, வார்த்தை சுருக்கமும், காரியம் பெருக்கமுமாக வல்லவோ விருக்கிறது, அடியேனுக்குச் சவிஸ்தாரமாய்ச் சொல்லுமையா வென்று கேட்டான்.

அப்போது அங்குற்ற மாலியவான் சினந்து, வெடுவெடென்றும் நடுக்கத்துடன், இந்தப் புத்தி கெட்டவன் வார்த்தையைக் கேட்கவேண்டாம், நான் சொல்வதைக் கவனித்துக்கொள்ளென்று மாலியவான் சொல்லுகின்றான். வன்னி! இவன் தேவர்களை இமிசித்தபடியால், அவர்கள் திருப்பாற் கடலிற் பள்ளிகொண்டருளியமகாவிஷ்ணுவினிடஞ் சென்று, சுவாமி! எங்களுக்கு இராட்சதாள் உபத்திரவம் பொறுக்க முடியவில்லை யென்று விண்ணப்பஞ் செய்ய, அவர்களுக்குக் காட்சி கொடுத்து, அதன் பொருட்டாய் மும்மூர்த்திகளும் ஆலோசனை செய்து, அயோத்தியில் வந்து, தசரதருக்குப் பிள்ளையாக அவதாரஞ்செய்து, இராமன் எனப்பெயர் பெற்றும் தேவர்களையெல்லாம் வானரங்களாய்ப் பிறக்கச்செய்தும், அந்த மகாலெட்சுமியைச்

சீதையாகப்பிறக்கச் சொல்லித், தன் றம்பி இலட்சுமண னுடன் சீதையையும் அழைத்துக் கொண்டு வனத்தில் வந்திருந்தார்கள்.

அப்போது இராவணன் மகாகபடமாக அந்தச் சீதையை இரதத்திலெடுத்துக்கொண்டு வந்து, அசோக வனத்திற் சிறைவைத்தான். அவள் பொருட்டாய் அந்த இரண்டு மானிடரும், வானரச் சேனைகளுடனே புறப்பட்டு, மலைகளைப் பிடுங்கிச் சமுத்திரத்தில் அணை கட்டி, அதன்வழியாக யாவரும் இக்கரைவந்து, பவள மால் வரையினிடம் பாளையந்தங்கி யிருக்கிறார்கள். அந்தமானிட ரனுப்பிய தூதனென ஓர் குரங்கு வந்து, அநேக இராட்சதர்களையும் வதைத்து, இந்தஇலங்கை எழுநூற்றுக்காத வழியையும் நெருப்பாற் கொளுத்தி விட்டுப் போய் விட்டது.

ஒருவானரத்தின் வல்லபம் இப்படியானால், எழுபது வெள்ளம் வானரங்களுங் கூடினால், இந்த இலங்கையும், மற்ற இராட்சதாளும், படுகிறபாட்டை நான் சொல்ல வேண்டுமோ? இந்த மூடனும் அவர்களுடன் ஒரு நாள் போருக்குப் போய், ஆயுதங்களையும் பறிகொடுத்துத் துணையாய்ச்சென்ற இராட்சதர்களையுந்தோற்று, வீரமுங்கெட்டு, வெறுங்கரத்துடன் இலங்கை வந்தடைந்தான்.

அதன் பிறகு கும்பகர்ணன், அதிகாயன், மற்ற இராட்சதச் சேனைகளுமிறந்து, நேற்று இந்திரசித்தும் உயிர் துறந்தான். இவ்வளவு திடச்சாமர்த்திய முள்ளவர்களை, இவன் மதிகெட்டு அற்பமாக நினைத்துச்சொல்லுகின்றானே என்றான்.

அதை ஆதியோடந்தமாகச் செவியேற்ற இராவணன் மிகக்கோபங் கொண்டு இவைகளெல்லாம்

இந்தக் கிழடனைச் சொல்லச் சொன்னேனு என்று கிங்கரர்களை விட்டுக் கிழவனைத் தள்ளிவிடச் சொன்னுன். அப்படியே மாலியவான் வார்த்தையைக் கேட்ட வன்னி, இவையெல்லாம் நாம் அறியாமற் றிடீரென வந்துவிட்டோமே, நமது மனைவி மைந்தர் முகத்திற் போய்விழிப்பதாகத் தெரியவில்லையே யென்று எண்ணி உள் விசாரமாக நின்ருன்.

அப்பால் இராவணன் வன்னியைப் பார்த்து, உமது கருத்தென்ன வென்று கேட்டான். அதற்கு வன்னி ஐயா! தமது ஆக்ஞையின்படியே நடக்கிறேன் என்ருன். அதைக்கேட்ட இராவணன் சொல்லுகின்ருன், வன்னி! நீ முன்னே சென்று உன்னுடைய தளத்தை யெல்லாம் அழைத்துக் கொண்டு போய், உயுத்தசன்னதனுய் நில்; நானும் என்னுடைய தளத்துடன் இதோ வந்து பேரணியாக நிற்கிறேனென்ருன். அப்படியே வன்னி விடைபெற்றுக் கொண்டு மூலபலங்களை யெல்லாம் ஒன்ருய்த் திரட்டி அஞ்சிய மனத்துடையவராய், ஓர்முகமாக அவரவர் சொரூபத்திற்கேற்ற வாகனங்களாகிய யானை, குதிரை, மான், மரை முதலிய வாகனங்களிலேறிச் சென்று யுத்த களத்தில் நின்ருர்கள். அப்போது சுவாமியும் பவளமால் வரையை விட்டுக் கீழேயிறங்கிக், கருங்கடல்போல் வருகிற சேனைகளைக் கண்ணுற்ற இராமசுவாமி, விபீஷணரே! இது என்ன அதிசயமாக விருக்கிறது! இவர்கள் யாரென்று கேட்டார். அப்போது விபீஷணர் விண்ணப்பஞ் செய்கின்ருர்.

சுவாமி! இவர்களுக்கு ஊனுறக்க முன்டென்று சொல்லுகிறதே யல்லாமல், ஒவ்வொருவருக்கும் இந்தவுலகமெல்லா மீடல்ல பிரமதேவர் கற்பனைப்படி ஒரு பரிகாரமாய்ச் சீவனஞ் செய்து கொண்டிருப்பார்கள்.

இவர்களுக்குமூலபல இராட்சதாள் என்றுபெயர். இவர்கள் கும்பகர்ணனின் அதிகாரத்திற்கு உட்பட்டு நடந்து கொள்வார்கள். இவர்கள் பராக்கிரமஞ் சொல்லமுடியாது, இப்போது இராவணன் ஓலைக்கு அடங்கி வந்தவர்களல்ல, கும்பகர்ணன் இறந்து போனது அறியாமல் வந்து விட்டார்கள், என்று சொல்லிக் கொண்டிருந்தனர். யுத்தகளத்தை நோக்கி வருகிற மூலபலங்களைக் கண்ட வானரச் சேனைகள்,

விருத்தம்

அனும ஞற்றலு மரசன தாற்றலு மிருவர்
தனுவி ஞற்றலுந் தம்முயிர் தாங்கவுஞ் சாலா
கனியுங் காய்களு முணவுள முழையுள கரக்க
மனிச ராளினென் னிராக்கத ராளினென் வையம்.

வசனம்.

இதென்ன காரணம்? இப்படியும் இராட்சதாளுண்டோவென்று பயந்து, நன்ருய் வந்து அகப்பட்டுக் கொண்டோம், நமக்கு ஒரு தோப்புத் துறவுகளில்லையோ? இந்த அவகேட்டில் ஏன் சிக்கிக் கொண்டு, வீணில் இறந்து போகவேண்டும்? இவைகள் பூதங்களோ! அல்லது பிரமராட்சதர்களோ!வென்று பார்த்து நடுநடுங்கிப் பற்கிட்டி, வால்களையும் வெடுவெடென்று தட்டி, நிறை குளம் உடைப்பெடுத்தது போல் ஒருவர் ஓடிய வழி யொருவரோடாமல், இந்த இராட்சியத்தை இராமனுண்டா லென்ன, இராவணனுண்டா லென்ன, நமக்கு மலையும் வனமுமுண்டு பிழைத்துக் கொள்வோமென்று, பாதத்தின் தூசிகள் சிரத்திலடிபட ஓட்டம் பிடித்தனர்.

இப்படியாகத் திருவணைக்கரை பத்துயோசனைத் தூரமட்டும் ஓடித் திரும்பிப்பார்த்தனர். இன்னந் தலை தெரியுதடாவென்று திருவணைமட்டிலேயும்நில்லாமல்

அப்புறப்பட்டு, வானரச்சேனைக ளெல்லாம் ஒன்ருய்க் கூடி யோசனை செய்தார்கள். அந்தவிடம் இப்பொழுது வானரமுட்டியென்றும், வானரப்பட்டியென்றும், பெய ருண்டாகப் பெற்றது. அப்பால் வானரச் சேனைக ளெல்லாம் ஓடிப்போனுர்கள், அவர்களை நாம் போய்க் கூட்டி வருகிருேமென்று பெயரிட்டுக் கொண்டு, ஒவ் வொருபடைத் தலைவராகத் திரும்பிப் பாராமலோடிப் போனுர்கள்.

அப்பொழுது சுக்கிரீவருந்திடுக்கிட்டு, அனுமா ரைக்கண் சைகையால் வரச்சொன்னுர் அனுமார். அங் கும் இங்கும் மனதாக விருப்பதை யறிந்த இளையபெரு மாள், சுவாமியை நோக்கி அண்ணு! ஈதென்ன வ்பரீத மாகவிருக்கிறதென்று கேட்டார். அக்கணம் விபீஷண ரும் ஓகோ அனுமாரே! சுக்கிரீவரே! உங்களைச் சுவாமி யழைக்கிருர் வாருங்கள் வாருங்களென்று கூப்பிடுகிற போது. படைத்தலைவர்கள் விபீஷணரே! சுவாமியைக் கூட்டிக் கொண்டு வந்து விடும், சேனைகளை யெல்லாஞ் சேகரஞ் செய்ய வேண்டு மென்று உரக்கக் கூவினர்.

இவையனைத்துங் கண்ணுற்ற சுவாமியும் இலட் சுமணரை நோக்கித் தம்பி! இந்த மூலபல இராட்சதா ளைக்கண்டவர் யாவர் தான் திடமாய் நிற்கப் போகிருர் கள்? ஆதலால் நீ விபீஷணரை யழைத்துக் கொண்டு சென்று, அங்குற்ற சுக்கிரீவர் மற்ற வானரச்சேனைகளை யும் ஒழுங்கிட்டு ஒரே சேகரமாக நில்லுங்க ளென்று அனுப்பினுர். அப்போது இலட்சுமணர் சொல்லுகின் ருர், சுவாமி! நீர் என்னை வெட்டினுலுஞ் சரி நான் உம் மைவிட்டுக்கணப்பொழுதேனும் பிறிந்திரேனென்ருர்.

அதைச் செவியுற்ற சுவாமியும் தமது பேரில் ஆணையிட்டுத் தம்பி! எல்லாருங் கூட்டங் கலைந்து

அதைரியப்பட்டு நிற்கிறபடியால், நீசீக்கிரம்போவென் றுசொன்னார். அப்பொழுது இலட்சுமணரும் மாருத் துக்கத்துடன் சுவாமி! நானிது சமயம் உம்மைத் தனி யாகவிட்டு எப்படிப் பிறிந்து செல்லுவேன்? என்று சொல்லுகிறபோது, சுவாமியும் ஓகோ விபீஷணரே! அனுமாரே! தம்பியைச் சீக்கிரம் அழைத்துச்செல்லுங் களென்று சொன்னார். அப்போது அனுமார் சுக்கிரீவ ரைக் கூப்பிட, சுக்கிரீபர் அங்கதரைக்கூப்பிட, அங்கதர் வானரச்சேனைகளைக் கூப்பிட, இப்படியாக யாவரும் தட்டுக்கெட்டுத் திரிகிறதை இலட்சுமணர்கண்டு, அனு மாரை யழைத்து, உம்முடைய புத்தியும் பராக்கிரமங்க ளும் போய் விட்டதோ, நான் சுவாமி யிடத்தில் நிற்கி றேன், நீரும் மற்றபடைத்தலைவர்களுஞ்சென்று, நமது சேனைகளுக்குத் துணையாக நில்லுங்களென்று அனுப் புகிறபோது, சுவாமி! இலட்சுமணரைப் பார்த்து தம்பி! நமது சேனைப்பெருக்கில் நாம் இரண்டு பேரில் ஒருவ ரேனும் நிற்க வேண்டும், ஆதலால் நீயுங்கூடப் புறப் படுவென்றார்.

அதைக்கேட்ட இலட்சுமணரும் சேனைகளை நோக்கிச் செல்லுவதும், பிறகு சுவாமியிடம் வருவது மாய்ப் பிரமையுற்றுத் திரிவார்; அப்போது அனுமார் ஓடிய சேனைகளை ஒழுங்கிட்டு, ஒரே இடத்தில் நிறுத்திச் சுக்கிரீவரைக் கோபித்துச்சுவாமியையும், இலட்சுமண ரையும், நடுப்படையிற் காட்டிக் கொடுத்து வந்துவிட் டீரே யென்று கேட்டதை யறிந்த சுக்கிரீவர், நான் வானரப் படைகள் ஓடிவிடாமல் நிறுத்த வந்தே னென்றுசொன்னார்.

அப்போது இலட்சுமணரும் வந்து, எல்லாச் சேனைகளையும் ஒன்றாய்த் திரட்டிப் பாளையஞ் செய்து நின்றார்கள்.

அப்பால் பவளமால் வரையிலிருந்த இராமசுவாமியும், கச்சையுங்கட்டி, உடைவாள் அரையிற் சேர்த்து அம்பறுத்தூணி,வில், பாணம், மற்ற ஆயுதசகிதமாய் யானைக்கூட்டங்களைக் கண்ட சிங்கம்போற் கர்ச்சித்து நடந்து வந்து வில்லை வளைத்து, நாணேற்றிச் சிறு நாணொலிகொண்டார். அந்தச் சத்தம் இடியிடித்தாற் போல அண்டங்கள் அதிர்ந்தது. அதுகேட்டு மூல பலங்களெல்லாம் திடுக்கிட்டுப்பயந்து, ஒருவருக்கொருவர்கள் சொல்லிக்கொள்கிறதெப்படி யென்றால்: —

ஆஹா இந்தவல்லமையும், பராக்கிரமங்களும் இல்லாமலோ கும்பகர்ணன் முதல், அளவற்ற இராட்சதர்களு மிறந்தார்கள்? மாலியவான் சொன்னதில் ஒன்றேனுந் தப்பிதமில்லை. ஆனால் இனிமேல் பல விதம் யோசிப்பதிற் பயனென்ன? சேவகனாகப் பிறந்து, கையில் ஆயுத மெடுத்தால் உயுத்தத்தில் எதிராளியைக்கண்ணுற்றுப், பின்வாங்கலாமோ? என்று மனதைத் திடப் படுத்திக் கொண்டு, ஆயிரம் வெள்ளம் மூலபலங்களும் ஒரேமுகமாகக் கூடிக் குரவை யிட்டார்கள். அந்தச் சத்தம் உலகமெல்லாஞ் செவிடுமெண்டி, ஒருவர்வார்த்தையொருவருக்குக் கேளாமற் போய்விட்டது.

விருத்தம்.

யோசனை நூற்றின் வட்ட மிடைவிடா துறைந்த
சேனைத்
தூசிவந் தண்ண றன்னைப் போக்கற வளைந்து
சுற்றி
வீசின படையு மம்பு மிடைதலின் விண்ணோர்
யாக்கை
கூசின பொடியா லெங்குங் குமிழ்ந்தன வியோம
கூடம்.

வசனம்

அப்பால் அந்த ஆயிர வெள்ள மூலபலங்களுஞ் சுவாமியைக் கிட்டிப்போர்புரிய ஆரம்பித்தார்கள். அவர்கள் எப்படிப்பட்டவர்களென்றால்:— ஒவ்வொருவருக்கு ஆயிரந்தலையும், இரண்டாயிரங் கையும், ஐநூறு தலையும், ஆயிரங்கையுமுள்ள இராட்சதர்களிற் சிலரும்; யானைமுகம், குதிரைமுகம், பூனைமுகம், புலிமுகம், நாய்முகம், நரிமுகம், மற்ற துஷ்ட மிருகங்களின் முகத்தையுடைய இராட்சதாளுமாய்க் கண் கொள்ளாத சேனையாகத்திரண்டு, அவரவர் கையிலுண்டாகிய ஆயுதங்களைப் பிரயோகஞ் செய்தார்கள்.

அப்போது சுவாமி! ஒரு பாணந் தொடுத்து, அந்த ஆயிர வெள்ளம் மூலபலங்கள் பிரயோகஞ் செய்த பாணங்களையும் அறுத்துவிட்டார். அதுகண்ட வன்னி சொல்லுவான் பார்த்தீர்களோ? இந்த இராமனுடைய விற்சித்திரமுங், கைக்கடுமையுமென்று பயந்து நடுநடுங்கிப், பிரமைபிடித்து எவனடா இவனைவெற்றி கொள்ளுகிறவன்? நாம் எந்தத் தீவில் ஓடி ஒளிந்தாலும் இவன் பாணம் நம்மைக் கொல்லாமல் விடாதேயென்றும், மூலபலங்கள் யாவரும் அஞ்சிய மனத்துடையவராய், இனிமேல் இவனைக் கைப்பிடியாகப் பிடிக்கவேண்டுமென்று நெருங்கி வருகிற சமயத்தில், ஒரு பாணந்தொடுத்து வந்த இராட்சதாளையெல்லாம் அறுத்துத் தள்ளினார்.

விருத்தம்.

சொல்லறுக்கும் வலியரக்கர் தொடுகவசந் துகள் படுக்
குந் துணிக்குய் யாக்கை
வில்லறுக்குந் தலையறுக்கு மிடலறுக்கு முடலறுக்கு
மேன்மேல் வீசும்

கல்லறுக்கு மரமறுக்குங் கையறுக்குஞ் செய்யமள்ளர்
கமலத் தோடு
நெல்லறுக்குந் திருநாட னெடுஞ்சரமென் றலெவர்க்கு
நிற்க லாமே.

வேறு

எடுத்தவ ரிரைத்தவ ரெதிர்ந்தவ
ரெதிர்ந்தவர் மறங்கொ டெதிரே
தடுத்தவர் சலித்தவர் சரிந்தவ
ரிருந்தவர் தனிக்களிறு போல்
கடுத்தவர் கலித்தவர் கறுத்தவர்
செறுத்தவர் கலந்து சரமேல்
தொடுத்தவர் துணிந்தவர் தொடர்ந்தனர்
கிடந்தனர் துரந்த கணையால்.

ஷை

வெள்ளமொரு நூறொடிரு நூறுபடும்
வேலையினி லங்கை வெளியம்
பள்ளமொடு மேடுதெரி யாதவகை
சோர்குருதி பம்பி யெழலும்
உள்ளுமதி ளும்புறமு மொன்று மறி
யாதலறி யோடி னர்களால்
கள்ளநெடு மான்விழி யரக்கியர்
கலக்கமொடு கால்கள் குலைவார்.

வசனம்.

அந்தச்சணமே அநேக மாயிரங்கோடி இராட்சதராக உற்பத்தியாகிச் சுவாமியின் சமீபத்தில் வருகிற போது, சுவாமிக்குத் தற்சொரூப நினைவு வந்து, ஓர் பாணத்தைப் பிரயோகஞ் செய்து, ஒவ்வொரு இராட்சதர் கண்ணுக்கும், ஒவ்வொரு இராமனைத் தெரியும்படியாய் மாயை செய்தார். அது எப்படி யென்றால்;—

சுவாமியின் கணைமயக்கத்தால் மூலபலங்கள் யாவும் மதிமருண்டு நான்கு திசையிலும் நோக்கினர். ஆங்காங்கும் அப்படியே இராமசாமியும், இலட்சுமண ரும், அனுமனும், வில்லும், மற்ற வானரங்களுமாய்த் தோன்றியபடியால், இனி என்ன செய்வோமென்று யாவரும் அறிவு கலங்கி, ஒரேசேகாமாகவருகிறபோது இதோவந்தான், அதோவந்தான், இராமனென்று ஒரு வருக்கொருவர் தங்கள் தங்கள் ஆயுதங்களால், வெட் டுண்டு கணப்பொழுதிற் சகலரும் இறந்தார்கள். அப் பொழுது இராமசுவாமியும் வில்லை நிலத்திலூன்றிக் கொண்டு நிற்க, இராமபாணமானது ஆயிரம்வெள்ளம் மூலபல இராட்சதாளுடைய வலக்கரங்களையு மறுத்து, அவரவர் மனை வாசலிற் போட்டு விட்டு ஆகாயக்கங் கையிற் றீர்த்தமாடிச், சுவாமியின் அம்பறாத்தூணியில் வந்தடைந்தது. அப்பொழுது அந்த மூலபல இராட் சதாளுடைய கரங்களை, அவரவர் ஸ்திரீகளாகிய மனை விமாரும், தாய்மாரும், தங்கை தமக்கையரும், வயோ திகப்பருவமுடைய தகப்பன்மாரும் கண்டு திடுக்கிட்டு, அந்தந்தக் கரங்களின் மீது அடித்து விழுந்து கோ வென்று புலம்பினார்கள்.

விருத்தம்.

அய்யன் வாளி யறுத்திட ராக்கதர்
கையும் போய்விழக் கண்டு தன் காதலி
செய்ய தாமரைக் கண்கள் துடைத்திட்ட
மையி தாமெனக் கண்டு மயங்கினர்.

வசனம்.

இப்படியாக இராட்சதர்களனைவோரும், தங்கள் தங்கள் கணவரின் கரமென்றும், இது என்னுடைய

மகன் கரமென்றும், இது என்னுடைய அண்ணன் கரமென்றும், தம்பி கரமென்றும் எடுத்து மார்புடணைத்துக் கொண்டு, புலம்பினர்கள். இப்பால் மூல பலங்களின் றுகை எத்தனை யென்றால்:—

விருத்தம்.

ஆனையாயிர ந் தேர்பதினாயிர
மடல்பரி யொரு கோடி
சேனைகாவல ராயிரம் பேர்படிற்
செழுமணிக் கவ ந்தமொன் றுடும்
கானமாயிர மாயிரகோடிக்குக்
கவின்மணி கணி லென்னும்
ஏனவம்ம்ணி யேழரை நாழிகை
யாடிய தினிதன்றே.

ஷை

நினை ந்தது முடித்தே னென்ன வானவர் துயர
நீத்தார்
புனை ந்தனென் வாகை யென்ன விந்திர னுவகை
பூத்தான்
வனை ந்தன வல்ல வேதம் வரம்புபெற் றுயர் ந்த
மாதோ
அன ந்தனு ந் தலைக ளே ந்தி யயர்வுயிர்த் தவல ந்
தீர் ந்தான்.

வசனம்.

இவ்விதம் இராமசுவாமி யுத்தம் பண்ண வில்லெடுத்தபோது, அந்த வில்லிற்கட்டிய ஏழு மணியும் இடைவிடாமல் ஒரு சாமமட்டும் ஆடினபடியால், இவ்வளவு மூலபல இராட்சதாளென்று, கணக்கிட் டறியா

தவரும் சுவாமியும் சருவசம்மார ருத்திரமூர்த்தியைப் போல், மூலபலங்கள் யாவையும் வதைத்துவிட்டு நின்ருர்.

---

## வேலேற்ற படலம்.

இப்பால்இராவணன் மூலபலங்கள், இராமனைக் கொன்றுவிடுவார்கள், நாம் இப்போதேசென்றுஅவன் தம்பி இலட்சுமணனைக் கொன்று, வருவதே நன்று என்று, மூலபலங்களுக்கு விருந்து சமைக்கும்படியாகக் கட்டளையிட்டுத், தானும் போர்க்கோலங்கொண்டு,அழியாத இரதமேறிப், பிழையாவேலையுமெடுத்து, வச்சிரக் கவசமு மணிந்து கொண்டு, இலங்கைக் கோட்டைக்கு நூறு வெள்ளஞ் சேனையைக்காவலாக வைத்துவிட்டுக், கிழக்கோட்டை வாசல் வழியாகப் புறப்பட்டு, இலட்சுமணர் நிற்கிற இடத்தில் வந்து, வானரப்படையும், இராட்சதப்படையும் சேர்ந்து பொருதி நின்ருர்கள். அப்போது வானரப்படைத்தலைவரும், மற்ற வானரங்களுங்கூடி மலையினாலும், மரத்தினாலும், இராட்சதச் சேனைகளை மோதியடித்தார்கள். இராட்சதர்கள் தட்டுக் கெட்டு ஓடி இராவணனண்டையிற் சேர்ந்தார்கள்.

அப்போது இராவணன் பத்துக் கரத்திலும் வில்லெடுத்துப்,பாணந்தொடுத்து,வானரங்களைத்திசை கெடத் துரத்தினான். அதுகண்ட சுக்கிரீவன், சாம்பவர் அனுமார், அங்கதன் இந்நால்வரும் பேருக்கொரு பருவதங்களைப் பிடுங்கி யெறிந்து யுத்தஞ்செய்தார்கள். அந்த மலைகளை யெல்லாந் தகர்த்து, அந்நால் வரையும் பாணத்தாற் றுரத்தி விட்டான். அப்பொழுது இலட்சுமணர், சீக்கிரம் அனுமார் தோளின்மீ தாரோகணித்து, வில்லை வளைத்துச் சிறு நாணொலி காட்டினார்.

அந்தச் சப்தம் செவியுற்ற இராவணன், தன் றேரைத் தூண்டி நடத்தினான். அப்போது இலட்சுமணர் சில பாணப்பிரயோகஞ் செய்து, இராவணன் பத்துக்கை வில்லையும், கவசத்தையு மறுத்து, அவன் றேர், சாரதி, புரவி கூடவந்த அறுபதினாயிரம் இராட்சதர்களையும் அறுத்துச் சம்மாரஞ் செய்தார்.

அதைக்கண்ட இராவணன் திகிலுற்று, நம்மை உயிருடன் இலங்கைக்குட் பிரவேசிக்க விடானேவென்று விசாரமுற்று, நமது மகனையும், மற்றஇராட்சத வீரர்களையுங், கொல்லும்படியான துற்போதனை செய்தது விபீஷணனல்லவோ வென்று, அவன் மீது கோபமிகுத்து, இவன் நமக்குச் சகோதரனல்ல, இவனை முன்பு கொன்று விட்டுப், பிறகு இலட்சுமணனைக் கொல்லுகிறேனென்று அயன் கொடுத்த பிழையாவேலையெடுத்து மானதபூஜை கொடுத்து, விபீஷணர் மீது விரைந்தெறிந்தான்.

அதை யறிந்த விபீஷணர், கை கால் நடுக்கமுற்று ஐயோ! இந்த வேல் பழுதுபோகாது, இதை இலட்சுமணரின் கணைகளாற் றடுக்கவும் இயலாதே என்று எண்ணி, இலட்சுமணரிடம் ஓடிவந்துசொல்லுகின்றார். ஐயா! இன்று அடைக்கலப் பொருளை இழக்கப் போகின்றீர், அதேனென்றால்:—இராவணன் என் மீது பிழையாவேலைப் பிரயோகஞ் செய்தான் அதன் வர்த்தமானம் அடியேனுக்கு நன்றாய்த் தெரியும், ஆதலால் அடியேனைக்காப்பாற்ற வேண்டுமென்று, மிகவும் பயத்துடன் சொன்னான்.

அதைக்கேட்ட இலட்சுமணர், பயப்படாதீரென்று அபயாஸ்தங் கொடுத்து, விபீஷணரைப் பின்புறம் நிறுத்தி, வருகிற வேலுக்கு முன்பாக இலட்சுமணர்

நின்றார். அவருக்கு முன்னே சுக்கிரீவன் வந்து நின்றான், அவனுக்கு முன்னே சாம்பவர் நின்றார், அவருக்கு முன்னேகுமுதன் நின்றான், அவனுக்குமுன்னே அனுமார் நின்றார், அப்பொழுது மற்ற படைத்தலைவரும் வானரச் சேனைகளுஞ் சென்று, அனுமாரே! நீரிறந்து நாங்கள் பதினாயிரங்கோடி படைத்தலைவரிருந்தும் பயனென்ன? என்று யாவரும் அனுமாருக்கு முன்பாக நின்றார்கள்.

இப்படி யொருவருக்கொருவர் பாஷைகள் கூறித்தட்டழிவதை இன்னமட்டென்றுஞ் சொல்ல முடியாது. அப்பொழுது யாவரையும் விலக்கி இலட்சுமணர் நின்றார். அக்கணம் அந்தப் பிழையாவேலானது மகா உக்கிரத்துடன் வந்து இலட்சுமணர் மார்பிற் பாய்ந்து ஊடுருவிக் கொண்டு சென்றது. இலட்சுமணருந் திடீரெனப் பூமியில் வீழ்ந்தார். அதைக்கண்ட இராவணன் விரைவில் வந்து, இலட்சுமணரை இலங்கைக்குக் கொண்டுபோக எடுக்க வருவதற்குள், அனுமார் ஓடி வந்து, பசுவானது தன் கன்றை அணைப்பது போல, இலட்சுமணரைத்தூக்கிக்கொண்டு மற்றசேனைகளுடன் வந்து, மூலபலங்களைச் சம்மாரஞ்செய்து நிற்கின்ற,இராமசுவாமி பாதத்தில்வைத்து, வேலினுடைய விர்த்தாந்தமுஞ்சொல்லித், தெண்டனிட்டு நின்றார்கள்.

அப்போது சுவாமியும் மனம் பதறித், தம்பியை வாரி யெடுத்து மார்புடனணைத்துக் கொண்டு சொல்லுகின்றார். அப்பா! உன்னை யிழக்க இருந்தேனே, உன்னையுமிழந்து உலகத்தில் வாழ்வேனு? வென்று விசனித்து, அவரழுத கண்ணீர் இலட்சுமணர் உடம்பிற் பட்ட மாத்திரமே, காயமாறிச் சுகமாயெழுந்து சுவாமி

யைப் பணிந்து, நீர் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாமென் றுதிடஞ்சொல்ல, யாவரும் மகிழ்வுடனிருந்தனர். அப் போது அனுமார் எழுந்து சுவாமி! மூலபலங்கள் எங் கேயென்று கேட்டார்; இராமசுவாமியும் புன்முறுவலு டன், அதோ யுத்தகளத்தில் அனைவோரும் ஆவிதுறந் தனர், நீங்கள் அங்கு சென்று பார்த்து வாருங்களென் றனுப்ப, இலட்சுமணரு மற்றவானரவீரர்களும்சென்று பார்த்து, இப்படி விபரீதமுள்ள இராட்சதக் கூட்டத் தைச் சுவாமி! எப்படிச் சம்மாரஞ்செய்தாரோ வென்று மகிழ்ச்சியுடன் பேசிக்கொண்டு சுவாமியிடம் வந்து சேர்ந்தார்கள்.

அப்பால்கீழக்கோட்டைவாசல் வழியாகவந்து, யுத்தஞ் செய்து சென்ற இராவணன், மூலபலங்கள் இராமனைக் கொன்று விடுவார்கள், நாம் இலட்சுமண னைக்கொன்று விட்டோம், இனிப்பகையு முடிந்தது என்ற சந்தோஷத்துட னிருந்தான். அப்போது ஒரு தூதன் சென்று சுவாமி! மூலபல இராட்சதாளனைவோ ரும் இறந்தனரென்றான். அதே சமயம் சிறிது தூதர் கள் சென்று, இலட்சுமணரும் பிழைத்தாரென்றுசொன் னார்கள். அதைக் கேட்ட இராவணன் இது என்னவிந் தையாக விருக்கிறதென்று எண்ணி, இது காரணம் யோசிக்க மாலியவானை யழைத்து வரத் தூதுவரை யனுப்பினான்.

இராவணன் ஆக்ஞையின்படி சென்ற தூதுவர் கள் மாலியவானை யழைக்கக், கிழவன் சினந்து மதி கெட்ட இராவணன் நல்ல வீரர்களை யெல்லாம் இறக் கக்கொடுத்துத், தன் பிராணனளவில் வந்த போது, ஆலோசனை செய்கின்றானோ? போங்களடா வென்று சீறிக்கோபித்தான். அதைக்கண்ட தூதர்கள் இராவண

னிடஞ்சென்று, ஏ சுவாமி! நமது பெரியவர்வரத்தடை செய்தாரென்றனர். அதுகேட்ட இராவணன், கிழவனுக்கும் நம்மிடத்துற்ற அன்பு தவறிவிட்டதோ? மந்திரி! யென்று மகோதரனிடஞ் சொன்னான். அதைக் கேட்ட மகோதரன் மறுமொழி கூறாதிருந்தான்.

## இராவணன் இரண்டாவது யுத்தம்.

அப்பால் இராவணன் தூதுவர்களைப் பார்த்துத் தூதர்காள்! நமது பட்டணத்திலுள்ள சிறுவர்கள் தவிர மற்ற சகலரையும் ஆயுதபாணியர்களாய் அழைத்து வாவென்று அழைத்துவரச் சொல்லித் தானும் மந்திரியுடனே உயுத்தத்திற்குப் புறப்படுகிறபோது, இராவணன் பட்ட மகிஷியான வண்டோதரி வந்து அழுது சொல்லுவாள்.

சுவாமி! அடியாள் இராத்திரிப் பொல்லாதகனவு கண்டேன், நீர் இன்றுயுத்தத்திற்குச் செல்வதுசிறிதும் எனக்குச் சம்மதியாக வில்லை. என்று சொல்லித் தடுத்தாள். அப்போது இராவணன் அவள் கண்ணீரைத் துடைத்துத், தேறுதலையாகச் சொல்லுவான். பெண்ணே! என்னுடைய புஜபல பராக்கிரமங்கள் என்னை விட்டு நீங்கிற்றோ? கைலையங்கிரியை எடுத்த புஜங்களிருக்கிறது, அண்ட கோளகையுந் தவிடுபொடியாய்ப் போகும்படி நொறுக்கி, நம்முடையபழியையும் தீர்த்து வருகிறேன் நீ யொன்றுக்கும் அஞ்சவேண்டாமென்று, அரண்மனை வாசற்கடந்து புறப்பட்டுச் சில புரவிகள் பூண்ட இரதத்திலேறிக்கொண்டு, மகோதரனையும் ஒரு இரத்தில் ஆரோகணிக்கச்செய்து, படைத்தலைவர் மற்ற இராட்சதவீரர்களோடு இலங்கைப் பட்டணத்திலுள்ள

சிறு பிள்ளைகள் தவிர வெல்லோரும் உயுத்த சன்னதர்களாய் ஆயுதங்களுடன் வர உயுத்தகளத்தை நோக்கி வந்தான்.

வருகிறபோது தூளி யெழும்பி, ஆதித்த கிரணம் மறைந்து போகும்படியாகவும், முப்பத்திரண்டு வகை மேளத்தொனியுந்தாம்தாமென்று முழங்கச், சில பெண்கள் நடனஞ்செய்ய, கட்டியக்காரர்கள் மகாமண்டலாதிபதியாகிய இராவணேசுவரன் உயுத்தத்திற்குப் புறப்பட்டார், எதிர்த்த சத்திராதிகள் ஓடிப்போவீரெனக்கட்டியங்கூற அநேகம்கொடி இடக்கயங்கள்இரண்டருகுஞ் சூழ்ந்துவர, இப்படி ஏகமுழக்கத்துடன் உயுத்தகளத்தை நோக்கி வருகிறபோது இராவணன் மகோதரனைப்பார்த்துச் சொல்லுவான். நாம் எப்பொழுதும் வெளியிற் புறப்பட்டால் தேவர்கள் புஷ்பமாரி சொரிகிறுமென்று, அண்டத்திலிருந்து சிறிது பூவைத் தூவுவார்கள் அவையும் இன்றுகாணேமே யென்ருன்.

அது கேட்ட மகோதரன், நாம் பிழைத்து வருகிறதில்லையே என்று உள் விசாரமாகச் சென்றவனுனபடியால், இராவணனை நோக்கிச், சொல்லுவான். உமக்கு எல்லாக்குறைவுந் தீர்ந்தது பூச்சொரியாத குறைதானென்றிருக்கிறதென்று கடிந்து சொன்னுன். அப்போது இராவணன் மந்திரி! நீயும் மரியாதை தப்பிப்பேசலாச்சுதோ? ஆகட்டுமென்று சொல்லி யுத்த களத்தில் வந்ததும், முன்னணியாகச் சென்ற சேனைகள் நிற்பதற்கு இடமில்லாமல், மூலபலங்கள் இறந்து கிடக்கிறபடியால் இராட்சதச் சேனைகள் அச்சங்கொண்டு இவர்களே இப்படியானுல், நாம் என்ன பாடுபட வேண்டுமென்று உள்ளத்தில் நினைத்து, இராவணனிடத்தில் சுவாமி! மூலபலங்கள் இறந்து கிடக்கிறபடியால் எங்க

ளுக்கு நிற்பதற்கு இடமில்லை யென்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

அப்பொழுது இராவணன், மூலபலங்கள் இறந்துகிடக்கிறதைப் பார்த்து, ஒருவன் வாழ்வுக்கு வந்த திமையை நோக்கினேயோ மந்திரி! என்று சொன்னன். அதைச் செவியுற்ற மகோதரன் நெஞ்சில்விசாரமுற்று, வார்த்தை சொல்ல நாவெழாமற் றலையையசைத்தான். அதுவறிந்த இராவணன் நகைத்து மந்திரி! நீ எனக்குமுன்னே நின்று, எதிராளியுடன் யுத்தஞ்செய் நான் அறியவேண்டு மென்ருன்.

அப்போது மகோதரன் எல்லோரும்வெட்டாத வெட்டு நான் வெட்டுகிற திருக்கட்டும், உமது அன்னம் புசித்த கடனுக்கு நானும்போ யிறக்கிறேனென்று முன்னே நடந்தான்.

அங்கு மூலபலசேனைகள் இறந்துகிடப்பதற்குக் கிழக்கே விலகி நின்று ஆரவாரஞ் செய்தார்கள். அந்தச்சத்தம் இராமசுவாமியின் பாளையமறிந்து, சுவாமியும், இலட்சுமணரும், சீக்கிரம் எழுந்துபோர்க்கோலங் கொண்டு, இடக்கரத்தில் வில்லும், வலக்கரத்தில் அஸ்திரமும் பிடித்துக்கொண்டு வருவதற்கு முன்னே, சுக்கிரீவன் மற்றபடைத்தலைவரும், வானரச்சேனையுமாகத் தயாராகி ஆரவாரமாக நின்ருர்கள்.

இன்று இராம ராவண யுத்தம் பார்க்க வேண்டுமென்று, தேவர்கள் விமானங்களில் ஆகாயத்தில் நின்றுபார்த்து இராமசுவாமி இந்த இராவணனுக்கு முன்பாகப் பூமியில் நின்று உயுத்தஞ் செய்வது சரியல்லவென்று ஆலோசனை செய்து விஸ்வகர்மாவையழைத்துச்சீக்கிரம் ஒரு இரதம் உண்டுபண்ணச்சொன்ஞர்கள்,

அதுபோல் விஸ்வகர்மாவும் தம்முடைய சிற்ப சாஸ்திரப்படிக்குச்,சருவசூத்திரமும் அமைந்துள்ள இரதத்தைக் கொண்டு வந்து தேவர்களுக்குச் சோதனை காட்டினான்.

தேவர்கள்மகிழ்வுற்று விஸ்வகர்மாவுக்குவேண்டிய வெகுமானஞ் செய்து அனுப்பி வைத்து, அந்த இரதத்திற்கேற்ற சாரதியான மாதலியுடன் இரதத்தையுஞ் சுவாமிக்கு அனுப்பினார்கள். மாதலி இரதத்தைக் கொண்டு வந்து, சுவாமி முன்பாக நிறுத்திச் சுவாமி! இது தேவர்கள் அனுப்பினது, இந்த இரதத்திலேறி இராவணனுடன் போர்புரிய வேண்டுமென்று பணிந்தான். அதைநோக்கிய சுவாமி! இது தேவர்கள் அனுப்பினதோ? அல்லது இராட்சதாள் மாயையோ வென்றுஐயமுற, அப்பொழுது அனுமார் வந்து, ஏ மாதலி! உன்னையும் இந்த இரதத்தையும் அனுப்பிய தேவர்கள் எங்கே? நான் போய்க்கேட்டு வருகிறேனென்றார். அப்போது மாதலிஅதோ ஆகாயத்தி லிருக்கிறார்க ளென்றான். உடனே அனுமார் பூமியிற் பாதம் நிற்க விஸ்வரூபங்கொண்டு, சிரத்தை ஆகாயத்தில்நீட்டி, அங்குற்ற தேவர்கள் சொல்லக்கேட்டு ரூபத்தை ஒடுக்கிச் சுவாமி! இது தேவர்கள் அனுப்பிய இரதமே ஐயமில்லாது ஆரோகணிக்கலாமென்று பணிந்து நின்றார்.

விருத்தம்.

புறவொன்றின் பொருட்டின் யாக்கை புண்ணுற
வரிந்த புத்தேள்
அறவனு மைய நின்னை நிகர்க்கில னப்பா
னின்ற

பிறவினை யுரைப்பதென்னே பேரருளாள
ரென்பார்
கறவையுங் கன்று மொப்பார் தமக்கிடர்
காண்கி னென்றான்.

வசனம்.

அப்போது சுவாமி! அகமகிழ்ந்து அனுமா ரைப்புகழ்ந்து, இரதத்தில் ஆரோகணித்து யுத்தகளத் திற்சென்று, வருகிறதை இராவணன் கண்ணுற்று, நம் முன்பாகத்தேவர்கள் இவனுக்குஇரதங்கொண்டுவந்து கொடுத்தார்களோ? ஆகட்டும் பிறகு வகை சொல்லுகி றேனென்று கோபங்கொண்டு, மகோதரனையுங் காலாட் படைகளையும் முன்னணியாக நிறுத்தி, இரண்டாமணி யிற்குதிரைத்தளத்தை நிறுத்தி, மூன்றாமணியில்யானைத் தளத்தை நிறுத்தி, நான்காமணியாகிற பேரணியிற் றானும், சிறிது தளமுமாக நின்றான்.

அந்த இராவணனுக்கு எதிராக முன்னணியிற் கரடிப்படையையும், இரண்டாமணியில் வானரச்சேனை களையும், மூன்றாமணியில் சேனைத் தலைவர்களையும் நிறுத்தி, நான்காமணியாகிற பேரணியில் சுவாமி, இலட்சுமணர், விபீஷணர், மற்ற தளங்களுடன் நின் றார்கள்.

அப்போது சுவாமிக்குத் தேவதுந்துமியை யனுப்பி முழக்கினார்கள். அது இராவணன் பாளயத் தில் முழங்குகிற முப்பத்திரண்டு வகை மேளத் தொனி களையும் அடக்கிக் கேட்கப்பட்டது. இப்படி எதிர்ப்பா ரியாக நிற்கிறபோது, முன்னணியாக நின்ற இராட்சதர் கள் ஆரவாரித்து, அவரவர்கள் ஆயுதங்களாகிய வேல் வாள், இருப்புத்தடி, சுக்குமாந்தடி, மற்ற ஆயுதங்களைக்

கரடிப்படையி லெறிந்து யுத்தஞ் செய்தார்கள். அப்போது கரடிப்படைகள் இடி முழக்கம் போல் கர்ச்சித்து, இராட்சதப் படையிற் றலைப்பட்டு மற்கட்டிப் போர்புரிந்து பிடரிகளிற் கடித்து, இரண்டு வகைப்படையும் கீழுமேலுமாக, உருண்டு திரிந்து வெகு உயுத்தங்களாகிறபோது, இராட்சதப்படைகள் பின் வாங்கி ஓடுகிறதை, இரண்டாமணியில் நிற்கிற மகோதரன் கண்டு கரடிப்படையிற் சிறிது அஸ்திரங்களை ஏவினான்.

அதிற்கரடிப் படைகள் சிதறின, அதைக்கண்ட வானரச் சேனைகள் சென்று, மலைகளையும், மரங்களையுங் கொண்டெறிந்து மகோதரனை எதிர்த்தார்கள். அப்போது இராட்சதப் படைகள், இருப்புத் தடிகளைக் கொண்டு அடிக்கிறபோது, வானரச் சேனைகளின் பற்களுதிர்ந்து கிடக்கிறது, எப்படியென்றால்:—ஆகாயத்திலிருக்கிற உடுவினங்கள், நிலத்தில் வீழ்ந்து கிடக்கிறதுபோல உயுத்தகள முழுதினுங் காணப்பட்டது.

அப்போது வானரச் சேனைகள்மிகுந்த கோபாக்கினியுடன், இராட்சதர்களைக் கால்மாடு தலைமாடாகவிழ அடித்து, ஆரவாரஞ் செய்கிறதைக்கண்ட மகோதரன், சீக்கிரம் தேரைத்தூண்டிச் சிறிது அஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்தான். அந்த அஸ்திரம் வருகிறவேகம் இலட்சுமணர் கண்ணுற்றுத், தம்முடைய அஸ்திரத்தாற் றுணித்து விட்டார். அதன் பிறகு மகோதரன் மிகுந்த சினத்துடன் பாணப்பிரயோகஞ் செய்கிறதையறிந்த குமுதன், மகோதரனுடைய தேரிற் பாய்ந்து, மகோதரனைக் கூட்டிப் பிடித்துப், பிடரியிற் கடித்து, நிலத்தில் வீழ்த்தி உருட்டிக்கொண்டு வந்து, சேனைத் தலைவர் முன்பாகப் போட்டான்.

அப்போது மகோதரன் மூர்ச்சை தெளிந்து கண் விழித்துப் பார்த்தான். அதை ஒரு சேனைத் தலைவன்கண்டு அடா! நீ இன்னம் இறக்க வில்லையோ வென்று, அவன் வயிற்றில்எறிமிதித்தான். அப்போது மகோதரன் வயிற்றில் உண்டான சலக்கட்டுகளெல்லாம் வெளிப்புறப்பட்டு, வயிறு பிதுங்கி, மகோதரன் இறந்தான்.

அதைஇராவணன் கண்ணுற்று, நமது மந்திரியும் போனானேவென்று, மிகுந்த சினத்துடன் வானரச்சேனைகள் சகலரும் இறந்துபோகும்படியாகத் தமது மந்திரவாளை எறிந்தான். அதை இலட்சுமணர் கண்டு தம் கணையால் அறுத்து, அவனுடன் வந்த நால்வகைச் சேனைகளும் மடியும்படியாக, ஒரு பாணந்தொடுத்தார். அது பலகோடி பாணமாகப் புறப்பட்டு வருகிறதைக் கண்ட இராவணன் கோபங்கொண்டு, இவனே நமது சேனைகள் மடியப்பாணந் தொடுப்பவனென்று, ஒரு கணை தொடுத்து இலட்சுமணர் ஏவிய பாணங்களையெல்லாம் அறுத்தான்.

அதுகண்ட அனுமார், ஒரு தடியைக் கையிலெடுத்துச் சக்கரம் போற் சுற்றிக் கொண்டு, இராவணன் சேனையிற் சென்று, சருகுக் கூட்டத்திற் சூறுவளிக் காற்றடித்ததுபோலக் கால்வேறு, கைவேறு, உடல்வேறாகும்படியாகச்சாடி அடிக்கிறதை இராவணன் கண்டு, ஒருகுரங்குக்கு இவ்வளவு பலமேற்படக்காரியம்யாதோ! இதுவும் நமது கேடுகாலமெ௳ன நினைத்துக் கோபமும், பராக்கிரமமும்உண்டாகி, ஒருதண்டாயுதத்தையெடுத்து அனுமார் மீது விசை கொண்டு எறிந்தான்.

அந்தத் தண்டாயுதத்தை அனுமார் கரத்திலிருந்தமரத்தடியால் உரத்தடிக்கிறபோது, இரண்டுஆயுத

மும் முறிந்து விட்டது. அக்கணமே அனுமார் இராவணனுடைய தேரிற் பாய்ந்து, தேரை வாரி ஆகாயத்திலெறிந்து, சிதற அடிக்கிறபோது, இராவணன் பக்கத்திற்பாய்ந்து நின்று, இது என்ன இலட்சைக்கேடென்று, மாயையாக இலங்கையிற்சென்று, தன் அரண்மனையிற் பஞ்சணை மெத்தையிலே சாய்ந்துகொண்டு, நாவுலர்ந்துபோய்த் தன்றேவியாகிய வண்டோதரியை அழைத்துவரச் சொல்லி, அவளுடன் பெண்ணே! இன்று போரில் எனது மந்திரியும் இறந்தான். காரியம் ஒன்றும் செம்மை யில்லை யென்று விசாரத்துடனிருந்தான்.

---

## மயிலிராவணன் ஆலோசனை.

அப்பால் இராவணன் விசாரம் நீங்கி, ஆசாரச் சாவடியில் வந்திருந்து, சிறிது தூதுவரைப் பாதாள இலங்கையிற் சென்று, அங்குற்ற மயிலிராவணனை அழைத்து வரும்படியாகக் கட்டளை யிட்டான். அவ்வுரையைக் கேட்ட தூதுவர்கள் ஓடோடியும் பாதாள இலங்கையிற் சென்று, மயிலிராவணனைக்கண்டு பணிந்து சுவாமி! உம்மை இக்கணமே இராவணேவ்ஸ்பரன் கூட்டிவரச் சொன்னுரென்ருர்கள். அதைக்கேட்ட மயிலிராவணன் சீக்கிரம் எழுந்துபுறப்பட்டு இலங்கையின் அரண்மனை வாசல் முன்பாக வருகிறதைத் தூதுவரால் அறிந்த இராவணன் எழுந்து எதிர்கொண்டு வந்து, இராசமுறையாகத் தழுவிக் கொண்டு கூட்டிப் போய் அரண்மனையிலிருந்தார்கள். அப்போது இராவணனுடைய முகவாட்டத்தைக் கண்ணுற்ற மயிலிராவணன் அண்ணு! உமக்கு ஏற்பட்ட வருத்தம் என்னவென்று வினவினன். அப்போது இராவணன் மகாவிசாரமாகச்

சொல்லுவான். கேளாய் மயிலிராவணா! இரண்டு மனிதரும் ஒரு பெண்ணுமாக வந்து பஞ்சவடியில் பன்னகசாலை அமைத்து அதிலிருந்தார்கள், அப்போது நமது தங்கை யென்ற சூர்ப்பநகையின் வார்த்தையைக்கேட்டு அவர்கள் அழைத்து வந்த பெண்ணை நான் ஒரு உபாயமாக, அவர்களறியாமல் எடுத்து வந்து இலங்கையிற் சிறைவைத்திருக்கிறேன். அவர்களும் பிறகே தொடர்ந்து வாலியின் குரங்குச் சேனைகளைத் துணையாக அழைத்துக்கொண்டு, மலைகளைப்பிடுங்கிச்,சமுத்திரத்தில் அணை கட்டி இக்கரைப்பட்டு, இதோ பவளமால் வரையில் பாளையமிறங்கி யிருக்கிறார்கள்.

அந்த இரண்டு மானிடரும் சாமானியரல்லர், அவர்கள் தனு வளைத்து யுத்தம் பண்ணுகிற சாமர்த்தியம் ஒருவருக்கும் வராது, அவர்களுடன் வந்தவானரங்களின் வல்லமை மெத்தவுண்டு, அதில் ஒரு வானரம் இந்த இலங்கையில் வந்து, சிறையிருந்த சீதையைக் கண்டு, தேறுதல்சொல்லி, நமது அசோகவனத்தையும் அழித்துக் காவலாளிகளையும், சம்புமாலி, பஞ்சசேனாதிபதி, அட்சயகுமாரன், மற்ற இராட்சதவீரரையும் ஒரு முகூர்த்த காலத்திற் கொன்று, நமது சமுகத்திலும் வந்து, அநேக தூஷணமான வார்த்தைகள் பேசிப் பட்டணம் எழு நூற்றுக்காதவழியும் நெருப்பாற் கொளுத்தி விட்டு, ஆகாயத்திற்றாவிச் சமுத்திரங் கடந்து, மாயையாய்ப் போய்விட்டது.

இப்படிப்பட்ட பலசாலிகளுடன் போர்புரிந்து கும்பகர்ணன், அதிகாயன், இந்திரசித்து, முதல் அறுபதினாயிரம் பிள்ளைகளும், அவர்களின் சதுரங்கச் சேனைகளும், மூலபலம் ஆயிரவெள்ளஞ் சேனையும்

இறந்தார்களென்று இராவணன் சொல்ல, மயிலிராவணன் கேட்டு மூக்கில் ஓர் விரலை வைத்து ஆலோசனை செய்து, இப்படிக்கொத்த பலசாலிகளை நாம் எப்படிச் செயம் பண்ணுவதென நினைத்து, ஏ அண்ணா! நீர் ஒன்றுக்கும் யோசிக்க வேண்டாம். நீர் அந்தப் பெண்ணைக்கொண்டு வந்த உபாயம் போல, நான் அந்த இரண்டு பெயரையும் கொண்டு போகிறேனென்று, இராவணனுடன் மிகு ரகசியமாய்ப் பேசிக்கொண்டு விடை பெற்றுச் சென்றான்.

இப்பால் உயுத்தகளத்தில் நின்ற அநுமார், சுவாமி யிடம் வந்தார், அவருடைய பராக்கிரமத்தைச் சுவாமி பார்த்து நின்றபடியால், தம் அண்டையில் வந்த அநுமாரை மார்புடனணைத்துக்கொண் டுளமகிழ்ந்து மாருதி! நாங்கள் அயோத்தியைவிட்டு வனவாசம் வந்தது முதல், எங்களுக்கு ஏற்பட்ட கஷ்டங்களுக்கு நீ ஒருவனிருந்தபடியால் மிகுந்த உதவி செய்தாய். நமக்கு நீமிகுந்த சகாயவான் என்று அநுமாரைப் புகழ்ந்துப்பேசிக் கொண்டு பவளமால்வரையில் வந்து சேர்ந்தார்கள்.

ஆதித்தனும் அஸ்தகிரியை யடைந்தான். அப்பொழுது சுவாமி விபீஷணர் மற்ற சேனைத்தலைவர்களை நோக்கி இராவணன் மாயையாய் இலங்கைக்குள் சென்றவன், என்ன உபாயஞ் செய்கின்றானோ ஒன்றும் தெரியவில்லையே என்று சொல்லிக் கொண்டிருக்கிறபோது, மயிலிராவணன் வந்து இராவணனிடம் இரகசியமாய்ப் பேசிப் போன விஷயம் விபீஷணன் மகள் திரிசடை யறிந்து, மையராக்கனால் இராமசுவாமிக்கும் இலட்சுமணருக்கும், ஒரு விக்கினம் ஏற்பட்டால் நமது தந்தைவிபீஷணர் ஜீவித்திரார் என்று, சீக்கிரம் ஒரு தூது

வனை யனுப்பிவைத்தாள். அவன் விபீஷணரிடம் திரிசடைசொல்லிய விஷயங்களைச் செப்பிவிட்டு இலங்கைக்குச் சென்றான்.

அது கேட்ட விபீஷணர், சுவாமியினண்டை வந்து சுவாமி! இலங்கையிலிருந்து ஒரு இரகசியம் வந்திருக்கிறது அது என்ன வெனில்:—இராவணன் பாதாள இலங்கையிலிருக்கிற மயிலிராவணனை யழைத்து, ஏதோ ஆலோசனை செய்து அனுப்பி யிருக்கிறான். ஆதலால் நாம் சாக்கிரதையாக இருக்கவேண்டுமென்று சொன்னான், அவ்வுரையைக் கேட்ட சுவாமி! முகமலர்ந்து மயிலிராவணன் என்பவன் யாவன்? அவன் வரலாறு எப்படி யென்று கேட்க, விபீஷணர் சொல்லுகின்றார்.

சுவாமி! பாதாளலோகத்தில் வெகு தூரத்துக் கப்பால் வெளியுண்டு, பிரமதேவன் இந்த மண்டலத்தை உண்டுபண்ணின நாள் என்றோ? அன்றே அதுவும் உண்டாக்கப்பட்டது. அவ்வெளியில், எழு நூற்றுக்காதவழி விஸ்தீரணம் கோட்டையுங்கட்டி, அதைச் சூழ அகழும் கட்டியிருக்கும், அதுபாதாளத்திலிருக்கிறபடியால், பாதாள இலங்கை யென்றும் பெயரிடப்பெற்றது. அதில் அளவற்ற இராட்சதவீரர்களைத் தானையமாகவைத்துக் கொண்டு ‘மை’ என்னும் மயக்கத்தால் சற்பனை பண்ணுகிறபடியால் மயிலிராவண னென்று பெயரும் வகித்துக் கொண்டு, அந்தக் கோட்டைக்கு அதிபதியாகவிருந்து, இந்த இராவணனுக்குள் அடங்கிய சிற்றரசன் போல, இவன் புத்தி கேட்டு இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டிருப்பான்.

அந்தப் பாதாள இலங்கைக்கு ஒருவராலும்வழி தெரிந்து போக முடியாது. இப்போது அந்த மயிலி

ராவணன் வந்து ஆலோசனை செய்துபோனபடியால், ஏதாகிலும் கபடமேற்படும், ஆதலால் நாம் வழக்கம் போல் பாளையஞ் செய்திருக்கக் கூடாது, அது ஏனென்ருல்:—நிலத்தைச் சுரங்கமறுத்து, நடுப்படையில் வந்து தலைப்படுவான், அதுவுமல்லாமல் காற்றுப்போகிற வழியாயினும் வந்து விடுவான், இது மெய்யென்று விபீஷணர் சொல்ல, சுவாமி மற்ற யாவரும் கேட்டுப் பிரமையுற்றிருக்க அனுமா ரெழுந்து, சுவாமியைப் பணிந்து நான் ஒரு தந்திரம் பண்ணுகிறேன், நீங்கள் ஒன்றுக்கும் யோசிக்க வேண்டா மென்று திடங்கூறி, அந்த இருபத்து மூன்று படைத்தலைவரையும்,எழுபது வெள்ளம் வானரச் சேனைகளையும், பவளமால் வரையினடியில் வெளிப்பாளையமாக வந்திருக்கச் செய்து, அவர்களுக்கு நடுவில் இராமசுவாமி, இலட்சுமணரையும் வைத்து, அனுமார் விசுவரூபங் கொண்டு சேனைகளுக்கப்பால் இரண்டு காலையுங் கவடித்து, நிலத்திலிருந்து, வாலை வளையம் வளையமாகச்சுற்றி, ஆகாயபரியந்தம் குச்சுக்கட்டிக் குவிந்தபாவனை போல் செய்து, வருகிற பேர், போகிறபேர்களுக்கு அனுமார் கவட்டின் வழியே யல்லாமல், வேறு வழியில்லாது வெகு எச்சரிப்புடன் காத்து நின்ருர்.

அந்த வால் கோட்டையைச் சூழ ஏதாகிலும் கபட மேற்பட்டால், வானரவீரர்க ளறியார்களென்று ஆதித்தன் உதையமாகும் வரை நாமேபுறக்காவலாகத் திரிகிருேமென்று விபீஷணர் சொல்லிவிட்டுக், கோட்டையைச் சுற்றி அனுமார் சமீபத்தில் வந்து, அனுமாரேகோட்டை வாசல் எச்சரிக்கை என்பார், பின்னுங் கோட்டையைச் சுற்றி வருவார், இப்படியாகவே இரவிற் காத்துக்கொண்டிருந்தார்கள்.

## மயிலிராவணன் மாயை.

இப்பால் இராவணனிடம் விடை பெற்றுச் சென்ற மயிலிராவணன், இராத்திரிப்பதினாறு நாழிகை யளவில், தன்னுடைய அரண்மனை விட்டு வெளியே புறப்பட்டு, இரண்டு இராட்சதரை யழைத்து, வானரங்களும், அந்தஇரண்டுமானிடரும், இருக்கிறசாக்கிரதை எப்படியென்று பார்த்து வரும்படியாக ஒற்றரை அனுப்பினான்.

அந்த இரண்டு தூதுவர்களும்புறப்பட்டுவந்து, அனுமாருக்கு முன்பாக வர அச்சமுற்றவர்களாய்ப், பக்கத்தில் ஒதுங்கி நின்று கோட்டையைச் சுற்றி வருகிற விபீஷணரை முன்னே விட்டு, இவர்கள் பின்னேசென்று எச்சரிக்கையாகப் பார்க்கிறபோது, அனுமார் வால் கோட்டையிருக்கிற ஆரணிப்பும், எச்சரிக்கையும், பார்த்து இந்தக் கோட்டை யிருக்கிற கொடுமுடிக்கி நாம்எவ்விதம் உள்ளே பிரவேசிப்பது என்று ஆலோசித்து, எவ்விடத்திலேனும் வெடிவுகளுண்டானால், அதில் நுழைந்து உள்ளே சென்று அவர்களின் பராக்கிரமம் பார்த்து வருவோமென்று தீர்மானித்து, ஒரு பாரிசத்திற் சிறுவெளி யொன்று கண்டு, அதில் இருவரும் நுழைந்து போகிறபோது, விபீஷணர் வந்து அனுமாரே! கோட்டை வாசல் எச்சரிக்கை யென்றார்.

அவ்வுரையைக்கேட்ட அனுமார் அப்படி அசந்திருப்பேனோ வென்று, வாலின் சுற்றை இருக்குகிறபோது, முன் வால் வெளியிற்சென்ற இரண்டு இராட்சதரும் நசுக்குண்டு இறந்து, அவ்வாலிற்றானே ஒட்டிக் கொண்டார்கள். அப்போது மயிலிராவணன் தூது சென்ற இருவரையும் இன்னுங் காணவில்லையேயென்று, பின்னும் இரண்டு இராட்சதரை யழைத்து அனுப்

பினன். அவர்களும் வந்து சந்தடியில்லாமல் கோட்டையைச் சுற்றிப் பார்த்து வருகிறபோது; அனுமார் வால் கோட்டையின் உன்னதமும், அந்தவாலில் அம்புகள் போன்ற ரோமங்களிருப்பதையுங் கண்ணுற்று, இனிப்பூமியைத் துளைத்துச் சேனைகளின் நடுவிற் புறப்படுவோமென்று, தீர்மானித்துச் சுரங்க மறுத்துக் கொண்டு, முட்டி யெழும்புகிற போது, நிலத்திற் படர்ந்து கிடக்கிற அனுமாரின் வால் ரோமத்தில் முட்டுப்பட்டு, அதினின்று தப்பக்கூடாமல், அவர்கள் அவ்விடத்திற்றானே உயிர் துறந்தனர்

அப்போது மயிலிராவணன் இன்னும் இவ்விருவரையுங்காண வில்லையே, இது என்ன விந்தையாக விருக்கிறதென்று ஆலோசித்துப், பின்னும் இரண்டு தூதுவரை யழைத்துச், சீக்கிரம் பார்த்து வாருங்களென்று சினந்து செப்பினன். அம்மொழியைச் செவியேற்ற இரண்டு தூதுவர்களும், அவ்விடம் விட்டு ஓடோடியுஞ் சிறிது தூரஞ் சென்று, நின்று கொண்டு ஆலோசித்து, முன் இரண்டுபேர்கள் சென்றும், அதன் பிறகு அவர்களையும் அழைத்து, வேவு பார்த்து வரப் போன மற்றிருவர்களும் இன்னும் வரவில்லை, ஏதோ போகிறபேர்களை யெல்லாம் ஒரு பூதம் எடுத்து விழுங்குகிறதுபோ லிருக்கிறது, ஆதலால் நாமும்போய் இறப்பதற்குக் காரணமில்லை, இப்போதே நாம் சென்று அரசனிடம் தெரிவித்து, அதற்கேற்ற சாமர்த்தியமுடையவரைய னுப்பச் சொல்லுவோ மென்று தீர்மானித்து, அவ்விடத்தினின்று மயிலிராவணனிடஞ் சென்று ஏ சுவாமி! உமது ஆக்ஞையின்படி நாங்கள் சென்றோம், அங்கு போகிற பேரை யெல்லாம் ஒரு பூதமெடுத்து விழுங்குகிறது, நாங்களும் உமது அநுக்கிரகங்கொண்டு

தப்பி வந்தோமென்று, தப்பு விண்ணப்பஞ் செய்தார்கள்.

அவ்வுரையைக் கேட்ட மையரக்கன் கோபங்கொண்டு, தன் அரண்மனையி லிருக்கிற, மகாமந்திரவாளிகளில் இருவரை யழைத்து, நீங்கள் சென்று எந்தத் துஷ்டப் பூதப் பைசாசுகளையுங் கட்டிப், பாளையஞ் சுற்றிப் பார்த்து, அதி சீக்கிரம் வருவீரென வுரைத்தான். அவ்வுரையைச் சிரமேற்ற தூதுவரிருவரும், கடுவேகத்துடனும் மந்திர உச்சாடனத்துடனுஞ் சென்று, இராமசுவாமியின் பாளையஞ் சுற்றிப் பார்த்து, விரைவில் வந்து மையரக்கனிடம் கோட்டையின் அமைப்பும், அதைச்சுற்றி விபீஷணர் காவலாகத் திரிகிறதும் சொல்லி, விடை பெற்றுச் சென்றனர். அதைக் கேட்ட மயிலிராவணன், ஒரு குரங்கானது எழுபது வெள்ளம் வானரச்சேனைகளையுஞ் சூழத் தம்முடைய வாலால் வளைந்து, கோட்டை கட்டிக் கொண்டதென்றால், அது எவ்வளவு சாமர்த்திய மென்று எண்ணித், திடீரென எழுந்து காளி கோவிற் சென்று, அம்மா காளித்தாயே! சாமுண்டி! நீலி! துற்கா! மகமாயி! பராசத்தி! கெவுரி! என் குலதெய்வமே! நான் போகிற காரியஞ் செயமானால், அந்த இரண்டு மானிடர்களையுங் கொண்டு வந்து, ஆதித்தன் உதையமாவதற்குள், உனக்கு நரபலி யிடுகிறேனென்று தோத்திரஞ் செய்து கொண்டு, விபீஷணரைப் போல் வடிவு கொண்டு, மாயை என்ற மந்திரத்தை உச்சரித்துச்சென்று, கோட்டையைச் சுற்றி வருகிற விபீஷணர், அனுமார், முன்பாக வந்து கோட்டை வாசல் எச்சரிக்கை யென்று சொல்லிச் சென்றார்.

பின் கண நேரத்தில், மயிலிராவணன் அநுமாரிடம் வந்து ஏ அநுமாரே! நான் உள்ளே சென்று சுவாமியிடம் சில வார்த்தைபேசி வருகிறேன், நீர் சாக்கிரதையாய் நில்லுமென்று சொல்லி விட்டு, உள் சென்றான்.

அப்போது இலட்சுமணர் விழிப்பா யிருக்கிறதை யறிந்த மையரக்கன், மகா மாயை என்ற மந்திரத்தால் இலட்சுமணரை மயக்கஞ் செய்து, இராம இலட்மண ளிருவரையும் இரண்டு கரத்தாலெடுத் தணைத்துக் கொண்டு, அநுமார் கண்ணுக்குப் புலப்படாமல், அவர் கவட்டின் வழியாக நுழைந்துபோய்ப், பாதாள இலங்கையில், ஒருஅறையினுள் இருவரையும்வைத்துப்பூட்டி, அதற்கேற்ற வீரர்களையுங் காவலாக இருக்கச் செய்து, காளி கோவிலில் வந்து அம்மா! அந்த இருவரையும் உனது திருவருளாற் கொண்டு வந்தேன், நான் பிரார்த்தித்தபடியே, அருணோதயத்தில் அவ்விருவரையும் உனக்கு நரபலியிடுகின்றேனென்றுசொல்லித், தன் அரண்மனையிற் சென்றிருந்தான்.

---

## மயிலிராவணன் வதை

இப்பால் வால் கோட்டையைச் சுற்றிய விபீஷணர் வந்து அநுமாரே! கோட்டைவாசல் எச்சரிக்கையென்றார். அதுகேட்ட அநுமார் திடுக்கமுற்று, நீரிப்போதுகோட்டைக்குள்சுவாமியிடம் ஆலோசித்துவரச் சென்றவர், எப்படிவெளியில் வந்தீரெனக்கேட்க; விபீஷணர்திகைத்து, நான்கோட்டைக்குள்பிரவேசிக்கவில்லையே, ஐயோ! மோசம் வந்ததோ என்று, முகத்தில் அறைந்து கொண்டு, உள்ளே போய்ப்பார்த்து, இராம இலட்சுமணுள் இருவரையும் காணுதபடியால், மன

மேங்கி அனுமாரிடம் வர, அவரும் வால்கோட்டை யைப்பார்த்து முன் கையைக்கடித்து உக்கிரங்கொண்டு, நான் நன்ருய்க்காத்து உத்திரவாதம் பண்ணினேன் என்று, அதிகத் துக்கத்துடன் நிலத்திற் சாய்ந்து அழுதார்.

அப்போது சுக்கிரீவன் மற்ற வானரச் சேனைக ளும் அபயமிட்டு அலறி அழுதார்கள். அப்பொழுது விபீஷணர் எல்லாரையும் தேற்றி, ஒருவரும் பேச வேண்டாம் இது சமயம் இராவணன் வந்தால் யாவ ரையுங்கொன்று விடுவானென்று, அமர்த்திஞர். அப் பொழுது அந்தச்சேனைகளின்றன்மை எப்படியெனில்:

சந்திரனில்லாத ஆகாயம் போலவும், தாமரை இல்லாத குளம்போலவும், மந்திரி இல்லாத இராச்சி யம் போலவும், மதங்கொண்ட யானையில்லாத போர் முகம்போலவும், இருந்ததாம். இராமசுவாமியினுடைய சேனையானது இப்பால்யாவரும் ஒருங்குகூடி யோசனை பண்ணுகிறபோது, விபீஷணர் அனுமாரை நோக்கிச் சொல்லுகின்றுர், ஏ அனுமாரே! நீர் சீக்கிரம் பாதாள இலங்கைக்குச் சென்று, நமது சாமியையும், இலட்சும ணரையும், அந்த மயிலிராவணன் ஒரு அவகேடு செய் வதற்குமுன், அவனையும் கொன்று, அவர்களை எடுத்து வரவேண்டும் என்ருர்.

அதைச் செவியேற்ற அனுமார், பற்களைக் கடித் து, ஆக்கிரமித்து, இராம இலட்சுமணுள் இருவரையும் நமது பாளையங் கொண்டு வந்து சேர்ப்பது என் கட மையே, எனக்குப் பாதாள இலங்கைக்கு வழி சொல்லு மென்று கேட்டார். அப்போது விபீஷணர் சொல்லு கின்ருர்.

இந்த உப்புக்கடலுக்கு நிருதி மூலையில், ஐந்து லட்சம் யோசனை தூரத்தில் ஒரு பருவதமுண்டு, அது ஆகாயம் வரை வளர்ந்திருக்கும், அம்மலையி லிருந்து பார்க்கும்பொழுது, திருப்பாற்கடற்றீவு தெரியும், அதி லளவற்ற இராட்சதருண்டு, அவர்கள் உம்மைக் கண் டால் அப்பாற்செல்ல விடார், அத்தீவுக்குத்தென்புறம் சமுத்திர மத்தியிற் சக்கரவாளகிரி யிருக்கும், அம்மலை மீது போகிறபோது, குறுக்கே தயிர்க்கடல் இருக்கும், அதன் வழியாகச் சென்றால், அப்பால் கருப்பஞ்சாற் றுக்கடற்றீவு காணப்படும், அதில் நிருதி இராட்சதப் பூதகணங்கள் மெத்தவுண்டு, அவைகளுக்கு நீர் புலப் படலாகாது. அந்தத் தீவுக்குத் தென்கரை வழியாகச் செல்லுகிறபோது, இருள்நாடு காணப்படும், அதில் வழியறிந்தவன் நடக்க வேண்டும்.

ஆனால் நீர் அந்நாட்டைக்கண்டு அஞ்சவேண் டாம், அதில் ஒருவரும் சஞ்சாரமில்லை. அவ்வழி கடந் து நூறு யோசனைக்கப்பால் நெய்க்கடல் காணப்படும். அதன் மத்தியில் ஒரு பருவதமுண்டு, அதன் சார்பில் சமுத்திரத்தின் மத்தியிலே ஓர் திடலுண்டு, அவ்விடம் இருளில்லை. அந்தக் கடலிற் றாமரை படர்ந்திருக்கும், அதன்மீது நடந்துசென்றால், அதிகவிஸ்தீரணமுள்ள ஒரு தாமரை மலரிருக்கும், அதன் வழியாகப் பாதாள இலங்கைக்குக் கொண்டு போய்விடும், அப்பால் சுவா மியைக் கொண்டு வந்து சேர்ப்பது உம்மாலாகவேண் டிய காரியமென்றார்.

இவைகளைக்கேட்டுக் கொண்டிருந்த சுக்கிரீவன் மற்ற வானரவீரர்கள் இவ்வழிகளை யறிந்துசெல்லவும் சுவாமியையும் இலட்சுமணரையும் இவ்விடங்கொண்டு

வந்துசேர்க்கவும், யாராலும் இயலாது, அனுமாரே தகுந்தவரென்று ஆசி கூறி அனுப்பினர்கள்.

அப்பால் அனுமாரானவர் தென்றிசையை நோக்கி நடந்து, உப்புக்கடல் லட்சம் யோசனையுந் தாண்டி, அந்த மலைக்குப்போனர். அதிலிருந்து திருப் பாற்கடற் றீவிலே குதித்தார், அந்த ஓசையிலே கடற் றண்ணீரானது கரை புரண்டு இடி முழக்கம் போலிருந் தபடியினலே, அங்கே இருந்த அளவற்ற கோடி இரா ட்சதரும் ஒருமுகமாகத் திரண்டு, இவன் யாரடாவென் று செள்ளப்பினது போலே அனுமாரை வந்து அப் பிக்கொண்டார்கள்.

அனுமார் அந்த இராட்சதருடனே சண்டை யிட அதற்கேற்ற தடி யில்லாதபடியினலே, நாற்பதினு யிரம் பேரைப் பிடித்து, அந்தச் சமுத்திரத்திலே கொண்டுபோய் முக்கி, இப்படி அளவற்றகோடி இராட் சதரையும், அந்தப்படியே கொன்று போட்டு அப்பு றம் போகிறபோது, நெய்க்கடல் கண்டார். அந்தத்தீவி லிருக்கிற நிருதி இராட்சதருக்குக் காண்பித்துக்கொண் டால், அதிலே வெகு நேரமாகுமென்று, அவர்களுக் குக் காண்பித்துக் கொள்ளாமலே தென்கரைத் திடல் வழியாக நடந்து போகிறபோது, இருள் நாடு கண் டார். அந்த இருள்நாடு நூறுயோசனை தூரத்தையும், ஊடறுத்துப் போகிறபோது, அங்கொரு மலையும், வெளியுங்கண்டு. அந்தமலைச் சார்பிலிருக்கிற அதிசயங் களும் பார்த்துக் கொண்டு அப்பால் போகிறபோது, கருப்பஞ்சாற்றுக் கடல் கண்டார்.

அந்தக் கடற்றுமரையானது. மலைப்பிரமாணக் கொடிகள், ஆயிரங்காதம், இரண்டாயிரங்காதம், ஓடிக்

கிடக்கும். பதிங்காதப் பரப்பு, ஒவ்வொரு இலையிருக்கும். அந்த இலையிலே நடந்து போகிறபோது, ஒரு தாமரை மலரானது நூறுயோசனைப் பரப்புங் கண்டு, அந்தப்பூவிலே பற்றியேறி, வழியாக இறங்கிப் பாதாளலோகத்திற்குப் போகிற வழியுங் கண்டு ஏறி, அந்தக் கொடி வழியாக இறங்கிப் பாதாளலோகத்திலே போகிறபோது அங்கே ஒரு கெடிஸ்தலமும், கோட்டையும், இராச்சதர்கள் காவலுங் கண்டு, இங்கேயும் ஒரு தளமிருக்குதோ வென்று, மெள்ள அடிவைத்துப் போகிற போது, ஒரு குரங்கு மலைபோல வருகுதடா வென்று, அந்தக்கோட்டை வாசலை அடைத்துக் கொண்டார்கள்.

அந்நேரம் அனுமார் அந்தக் கதவை ஒருஇடியிடித்தார், அந்த இடியிலே கதவு நொறுங்கினது. அந்த வாசலைத்திறந்து போகிறபோது, அங்கேதானையமாக இருந்த இராட்சதர்க ளெல்லாம் ஓடி வந்து அனுமாரிருக்கிற பராக்கிரமங் கண்டு ஆயுதங்களை விட்டெறிந்தார்கள். அனுமார் அந்த ஆயுதங்களை எல்லாம் சின்னுபின்னங்களாகத் தகர்த்துக்கொண்டு அந்த இராட்சதரை யெல்லாம் அடிதண்டமாக அடித்து நொறுக்குகிற போது, இறந்துபோன பேர்கள்போக மற்றபேர்க ளெல்லாம் முறிந்து, பாதாள இலங்கைக்குப்போகிற வழிவிட்டு கள்ளவழியாகப் பாதாளலோகத்திலே நூறுயோசனைத் தூரம் போகிறபோது, இருளானபடியினலே முன் ஓடிப்போன இராட்சதர்களெல்லாம் பக்கங்களிலே ஒதுங்கிப் புதைகளிலே பதுங்கிக் கொண்டார்கள்.

அனுமாரும் இருளாயிருந்தபடியினலே மதிமயங்கிவழிதேடி அலைகிறபோது, ஒருஇராட்சதன் அனு

மாருக்குப் பயந்து குறுக்கே ஓடி வருகிறவனை, அனு மார் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு, நெஞ்சிலே அறைகிறதற்கு ஆரவாரம் பண்ணுகிறபோது, அந்த இராட்சதன் கையெடுத்துக் கும்பிட்டு, அடியேனைக் கொல்ல வேண்டாம், தேவரீர் கட்டளை யிட்டபடிக் கேட்கிறேனென்று கெஞ்சினான்.

அப்போது அனுமாரும், நல்லது உன்னைக் கொல்ல வில்லை நமக்குப் பாதாள இலங்கைக்கு வழி கொண்டுபோவென்று முன்னே விட்டுக் கொண்டுபோ கிறபோது, அந்தஇராட்சதன் சொல்லுவான், சுவாமி! பாதாள இலங்கைக்கு வழிதப்பி நூறு யோசனைத்தூரம் வந்து விட்டோம், இங்கே கள்ளவழி யொன்றுண்டு, அந்த வழியைப் பற்றி நடந்தாற் சண நேரத்திலே போகலாம், அந்தவழி யிப்போது நடப்பில்லை ஏனென் றால்:—

அங்கே ஒரு பிரம இராட்சசி யிருக்கிறபடியினா லே அந்தவழி நடப்பில்லை யென்றுசொன்னான். அதை கேட்டு அனுமாரும் பிரம இராட்சசிதானாகட்டும், பின் னொருவர்தானாகட்டும், நாமல்லோ இருக்கிறோம் சும் மா வழிகொண்டுபோ வென்றார். அப்படியே இராட்ச தனும், இவர் சாகிறவிடத்திலே நாம் சாகலாகாதோ வென்று, தன் மனதிலே யோசனை பண்ணிக் கொண்டு கள்ளவழியாகப் பாதாள இலங்கைக்குப்போகிறபோது வெகு நாள் நடப்பில்லாத படியினாலே, கல்லுகளும் சல்லிகளும், முள்ளுகளும், தூறுகளும், மாறுகளும், வளர்ந்து புதைமூடிக் கிடக்கிறபடியினாலே, இராட்ச தன் நடக்கமாட்டாமற் றட்டழிகிறதை அனுமார்கண்டு தம்முடம்பிலே சேர்த்து அணைத்துக் கொண்டு, அந் தத் தூர்களை மிதித்தேறி நடந்துபோகிறபோது, அள

விறந்த கோடி மலைத்தும்பிகள் கலைந்து ஒவ்வொரு தும்பிகள் ஒவ்வொரு கழுகுகள் போலே, அனுமாரையும், இராட்சதனையும் கொட்டுகிறபோது, அனுமார் அந்தத் தும்பிகளை, இரண்டு கையினாலும் தம்முடம்பினாலேயும் நசுங்கிப்போகத் தக்கதாகத் தேய்த்துக் கொண்டு உபாதிகள் பொறுக்க மாட்டாமற் போய்க் கொண்டிருந்தார்கள்.

அனுமார் சரீரமெல்லாம் இரத்தவாறாக ஓட, இராட்சதனும் வேதனைபொறுக்கமாட்டாமல் இறந்து போனான். அனுமாரும் கிலேசப்பட்டு ஐயோ! இந்தப் பாதாளலோகத்திலே நடுப்புதையிலே, வழி கொண்டு வந்த இராட்சதனும் இறந்து போனான், நமக்கு வழி தெரியவில்லையே, இராமசுவாமிக்கும் இலட்சுமணருக்கும், என்ன ஆபத்து வந்ததோ தெரியாது, நாமும் சீக்கிரம் போகாமல் இப்படி வழியறியாமற் றட்டழிகிறோமென்று, அங்கே ஒரு வழியைக் கண்டார். அந்த வழியினாலே நாலு திக்கிலும் ஓடி வழிபார்க்கிறபோது அங்கே ஒரு பிரம இராட்சசி ஒரு இராட்சதனைப் பிடித்துக்கொண்டு, தானிருக்கிற கெவியிலேகொண்டு போகிறபோது, அனுமாரைக் கண்டு ஆக்ரமித்துக் கொண்டு வந்தாள்.

அப்போதுமதயானையைக்கண்டசிங்கம்போலே அந்தப் பிரமஇராட்சசியைப் பாய்ந்து, நெஞ்சிலே ஒரு அறை அறைந்து, கொன்று போட்டார். அந்த இராட்சசி கொண்டு வந்த இராட்சதன் பயந்து, என்னைக்கொல்ல வேண்டாமென்றுகெஞ்சினான். அவனைக் கையிலே பிடித்துக் கொண்டு, நீ யாரென்று கேட்டார்.

அடியேனிருக்கிறது நாகலோகத்திலே பன்னகாபுரி யென்கிற பட்டணம், அந்தப் பட்டணத்துக்கதிபதியாகிய நாகஇராசாவின் கீழே குடித்தனம் பண்ணிக்கொண்டிருப்போம். அடியேன் வேட்டைக்குச் சிறிது இராட்சதருடனே இந்த வனத்திலே வருகிறபோது, இந்தப் பிரம இராட்சசிகண்டு, எல்லோரையும் கொன்றுதின்றுபோட்டு என்னைத்தன் பிள்ளைகளுக்கு வேணுமென்று ஒரு புதையிலே கொண்டு வந்தா ளென்று சொன்னான்.

சொன்னவுடனே நல்லது மயிலிராவணனிருக்கிறதான இலங்கைக்கு வழி கூட்டிப்போ, உன்னைவிட்டு விடுகிறேனென்று போகிறபோது, இராட்சதனும்பாதாளஇலங்கைக்குப் போகிறவழி இதுவல்ல, வழி தப்பி வந்து விட்டீர் வாருமென்று, அனுமார் பிறகே விட்டுக் கொண்டு, அந்த வெளிப்புதையும் நீங்கி வெகு தூரம் நடந்துபோகிறபோது, இரவுமுப்பதுஞ்சென்று, கிழக்கு வெளுக்கிற சமையத்திலே பாதாள இலங்கையும் பட்டணமும், கோட்டையும், உப்பரிக்கையும், வீடுகளும், தெரிந்தது.

அப்போது அந்தஇராட்சதனும் அனுமாரைப் பார்த்து, அதோ தெரிகிறது கோட்டை, அடியேன் அங்கே வரக்கூடாது, எங்கள்இராசாவுக்கும், அவனுக்கும் பகைச் சாரியாயிருக்கும் நான் வேவு பார்க்க வந்தேனென்று,என்னை ஆக்கினைபண்ணிப்போடுவானென்றான். அனுமாரும் சந்தோஷப்பட்டு, இராட்சதனைப் போகச் சொல்லி விட்டுப் பாதாள இலங்கைக்கு இப்பால், கோட்டைக் கப்புறத்திலே ஒரு தாமரைத் தடாகமுண்டு, அந்தத் தாமரைத் தடாகத்தின் கரையிலே வந்து, தம்முடைய ரூபத்தை உருமாற்றிக் கொண்டு,

அவ்விடத்தார் போலே அந்தத் தண்ணீர்த் துறையிலே விசாரமிட்டுக் கொண்டு, கோட்டையின் அளப்பும், யோசனையும், பலனும், ஒன்றும் தெரியவில்லையே யென்று, நானாவித யோசனையாக நின்றார்.

அச்சமயத்திலே, விடியற்காலமாகுதென்று மயிலிராவணன் யெழுந்திருந்து, ஒருவனைப் பார்த்துப்பத்திரகாளி கோவிற் பூசாரியை அழைத்து வரச்சொல்லி, யின்றைக்கு அம்மனுக்கு நரபலியும் சிறப்பும் நடத்தி வைக்கிறோம், கோவில்வாசலெல்லாம் கூட்டிமெழுகிச் சிங்காரிக்கச் சொல்லிக்கட்டளை யிட்டு, நரபலிக்குத்தன்னரண்மனையிலொரு ஊழியக்காரியைக் குளித்துச் சுத்தமாகத்தண்ணீர் கொண்டுவரச் சொல்லிப்போகச் சொன்னான்.

அப்பால் அந்த அறையிலிருந்த இலட்சுமணருக்கு அவன் பண்ணின மாயை மயக்கம் விட்டு நினைவுவந்து, இலட்சுமணர் திகைத்து, அடா எங்கே வந்தகப்பட்டுக் கொண்டோமென்று பதறி, நித்திரைபோகிற இராமசுவாமியைத் தட்டி யெழுப்பினார். அவர் துணுக்கென் றெழுந்து, அடா தம்பி! இதேது நாம் எங்கே வந்து சிக்கிக்கொண்டோம், நம்முடையசேனைகள் எங்கே யென்று, தம்பியும் தமயனும் துயரமுற்று, ஐயோ விதியே! மயிலிராவணன் நம்மை உபாயமாகக் கொண்டு வந்து, அறையிலே அடைத்து விட்டானே இதற்கு யோசனை எப்படி யென்று, இருவரும் கண்ணீர் மலங்கிச் சீதைக்கு வந்த ஆபத்துத் தீர்க்கமாட்டாமல் அந்தரமாய்ப் போனோமே, அவள் சீவன் அங்கும், நம்முடைய சீவன் இங்கும். இப்படி வேறு வேருய்ப் பிரிந்தோமே விதியே யென்று, கோபங்கொண்டு, இராமசுவாமியானவர் இலட்சுமணா! நம்மை எடுத்துவந்து

அறையிலே அடைத்த தந்திரம் என்னமாக விருந்தது நமது சேனைகளில் நாம் இரண்டுபேரில் ஒருவராகிலும் இல்லாதபடியால், இராவணன் போய் அவர்களெல்லோரையும் இதற்கு முன்னே கொன்றுவிடுவான்.

சேனைகள் படைத்தலைவர்கள் காரியம் அப்படியிருக்கிறது, சீதையையும் நம்பவேண்டியதில்லை. நம்முடைய விதியும் இப்படியாச்சுது, இனி என்ன செய்வோம்? தம்பி லெட்சுமணா! வென்று உள்ளங்கலங்கி, ஐயோ! எங்களுக்கு இத்தனை ஆபத்துவர வேணுமோ, என்று வில்லும் பாணமும் இல்லாதபடியால், இடையிற் கிடக்கிற மந்திரவாளை யுருவிக் கரத்திற் பிடித்துக் கொண்டு, வெகு எச்சரிக்கையுடன் அனுமாரை நினைத்து, அனுமார் சீவனுடனிருந்தால் நம்மைப் பிறிந்து கணப்பொழுதேனும் இரார், அவரும் இங்கு வந்து சேருவாரென்று, திடமாயிருந்தார்கள்.

இப்பால் தீர்த்தங் கொண்டுவரச் சென்ற ஊழியக்காரப்பெண், தீர்த்தக்குட மெடுத்துத் தலையில் வைத்துக் கொண்டு, மகா துக்கமுடையவளாய் அழுது கொண்டு, அனுமாரிருக்கிற துறையில் வந்து அனுமார் நிற்பதை இவளறியாமல், குடத்தைத் துறையில் வைத்துக், கரத்தைப் பிசைந்து கண்ணீர் மலங்கிக்கவலையுடன் புலம்பினாள்.

அப்படிப் புலம்புகிறதை அனுமார் கேட்டுக், கிட்டி வந்து ஏ அம்மா! நீர் துக்கப்படுங் காரியஞ் சொல்லென்றார். அப்போது அனுமாரை நோக்கி, நீர் யாரையா? வென்றாள். அதைக்கேட்ட அனுமார், நான் வழிப்போக்கன், இவ்விடமல்ல வென்றார். ஆனாலிவனிடமுண்மை சொல்லலாமென்று மனதினினைத்துக்,

கேளாய் வழிப்போக்கனே! இந்தப் பட்டணத்து அரசனானவன் எந்தெந்த தேசத்து அரச குமாரர்களோ? தெரியவராது, இருவரை எடுத்து வந்து, ஓர் அறையிலடைத்து வைத்திருக்கிறான். இப்போது நான் தீர்த்தங்கொண்டு போனதும், அவர்களிருவரையும் காளி கோயிலில் வெட்டிப் பலிசெய்யப் போகின்றான்.

ஆதலால் அவர்கள் வகையில் யாரேனும் வந்து உடன்படிக்கை செய்து திருப்பி யழைத்துப்போவார்களோவென்று சுற்றிப் பார்த்தேன், ஒருவரையுங் காணவில்லை யென்று பின்னும், கவலையுடன் சொன்னாள். அவ்வுரையைக் கேட்ட அனுமார், இவள் மகா புண்ணியவதி, இரக்கமுற்றவள், இவளிடம் நாம் இனி உண்மை சொல்லலாமென்று எண்ணி, ஏ அம்மா! நான் அவர்கள் வகை மனிதனே, உன்னை யறியாமல் நான் வழிப்போக்க னென்றேன், அந்த அபசாரம் பொறுத்தருளவேண்டும். இனிமேல் அடியேன் நடந்துகொள்வதெப்படி என்று கேட்டார்.

அவ்வார்த்தையைக் கேட்ட ஊழியப் பெண், கேளாயப்பா! நீ ஒருவன் றனியே வந்து என்ன செய்யப் போகின்றாய்? இப்பட்டணத்துக்கதிபதியாகிய மையரக்கனே, மண்டலாதிபதியா யிருந்து, இக்கோட்டையில் அளவிறந்த இராட்சதர்களையுங் காவலாகவைத்துக் கோட்டைமதிளிலும் அநேகம் இராட்சதவீரர்களைக் காவலாக வைத்திருக்கிறான். இன்னும் உருமாறிப்போகிறவர்களையும் கைப்பிடியாய்ப் பிடித்துக் கொள்கிற கணிதக்காரர்களுமிருக்கிறார்கள். இப்படியாக இரவும் பகலு மிடைவிடாமற் காத்துக்கொண்டிருகிற கடுங்காவலில், நீ ஒரு சிறுவன், எப்படி வரப்போகிறாய்? வந்தாலும் அவனுடன் போர்புரியத் தரமன்றோ என்றாள்.

அதைச் செவியேற்ற அனுமார், அம்மா! எனக்கு உருமாறுகிற சிறிய தந்திரமும் உண்டு, என் பெயர் அனுமான், என் ரூபத்தையும் பாருமென்று ஆகாயமுருவ வளர்ந்து நின்றார். அதைக் கண்ணுற்ற ஊழியப் பெண் மிகமகிழ்வுடன் ஒரு துரும்பை யெடுத்து அனுமார் கணுக்காலிற் றட்டி, உன்ரூபத்தை யொடுக்குமென்றாள். அப்படியே சிறு பிள்ளையைப் போல் நின்றார். இனித் தாமதம் பண்ணலாகாதென்று, சீக்கிரந் தீர்த்தமாடிக், குடத்திற் றீர்த்தமெடுத்து, அனுமாரைத் தவளரூப மெடுக்கச்சொல்லி, அக்குடத்துள் வைத்துக் கொண்டு, குடத்தையுஞ் சிரத்தில் வைத்து வருகிற போது, என்னைத் தீண்டாதீர்கள், தீண்டாதீர்கள், நான் தீர்த்தங்கொண்டு வருகின்றேன், தீண்டாதீர்கள் என்று சொல்லிக், குடத்தைக்கொண்டு அரண்மனைக்குட் சென்று, காளி சன்னதியில் வைத்தாள்.

மயிலிராவணன் றீர்த்தமாடிச் சன்னதிக்கு வருமுன்பாகத், தீர்த்தக் குடத்தை யுடைத்துக் கொண்டு, ஆகாயமுட்ட வளர்ந்து, இராமசுவாமியையும், இலட்சுமணரையும், அடைத்திருக்கிற அறையைத்தேடிச், சுவாமிகாள்! எங்கே இருக்கிறீர்கள்? அடியேன் அனுமான் வந்தேன் வந்தேன் என்று உரத்துக் கூப்பிட, அந்தச்சத்தங் கேட்ட சுவாமி, தம்பி இலட்சுமணா! அனுமார் வந்து விட்டார், வெளியிற் புறப்படடாவென்று கதவையும் நொறுக்கிக்கொண்டு, வெளியே புறப்பட்டார்கள்.

அவர்களைக்கண்ட அனுமான் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, இரண்டு பெயரையும் தோளிற் றூக்கிக் காளிகோயில் முன்பாக வைத்துச் சுவாமி! அடியேன் நடக்கவேண்டியதென்னவென்று கேட்டார். சுவாமி,

அனுமாருடைய அன்புக்கும், பராக்கிரமத்திற்கும், மெச்சி,உமதிஷ்டப்படிச்செய்யுமென்று ஆக்ஞாபித்தார். அவ் வுத்திரவுபெற்ற மாருதி, அந்தக்காளி கோயிலிலிருந்த ஒரு கற்றூணைப் பிடுங்கித் தோளில் வைத்துக்கொண்டு, பட்டணத்துட் பிரவேசித்துக், கண்ட கண்ட இராட்சதர்களை அடித்துத் தும்ஸம்பண்ணுகிற போது, பட்டணத்திலுள்ள இராட்சதர் யாவரும் கோவென்று அலறி,மடிந்த இராட்சதர் அநேகர். அனுமார் அடியைத் தப்பித்து ஓடிப்போன பேரும், கோட்டை கொத்தளங்களி லிருந்து, அகழ்க் கிடங்கினுள் விழுந்து, கால்கர மொடிந்தும், இடுப்பு முறிந்தும், சிரங்கள் பொடிப் பொடியாகியும் மடிந்தவர் சிலர்.

இப்படியாக அனுமார் கற்றூணைக்கொண்டு வீசியடித்துப் போர்முடிப்பதைக் கண்ணுற்ற சுவாமியும் இலட்சுமணரும், ஆனந்த மகிழ்வுடன் பார்த்திருந்தனர். அப்பால்அனுமார் மயிலிராவணனுடைய நான்கு வகைச் சேனைகளையு மடியக்கொன்று, அவன் அரண்மனையை நோக்கிப் போகிறபோது, மயிலிராவணன் மனது கலங்கிச் சொல்லுவான், ஓகோ இந்தக்குரங்கு அந்த இலங்கைப்பட்டணம் முழுதும் சுட்டுப் பஞ்சசேனாதிபதி மற்ற இராட்சத வீரர்களையுங் கொன்று, இராவணனையுமீடழித்த தல்லவோ, இங்கும் வந்து தலைப்பட்டது, இது சாமானியக் குரங்கல்லவே, நாம் மரியாதையுடனே குழந்தை குட்டிகளுடன் வெளியே செல்ல வேண்டு மென்று, கடுநடையுடன் செல்லுகிற போது, அனுமார் அங்கு சென்று, அரண்மனை வாசலிலிருக்கிற காவலர்கள் மற்ற சேனை வீரர்களையு மாய்த்து அப்பால் அரண்மனைக்குட் சென்றார்.

அப்போது மயிலிராவணன் வெளியிற் புறப்பட்டான். அவனைத் தன் கரத்திலிருக்கிற கற்றூணாலடிக்கிறபோது, அவனுடைய தெண்டாயுதத்தால்மறித்தான். அப்பொழுது இரண்டும் நொறுங்கிப்போய் விட்டது. உடனே இருவருங் கட்டிச் சேர்ந்து உருண்டு, கீழுமேலுமாகப் புரண்டு, அரண்மனைக்குளுள்ள ஆண்பெண் சகலரையும் நசுக்கிக் கொன்று போட்டு, ஒருவரையொருவர் குத்திக்கொண்டு, அரண்மனை முழுதினும் கோவென்றசத்தம் பிறந்தவுடன், அந்தச் சத்தத்தைச் செவியேற்ற இலட்சுமணர் ஏ அண்ணா! அனுமாருக்கு ஏதோ அபாயமேற்பட்டிருக்கும், இல்லையானால் இந்தச் சத்தம் பிறவாது சீக்கிரம் புறப்படுங்களென்று, கரத்திற் பிடித்த மந்திரவாளுடன் சத்தங்கேட்ட திசையை நோக்கி ஓடி வருகிறபோது, அனுமார் மயிலிராவணனுடைய புஜபல பராக்கிரமங்களை யெல்லாம் கவளீகரித்து, மயிலிராவணனைப் புரட்டித்தள்ளி, அவன் பிடரியிற் கடித்து வாலினாற் சுற்றிப்பின்னி, உருட்டிக்கொண்டு வருகிறதை யறிந்த சுவாமியும், இலட்சுமணரும், காலோய்ந்து பின் சென்றார்கள்.

அப்படியே அனுமார் மயிலிராவணனைக் காளி கோயிற் சன்னதி முன்பாகக் கொண்டு வந்து, பலி பீடத்தில் வாரியடித்தார். அப்போது அவன்றலைவேறு கால்வேறு, கைவேறு, உடல் வேறாய்த் தெறித்துப் போய் விட்டது. பின்னும் அனுமார் கோபந்தணியாமல் வாடி ரணபத்திரகாளி! துரோகி, சண்டாளி, நீயும் பலி ஒப்புக்கொண்டாயோ? உனக்கு மொரு கோவிலோவென்று, அந்தக் கோவிலையும் இடித்து, அங்குள்ள உருவாரங்களை யெல்லாம் நொறுக்கி விட்டு, அக்கணமே தீர்த்தங் கொண்டு வந்த ஊழியப்பெண் மகனை வர

வழைத்துச், சுவாமி பாதத்தில் வீழ்ந்து பணியச்சொல்லி, அவனை யந்தப் பாதாள இலங்கைக்கு இராஜாவாக விருக்கும்படியாகக் கட்டளையிட்டு, இராமசுவாமியையும் இலட்சுமணரையும், தம்முடைய தோளின்மீது ஏற்றிக்கொண்டு, ஒரு இராட்சதனைப்பிடித்து, அவ்விடமிருந்து இராவண னிலங்கைப் பவளமால் வரைக்கும் வழி கொண்டு போகும்படியாக முன்னே நடத்திக்கொண்டு அவ்வழிகளை யெல்லாங் கடந்து, எழுபது வெள்ளம் வானரச் சேனைகளும், விபீஷணரும் இருக்கிற பவள மால் வரையில் வந்து சேர்ந்தார்கள்.

அப்பொழுது அனைவோரும் சுவாமியையும், இலட்சுமணரையுங் கண்டு மகா துக்கத்துடன் அழுது அபயமிட்டார்கள். அவர்களைச் சுவாமி நோக்கி, ஏ விபீஷணு! சுக்கிரீவா! அங்கதா! நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம், நமக்கு அனுமாரென்ற சரீரமிருக்குமட்டும், எந்தவினை வந்தாலும்விலக்கிவிடுவார், யோசியாதீர்கள் என்று திடஞ்சொல்ல, யாவருங் கேட்டுச் சந்தோஷமாக விருந்தார்கள்.

அப்பால் மயிலிராவணன் பண்ணின சற்பனைகளும், அனுமார் வழியறிந்து வந்த திடங்களும், பாதாள இலங்கையில் நடத்திய யுத்தங்களும், சுவாமி சொல்ல அனைவோரும் கேட்டு, அனுமாரைப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள்.

இப்பால் போர்க்களத்திலிருந்து பின் வாங்கிக் கோட்டைக்குட் சென்ற இராவணன், அங்குள்ள கிங்கரர் காரியக்காரரை யழைத்துக் கொலுக்கூடி, அவர்களிடம் இராவணன் யோசனை செய்தான். கேளுங்கள் மந்திரி! சேனைத்தலைவரே! மயிலிராவணன் வந்து

நம்மிடம் யோசனை செய்து சென்றவன், இன்னும் இன்னது செய்தானென்று நமக்குத் தெரிய வில்லையே என்று சொல்லி, இரண்டு தூதுவரை யழைத்து இராமனுடைய பாளையத்திற்குச் சென்று அவ்விடத்து வர்த்தமானம் பார்த்து வாருங்களென்று அனுப்பினான். அவர்களும் விடைபெற்றுச் சென்று பாளையமெல்லாம் சுற்றிப்பார்த்து, ஓட்டமாக ஓடி வந்து ஆனந்த மகிழ்வுடன் சுவாமி! அந்த இரண்டு மானிடரையும், நமது மயிலிராவணன் மாயையால் எடுத்துப் போய் விட்டார், பாளையமெல்லாம், அழுகைச்சத்தமா யிருக்கிறதென்று சொன்னவுடனே இராவணன் கரங்கொட்டி, இருபது புஜங்களும் குலுங்கக்குலுங்க நகைத்து, தூதுவர்களே! இன்னம் சொல்லுங்கள் மெய்யோவென்றான். அவர்கள் சுவாமி! தங்கள் சமுகத்தில் தப்பு விண்ணப்பஞ் செய்வோமோ? என்றார்கள்.

அதைக்கேட்ட இராவணன் அடா! யோசனை தப்பிச்செய்து விட்டோமே, முன்னமே இவனையழைத்து இந்த யோசனைசெய்திருந்தால், நமதுவீரர்களெல்லாம் இறந்துபோகாமலிருப்பார்களே, யென்று ஆனந்தமகிழ்வுடன், வந்துசொன்னதூதுவர்களுக்கு வேண்டிய வெகுமானஞ் செய்து, இரண்டு தூதுவரை யழைத்துப் பாதாள இலங்கையிற் சென்று, அந்த இரண்டு மானிடரையும் நமதுஉத்திரவில்லாமல்வெட்டவேண்டாம், அவர்களை உயிருடன் வைத்துக்கொண்டு, சீதை மனந்திருத்த வேண்டும், ஆதலால் நான் இதோ வருகிறேன் என்று அனுப்பிவிட்டு, இங்குற்ற மற்ற வானரங்களை யெல்லாங் கொன்று புறப்படுவோமென்று, ஆயுதமுடன் யுத்தகளத்தை நோக்கி நின்றான்.

அப்போது சிறிது தூதுவர்கள் பாதாள இலங்கையிலிருந்து ஓடோடியும் இராவணனிடஞ் சென்று, ஏ சுவாமி! நமது பட்டணம்சுட்ட குரங்கு, வழிதெரிந்து வந்து பாதாள இலங்கைக்குட் பிரவேசித்து, அங்குள்ள இராட்சதவீரர்களை யெல்லாங்கொன்று, அரண்மனையிலிருந்த மயிலிராவணனையும் பிடித்துக், காளி கோயிலின் பலிப் பீடத்தில் வாரியடித்துக் கொன்று, பட்டணமெல்லாம்தூளாக்கி, அப்பட்டணத்திற்கு ஒரு ஊழியக்காரியின் மகனை இராஜாவாகப் பட்டாபிஷேகஞ் செய்து வைத்து, அந்த இரண்டு மானிடரையும் எடுத்துக்கொண்டு போய்விட்டது என்றான்.

அதைக்கேட்ட இராவணன் கோபங்கொண்டு திசை நோக்கிப் பற்களைக் கடித்து, நமது பாளையத்துக்கு ஒரு அவகேடு வந்தால், ஒரு புழுக்கையின் மகனோ பட்டம் ஆளுகிறவன்? வனம் வாழும் வானரம் பட்டங்கட்டினால். இவன் எப்படிச் சம்மதப்படுவான், ஆகட்டும் பிறகு வகை சொல்லுகிறேனென்று நிற்கிற போது, பின்னும் இரண்டு தூதுவர்கள் ஓடி வந்து சுவாமி! அந்த மானிடர் பாளையம் வெகு சந்தோஷமாக யுத்தத்திற்கு ஆயத்தப்படுகிறார்களென்றுசொன்னவுடனே, இராவணன் மிக விசாரமுடையவனாய், இனிமேல் நாம் எந்தச் சேனைகளுடன் யுத்தத்திற்குச் செல்லப்போகிறோமென்று யோசித்து மதிமயங்கி நின்றான்.

---

## இராவணன் வதைப் படலம்.

இப்பால் இராவணன் மயக்கத்தினின்றுந் தெளிந்து சீதைஎன்ற நினைவும்விட்டுப் பலபலசிந்தித்தான். இப்படி இராவணன் விசாரமுற்று, யோசனை

செய்வதற்கு ஒரு காரியக்காரரு மில்லாமல் நெஞ்சுடன் பலபல புலம்பலாக வெண்ணிச் சொல்லுவான். இப்போது நாம் சிறுமைப்பட்டுப் போனபோது, சீதையை விட்டு விட்டோமானுல், இந்த இராவணன் யுத்தமுகத்தில் யாவரையு மிறக்கக் கொடுத்துத், தன் பிராணனளவில் வந்தபோது, சீதையைக் கொண்டு வந்து விட்டானென்று, லோகத்தார்கள் ஏளனம் சொல்லுவார்கள். பிறகு நமது ஆண்மையுந் திராணியும் போய் விடும், ஆதலால் இனிச் சீதையை விடுகிறதுங் காரியமல்ல, நாம் சுத்தவீரனுக யுத்தம் பண்ணி இறந்தோமானுல், இராமாவென்ற போதெல்லாம், இராவண னென்கிற வார்த்தையுமுண்டு, இறப்பது என்று முண்டல்லவோ, யுத்தத்திற் பின் வாங்கினுல், எதிராளி விடப்போகிறது மில்லை, நாம் இறப்பதும் யுத்தஞ் செய்து எதிராளிகையாலிறப்பதற்குச் சமானமுமில்லை, இன்றிருந்தவனை நாளைக்காணேம், ஆதலால் இறப்பதற் கிணையில்லையென்று சிந்தித்து, விசாரங்களை மனத்துட் கொண்டு அங்காரடா! இராட்சத வீரர்கள், யுத்தத்திற்குப் புறப்படுங்களென்ருன்.

அவ்வார்த்தையைக் கேட்டுச் சமீபத்தில் நின்ற கிங்கரர், ஊழியக்காரர்கள் வந்து, சிறிது கூட்டமாக நின்ருர்கள். அதை நோக்கிய இராவணன் இவ்வளவு தானே நமது படை யென்ருன். அங்கு நின்ற தூதுவர்கள் சுவாமி! எல்லா வீரர்களும் யுத்தஞ் செய்து மடிந்தனர் என்ருர்கள். அதுகேட்ட இராவணன் கோபங்கொண்டு, பின்னும் சில தூதரை யனுப்பிப் பட்டணமெல்லாஞ் சுற்றிப் பார்த்துச், சிறுபிள்ளைகளாயிருந்தாலும் யுத்தத்திற்கு அழைத்து வாருங்களென்று

ஆக்ஞாபித்தான். அவ்வுரையைக் கேட்ட தூதுவர்கள் பட்டணம் முழுதினுஞ் சுற்றிப் பார்த்து வந்து சுவாமி! எங்கினும் ஆண்பிள்ளை யென்றவரே கிடையாது, எல்லாரும் போரில்மடிந்தனர்என்றூர்கள். அதைக்கேட்ட இராவணன், மகா துயரத்துடன் அங்கு வந்துநின்ற இராட்சதவீரர்களை யெல்லாம் ஆயுத சகிதமாய் வரச் சொல்லித், தனக்கும் பட்டத்து இரதத்தை அலங்காரஞ் செய்யச் சொல்லி, அதிற் பலவகை ஆயுதங்களையும் ஏற்றிக் கொண்டு, உயுத்தகளத்தை நோக்கி நின்றூன்.

அப்போது அவன் றேவி வண்டோதரி வந்து சுவாமி! நீர் எப்போதும் உயுத்தத்திற்குப் புறப்படுகிற போது, உமது முகத்தில் வீரலட்சுமி வசீகரமுண்டாகும், இன்று உமது முகம் கலைமாறியிருக்கிறது, என்சரீரமும் பதறுகிறது. ஏதோ இன்று உயுத்தத்திற்குப் போவது எனக்குச் சம்மதப்படவில்லை யென்று தடுத்தாள். அப்போது இராவணன் சொல்லுவான், ஏ பெண்ணே! நான் முற்காலம் தபசு செய்து, ஈசுவரரிடம் வரம் வாங்குகிறபோது, அவர் உன் சிரங்கள் பத்தும் அறுபட்டாலும், திரும்ப முளைத்துக் கொள்ளும்படியாகவும், நீ கோரியவர் யாவராலும் உன்னைவெல்ல முடியாதென்றும், யாவராலும் உயுத்தஞ்செய்து உன் பிராணனளவில் வந்த காலத்தில் இந்தச் சூலத்தை ஏவினுல், இது எதிராளியைச் செயித்து வருமேயல்லாமல் சும்மா வருகிறதில்லை, பிரமதேவன் ஆவியாயினும் போக்கச்செய்யுமென்று நிச்சயத்துடன் தந்திருக்கிறூர்.

ஆதலால் எனக்கு அச்சமேது? அத்துடன் நான் கைலாய பருவதமெடுத்த புஜபல பராக்கிரமங்களுமிருக்கிறது, மூன்றுலகத்தார்களும் ஒரே முகமாய்

வரினும், பஞ்சுபஞ்சாய்த் தூற்றி விடுவேன், ஆதலால் நீ யோசிக்கவேண்டாம் என்று திடஞ் சொல்லி, அங்கு நிறுத்தி விட்டு, அநேக வாத்திய முழக்கத்துடன் இரத, கெஜ, துரக, பதாதிகள் சூழ்ந்துவரத், தானும் ஒரு இரதத்தில் ஆரோகணித்து, உயுத்தகளத்தை நோக்கி வருகிறதை யறிந்த இராமசுவாமி, தேவர்கள்கொடுத்த இரதத்தில் ஆரோகணித்துச், சகலஆயுதங்களும் எடுத்து, விபீஷணருடன் சுக்கிரீவர் மற்ற வானரவீரர்களுடன் வந்து உயுத்தகளத்தி னின்றார்.

அதை யறிந்து இராவணன் றேரை வெகு வேகத்துடன் நடத்திச் சுவாமி யிடம்வந்து நின்றான். அப்போது வானரங்கள் எறிகிற மரங்களும், மலைகளும், இராட்சதாள் விடுகிற பல கணைகளும் மழைபொழிந்ததுபோற் பொழிய, அப்போது இராமசுவாமி முகம் இராவணனுக்குத் தெரியாமலும், இராவணன் முகம் இராமசுவாமிக்குத் தெரியாமலுமிருந்தபடியால், இலட்சுமணர் ஒரு கணை தொடுத்து, இராட்சதருடைய சரமாரிகளை விலக்கியும், இராவணன் ஒரு கணைதொடுத்து வானரங்கள் எறிகிற மலை மரங்களை விலக்கியும், வெளியாக்கினார்கள்.

அதுகண்ட இராவணன் கோபங் கொண்டு, இலட்சுமணர்மீது ஒரு பாணந்தொடுத்தான். அதை இராமசுவாமி கண்டு ஒரு பாணந்தொடுத்து அறுத்தார். அப்போது இராவணன் பின்னும், இலட்சுமணர் மீதுபாணந்தொட, இலட்சுமணர் அதையும் அறுத்து இராட்சதாளை யெல்லாம் துணித்தார். அதைநோக்கிய இராவணன் கோபாக்கினியுடன், நமது சேனைகள் மடியக் கணை தொடுக்கிறவன் இவனேஎன்று, வீரத்துடன் இலட்சுமணர் மீது, பல பாணங்களைப் பிரயோகஞ்

செய்தான். அதைச் சுவாமி கண்ணுற்று, ஒரே பாணத்தால் துணித்து விட்டார். அப்போது இராவணன் சுவாமியைப் பார்த்து, ஏ இராமா! நீங்கள் நல்ல சேவகரேயானால் ஒருவன் மீது இருவர்கள் போர்புரியலாமோ என்றான். அதைக்கேட்ட சுவாமி, நகைத்துத் தம்பி இலட்சுமணா! நீ சும்மா நில்லடா என்றார். அப்போது இலட்சுமணரும் பின் வாங்கி நின்றார்.

சுவாமி ஒரு கணைதொடுத்து இராவணனுடைய இரதத்தின் சிகரத்தை யறுத்தார். அதையறிந்த இராவணன், சுவாமியினுடைய இரதத்தின் சிகரத்தை யறுப்பதற்கு ஆயுதமெடுத்தான். அந்த ஆயுதத்தையும், வில்லையும், ஒரு பகழி தொடுத்துச் சுவாமி யறுத்தார். உடனே மறுதேரேறி வில்லெடுத்து நாணேற்று முன், சுக்கிரீவன் அந்தத் தேரிலே பாய்ந்து, அவன் வில்லைப் பறித்து, ஒடித்தெறிந்தான். அந்தத்தேர்த் தட்டிலே கிடக்கிற ஒரு தண்டத்தை யெடுத்து இராவணன் சுக்கிரீவனை யடித்தான், அந்த அடியைத் தப்பித்துக் கீழே பாய்ந்து தேர்ச்சாரதியைக் கொன்று விட்டு அப்பாற் சென்றான்.

அதையறிந்த இராவணன் மறுதேரேறி நின்று சுக்கிரீவன் மீது, ஒரு பாணந்தொடுத்தான். அந்தப் பாணத்தையுஞ் சுவாமி யறுத்து, அந்தத் தேரையு மறுத்தார். இப்படியே இராவணன் ஆரோகணிக்கிற இரதங்களை யெல்லாம், இராமசுவாமி கணைகளாற் சின்னபின்னஞ் செய்தார். அப்போது இராவணனுக்குக் கோபம் பிறந்து, கேடயங் கத்தி கையிலெடுத்துக் கொண்டு, வானரச் சேனைகளிற் பாய்ந்து, சூறாவளி போற் சுற்றிக், கத்தியால் வெட்டித் தும்ஸம் பண்ணுகிறதையறிந்தஇலட்சுமணரும்,கேடயங்கத்தியெடுத்து

இராவணனுடைய சேனைகளை யெல்லாம் சிரம் வேறு கரம்வேறு, உடல்வேறு, வேருகப்போகும்படி வெட்டி யெறிந்து திரிகிறபோது, அதில் இறந்தவர் போக மீந்தவர் இலங்கைக்கு ஓடிப்போய் விட்டார்கள்.

அப்போது இலட்சுமணர் கேடயங் கத்தியுடன் இராவணனைக் குறுக்கே கட்டிமறித்து, கேடயத்தோடு கேடயந்தாக்க, வாளோடு வாள்தாக்க, இருவரும் பொருதி விசை கொண்டு ஆட்டி விட்ட பம்பரம்போலும், குலால சக்கரம் போலும், கிறுகிறு வெனச்சுற்றி வாள் வீசுகிற அதிர்ச்சியில், வாள்களிலிருந்து அக்கினிப் பொறிபறக்க, அண்டமெல்லாம் காந்தல்பொறுக்கமுடியாமற் றத்தளிக்க, இப்படியாகமகாவிசைகொண்டு வாள் வீசுகிறபோது, இராவணன் வாள் தெறித்தது, இலட்சுமணர் கை யோய்ந்து பின் வாங்கி னின்ருர்.

அப்போது இராவணன் கையில் வாளில்லாமையால், உடனே ஒருஇரதத்திற் பாய்ந்து, வாரி நிலத்திலடித்துச் சிதறுமுன், மறுஇரதத்திற்பாய்ந்து நின்று அதிலிருந்த இருப்புத் தெண்டாயுதத்தை எடுத்து, அனுமார்மீது எறிந்தான். அது கார்காலத்து இடிபோற் சீறி வருகிறதை யறிந்த அங்கதன், குறுக்கே பாய்ந்து பிடித்துக் கொண்டான். அந்தச் சம்பிரதாயமறிந்த தேவர்கள், அங்கதனைத் தோத்திரஞ் செய்தார்கள். அப்போது அங்கதன் அந்த இருப்புத் தெண்டாயுதத்தால், எஞ்சிநின்ற இராவணன் சேனையிற்பாய்ந்து அடிக்கிறபோது, இறந்தவர் போக மற்றவர் இலங்கைக்கு ஓடிப்போனுர்கள்.

அதை இராவணன் கண்டு கோபித்து, அங்கதன்பேரில் ஒருகணை தொடுத்தான். அந்தக்கணையைச்

சுவாமி துணித்தார். அப்போது அங்கதன் மீது இராவணன் மிகுந்த கோபத்துடன் இரதத்தைச் செலுத்தினுன். சுவாமியும் தமது தேர்ச்சாரதியை நோக்கி, இராவணன் றேர் செல்லாதபடி மறிக்கச் சொன்னுர். அப்படியே தெய்வச்சாரதி இராவணன் றேரை வடக்கே ஒதுக்கித் தமது தேரைத் தெற்கே நிறுத்தினுன். அப்போது சுவாமிக்கும், இராவணனுக்கும், இராம இராவண யுத்தமென்று உலகஞ் சொல்லும்படியாகவும், எதிர்ப்பாரியாக நின்று யுத்தஞ் செய்யத் துடங்கினுர்கள். இந்த யுத்த வேடிக்கை பார்க்க வேண்டுமென்று தேவர்கள் யாவரும், ஆகாயத்தில் விமானங்களினின்று பார்த்திருந்தார்கள். அப்போது இராமசுவாமி சில பாணங்களைப் பிரயோகஞ் செய்ய, அதை இராவணனறுக்க, இராவணன் விடுகிற கணைகளை இராமசுவாமியறுக்க, இப்படி ஒருவருக் கொருவர் தோர்வையில்லாமல், சுவாமி கைச்சித்திரத்தையும் தனுசாஸ்திர வல்லமையையும், இராவணன்கண்டு அதிசயப்படவும், இராவணன் கைச்சித்திரத்தையும், தனுசாஸ்திர வல்லமையையும், சுவாமி கண்டு அதிசயப்படவும், இப்படிப் பாணப்பிரயோகத்தில், இராவணன் பத்துப் பாணந் தொடுத்தான். அவையுஞ்சுவாமி துணித்தார். பிறகு நூறு பாணந்தொடுத்தான், அவையு மறுத்தார். அப்பால் வருணுஸ்திரத்தைத் தொடுத்தான். அந்த அஸ்திரத்தின் மாயையால், வெள்ளம் பரந்தது. அந்த வெள்ளத்தில் வானரச் சேனைகளும், சுவாமியினுடையதேரும் மிதந்து வருகிறதைச் சுவாமி கண்ணுற்று, இது வருணுஸ்திரத்தின் மாயை யென்றறிந்து, தமது அக்கினியாஸ்திரத்தைக் காத்தி லெடுத்துத் தொடுத்தார்.

அந்த அஸ்திரம் புறப்பட்டு, எங்கும் நீர்ப்பசையில்லாமலுண்டு விட்டது. அதை நோக்கிய இராவணன் அதிசயித்து நின்றான். அப்போது சுவாமி, ஒரு அஸ்திரத்தைத் தொடுத்து, அவன் கவசத்தை யறுத்தார். அக்கணமே வானரச் சேனைகளும். பருவதங்களைப் பேர்த்தெறிந்தார்கள். அதுகண்ட இராவணன், கேடயத்தைத் தனக்கு முன்னாக மறைத்துப் பிடித்துக் கொண்டான். வானரவீரர்கள் எறிந்த பருவதங்களெல்லாம், அந்தக் கேடயத்திலே பட்டுத் தூளாய் நொறுங்கினதேயல்லாமல் கேடயத்திற் கிஞ்சிற்றுங் குறைபடவில்லை.

அப்பொழுது வானரச் சேனைகள் லட்சைப்பட்டு, இனிமேற் பருவதங்கள் பிடுங்கி யெறிவதிற் பயனில்லை யென்று, சும்மா நின்றார்கள். அப்போது ஆங்காங்கு நின்ற வானரங்களெல்லாம், ஒன்று கூடி உயுத்தத்தின் பெருமையைப் பேசிக்கொண்டு நின்றார்கள். அப்போது இராவணன் சிறிது நினைப்பான். நாம்மண்டலாதிபதியாய், அண்டபகி ரண்டத்துக்கும் அதிகாரக் கர்த்தனாய், இரண்டாயிரம் வெள்ளஞ் சேனைக்கும் அதிபதியானதும் போய், இப்பொழுது நாமும் நமதுஇரத மட்டுமேயல்லாமல், வேறொரு உதவியாளருமில்லையே இது விதிவலியே யல்லாமல் மதிவலி யொன்று மில்லை யென்று தனக்குள், தீர்மானித்துப் பிறகு சிறிது திடம் பிறந்து சொல்லுவான்.

நமது இரத கெஜ துரக பாதாதியான நால்வகைச் சேனைகளும், போனதே யல்லாமல், நமது புஜபல பராக்கிரமங்களும், ஜீவனைக் காக்கிற சூலாயுதமும், நம்மைவிட்டுப் போக வில்லையே யென்று, மிகுந்த வீர சூர பராக்கிரமங்களுடன் ஆங்காரங் கொண்டு, தம்மு

டைய தேர்த்தட்டிலே யிருக்கிற அஸ்திரங்களை யெல்லாங், கைச்சித்திரமாகத் தொடுத்து விட்டான்.

சுவாமியும் அப்படியே அக்கணைகளையெல்லாஞ் சிதைத்து விட்டார். பிறகு வாயு வாஸ்திரத்தைத் தொடுத்தான், அந்த அஸ்திரம் பிரசண்ட வாயுவாகப் புறப்பட்டு, இராமசுவாமியுடைய இரதத்தையும், வானரச்சேனைகளையும், ஆகாயத்திற் பரத்தி விடுகிறதுபோல் ஆக்கிரமித்து வருகிறதையறிந்த சுவாமி, தமது வாயு வாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்து அறுத்து விட்டார்.

அதைக்கண்ட இராவணன் இருட்கணையைத் தொடுத்தான், அந்தக் கணை புறப்பட்டு, இராமசுவாமி, இலட்சுமணர், மற்ற வானர வீரர்களையும், இருளாக வந்து மூடிக்கொண்டது. அப்போது வானரங்கள்கண் கெட்டவர்கள் போல், ஒருவரை யொருவர் கூப்பிட்டுச் சேனைத் தலைவரைக் கட்டிப்பிடிக்கச், சேனைத்தலைவர்கள் பயந்து இலட்சுமணரைக் கட்டிப்பிடிக்க, இலட்சுமணர் பயப்படாதீர்களென்று திடஞ்சொல்லிக்கொண்டு நிற்கிறபோது, சுவாமியின் இரத சாரதிக்குக்கண் தெரியாமல், சுவாமி! என்று கூப்பிட்டான். அப்போது சுவாமியும் சாரதிக்குத் திடங்கூறி, யிது இருட்கணையின் மாயை யென்றறிந்து, தம்முடைய அம்பறாத்தூணியி லிருக்கிற அக்கினி யாஸ்திரத்தைக் கரத்திலெடுத்தார். அது ஆதித்த கிரணம்போல் விளங்கியது அப்பொழுது அந்தவிரு, ளின்னவிட மென்றே தெரியாமற் போனதுடன், எங்கும் பிரகாசிக்கப்பட்டது.

அதைக்கண்ட இராவணன் இராமன் கரத்திலெடுத்த சரத்தைக்கண்ட விருள், இப்படி விலகினல்

அது அக்கினியாஸ்திரமெனத் நிர்மானித்துத், தமது அக்கினியாஸ்திரத்தை யெடுத்துத் தோள் புரளத்தொடுத்தான். அவ்விரு அஸ்திரங்களும் நெருப்புப்பொறிகளைக் கக்கி, அண்டகோளகை யெல்லாம் சுருண்டு போகும்படியாகப் புகைமண்டி, அக்கினி வாடை தாங்க முடியாமல் அப்பாற் சென்றுர்கள்.

அப்போது இனி உலகமே போய்விடுமென்று நினைத்துச் சுவாமி, சீக்கிரம் சீதளக் கணையைத்தொடுத்து, இராவணனுடைய அக்கினிக்கணையைக்கெடுத்துத் தமது அக்கினிக்கணையை யழைத்துவரச்செய்து, அம்பருத்தூணியி லடக்கஞ்செய்து கொண்டார்.

அதுகண்ட இராவணன் அதிசயித்துப் பைசாசக்கணையைத்தொடுத்தான். அந்தக் கணையிலிருந்து, அளவற்றகோடிபூதங்கள் பைசாசுகளாகவும்புறப்பட்டு, இராமசுவாமியினுடைய சேனைகள் யாவும், ஒரு பூதம் வயிற்றுக்குப் போருதெனவருகிறபோது, சுவாமியறிந்து, அந்தக் கணையை மந்திரத்தா லறுத்துவிட்டார். அதுகண்ட இராவணன் இந்திராஸ்திரத்தைத்தொடுத்தான். அதிலிருந்து வச்சிராயுதங்களும், இடியும், மின்னலுமாக முழங்கிக்கொண்டு வருகிறதை, வானரங்கள் கண்டுபயந்து, சுவாமி! சுவாமி! என்றலற அஞ்சவேண்டாமெனச்சுவாமி, அபயாஸ்தங்கொடுத்து, வருகிறதை இந்திரபாணமென வறிந்து, தமது இந்திரபாணத்தா லறுத்தார்.

அதை நோக்கிய இராவணனுக்குக் கோபம் பிறந்து, இந்த அஸ்திரங்கள் பயன்படாமற் போய்விட்டபடியால், நம்மைக் கொஞ்சம் வெற்றி கொண்டோமென்று சந்தோஷமடைய வேண்டாம் இராமா!

இன்னும் உன்னாலானதெல்லாம் பாரடாவென்று, ஆக்கிரமித்துத் தம்முடைய பிரமாஸ்திரத்தைத் தொடுத்து, அண்டங்குலுங்க ஆர்ப்பரித்தான். அந்தப் பிரமாஸ்திரத்திலிருந்து, அளவற்ற முனிவர்களாகக் கரத்தில் பிடித்த தண்டுகமண்டலத்துடன், இராமசுவாமியையும், மற்ற வானரச் சேனைகளையும், சிரம் நொறுங்கும் படியாக, அடித்துக் கொல்லுவோமெனச் சீறிக் கொண்டு வருகிறதை யறிந்த சுவாமி விபீஷணரை நோக்கி, ஏ விபீஷணா! இத்தனைமுனிவர்களை ஏவினானே இவர்களை எப்படிமாய்ப்பது? இது என்ன பாவமென்று கேட்க, விபீஷணர் சொல்லுகின்றார்.

சுவாமி! இது பிரமாஸ்திரத்தின் மாயையே யல்லாமல் வேறல்ல, இனிச் சற்றுங் காலதாமதம் பண்ணாமல், பாணப்பிரயோகஞ் செய்யுங்களென்றான். அதைக் கேட்ட ராமசுவாமி! தம்முடைய பிரமாஸ்திரத்தைத் தொடுத்து, அந்தப் பிரமாஸ்திரத்தை யறுத்து வெளியாக்கினார். அதையறிந்த இராவணன் விஷ்ணு வாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்தான். அதிலிருந்து, மகாவிஷ்ணுவைப்போல், சங்கு சக்கரபாணியாக, அநேகம் சக்கராயுதங்களை வீசிக்கொண்டு, இராமபிரானை நோக்கி வருகிறதையறிந்த விபீஷணர், சுவாமி! இது விஷ்ணுவாஸ்திரத்தின் மாயை என்றார். அப்பொழுது சுவாமி, தமது விஷ்ணுவாஸ்திரத்தைத் தொடுத்து, அதை அறுத்து விட்டார்.

இவைகளை யெல்லாங் கண்ணுற்ற இராவணன் விபீஷணன் மீது கோபங்கொண்டு நினைப்பான், நமக்குச் சத்திராதி இந்த விபீஷணனேயல்லாமல், இராம இலட்சுமணனல்ல, இவன் சத்திராதி யென்றும் நினையாமல், அவர்களிடம் அடைக்கலம் புகுந்து, இலங்கையிலுள்ள அந்தரங்க வர்த்தமானங்க ளெல்லாஞ் சொல்லி, நமது குமார வர்க்கம், சகோதராள், மற்ற

சேனைவீரர்களை யெல்லாம் மாய்த்தனன். இவனைக் கொல்லும் பொருட்டு முன்னமே வேலை யெறிந்தோம் அதை இலட்சுமணன், மார்பைக் கொடுத்து விலக்கி ஞன். இல்லையேல் அன்றே இவன் ஆவி எமனுலகஞ் சென்றிருக்கும் என யோசித்துப், பின்னும் சிறிது நினைப்பான். அவன்ருன் என்ன செய்வான் நம்மை வேண்டி முன்னமே வேணத்தக்க புத்தி சொன்ஞன், நாம் கேளாதபடியால், எதிராளியிடம் அடைக்கலம் புகுந்து, இத்தனை துராகிருதஞ் செய்கிருன். ஆனல் நமது விதியின்படியே நாம் அனுபவிக்கவேண்டியதே என்று, மனதுட் கொண்டு, வரம் பெற்ற அஸ்திரங்க ளெல்லாம் போய், இப்பொழுது உருத்திர பாணம், சூலம், இரண்டு மிருக்கிறதென்று திடங்கொண்டு, உருத் திரபாணத்தை யெடுத்து, மானத பூஜைகொடுத்து வில் லிற் ளெடுத்து, விரைவில் விடுத்து ஆரவாரஞ் செய் தான்.

அந்தப் பாணத்திலிருந்து உருத்திரமூர்த்தியைப் போல் விளங்கி, அநேக மழுவாயுதங்களுடன், ரிஷப வாகனருடராகப் புறப்பட்டு, இராமபிரானை நோக்கி வருகிறதையறிந்த சுவாமி, தமது உருத்திரபாணத்தை யெடுத்து, வில்லிற் ளெடுத்துப் பிரயோகஞ் செய்தார். அந்தப் பாணஞ்சென்று, வருகிற உருத்திரபாணத்தை யறுத்து, அம்பருத் தூணியில் வந்து சேர்ந்தது. அதைக்கண்ட இராவணன் றிகைத்துத், தேர்த்தட்டி லும், அம்பருத் தூணியிலும் ஓராயுதமு மில்லையே யென்று விசாரத்துடன், இனி நமது பிராணனளவில் வந்தபோது, உதவாத சூலமிருந்தும் பயனென்ன வென்று, புஜங்களைத்தட்டி ஆக்கிரமித்து, ஏ இராமா! நீ நல்ல சேவகனே சரி, உயுத்தகளத்தில் நின்று நன்

ருய்த் திராணி செலுத்தினய், இப்போது என்னுடைய சூலம் வருகிறது, வெகு எச்சரிக்கையாக இருவென்று, சூலத்தை வலம்வந்து, மந்திரதியானத்துடன் வணங்கிச் சூலத்தைக் கரத்தி லெடுத்து, இராமசுவாமியைக் குறி பார்த்து வீசினன்.

அந்தச் சூலமானது கிறுகிறுவென்று ஆகாயத்திற்கிளம்பிப் பம்பரம்போ லாடிக்கொண்டு, நமது எதிராளி எங்கே? வெகுகாலம் நமக்கு உயுத்தமில்லாமல் வெகு சிரமமாக விருந்தோமே, அந்தச் சிரமம் இப்பொழுது கணப்போதில் தீர்த்துக் கொள்வோம், இராமன் எங்கே? எங்கேயென்று, தன்னுடைய வீரத்துடன் ஆகாயத்தினின்று ஆடினது. அந்தச் சூலத்திலிருந்து இடி முழக்கம் போற் சத்தமுண்டாகி, அக்கினிச் சுவாலையடிக்கிறதைக் கேசரி மார்க்கத்தினின்று, வேடிக்கை பார்க்கிற தேவர்களெல்லாங் கண்ணுற்றுப் பயந்து, அவ்விடம் விட்டகன்று, ஓரிடத்திற்கூடி, இந்தச்சூலம் புறப்பட்டதே இதைச், சுவாமி யறுத்து நமக்குச் சுபகாலம் ஏற்படுகிறதோ! அல்லது இராமசுவாமிக்கு அவகேடு ஏற்பட்டு, நாம் இன்னும், இராவணனுக்கு ஊழியஞ் செய்து சிறுமைப்படக் காலமிருக்கிறதோவென்று மிந்தச்சூலம் ஈசுவரன் கொடுக்கிறபோது, எதிராளி எந்த ஆயுதங்கொண்டும், இந்தச்சூலத்தையறுக்க முடியாதென்றும் நிச்சயத்துடன் கொடுத்திருக்கின்றரே, இப்போது எப்படியாகிறதோவென்று, அவரவர்களும் பேசிப் பார்த்து நின்றார்கள்.

அப்போது சூலாயுதமானது, மகா விசையுடன் ஆகாயத்தினின்று சுவாமியை நோக்கிப் புறப்பட்டது. அதைக்கண்ணுற்ற சுவாமி, தம்முடைய புஜபலபராக்கிரமங்களுடன் வில்லை யெடுத்து நாணேற்றிச் சிறு

நாணெலிகொண்டு, அக்கினி யாஸ்திரத்தை எடுத்து, மிகுந்த கோபாக்கிரசித்தராய் விடுத்தார். அதைக்கண்ட விபீஷணர், சுக்கிரீவன், அனுமார், அங்கதன், சாம்பவர் மற்ற வானரவீரர்களெல்லாம் பயந்து நடுநடுங்கி, இன்று சுவாமிக்கு ஏற்பட்ட சினத்தால், எப்படியாகுமோ வென்று அஞ்சி, இலட்சுமணர் மறைவில் ஒதுங்க, இலட்சுமணர், அஞ்சாதீர்களென்று, யாவருக்கும் அபயாஸ்தங் கொடுத்து, இராமசுவாமியின் நேர்த்தட்டிலே நின்றார்கள். அப்போது சுவாமியின்கரத்தினின்று விடுபட்ட அக்கினியாஸ்திரமானது, சிவ்வென்று ஆகாயத்திற்கிளம்பி, இராவணனுடைய சூலத்தை யெரித்து விடுவோமென, அக்கினிப்பொறிகளைக் கக்கிக்கொண்டு, சூலத்தை நோக்கிப் போகிறபோது, யானையின் பேரிற் சிங்கம்வந் தமுக்கினது போற், சூலாயுதமானது, அக்கினியாஸ்திரத்தின் பேரிற் பாய்ந்து, அக்கினிபாணத்தை விழுங்கிவிட்டது. அதைக்கண்ட சுவாமி திகைத்தார். இராவணன் நகைத்தான்.

இலட்சுமணர் மற்ற வானரங்களெல்லாம் மனக்கலக்க முற்றார்கள். அப்போது சுவாமி, சகலரையும் பார்த்து நீங்கள் அஞ்சாதீர்களெனத் திடஞ்சொல்லிப், பிரமாஸ்திரத்தை யெடுத்து, மானதபூஜையுடன் வில்லிற்றொடுத்துப் பிரயோகஞ் செய்தார். அந்தப்பிரமாஸ்திரமானது, மகா விசையுடன் புறப்பட்டு, அடங்கலும் பொடியாகும்படியாக, ஆக்கிரமித்து வருகிற பிரமாஸ்திரத்திற் சூலம் பாய்ந்து, விழுங்கி விட்டது. பிறகு ருத்திரபாணம், நாராயணாஸ்திரம், வருணாஸ்திரம், வாயுவாஸ்திரம், மற்ற பாணங்களையும் ஒவ்வொன்றாகத் தொடுத்தார். அவையனைத்தையும் சூலம் கவளீகரித்து விட்டது. அதைக்கண்ட சுவாமி, இராவணனுக்கு,

இதுவொரு பலமிருக்கிறதென்று நினைத்து, அம்பருத் தூணியில் இராமபாண மொன்றைத் தவிர, மற்றைய பாணங்க ளில்லாததினால், அம்பற எய்தவன் சேவக னல்லவே என்று, உள்விசாரமாக நின்று, ஆனால் நமக்குப்பிராணனளவில் வந்த காலத்தில், உதவாத இராம பாணமிருந்தும் பயனென்ன வென்று, ஆக்கிரமித்து இராமபாணத்தையெடுத்து, மந்திராகுதியுடன்றனுவிற் றொடுத்து விட்டு வீரத்துடனின்றார். அந்த இராமபாணத்தின் பெருமை எத்தகைய தென்றால்:-

ஈரேழுபுவனத்தையும்,அநேகமேருமலையையும்' கணப்பொழுதிற் றகித்துப், பெரும்புறக் கடலிற் றீர்த்தமாடி வருகிற பராக்கிரம வேகமுண்டு. அப்படிப்பட்ட இராமபாணம், சுவாமியை நோக்கி வருகிற சூலத்தை மட்டும், அறுத்து வருவதே மிகுந்த பாக்கியமென்று, தேவர்கள் யாவரும் வருந்தி நின்றார்கள். அப்போது அந்தச் சூலத்தைக் கண்ட துண்டமா யறுத்துச்சிதைத் துவிடுவோமென்று, விரைவிற் சென்ற இராமபாணத் தைக்கண்ட சூலாயுதமெடுத்து விழுங்கி விட்டது.

அப்போது சுவாமி கரத்தில் ஓர் பாணமேனும் இல்லாமல் வில்லைத் தேர்த்தட்டி லூன்றிக்கொண்டு, சூலத்தைஎதிர்நோக்கிநிற்கின்ற சுவாமியைக்கண்ணுற் றதேவர்களெல்லாம் பயந்து, இனிச் சூலத்தால் சுவாமி இறப்பது நிச்சயமென்று, மனது கலங்கி நின்றார்கள். அப்போதுஇலட்சுமணர் நிகழ்ந்தசம்பவத்தை நினைத் து, அண்ணா! இனிஎப்படியென்று கேட்டார். வானரச் சேனைகளும், மிகுந்த விசனத்துட னிற்பதையுங்கண்ட சுவாமி, யாவரும் அஞ்சாதீர்களெனத் திடங்கூறி நிற் கிறபோது, சூலாயுதம், எல்லா அஸ்திரங்களையும் கவ ளீகரித்துவிட்டுச், சுவாமியின் மார்பைக் குறிபார்த்துக்

கிட்டிவருகிறதை யறிந்த சுவாமி, பிரணவ மந்திரத்தின் உச்சரிப்புடன், சுவாசத்தை யுள்ளே இழுத்து, வாயினாலும், நாசியினாலும், சமீபித்த சூலாயுதத்தின் பேரில், உபூ வென்று ஊதினர்.

அந்த மூச்சடிபட்ட போதே சூலம் விழுங்கிய ஆயுதங்களைக் கக்கினதுடன், வெந்து சாம்பலாய்விட்டது. அதைக்கண்டதேவர்கள் பிழைத்தோம், பிழைத்தோமென்று, மகிழ்ச்சியுடன் புட்பமாரி பொழிந்தனர். வானரச்சேனைகளெல்லாம், மலையதிரும்படிக், கரகோஷத்துடன் ஆனந்தக் கூத்தாடினார்கள். அப்போது சூலாயுதம் விழுங்கிய ஆயுதங்களெல்லாம், ஆகாயத்திற்கிளம்பி, ஆகாயக் கங்கையிற் றீர்த்தமாடிச் சுவாமியின் அம்பறாத் தூணியில் வந்தடைந்தது.

இவையனைத்தும் இருபதுகண் குளிரப் பார்த்து நின்ற இராவணன், இவனை நாம் மனிதனென்று எண்ணி, முன் விபீஷணன் சொன்ன புத்தியுங்கேளாமற், கெட்டுப்போனோமே, ஆனால் தம்பி விபீஷணன், இப்போது செய்த உதவிக்குக் கைம்மாறு, நான்எந்தச் சென்மத்திற் செய்யப் போகின்றேன், இப்போது நம்முடன் எதிர்த்துப் போராடுகிறது யாரென்று பார்க்குமளவில்;—

விருத்தம்.

சிவனோ வல்ல னான்முக னல்லன் றிருமாலாம்
அவனோ வல்லன் மெய்வர மெல்லா மடுகின்றான்
அவனோ வென்னிற் செய்து முடிக்குந் தானல்லன்
இவனோ தானவ் வேத முதற்கா ரணனென்றான்.

வசனம்.

இப்படியாக இராமசுவாமியைக் கண்ணுற்ற இராவணன் சொல்லுவான். சம்மார கர்த்தாவாகிய

சிவனோவென்றால், அந்தச் சிவனுக்கும் இந்த வல்லமையில்லை; ஆகையால் இவன் சிவனுமல்ல:—சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமனோ வென்றால், அவனுக்கும் இவன் பாணப்பிரயோகஞ் செய்கிற திறம் இல்லாததினால், பிரமனுமல்ல, சகல ஜீவனுக்கும் படியளக்கப் பட்ட விஷ்ணுவோவென்றால் அவனுக்கும் இவன் போலொத்த, தயாளகுண மில்லாததினால், விஷ்ணுவுமல்ல, மற்ற தேவர்கள், தபோதனர்களோ வென்றாலும், அவர்கள் மேற்சொல்லியவர்களின் திறமையை, ஒத்தவர்களல்லாததினால், அவர்களுமல்ல, பின்இவன் யாரென்று யோசிக்குமளவில், பிரமசிருட்டிக்குட்பட்ட, எறும்பு கடை யானை முதலாயுள்ள, ஜீவன்களி லெல்லாம், வியாபித்துப், பிறப்பு இறப்பு, அற்று, சிருட்டி, திதி, சம்மாரமாகிய முத்தொழிலுக்குங் காரண கர்த்தாவாய், சுகதுக்கமாகிய இருவினைக்கும் பாத்தியப்படாமல் நின்று, திருவிளையாட்டு விளையாடுகிற, ஆதிபரம் பொருளே யிந்த இராமனென்று, பெயரிட்டு வந்து, என்னுடன் உயுத்த விளையாட்டு விளையாடுகிறது, இதுவும் நான் செய்த தவத்தின் பலனல்லாமல் வேறல்ல.

தம்பிவிபீஷணன் இவர்களுடன்சேர்ந்து, நமக்குத் துணைபுரிந்த வீரர்களையும், குமாரவர்க்கங்களையும் சம்மாரஞ்செய்யும்படி, உபாயஞ்செய்ததே மிகவும் நான் பாக்கியஞ் செய்தவனானேன். தம்பி விபீஷணனைப் போல், இனி, இவ்வுலகில் எனக்கு உதவி செய்பவராருள ரெனவும், விபீஷணரைப் புகழ்ந்து, இனிமேல் நாம் இந்த இராமன் கைப்பாணத்தாலிறந்து, பரமபத மடைவதே கீர்த்தியல்லாமல், பின் வாங்கினோமானால், நமக்கு நரகவாதனையுடன், உலக நிந்தையு மேற்படுமென்று, இராவணன், சூலம் போனவுடன், இப்படிப்

பலபல சிந்தித்துப், பின் ஒரே துணிவாய் மனதி லெண்ணி இராமசுவாமியை நோக்கிச் சொல்லு வான்.

ஏ இராமா! இப்போது நான் விடுத்த ஒரு சூலத் தைப் போக்கிவிட்டதினால், நீ என்னை வெற்றிகொண் டதாய் நினைக்கவேண்டாம், இப்படி இன்னும் சில சூலங்களும், மற்ற பாணங்களும், கைலாயகிரியை எடு த்த எனது புஜபலபராக்கிரமங்களும் இருக்கிறது. நீ ஆயுதமெடுத்த சேவகன் பலமும், என்னுடைய பல மும், இனியல்லவோ அறியவேண்டுமென்று, இடை யிற் கிடந்த மந்திரவாளை யுருவி, விசைகொண்டெறிந் தான்.

அக்கணமே இராமசுவாமி ஒரு அஸ்திரத்தைத் தொடுத்து, அந்த மந்திரவாளையுமறுத்து, அவன் கவ சத்தையும் பத்துக் கரத்தையும் அற்றுவிழச் செய்தார். அற்றகரங்கள் நிலத்திற்கிடக்க, அந்தப்பத்துக்கரமும் முளைத்துக் கொண்டு, பின்னும் சில அஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்தான். சுவாமி அவைகளையுமறுத்துப் பத்துச் சிரத்தையும் அற்று விழச்செய்தார்.

அக்கணமே வேறு பத்துச் சிரமு முளைத்துக் கொண்டு, ஆரவாரத்துட னின்றான். பிறகு இரண்டு காலும் அற்றுவிழச் செய்தார். அதுவு முளைத்துக்கொ ண்டது. இவைகளைச் சுவாமி பார்த்து, ஆச்சரியமுற்று, இவன் போரின் சாமர்த்தியமும், வரத்தின் பலமும், இன்னுமறிவோ மென்று, காலுங், கரமுஞ், சிரமும், அற்றுவிழப் பத்து முறை கணை தொடுத்து அறுத்தார். இப்படியே பத்து முறையும், அற்று விழுந்த நூறு சிர மும், இருநூறு கரமு, மிருபது காலும், பூமியிற்குவிந்து

கிடக்கப், பின்னும் எல்லா முளைத்துக் கொண்டு, ஏ இராமா! இன்னும் உன்னாலான தெல்லாம் பார், நீ என்னை வெற்றிகொண்டு போகிறதை யறிகிறேனென்று, வீரம்பேசி யுத்தண்டத்துட னிற்பதைச் சுவாமி பார்த்து, மிகவுங்கிலேசப்பட்டு, இப்படி அற்றுப்போன அவயவங்கள் திரும்பவு முளைத்த தென்றால், இவனை எப்படி ஜெயம்பண்ணுகிறது, விபீஷணா! இதற்கு உபாயம் எப்படி என்று கேட்டார்.

அப்போது விபீஷணர், சுவாமி! இந்த இராவணன் இப்படி யிறப்பவனல்ல, இவன் வேண்டியவரம் பெற்றவனாதலால், இவன் வயிற்றில் அமிர்தகலய மிருக்கிறது, அதை யுடைந்து விட்டால், இறந்துபோவா னென்று சொன்னார். அதைக்கேட்ட சுவாமி, பிரமாஸ்திரத்தைத் தொடுத்தார். அந்த அஸ்திரம், இடியேறுபோல் முழங்கிக் கொண்டு, இராவணன் மார்பிற் பாய்ந்து, மூலாதாரத்தினிட மிருக்கிற அமிர்தகலயத்தை யுண்டுடைத்து, ஆகாயத்திற் கிளம்பி, கங்கையிற் றீர்த்தமாடிச், சுவாமியின் அம்பறாத் தூணியில் வந்தடைந்தது.

விருத்தம்.

கார்நின்ற மழைநின்று முருமுதிர்வ வெனத்திணி
தோட் காட்டி னின்றும்
தார்நின்ற மலைநின்றும் பணிக்குலமு மணிக்குலமுந்
தகர்ந்து சிந்தப்
போர்நின்ற விழிநின்றும் பொறிநின்று புகையோடுங்
குருதி பொங்கத்
தேர்நின்று நெடுநிலத்துச் சிரமுங்கீழ்ப் படவிழுந்
தான் சிகரம் போல்வான்.

வசனம்.

அக்கணமேபருவதத்தின்பேரில்இடிவிழுந்தது போல், இராவணன் ஜீவன் பிரிந்து குப்புறவீழ்ந்தான் அது எத்தகையதென்றால்:—

விருத்தம்.

முக்கோடி வாழ்நாளு முயன்றுடைய பெருந்தவமு
முதல்வன் முன்னாள்
எக்கோடி யாராலும் வெலப்படா யெனக்கொடுத்த
வரமு மேனைத்
திக்கோடு முலகனைத்துஞ் செருக்கடைந்த புயவலியுந்
தின்று மார்பிற்
புக்கோடி யுயிர்பருகிப் புறம்போயிற் றிராகவன்றன்
புனித வாளி

வசனம்.

இப்படியாய் இராவணன், தானே தபசு செய்து வாங்கிய வரங்களும், தபசிகள் செய்த ஆசீர்வாதங்களும், இராவணனை விட்டகன்று, இறுதியில், அவன் ஆவியுஞ் சென்றதென்றால், மானிடர் வாழ்வைச் செப்பத்தரமன்றே.

விருத்தம்.

புலைமேலுஞ் செலற்கொத்துப் பொதுநின்ற செல்வத்
தின் புன்மைத் தன்மை
நிலைமேலு மினியுண்டோ நீர்மேலைக் கோலமெனு
நிலைமைத் தன்றே
தலைமேலுந் தோண்மேலுந் தடமுதுகிற் படர்புயத்
துந் தாவி யேறி
மலைமேனின் றுடினபோ லாடினவால் வானரங்கள்
வரம்பி லாத

## வசனம்.

இப்பால் இறந்து கிடக்கிற இராவணன் மூதுகிலும், தலையிலும், வானரங்களேறிக்குதிகொண்டு, களிப்புடன் ஆடினது எப்படியிருந்ததென்றால்:—சமுத்திர மத்தியில் எழுநூற்றுக் காதவழி கோட்டையுங் கட்டி, இரண்டாயிரம் வெள்ளம் நான்கு வகைச்சேனைகளோடு, பத்துச் சிரத்துடன் இராவணேச்சுர னென்னும் நாமம்பெற்று, இந்த மூன்றுலகத்தாருந்தனக்கு ஏவல் பணிவிடை செய்ய, மண்டலாதிபதியா யிருந்தவனாயினும், அவனிடத்திற் றரும மில்லாதபடியால், வானரங்கள் நின்று கூத்தாடும்படி நேர்ந்ததென்று, இராம சுவாமி, மற்ற சேனைத்தலைவர்களும் பேசிக்கொண்டு, மாதலியைப் பார்த்து இனித் தேரைப் பூமியிலிறக்குவா யென்றவுடன், அப்படியே பூமியிற்கொண்டு வந்து நிறுத்த, சுவாமியும் மற்றவருந் தேர்விட்டிறங்கிப், பின் இத்தேரைக் கொண்டுபோய் இந்திரனிடம் சேர்த்து விடு என அனுப்பிவிட்டு, இறந்துகிடக்கிற இராவணன் சமீபத்தில் வந்து பார்த்தார்கள்.

## விருத்தம்.

பூதலத்த தாக்குவா யாகவினிப் பொலந்தேரை
யென்ற போதின்
மாதலிப்பே ரவன்கடவ மண்டலத்தி னப்பொழுதே
வருத லோடும்
மீதலைத்த பெருந்தாரை விசும்பளப்பக் கிடந்தான்றன்
மேனி முற்றும்
காதலித்த வுருவாகி யறம்வளர்க்குங் கண்ணுளன்
றெரியக் கண்டான்.

தேரினை நீ கொடுவிசும்பிற் செல்கென்ன மாதலியைச்
செலுத்திப் பின்னர்ப்
பாரிடமீ தினினணுகித் தம்பியொடும் படைத்தலைவர்
பலருஞ் சுற்றப்
போரிடை மீண்டொருவருக்கும் புறங்கொடாப் போர்
வீரன் பொருது வீழ்ந்த
சீரினையே மனமுவப்ப வுருமுற்று நிருவாளன்
றெரியக் கண்டான்.

வசனம்.

குப்புறக் கிடக்கிறவன் முதுகில் பலகணிவாசல் போலத்துளைத்திருப்பதைக் கண்டு, சுவாமி வெகுவிசாரத்துடன் ஓகோ! நமது அஸ்திரம் உயுத்தகளத்திற் புறங்காட்டினவன் பேரிலோ பட்டது என்று, விபீஷணரிடஞ்சொல்லுகிறபோது,விபீஷணர்,சுவாமி! தமது அஸ்திரம் புறங்காட்டினவன் பேரிற் செல்லுவது மில்லை, இராவணன் போர்க்களத்திற் புறங்காட்டுகிறவனு மில்லை, இந்தக்காயங்களேதென்றால், இராவணன் முன் திக்குவிஜயஞ் செய்கிற காலத்தில், திக்கெஜங்களாகிய, எட்டு யானைகளையுந் தன் மார்பிற் பாயச் செய்து, அந்தயானைகளின் கொம்புகள் மார்பிலே முறிந்து போகச் அதைச் சுத்தஞ்செய்து அதில் நவரத்தினங்களையும் பதித்து, அலங்கிருதஞ்செய்து வைத்திருந்தான்.

இப்பால் முதனாட் போரில் இராவணனுக்கும், நமது அனுமாருக்கும், மற்போருண்டாகி, அப்போது அனுமார் குத்தினகுத்தால், அந்தக்கொம்புகள் முப்பத்திரண்டும், முதுகின் வழியாய்த்துளைத்துக் கொண்டு சென்றது, அதுவே இப்போது பலகணிவாசல் போற்றெரிகிறதேயல்லாமம், வேறல்ல வென்று விபீஷணர்

சொல்ல; சுவாமி அனுமாரைப் புகழ்ந்து கொண்டாடி நீர் நல்ல சேவகனென்று சொல்லிக் கொண்டு நிற்கிற போது, தேவர்களெல்லாம், எங்கள் இடுக்கண் தீர்ந் தோம், தீர்ந்தோமென்று, களிப்புடன் பூமாரி பெய்த னர்.

பின்னர் சுவாமி விபீஷணருடைய முகவாட்டத் தைக்கண்டு. ஏ விபீஷண! நீ ஒன்றுக்கும் கவலேயடைய வேண்டாம், அவனவன் எழுத்தின்படியே தான் முடி யுமேயல்லாமல் வேறல்ல, இப்போது உனது சகோதர வாஞ்சை தீரும்படியாய், இராவணனிடஞ் சென்று, அவனைத் தகனஞ் செய்து, மற்ற கிரியைகளையுஞ் செய் து, வாவென்றனுப்ப, விடை பெற்றுச் சென்ற விபீஷ ணர் ஓவென்றலறி யிராவணன் மீது வீழ்ந்து புலம்பு கின்றான்.

விருத்தம்.

உண்ணாதே யுயிருண்ணா தொருநஞ்சு சனகியெனும்
பெருநஞ் சுன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே யுயிர் நீயுங்
களப்பட் டாயே
எண்ணாதே னெண்ணியசொ லின்றினித்தா னெண்
ணுதியோ வெண்ணி லாற்றல்
அண்ணாவோ வண்ணாவோ வசுரர்கடம் பிரளயமே
யமரர் கூற்றே.

ஓராசை யொருவன்மே லுயிராசைக் குலமகண்மே
லுடைய காதல்
தீராசை பழியென்றே னெனைமுனிந்த முனிவாறித்
தேறி னாயோ
போராசைப் பட்டெழுந்த குலமுற்றும் பொன்ற
வுந்தான் பொங்கி நின்ற
பேராசை பேர்ந்ததோ பேர்ந்தாசைக் கரியிரியப்
புருவம் பேர்ந்தோய்.

அன்றெரியின் விழுவேத வதியிவள்கா ணுலகுக்கோ
ரன்னை யென்று
குன்றனைய நெடுந்தோளாய் கூறினே னதுமனத்துட்
கொள்ளா தேயே
உன்றனது குலமடங்க வுருத்தமரிற் படக்கண்டு
முறவா காதே
பொன்றினையே யிராகவன்றன் புயவலியின் றறிந்து
தான் போகின் றுயே.

கொல்லாத மைத்துனனைக் கொன்றுயென் றதுகுறித்
துக் கொடுமை சூழ்ந்து
பல்லாலே யிதழதுக்குங் கொடும்பாவி நெடும்பாரப்
பழிதீர்ந் தாளே
நல்லாருந் தீயாரு நரகத்தார் துறக்கத்தார்
நம்பி நம்மோ
டெல்லாரும் பகைஞரே யார் முகத்தே விழிக்கின்று
யெளிமை யானுய்.

போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத் தழுவியகை
பொருமை கூரச்
சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந் தெரிவரிய
தெய்வக் கற்பின்
பேர்மகளைத் தழுவுவா னுயிர்கொடுத்துப் பழிகொண்ட
பித்தா பின்னைப்
பார்மகளைத் தழுவினையே திசையானைப் பணையிறுத்த
பணைத்த மார்பால்.

வசனம்.

இப்படிப் பலபல புலம்பலாகப் பிரலாபித்து ஏ அண்ணு! புத்தி கெட்ட பாதகா! நமது செல்வப்பெருக்கினுஞ் சிறந்தவர்யாருளர்? யாவையுஞ் சீதையென்ற

விஷத்தைக் கொண்டு வந்து இழந்து, இறுதியில் உமது உயிரும் விட்டீரே, நான் முன்னமே எவ்வளவோ மதிகள் சொல்லியும் உமதுசெவிக்கேறவில்லையே, உம்முடைய ஆக்கினைக்கு அஞ்சி, இலங்கைக்கு வடபால் செல்லுகின்ற சூரியனும், இப்போது நீர்இறந்து கிடப்பதைப் பார்க்கும் பொருட்டாயிந்த, இலங்கைக் கோட்டைக்குட் பிரவேசித்துப் போகின்றனே இனி எப்பொழுது உன்னைக் காண்பேன் அண்ணா! என்று, மகா துக்க சாகரத்திலாழ்ந்திருந்தான்.

அப்போது இராவணன் இறந்தானென்றது வண்டோதரி கேட்டுத், திடுக்கிட்டு, அழுது புலம்பி, அரக்கியர் கூட்டத்துடன், கூந்தலவிழ்ந்துபூமியிற் புரள, இருமருங்குஞ் சூழ்ந்து வருகிற அரக்கியர் தாங்கிவர உயுத்தகளத்தில் வந்து, இராவணன் பேரிலடித்துவீழ்ந்து, அண்டமுட்ட அலறிப் புலம்புகின்றாள்.

விருத்தம்.

அன்னேயோ வன்னேயோ வாகொடியேற் கடுத்தநா
ளரக்கர் வேந்தன்
பின்னேயோ விறப்பதுமுன் பிடித்திருந்த கருத்தது
வும் பிடித்திலேனே
முன்னேயோ விழுந்ததுவு முடித்தலையோ படித்தலைய
முகங் காட்டாயோ
என்னேயோ வென்னேயோ விராவணனார் முடிந்தபரி
சிதுவோ பாவம்.

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த திரு
மேனி மேலுங் கீழும்
எள்ளிருக்கு மிடனின்றி யுயிரிருக்கு மிடனாடி
யிழைத்த வாறோ
கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகியை மனச்சிறையிற்
கரந்த காதல்
உள்ளிருக்கு மெனக்கருதி யுடல்புகுந்து தடவியதோ
வொருவன் வாளி.

காந்தையருக் கணியனைய சானகியார் பேரழகு
மவர்தங் கற்பும்
ஏந்துபுயத் திராவணனுர் காதலுமச் சூர்ப்பநகை
யிழந்த மூக்கும்
வேந்தர் பிரான் றயரதனுர் பணியினுல் வெங்கானில்
விரதம் பூண்டு
போந்ததுவுங் கடைமுறையே புரந்தரனுர் பெருந்தவ
மாய்ப் போயிற் றம்மா.

வசனம்.

வண்டோதரி, இப்படிப் பலபுலம்பலாகப் புலம்பி இராவணன் உடம்பைத் தடவிப் பார்த்து, ஐயோ! பாவி நீர் இன்னம் சீதையை மறக்கவில்லையோ! நான் தங்களின் அருமைப் பாரியாள் வந்திருக்கின்றேனே, என்னைப்பாராமலும், என்னுடன் வார்த்தை யாடாமலும். இருக்கின்றீரோ! என்று இடியேறுகள் போல் அலறி நிலத்திற் பாய்ந்து மூர்ச்சித்திருக்கிறபோது, தமையன் இறந்தானென்று சூர்ப்பநகி கேட்டு ஓடி வந்து இராவணன் கால்மாட்டில் வீழ்ந்து அழுகின்ருள்.

அண்ணு! என்மங்கிலியம் இழந்ததுமுதல், தங்களாதரவாலல்லவோ இப்பூமியில்ஜீவனுடனிருந்தேன், இப்போது தாங்களும், இறந்தீர்கள், பாவி எனக்கு இனித்துணை யாரிருக்கிருர்களென்று புலம்புகிறபோது, வண்டோதரி மயக்கந் தெளிந்து, எறிட்டுப்பார்த்துத் தன் இருகால்களால் சூர்ப்பநகியை உதைத்துத் தள்ளி, சீ, சருவசண்டாள நிருமூடி! நீ இத்தனை பேர்களுக்குங் கூற்றுவனுக வந்து, எல்லோரையும் இறக்கச் செய்த மகா பாதகி! உனக்குத் தமையன் வாஞ்சையுமுண்டோ வென்று சினந்து சொல்லுவாள்.

ஏ பாதகி! உன் மூக்குஞ் செவியுந் தனமும் அரியக் கொடுத்ததுமல்லாமல், உன் கழுத்தைப்போல் என் கழுத்தையு மிருக்கும்படியாய் எண்ணி, என் பர்த்தாவிடம் சீதை என்ற நெருப்பை எடுத்து வரச்சொல்லி, இப்படி இலங்கையில் எல்லா ஸ்திரீகளையும் அவமங்கிலியரா யிருக்கும்படிச்செய்தகுடிகேடி, அப்பால்போடி யென்று கடிந்து சொன்னாள்.

அப்போது மாலியவான் ஓடி வந்து ஐயோ! இராவணா! இறந்துபோனாயோ, நான் அடிக்கடிவேண்டிய புத்தியைச் சொல்லியுங் கேளாமல், இப்படிவீணில் உன்னுவி துறந்தாயோ? கைலையங்கிரியை எடுத்த புஜத்தை யுடையோனே என்று, கவலை யுற்றிருந்தான்.

அதைக்கண்ட வண்டோதரி பதறி யெழுந்து, இராவணன் மீது வீழ்ந்தழுதவுடனே, வண்டோதரியு மிறந்தாள். விபீஷணன் மற்ற யாவரும் துக்கங்கொண்டாடி, இருவரையுந் தகனஞ் செய்ய வேண்டு மென்று. உருத்திரபூமியிற்சந்தனக்கட்டை, அகிற்கட்டை,தேவதாரிக்கட்டைகளும் அடுக்கி, அதன் பேரில் இராவணனையும் வண்டோதரியையுங் கிடத்தி, விபீஷணனல் அக்கினித் தகனமுஞ் செய்து, மற்றும் செய்ய வேண்டிய கிரியைகளுஞ் செய்து முடித்து, விபீஷணர்சுவாமியண்டை வந்து நின்றார்.

அப்போதுசுவாமி இளைய பெருமாளையழைத்து விபீஷணரை இலங்கைக்கு யழைத்துப்போய்ப் பட்டாபிஷேகஞ்சூட்டிவா வென்றனுப்ப, அப்படியே இலட்சுமணர், மற்ற வானரங்களுமாய் விபீஷணரை யழைத்து இலங்கைக்குச் சென்று, விபீஷணருக்குத் தீர்த்த

மாட்டி, நவரத்னப் பீதாம்பரங்களால் உடுக்கச்செய்து, சிம்மாசனத்தில் விபீஷணர் வீற்றிருக்க, இலட்சுமணர் கரத்தால் மகுடஞ் சூட்டி, மங்கள வாழ்த்துடன் பட்டணப் பிரவேசம் வந்து, சுவாமியைக்கண்டு விபீஷணர் தண்டனிட்டு நின்றார்.

சுவாமியும் ஆசிர்வாதங் கொடுத்து நாம் வந்து பதினான்கு வருடஞ்சென்றது, அயோத்திக்குப்புறப்பட வேண்டுமென்று அனுமாரை நோக்கி, ஏ அனுமசிகாமணியே! நீ முன் சீதை பாற் சென்று, திங்கள் ஒன்றில், இராவண விராட்சதர்களை யெல்லாம் சம்மாரஞ் செய்து, உன்னையுஞ் சுவாமியிடஞ் சேரப்பண்ணுகின்றேனென்று, நீ உறுதிமொழி கூறியபடி, இப்போது சென்று, இராவணனிறந்ததையுஞ்சொல்லிச், சீதையை யிங்கு அழைத்து வாருமென்று, அனுப்பினார். அப்படியே அனுமாரும் விடைபெற்று அசோகவனஞ்சென்று, அம்மனைக்கண்டு சாஷ்டாங்கதண்டனிட்டெழுந்து, அம்மணி! பாவகாரியான இராவணன் இறந்தான். சோபனஞ் சோபனமென்று சொல்லுகின்றார்.

விருத்தம்.

ஏழை சோபன மேந்திழை சோபனம்
வாழி சோபன மங்கல சோபனம்
ஆழி யான வரக்கனை யாரியச்
சூழி யானை துகைத்தது சோபனம்.

தலை கிடந்தன தாரணி தாங்கிய
மலை கிடந்தன போன்மணித் தோளெனும்
அலை கிடந்தன வாழி கிடந்தன
நிலை கிடந்தன வுடனிலத் தேயென்றான்.

வசனம்.

அனுமார் இப்படிச்சோபனஞ்சொல்ல, அம்மன் ஏறெடுத்து அனுமானை நோக்கி, அனுமானே! நீ என்றுஞ் சிரஞ்சீவியாக விருக்கக்கடவாயென்று ஆசீர்வாதங் கொடுத்துக், குலைந்த கூந்தலை முடித்துத், தாதிகளாற் றீர்த்தமாடிக் கூந்தலுலர்த்தி, அலங்கரித்துப் பல்லக்கிலேற்றித், தாதிமார் புடைசூழ, இராமசுவாமியினண்டையிற்பல்லக்கை நிறுத்தி, அம்மன்பல்லக்கைவிட்டுக் கீழே யிறங்கிச் சுவாமியைப் பணிந்து நின்றாள்.

அப்போது சுவாமி அம்மனைப்பார்த்து நீசிறையிருந்த கோலம் இப்படியோ வென்று, கடின வார்த்தையுடன் கடைக்கண் ணோட்டமாய் நின்றார். அதையறிந்த அம்மன் இலட்சுமணரைப் பார்த்து, இப்பொழுதே அக்கினிவளருமென்று, உத்தரவளித்தாள். அம்மனிட்ட ஆக்ஞையின்படி, இலட்சுமணர் அக்கினி வளர்த்தார். அப்போது அம்மன் சுவாமியின் சீர்பாத மேகெதியென்று, அந்த அக்கினியிற் குதித்தாள். அம்மன் கற்புத்தீயானது அக்கினியைச் சுட்டபடியால், அக்கினி அபயம் அபயமென்று அம்மனைக்கரைசேர்த்தான். அதைக்கண்ணுற்ற சுவாமி, அக்கினியின்பேரிற் கோபங்கொண்டு, நீ இவளைச் சுடாமற் கரைகொணர்ந்துசேர்த்தாயே உன்னை விடுகிறதில்லையென்று, ஆக்கிரமிக்கிறபோது, அக்கினி சுவாமி! அடியேன், குற்றவாளியைச்சுடுவேன், சுத்தவாளியைச்சுடேன், இப்போது அம்மன் கற்புத் தீயானது, என்னைச் சுட்டபடியால், என்னாற்றுங்க முடியாமற் கொண்டு வந்து, தங்கள் பாதத்திற் சேர்த்து முறையிட்டேனென்றான்.

பின்பும் சுவாமி கோபந் தணியாததால் முப்பத்துமுக்கோடி தேவர்கள், மற்ற மகரிஷிகளும் வந்து,

சுவாமி! கற்பினுக்கரசியைத் தப்பிதம் நினைப்பது சரியல்லவென்று, அநேகஞ் சமாதானஞ் சொல்லியுஞ் சுவாமியின் சீற்றமாறுததினால், சீக்கிரம் தேவர்களனைவோருஞ் சென்று, வைகுண்டபதவியிலிருக்கிற, தசரதரை விமானத்திலேற்றி வந்து, இராமசுவாமி முன்பாக விட்டார்கள்.

அப்போது தந்தையைக் கண்ட சுவாமி, சிக்கெனச் சென்று தண்டனிட்டார். தசரதர் உடனே சுவாமியை வாரி மார்புறத் தழுவி, மகனே! இராமா! நீ ஒரு குழந்தை பிறந்து இராட்சதர்களை யெல்லாஞ் சம்மாரஞ் செய்து, தேவர்கள் மற்ற மகரிஷிகளின் விபத்தைவிலக்கியபடியால், நான்உன்னை ஈன்றதந்தையென்று, எனக்குத் தேவர்களெல்லாம் வேணத்தக்க பணிவிடைசெய்ய, நான்பெற்றேனென்று ஆசீர்வாதம்பண்ணுகிறபோது, இலட்சுமணரும் வந்து நமஸ்காரஞ் செய்தார். அவரையும் வாரியெடுத்துத் தழுவிக்கொண்டிருக்கிறபோது, சீதா தேவியும் வந்து தெண்டம் பண்ணிநின்றவளை நோக்கி, அம்மா! தேவர்கள் சிறையை மீட்டும் பொருட்டாய் நீ வந்து இலங்கையிற் சிறையிருந்தாயென்று, உன்னை அமரர்கள் யாவரும் சதாதோத்திரஞ் செய்கின்றார்கள். ஏ இராமா! சீதாளைக் கிஞ்சிற்றும் வேறுபாடாய் நினைக்கவேண்டாம், நீங்கள்வந்து இன்றுடன் பதினான்கு வருஷங்களாயின, அயோத்திக்குப் புறப்படுங்க ளென்றார்.

## மீட்சிப் படலம்.

அப்போது சுவாமி எழுந்து ஐயா! நான்இரண்டுவரங் கேட்கின்றேன் அருள் செய்ய வேண்டுமென்றார். அப்படியே தருகின்றேன், அவை என்ன வரமென்று கேட்கச் சுவாமி சொல்லுகின்றார். அயோத்தி

யிற்றங்களுக்கு மரணம் சம்பவித்த போது, கைகேசி உமக்குப் பாரியல்ல வென்றும், பரதன் பிள்ளையல்ல வென்றும், வாக்குறுதி கூறி யிருந்ததை இப்போது, அவர்கள் பாரியும், பிள்ளையு மென்று, வரங்கொடுக்க வேண்டுமென்று, நிரம்ப வேண்டிக் கேட்டுக் கொண்டார். தசரதர் உனது வாக்கின்படியே தந்தேனென்று வரங்கொடுத்துத் தேவர்களுடன் தேவலோகஞ் சென்ருர்.

அப்பால் சுவாமி, இலட்சுமணர், மற்றயாவருங் கூடி ஓரிடத்தினின்று, இன்றுவரை பதினுன்கு வருஷஞ் சரியானபடியால், இன்று நாம் அயோத்திக்கு எழுந்தருளாதிருந்தால், பரதன், அக்கினியில் வீழ்ந்தும், குகன் கெங்கையில் வீழ்ந்தும், இறந்துபோவது நிச்சயம், ஆதலால் நாம் சீக்கிரம் போய்ச் சேரவேண்டிய, உபாய மெப்படி யென்று யோசிக்கும் பொழுது, இலங்கையி லிருந்த புட்பவிமானத்தை விபீஷணர் கொண்டு வந்து, சுவாமி முன்பாக நிறுத்திச் சுவாமி! இது முன் இராவணன் அளகாபுரியைக், கொள்ளையிட்டுக் கொண்டு வந்த விமானம், இதில் ஏறியவர்களுக்கெல்லாம், இடங் கொடுத்துப், பின்னும் ஒரு மூலை சும்மாஇடங்கிடக்கும். ஒரு நாளில் பிரயாணமாகிற வழியை, ஒரு நாழிகையிற் கடக்கும் இப்படிப்பட்டவிமானமிது என்று சொல்லிப் பணிந்தார்.

அதைக்கண்ட சுவாமி! விபீஷணரை மிகவுங் கொண்டாடி, நான் உமக்கு இலங்கைப்பட்டணந் தந்ததைவிட, நீர் இப்போது கொடுத்த விமானமே அதிகமென்று சொல்லி எல்லோரும் இந்த விமானத்திலேறுங்களென்று ஆக்ஞாபித்துச் சுவாமியும், இலட்சுமணரும், அம்மனும், விமானத்திலிருந்து கொண்ட பின்,

யாவரும் ஏறிக்கொண்டார்களோ வென்று சுவாமி சுக்கிரீவனைக் கேட்கச் சொல்லுநின்ருன்.

சுவாமி! அமர்க்களத்தில் வசந்தன் ஒருவனை மட்டும் கும்பகர்ணன் பூமியிற் றேய்த்துச் சிதைத்து விட்டதால், அவனும் அவன் சேனையாகிய இரண்டு வெள்ளமும், விமானத்திலேற வில்லை யென்று சொன்ஞன். அதைக்கேட்ட சுவாமிக்குச் சினம்பிறந்து, நன்ருயிருந்தது நாம் இந்தத் தேவர்களுக்காகப்பட்டபாட்டையுமறந்துநமது வசந்தனையும் வைத்துக் கொண்டார்களோ என்று, ஆக்கிரமிக்கிறதை யறிந்த தேவர்கள், ஓடிவந்து ஏபரந்தாமா! ஜகத்ரட்சகா! கிருபாநிதி! தயாநிதி! சுவாமி! தங்கள் சேனைத்தலைவனுகிய வசந்தன் எங்களிட மில்லை, மற்றெவ்வுலகி லிருந்தாலும் கணப்பொழுதில் அனுப்பி வைக்கிருேமென்று, மறுமொழிகூறிச் சென்றனர். அப்பொழுதே சுவாமி ஒரு நிருபமெழுதினர்.

எமதருமனுக்கு இராமச்சந்திரன் எழுதிய நிருபம் என்னவெனில்:- நாமும் நமதுசேனையுமாக இலங்கையிற்சென்று இராட்சதர்களுடன்போர்புரிகிறபோது, வசந்தனைக் கும்பகர்ணன் தேய்த்துக் கொன்றதால் இந்த நிருபங்கண்ட மாத்திரமே வசந்தனை அனுப்பி வைக்கவும். அப்படி யனுப்பாதிருந்தால் உன்னுடைய பதியையிழக்க நேரிடுமென்று எழுதி அனுமார் கரத்திலீய்ந்தார்.

சேவடியைப்பணிந்து அனுமார் அந்தநிருபத்தைவாங்கி, ஆகாயத்திற்கிளம்பி எமனண்டையிற்சென்று, நிருபத்தைக்காண்பிக்க, அதைவாங்கிப்பார்த்த இயமன் ஏ அனுமந்த தூயா! ஆஞ்சநேயா! உங்கள் வசந்தனை நான் இதுவரை இங்நவைத்திருக்க, எனக்குச்

சிரமேற் சிரமிருக்கிறதோ? வசந்தனிங்கு இல்லை என்றான். அவனைத்தன் வாலிற்கட்டிக்கொண்டு, எமனுலக முற்றுஞ்சுற்றிப் பார்த்து வருகிறபோது, நரகிற்கிடப்பவர்களைக்கண்டு, அரிகரிஇராமஜெயமென்று, அனுமார் சொல்ல, அம்மொழியைக் கேட்டவுடனே நரகவேதனைகளை நீங்கி யெழுந்தார்கள்.

அனுமார் எமனுடன் அவ்விடம் விட்டகன்று தேவலோகஞ் சென்று, தேவேந்திரனைச் சந்தித்து, எங்கள்வசந்தனெங்கே யென்றுகேட்க, இந்திரன் நாம் அறியோமென்றான். அவனையு மழைத்துக் கொண்டு, பிரமலோகத்திற்சென்று, பிரமனிடம்வசந்தனெங்கே யென்று கேட்க, அவரும் நாம் அறியோ மென்றார். அவரையும் அழைத்துக் கொண்டு, வைகுண்டஞ் சென்று பார்க்கிற போது, அங்குள்ள தேவகணங்கள் அனுமாரைக் கண்டு, நீர் இங்குற்ற காரணம் உரைப்பீரென, அனுமார் எங்கள் வசந்தனெங்கே யென்று கேட்டார். அப்போது வசந்தன் அதோ சாரூபம்பெற்றிருக்கின்றானென்று அழைத்து வந்துமுன்னே நிறுத்தினார்கள்.

வசந்தனோடு அனுமார் அவ்விடம் விட்டகன்று பிரமலோகத்தில் வந்து, வசந்தன் ஆக்கையைப் பிரமதேவனால் உண்டுபண்ணச் செய்து, பிரமதேவரிடம் விடைபெற்றுத் தேவலோகத்தில் வந்து, தேவேந்திரனிடம் விடை பெற்று, அப்பால் எமலோகம் வந்து, எமனையும் அங்கு இருக்கச் செய்து, விடை பெற்றுக் கொண்டு பூலோகத்தில் சுவாமியினண்டை வந்து, வசந்தனை நிறுத்தி, அனுமார்தெண்டனிட்டு நின்றார்.

அப்போது அனுமாருடைய வீர சூர பராக்கிரமங்களைச் சுவாமி மற்ற வானரச்சேனைகளும் நினைத்து

ஆச்சரியமுற்று, அனுமாரைப்புகழ்ந்துகொண்டாடிப், பிறகு வசந்தனும் இரண்டு வெள்ளஞ்சேனையும், விமானத்திலேறினார்கள். அந்த விமானம் எல்லோரையுஞ் சுமந்துகொண்டு, ஆகாயத்திற் றாவிப்போகிறபோது, யாவருந்திரும்பி இலங்கைப் பட்டணத்தையுஞ் சிறப்பையுங் கண்டு, ஆச்சரியமடைந்து, இப்படிக்கொத்த சீருஞ் சிறப்பும் வாய்ந்த இலங்கைச் செல்வத்தை, இராவணன் கெடுத்துக் கொண்டானே என்று பேசிக்கொண்டு, விமானத்தை வடக்கு முகமாகத் திருப்பினார்கள். அப்போது ஆகாயத்தில் விமானம்போகிறபோது சீதாபிராட்டியைச்சமீபத்தில்வைத்துக்கொண்டுசுவாமி சொல்லுகின்றார்.

ஏ சீதா! அதோ இலங்கைப் பட்டணந்தெரிகிறதுபாராய், இதோ நீ யிருந்த அசோகவனங் கண்டாயோ, இது தான் இராட்சதாள் படுகளம், அதோ நாங்கள் பாளையமிறங்கி யிருந்த பவளமால் வரையைப்பார், இதுவே நாங்களடைத்த திருவணை யென்று, விமானத்தைத் திருவணைக் கரையிலிறக்கி, இராட்சதாளும், மானிடரும், வருவதற்கும், போவதற்கும், வழிமார்க்கமில்லாமல், திருவணையைக் குறுக்கே அழித்து, ஒரு திடலுண்டு பண்ணிப், பத்திரகாளியைப் பிரதிஷ்டை செய்து, அதற்கு நூறுகாத வழிக்கிப்பால் திருவணையை அழித்து, அதில்ஒருவிக்நேச்சுரரைப்பிரதிஷ்டை செய்து, அதற்குத் தேவர்களைப் பூசிக்க வைத்து, அதற்கு மிப்பால் திருவணையை யழித்து, ஒரு வயிரவரைப் பிரதிஷ்டை செய்து அதற்கு மானிடரைப்பூசிக்க வைத்தார்.

## இராமலிங்கப் பிரதிட்டை.

பின் கெந்தமாதன பருவதத்தில் விமானத்தை இறக்கி, அவ்விடம் இராமலிங்கப் பிரதிஷ்டை செய்து பூஜைபண்ணி இராமசுவாமி இராவணன் முதலியோரைக் கொன்ற பிரமஹத்தி தோஷம் நீக்கிக்கொள்ளும் பொருட்டாக, அனுமாரைக் காசிலிங்கங் கொண்டு வரும்படி ஆக்ஞாபித்தார். அப்படியே அனுமார் விசுவரூபங்கொண்டு ஆகாயத்திற் கிளம்பிக் காசியைநோக்கிச் சென்றார். அவர் காசிலிங்கங் கொண்டு வருவதற்குள், நல்ல சுபமுகூர்த்தந் தப்பிவிடு மென்று, மகரிஷிகள் சொன்னபடியால், சீதையின் கரத்தினால் மணலை லிங்கமாகக் குவித்தாள், அந்த லிங்கத்துக்குத்தானே சுவாமி அபிஷேகமுஞ் செய்து, சோடசோப சாரத்துடனே பூஜை செய்து, யாவரும் தரிசித்தனர்.

இராமசுவாமிபக்தியாக அநேகதோத்திரஞ்செய்து அந்த லிங்கத்தை வணங்கி, வேண்டிய வரங்களும் பெற்று, இராவணனைக் கொன்ற பிரமஹத்தி தோஷமும் நிவிர்த்தித்துக் கொண்டுநின்ற, இராமசுவாமியை லிங்கத்தி லமர்ந்தருளிய பரமன், பிரசன்னமாய்க் கண்ணோக்கி, ஏ தசரத குமாரனாகிய இராமா! இப்போது இந்த லிங்கத்தை நீ பூஜை புரிந்தமையால், உனது நாமப்படியே இதற்கு இராமலிங்க மென்று, பெயரிடப் பெற்றது. இதில் தேவரேனும் மானிடரேனும் வந்து தீர்த்தமாடித் தெரிசித்த பேருக்குச் சகல பாவங்களுந் தீர்ந்து, வேண்டிய நன்மை பெறுவர் என்று வாக்களித்து, அந்த லிங்கத்திற்றானே உருக்கரந்தனர்.

இப்பால் இராமசுவாமி பிரமஹத்தி தோஷம் இராட்சியத்திற்பற்றாமல், பாதாளத்திலடைத்து, மேற்றளவரிசைபரப்பி, அதன்மீது என்றுங் காவலாகவயிர

வனை அமரச் செய்தார். அப்பொழுது அனுமார், காசிலிங்கம் கொண்டு வந்தவர், இக்குற்ற வர்த்தமானங்களால் மிகுந்தசினத்துடனின்றார். அதைச்சுவாமி கண்டு, ஏ மாருதி! நமது பிராணனைக் காத்தபேருக்கு, நாம் ஒருவஞ்சகமும் நினைப்பதில்லை, இப்போது நல்ல லக்கினம் போய்விடுமென்று, மஹாரிஷிகள் சொல்லிய படியால், இந்த லிங்கத்தை வைத்துப் பூஜித்தோம், இப்பால் நீர் கொண்டு வந்த லிங்கத்தையுங் கூடவைத்துப் பூஜிப்போம், நீர் மனதில் கிஞ்சிற்றுஞ் சலனமடைய வேண்டாமென்று சொல்ல, அனுமார், மனம் திருப்தி யடையாமல், அந்த இலிங்கத்தைப் பிடுங்கியெறிந்து, நான் கொண்டு வந்த லிங்கத்தைவைத்துப் பூஜியுமென்றார்.

அதைக்கேட்டுச் சுவாமி சுயம்பை நம்மால் பேதிக்கக் கூடாது, உம்மாலாகுமானால் பெயர்த்தெடுமென்றார். அப்போதுஅனுமார், ஆக்கிரமித்து, இரண்டுகரத்தினாலுங்கோத்து, லிங்கத்தை அசைத்துப் பார்க்கிறபோது, கிஞ்சிற்றும் அசைவுறாதிருந்தபடியால், மிகுதியுங் கோபத்துட னசைக்கிறபோது, அண்ட பிண்ட சராசரங்களெல்லாங் கிடுகிடென்று அசைந்ததேயல்லாமல், லிங்கம் அசைவு கொடுக்க வில்லை. பின்னும் அனுமாருக்குச் சினமும், ரோசமும் பிறந்து, இந்த லிங்கத்தின் பலமும், நம்முடைய பலமும், இனியல்லவோ அறியவேண்டுமென்று, அந்த லிங்கத்திற் றமது வாலை வளைய வளையமாகச் சுற்றி, இரண்டு கரத்தையும் பூமியிலூன்றிக் கொண்டு, மகாவிசைகொண் டிழுக்கிற போது, அனுமார் வால் உருவிச் சமுத்திரத்தின் ஓரத்

தில் வீழ்ந்தார். அவ் வாலிலிருந்து இரத்தப் பிரவாக மாகவும், மாருதிக்குச் சோபமுண்டாயிற்று.

அதைக்கண்ணுற்ற சுவாமி, மற்ற வானரவீரர்க ளெல்லாம் ஒகோ! மோசம் போனீரோ அனுமானே! என்று ஓடோடியும் வந்து, அனுமாரைத்தாங்கியெடுத் தார்கள். உடனே சோபந்தீர்ந்து, சுவாமியை வணங்கி நிற்கச் சுவாமி பார்த்து, ஏ ஆஞ்சநேயா! சுயம்புவை யாரேனும் பேதிக்க முடியுமோ? முன்னாள் கைலையங்கிரி யைப் பேர்த்தபோது, இராவணனடைந்த துன்பம், நீர் கேட்க வில்லையோ? யென்று வேண்டிய சமாதா னஞ்செய்து, அப்பால் நீர் செய்த அபசாரந் தீரும் படியாய்க் காசிலிங்கத்தை வைத்து நீர் பூஜியுமென்று திட்டப்படுத்தினார். அப்படியே அனுமார் பூஜித்தபடி யால் அதற்குஅனுமலிங்கமென்று பெயரிடப்பெற்றது.

அப்பால் அனுமாருக்கு மனக்களிப்புண்டாகும் படியாய், அனுமலிங்கத்திற்கு முந்தின பூஜையும், இரா மலிங்கத்திற்குப் பிந்தின பூஜையுமாகக் கட்டளையிட்டு, கோடி தீர்த்தங்களும், அபிஷேகத்திற்குத் தருவித்துத் தனுக்கோடியும், வில்லினாற் கீறி யுண்டுபண்ணி, இதில் ஸ்நானஞ்செய்து, இந்த லிங்கத்தைப் பூஜித்த பேருக் குக் கற்றுக்கொடுத்த வரை மறந்திகழ்ந்த துரோகம், விசுவாசபாதகம், இவை இரண்டும் நீங்கலாக, மற்ற பாவமனைத்தும் நீங்கிவிடு மென்று சுவாமி சொன்னார். அதை அம்மன் கேட்டு, சுவாமியைச் சரணாகதஞ் செய்து, சுவாமி! சகல பாவங்களுந்தீருகிற சேதுவில் ஸ்நானஞ் செய்தும், இகபர சாதனங்களுக்குக் காரண மூர்த்தியா யுள்ள, இராமலிங்கத்தைத் தெரிசித்தும், மேற்சொல்லிய இரண்டு பாவங்களுந் தீராதென்று சொன்னதென்ன? ஆதலால் அடியாள் பொருட்டாக

அந்தப் பாவங்களுந் தீருமென்று தாங்கள் வாக்கருள வேண்டுமெனப் பணிந்தாள்.

சுவாமி அகமகிழ்ந்து அப்படியே சகல பாவங்களுந்தீருமெனத் திருவாய் மலர்ந்தருளினர். அப்பால் அநுமார் விழுந்தவிடம், அநுமகுண்டமெனப் பெயரிடப் பெற்றது. இலட்சுமண தீர்த்தம், சீதா குண்டம், முதலிய தீர்த்தங்களோடு சுக்கிரீவன் மற்ற வானரச் சேனைகளனைவோரும், அவரவர் நாமப்படியே தீர்த்தங்களுண்டாக்கிக், கெந்தமாதன பருவதத்திலே நின்று, சுவாமி இலங்கையை நோக்கிக் கண்வளர்ந்தருளினர். அந்தத் திருவடித்தடம் சகலருங் காணலாயிற்று, அதன் பிறகு, சுவாமி, இலட்சுமணர், அம்மன், மற்ற வானரங்களெல்லாம் விமானத்திலேறிப் புறப்படுகிறபோது, அம்மனைக்கிட்ட இருத்திக்கொண்டு சுவாமி சொல்லுகின்றார்.

ஏ சீதா! நீ இலங்கையிலிருக்கிறபோது உன்னைத் தேடி அநுமானுடன் வந்த அங்கதன் மற்ற வானரங்களையெல்லாம் நிறுத்தி வந்த, மயேந்திரகிரி, இதோ யிருக்கிறது பாராய், அதோ அகஸ்தியர் சாகை யிருக்கிறது, இதோ நாம் இருந்த சித்திரகூட பருவதந்தெரிகிறது, அதோ வாலியிருந்த கிட்கிந்தா பட்டணமிருக்கிறது, இராவண னுன்னைத் தேரின் பேரில் வைத்துக்கொண்டு, இலங்கைக்குப் போகிறபோது, நீ பூண்டிருந்த ஆபரணங்களைக் கழற்றி யெறிந்த, மதங்கரிஷியின் மலையைப்பாராய், பம்பா நதியைப் பாராயென்று இப்படியே வடக்குமுகமாக ஆகாயத்தில் விமானம்போனது.

பரத்துவாசர் ஆச்சிரமம்.

சுவாமி ஒவ்வொன்றையுங் காண்பித்து, பரத்துவாசமுனிவரது ஆச்சிரமங்கண்டதும், விமானத்தைத் தணித்துக் கீழிறங்கி, அவரது ஆச்சிரமத்தை நோக்கி

வருகிறதை யறிந்த, பரத்துவாசர் எதிர்கொண்டுவந்து நின்ருர். அப்போது சுவாமி, இலட்சுமணர், சீதா, மூவரும் தண்டஞ் செய்தார்கள். அவர்களுக்கும் ஆசீர் வாதஞ் செய்து, அழைத்துப் போய்த் தமது ஆச்சிர மத்தில் அமரச் செய்து, இலங்கையில் நடந்த வர்த்த மானமெல்லாங் கேட்க, இராமசுவாமி சொல்லுகின் ருர்.

இப்பால் நாம் ஒன்றும் அறியோம், விபீஷண னும், இலட்சுமணனும், அனுமானுமாக, வானரச்சே னைகளை யழைத்துப் போய்த் திருவணைமுடித்து, இலங் கையிலுண்டாகிய இராட்சதாளை யெல்லாங் கொன்று, இந்திரசித்தின் பிரமாஸ்திரத்தாற் சகலரும் இறந்து போன காலத்தில், அனுமான் சஞ்சீவி கொண்டுவந்து யாவரும் பிழைக்கச் செய்தார். இலட்சுமணன், விபீஷ ணனுடைய போதனையால், இந்திரசித்தைக் கொன் ருன். அன்றே இலங்கைப்பட்டணம் அழிந்து போய் விட்டது, என்று சொன்னவுடனே, முனிவர் இம்மூவ ரையும் புகழ்ந்து கொண்டாடினுர். அப்போது இலட் மணர் சொல்லுகின்ருர். சுவாமி அவனசையாமல் அணுவசையுமோ? என்னுலான தொன்றுமில்லை, என் தமையன் மிகுந்த சினத்துடன் இலங்கையை நோக் கிக் கண்வளர்ந்தருளியதால், இரண்டாயிரம் வெள்ளம் இராட்சதாளும், இராவணனும், வெந்து சாம்பலாய்ப் போனுர்களென்ருர். அப்போது அனுமார் சொல்லு கின்ருர். சுவாமி! அந்த இராவணன், மகா வரம்பெற்ற பலவான், அவன் இலங்கையிற் சென்றும், தன் கற் புக்கு இடையூறு ஏற்படாமற் காத்துக் கொண்டபடி யால், அம்மன் கற்புத்தீயானது, இலங்கையைக் கொ ளுத்தி, இராவண இராட்சதாளையுந் தீய்த்துவிட்ட

தென்றுசொன்னர். முனிவர் அம்மா தாயே! எங்களின் றுயரத்தை நீக்கும்பொருட்டாய் நீ இலங்கையிற் சிறையிருந்து மிகுதுயருற்றுயோ? என்று மிகவும் பிரியவசனங்களாற் புகழ்ந்தார்.

அப்போது சுவாமி, அனுமாரை நோக்கி ஏ அனுமானே! நீரொருஜீவனிருக்கும்பொழுது, எல்லோரும் தத்தம்வல்லபம் பேசிக்கொள்ளலா மென்று, இலங்கையினுடைய, வர்த்தமான மெல்லாம் பேசிமுடிந்தபின்பு, பரத்துவாசரிஷி, நீங்களெல்லோரும் இளைப்பாயிருக்கிறீர்கள், நமது ஆச்சிரமத்தில் விருந்துண்டு போகலாமென்று சொல்லி, நேமநிஷ்டைகளை முடித்துக் கொள்ளுங்க ளென்றுர். அப்பொழுது இராமசுவாமி தீர்த்தமாடி ஜெபதவ முடித்துக் கொண்டு, அனுமாரை யழைத்து, ஏ அனுமானே! இன்று வரை நாம் பரதனிடஞ் சொல்லி வந்த, பதினன்கு வருஷம் சரியாகிறது, இன்று நாம் அயோத்திக்குப் போகா திருந்தால், பரதன் அக்கினியில் வீழ்ந்தும், குகன் கெங்கையில் வீழ்ந்தும், இறந்துபோய் விடுவார்கள். ஆதலால் நீர் இப்போதே விரைவிற் சென்று, இன்று பரத்துவாசமுனிவரது ஆச்சிரமத்தில் விருந்துண்டு, நாளை வருவார்களெனச் சொல்லிச் சீக்கிரம் நீர் போஜனவேளைக்குவரவேண்டு மென்றுர்.

அப்படியே சென்று வருகின்றேனென்று, அனுமார் விடைபெற்றுச் சூடாமணியும் வாங்கிக் கொண்டு, ஆகாயத்திற்றுவி, அயோத்தியை நோக்கிப் போகிறபோது, கெங்கையிற் குகனனவன், சுவாமிவனஞ்சென்றவர், இன்று வரை பதினன்காண்டு சரியாய் முடிந்தும் வாராததினுல், ஏதோ சுவாமிக்குத் தீங்கு நேர்ந்திருக்க வேண்டுமே யொழிய வேறல்ல, ஆதலால் நான்

இறந்துபோக வேண்டு மென்று, தன் மனைவி மக்களு டன் ஓடத்திலேறிக், கங்கைக்கரையில்வந்து, ஓடத்தை வெட்டித்தாழ்த்துவதாய், ஆயுதத்தைச் சிரத்திற்குமேற் றூக்கி வெட்டு விழுமுன்னே, அனுமார் ஸ்ரீ இராம! இராம! இராமஜெயமென்று, அந்த ஆயுதத்தைப்பறித் து எறிந்து, ஏ குகப்பெருமானே! சுவாமியும், அம்ம னும், இலட்சுமணரும், சரீரசுகத்துடன் வந்து சேர்ந் தார்கள். அதோ பரத்துவாச முனிவரது ஆச்சிரமத் தில் வந்து விருந்துண்ண இருக்கிறார்கள். நாளைவரு வார்களென்று சொன்னதுடன் இதோ பாருமென்று சூடாமணியுங் காண்பித்து, நான் பரதாழ்வாரிடஞ் சென்று வருகின்றேனென்று, ஆகாய மார்க்கமாய்த் தானே அயோத்திக்குச் சென்றார்.

குகனும் ஆனந்த மகிழ்வுடன் தோணிவிட்டி றங்கி, வழிகளெல்லாம் சுத்தஞ் செய்து கொண்டு நின் றான். இப்பால் அயோத்தியில் நடக்கிற வர்த்தமானம் எப்படி யென்றால்:—நந்திக்கிராமத்தி லிருந்த பரதன், மிகவுந் துக்க மடைந்து, சுவாமி வனஞ்சென்று பதி னான்கு வருஷங்கள் இன்றுடன் சரியாயிருக்க, இன் னும் வரவில்லையே, ஐயோ! விதியே! வனத்தில் அவர் களுக்கு என்ன ஆபத்து நேர்ந்ததோ, அதனாலல் லவோ, எனக்குச் சொன்ன கெடுப்படி வரவில்லை, ஆத லால் இனிமேல் என் பிராணத்தியாகஞ் செய்து கொள் வது நிச்சயமென்று, அக்கினி வளர்க்கச் சொல்ல, அது போல் அக்கினி வளர்த்தார்கள்.

இது விஷயம் அயோத்தியிலிருக்கிற சத்துருக் கனுக்கும், தாய்மார்களுக்கும், மந்திரி மற்ற பிரதானிக ளுக்குந்தெரிந்து, சீக்கிரம் ஓடி வந்து, தாய்மார்கள் அப்பா பரதா! தன் றமையனையுந் தம்பியையும், சீதை

யையும், வனத்தி லனுப்பிவிட்டு, நீயும் அக்கினியில் வீழ்ந்திறந்தால், எங்களுக்குத் துணை யாரிருக்கிறார்கள்? மகனே! வனஞ் சென்றவர்கள், இன்றுவரக் கிஞ்சிற்று தாமதித்தால், நாளை வந்து சேருவார்கள். ஆதலால் நீ, இறப்பது சரியல்லவென்று, வேண்டிய சமாதானஞ் செய்தும், பரதர் சிறிதேனும் கவனியாமல், அம்மா தாய்மார்களே! நானிறந்தால் தம்பி சத்துருக்கனுக்குப் பட்டங்கட்டி வைத்துக்கொண்டு இராச்சியத்திற் சுகமாயிருங்கள். என்னிடம் என் றமையன் பதினுன்காண்டில், வருகிறேனென்று சொன்ன உறுதிமொழிப்படியே, விக்கினமில்லாதிருந்தால் வந்துசேருவார், ஏதோ வனசஞ்சாரத்தில், விபத்து ஏற்பட்டதாலல்லவோ, இன்னும் வரவில்லை, ஆதலால் நான்அவரிடம் செப்பியபடி, அக்கினியில் வீழ்ந்திறப்பது நிச்சயமென்றார். அதைக் கேட்ட சத்துருக்கன் அடித்து விழுந்து அழுது அண்ணா! நீர் அக்கினியில் வீழ்ந்து இறப்பதற்குள், அடியேன் என்கரத்திலிருக்கிற ஆயுதத்தால் இறந்து போகிறேனென்று, வாளை ஓங்கினான். திடீரெனப் பக்கத்தில் நின்ற மந்திரிகள், வாளைப்பிடித்துக் கொண்டு, உமது புத்தியும், தைரியமும், இத்தகையதோவெனச் சமாதானஞ் சொல்லிக் கொண்டு நிற்கிறபோது, அவர்கள் குருவாகிய, வசிஷ்ட முனிவருக்கு இச்சம்பவந் தெரிந்து, ஓடோடியும் வந்து, ஏ பரதா! நீ சிறுபிள்ளைப்புத்தி விட்டாயில்லை, இராமன் இன்று வராதிருந்தால் நாளை வருகிறான், இதுவே யொருபாரமான காரியமென்று, நீ இப்போது செய்யத் துணிந்ததை நான் உத்தேசிக்குமளவில் ஏதோ விந்தையாகவல்லவோ இருக்கிறதென்று சொன்னார்.

58

அதைக்கேட்ட பரதன் ஏ குலகுருவாகிய முனிவரே! எமது மரபினோர்களில், தாய் தந்தையர் சொற்றுறந்தவனும், தன்வசனம் பொய்த்தவனு முண்டோ, எனது தலைமுறையில், இப்படிச் சொன்னவாக்கு நான் புரளலாமோ? அது கூடாது, நான் அக்கினியில்வீழ்ந்திறப்பது நிச்சயமே யென்று, அக்கினியி னண்டை சென்றார். அப்போது அயோத்தியாபுரி மந்திரி பிரதானி, மற்றசைன்யங்களும், உமதுகூடவே நாங்களும் அக்கினியில் விழுகிறோமென்று, புறப்பட்டார்கள். நீங்கள் யாரிறந்தாலும், இருந்தாலும், என்ன? நான் என்றமையனிடம் சொன்ன வாய்மை மொழிப்படியே, அக்கினியில் வீழ்ந்திறப்பது நிச்சயமென்று, அக்கினிக்குழியினண்டை வந்து பிரதட்சணமாக, இரண்டு முறை வந்து மூன்றுமுறை வருகிறபோது, ஆகாய மார்க்கமாக வந்த அனுமார் ஸ்ரீ இராமஜெயம்! இராமஜெயம்! இராமஜெய மென்று, தோத்திரஞ் செய்து கொண்டு, அந்த அக்கினிக்குழியிற் குதித்து, அக்கினியைக் காலினாலுங் கையினாலுந் தேய்த்துத் தள்ளிவிட்டுப் பரதரைத் தெண்டனிட்டுச் சொல்லுகின்றார்.

விருத்தம்.

அய்யன் வந்தன னாரியன் வந்தனன்
மெய்யின் மெய்யனை னின்னுயிர் வீடினால்
உய்யு மேயவ னென்றுரைத் துட்புகாக்
கய்யி னாலெரி யைக்கரி யாக்கினான்.

ஆக்கி மற்றவ னய்மலர்த் தாள்களைத்
தாக்கத் தன்றலை தாழ்ந்து வணங்கிக்கை
வாக்கிற் கூடப் புதைத்தொரு மாற்ற நீ
தூக்கிக் கொள்ளத் தகுமெனச் சொல்லினான்.

வசனம்.

இதோ இராமசாமியும், இலட்சுமணரும் அம்மனுஞ், சுகமாய் வருகிறார்கள். இதோ பரத்துவாச முனிவரது ஆச்சிரமத்தில் வந்து, முனிவரது வாக்கைத் தட்ட வொண்ணாமல், விருந்துக்குச் சென்றிருக்கிறார்கள். இப்பொழுது வந்து சேருவார்கள். என்னை இவ்விடத்துக்கனுப்பி, முதலிற் றங்களிடம் தெரிவித்து வரும்படி ஆக்ஞாபித்தா ரென்றுஞ் சொல்லிச், சுவாமி கொடுத்த சூடாமணியுங் கொடுத்தார். அதைப்பரதன் வாங்கிச் சிரமேல் வைத்துக்கொண்டு, ஆனந்தமகிழ்ச்சியானார். அப்போது தாய்மார் மூவரும் வந்து, அப்பா மகனே! எங்களுக்குப் பிராணதாரை வார்த்தது நீயேயல்லாமல், வேறொரு தெய்வமுண்டோ? நீ யார்? உன்னுடைய நாமதேயமென்ன? அந்த வரலாற்றைச்சொல்லுமென்று கேட்டார்கள்.

அதற்கு அனுமார் சொல்லுகின்றார். நான் அஞ்சனாதேவி பயின்ற வாய்வு குமாரன், என் பெயர் அனுமான், இராமசுவாமிக்கு ஊழியஞ் செய்கிற தொண்டனென்றார். அவர்களில் கௌசலாதேவியாள், அப்பா அனுமசிகாமணியே! என் மக்களும், மருமகளும், நன்றாயிருக்கின்றார்களோவென்று பின்னுங்கேட்டவுடனே ஆமாம் அம்மா! அவர்கள் மிகுந்த சந்தோஷத்துடன் வந்து சேர்ந்தார்கள். சுவாமி, அம்மன், இலட்சுமணர் மூவரும் வனசஞ்சாரத்திற் பட்ட கஷ்டங்கள் மெத்தவுண்டு, அவைகளை நான் இப்போது சொல்ல வென்றாற் றாமசமாகும். நான் அவ்விடம் போய்ச்சேரவேண்டும், ஆனால் சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேளுங்களென்று, சொல்லலுற்றார்.

சுவாமியையும், இலட்சுமணரையும், அம்மனை யும், நீங்கள் சித்திரகூட பருவதத்தில் கண்டு வந்தீர்க ளல்லவோ, அதன்பிறகு, மூவரும் புறப்பட்டுத் தெற்கு நோக்கிப் போகிறபோது, விராதனென்ற இராட்சதன், சீதையம்மனை யெடுத்துக் கொண்டோடினன், அவனை யுஞ் சம்மரித்து, அப்பாற் சரபங்கருக்கு மோட்சமளித் துத், தண்டகாரண்யத்தி லிருக்கிறபோது, தவசிரேட் டர்கள் கண்டு, இராவண இராட்சதாள் உபத்திரவம் தீர்த்து எங்களை ரட்சிக்க வேண்டுமென்று, அபயமிட் டார்கள். அவர்களுக்கு அபயாஸ்தங் கொடுத்து, அப் பால் அகத்தியரைக் கண்டு, வில்லும் அஸ்திரங்களும் வாங்கி, அப்பாற் சென்று, பஞ்சவடியிற் பன்னகசாலையு மமைத்து, அதிலிருந்து வாசம்பண்ணிவருகிறபோது; இலங்கை யாளுகிற இராவண இராட்சதனுடைய தங் கை சூர்ப்பநகை வந்து, அம்மனை யெடுத்துப் போகப் பன்னகசாலையி னுழைந்தாள், அதைக்கண்டு இலட்சு மணர், அவளை அங்கபங்கம் செய்து விட்டார், அவள் கரன், தூஷணன், திரிசிரன், இவர்களிடம்போய்முறை யிட்டு, அநேகம் இராட்சத வீரர்களோடுவந்து எதிர்த் துச்சண்டைசெய்து சுவாமியின் ஓர் அஸ்திரத்தாலிறந் தார்கள்.

அதன் பிறகு சூர்ப்பநகை ஓடோடியும் இலங் கையிற் சென்று, இராவணனிடம்முறையிட, அவனும் ஒரு மாயமானைக் காண்பித்து, மயக்கஞ்செய்தபடியால், சுவாமியும், இளையவரும், தனித்தனியே மானின்பிறகே செல்ல, அப்பொழுது பக்கத்தினின்ற இராவணன், சீதை யம்மனை எடுத்துக்கொண்டுபோய், இலங்கையின் அசோக வனத்திற் சிறைவைத்து விட்டான். பின்பு சுவாமிவந்து, பன்னகசாலையைப் பாக்கிறபோது பன் னகசாலையுடன் சீதையம்மனைக்காணுதினல் வெகுதுயர

முற்றுத்தேடி வருகிறவழியிற் சடாயுவைக்கண்டுகேட்க அவர் யாவுஞ்சொல்லி உயிரை விட்டார். அவரைத் தகனஞ் செய்து அவ்வனமெங்கினுந் தேடித் தெற்கு நோக்கிப் புறப்பட்டு, அடியேனும், எங்கள் எஜமான் சுக்கிரீவனுமிருந்த மதங்கரிசிமலையில்வந்து, முகவாட்டமாக விருப்பதை நான் கண்டு, அடிமையாகிச், சுக்கிரீவராஜாவையுஞ் சுவாமிசொன்ன புத்தி கேட்கும்படிச் செய்து, மற்றவானரங்களுடன், தெற்குநோக்கிச்சென்று, மலைகளாற் கடலையுமடைத்துப், பவளமால் வரையிற் பாளைய மிருந்து, இராட்சதாளுடன் போர்புரிந்து, யாவரையும் வதைத்து, இராவணனையுஞ் சிதைத்து முன்னமே இராவணன் றம்பி விபீஷணன் சுவாமியிடம் அடைக்கலம் வந்தடைந்தவனுக்கு, இலங்கைப் பட்டணம், அரசாளும்படிக்கட்டளையிட்டுச் சீதையம்மனையுஞ் சிறைமீட்டித் தசரதரையும் பார்த்து, இப்பால் அயோத்திக்கு வருகிறபோது, இராவணனைக் கொன்ற பிரமஹத்தி தோஷம் நீங்க, இராமலிங்கப்பிரதிஷ்டையுஞ்செய்து, பூசித்து, மீண்டு வருகிறபோது பரத்துவாசமுனிவர் கண்டு விருந்துண்டு போகலாமென்று, நிறுத்தி விட்டார்.

இன்னும் பாதாள இலங்கையி லிருந்த மையரக்கனால் ஏற்பட்ட விபத்துகள் நிரம்பவுண்டு, அவைகள் சொல்ல இப்போது நேரமில்லை, நான் விருந்துக்குப் போக வேண்டும் என்று, விடை பெற்று, ஆச்சிரமம் நோக்கி ஆகாயமார்க்கமாய்ப் புறப்பட்டுச் சென்றார்.

அதைக்கண்ட சகலரும் இவன் தேவனேயல்லாமல் வேறல்ல; இவனால் அவர்களுக்கும் வெகு உதவியுண்டென்று, பேசிக்கொண்டு, பிறகு சுவாமி வருகிறாரென்ற குதூகலத்தால் பட்டணமெல்லாஞ் சிங்காரிக்கச் சொல்லி, ஆரவாரஞ் செய்தார்கள்.

அப்பால் அநுமார் ஆகாயமார்க்கமாகப் பரத்துவாச ராச்சிரமத்தை நோக்கி வருகிறபோது, பரத்துவாசமுனிவரும், தமது பன்னகசாலையில், இராமசுவாமி, இலட்சுமணர் சீதையம்மன், விபீஷணர், மற்றயாவரையும் பந்தியாக இருக்கச்செய்து, மந்திர தியானத்தினாலே, தேவலோகத்திலிருக்கிற காமதேனுவை வரவழைத்து, அந்தப் பந்திக்குள்ளே நிறுத்திக்கொண்டு, அதனிடமாக, அவரவர்களுக்கும் தலைவாழையிலை போட்டுச், சகல பதார்த்தங்களுடன். அமுது படைத்து, அருந்தும்படி உபசாரஞ்செய்தார்.

அப்போது சுவாமி அமுது புசிக்கக் கிஞ்சிற்றுத் தாமதித்தார். அதைக்கண்ட முனிவர் போஜனஞ்செய்யுமென்றார், அதைச் செவியேற்ற சுவாமி, என் பிராணனாகிய அநுமான் வரவேண்டுமென்றுசொல்லுமுன், அநுமாரும் வந்து சேர்ந்து, அடியேனுக்கு இடமெங்கே என்று கேட்கச், சுவாமி அநுமாரைச் சமீபத்தில் வைத்துக்கொண்டு, தமது இலையிருக்கிற அமுதிற்பாதி, தன் கரத்தாற் கீறிக்கொடுத்துச் சாப்பிடுமென்றார். அதை அநுமார் வாங்கி, அங்குற்ற யாவர் இலையிலும் பரிமாறித்தானுமுண்டு; கால் கரங்களைச் சுத்தஞ்செய்துகொண்டு, யாவரும் ஓரிடத்திலிருந்து; அடைகாய் வெள்ளிலை யருந்திச், சந்தனஞ்சவாது திமிர்ந்து, சந்தோஷமாகவிருந்தார்கள்.

அப்போது அந்தச்சபையிலிருந்த இலட்சுமணருக்கு நித்திரையும் ஆயாசமு மேற்பட்டுக், கண்ணைச் சொக்கியபடியால் கலகலவென்று நகைத்தார். அதைக் கண்டவர் முகங்களை யேறிட்டுப் பார்த்துக் கொண்டு தலைகவிழ்ந்து யோசனைசெய்தார்கள். அது எப்படி என்றால்:—

விபீஷணர் எண்ணியது:- நாம் தமையனைக் கொல்லும்பொருட்டாய்ச் சத்திராதியிடம் அடைக்கலம் புகுந்து, தமையனைக்கொன்று, தான் அரசியற்கமைந்தானென்று, நம்மை நினைத்துத்தான் நகைத்தாரோவென்று ஆலோசித்தார். சுக்கிரீவன்எண்ணியது:— நாம்தமையனைக் கொல்லுவதற்குத், தக்க பலசாலியிடஞ்சேர்ந்து, சில சோதனையும்பார்த்துத், தமையனைக்கொன்று, தான் பட்டத்துக் கிருந்தானென்று, நம்மை நினைத்துத்தான் நகைத்தாரோ வென்று நினைத்தான். அங்கதன், பிதாவைக்கொன்ற சத்துருவுக்கு ஊழியஞ் செய்கின்றனே என்று. நகைத்தாரோவென எண்ணியும்.

அநுமார், முன் மதங்கரிஷி மலையில் சுவாமி, மராமரம் எய்கிறபோது; வில்லின் ரீங்காரத்தால் வானரங்கள் அஞ்சி, மலைக்குகையிலோடி ஒளிகிறபோது; நாமும் மனந்திடுக்கிட்டு நாலடிபின் சென்றோமே, அந்த வீரக்குறையை நினைத்து நகைத்தாரோ? அல்லது காசிலிங்கங்கொண்டு வரத், தாமதித்ததால் நகைத்தாரோ? பின் லிங்கத்தைப் பிடுங்கிவிடுகிறேனென்று, பராக்கிரமம் பேசி, நிலமதிர வீழ்ந்த வெட்கக் கேட்டை நினைத்து நகைத்தாரோ? வெனப் பலவாறு சிந்திக்க.

சீதாபிராட்டி, நாம்இராட்சதனிடம்அகப்பட்டுச் சிறையிலிருந்து, பின்பு இனத்திற் சேர்ந்தோமென்று நகைத்தாரோ? வெனவும், இராமசுவாமி, இராட்சதன் கொண்டுபோன சீதையை, நாம் திரும்பக்கூட்டி வந்தோமென்று எண்ணி நகைத்தானோ வெனவும், இப்படி யாவரும் தங்கடங்கள் மனங்களிலெண்ணிக் கொண்டு, சுவாமியின் முகத்தைப்பார்க்க, சுவாமி இலட்சுமணரை நோக்கித், தம்பி! இலட்சுமணா! இச்சபையில் நீ நகைத்த காரணமென்னவென்று கேட்க, இலட்சுமணரெழுந்து பணிந்து சொல்லுகின்றார்.

சுவாமி அடியேன் இந்தப் பதினன்கு வருடமும் ஆகாரமும் நித்திரையு மில்லாமலிருந்தது தங்கள் சித்தம் அறியுமே.

இப்போது போஜனஞ் செய்தவுடன், கொஞ்சம் ஆயாசமும், நித்திரையும், ஏற்பட்டுக், கண்ணைச் சொக்கியதால் நகைத்தேனேயல்லாமல் வேறல்லவென்ருர். அதைக்கேட்ட சுவாமியும், மற்ற யாவரும், தாங்கள் எண்ணியவைகளை விட்டு முகமலர்ச்சியுடன், அகமகிழ்ந்திருந்தார்கள்.

அப்பால் அன்று பரத்துவாசமுனிவரது ஆச்சிரமத்திலிருந்து, மற்ரு நாள் அயோத்திக்கிப் புறப்பட வேண்டுமென்று, சுவாமி, திருவுளம்பற்றினர். அப்போது ஜானகியார். விபீஷணர் சுக்கிரீவன் மற்ற வானரங்களையும் நோக்கி, நாம் அயோத்திக்குச் செல்ல வேண்டுவதால், நீங்களனைவரும் தங்கடங்கள் ரூபம் விட்டு மானிட ரூபங்கொள்ள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். அப்படியே யாவரும் மானிடவடிவாயினர். அப்பால் சுவாமி, இலட்சுமணர், சீதா, மற்றவர்களும், பரத்துவாசரிடம் விடைபெற்று, விமானத்திலேறிப் புறப்பட்டு அயோத்திக்கி வருகிறபோது, கங்கைக் கரையினின்று, ஆகாயத்தை நோக்கித்தோத்திரஞ்செய்து கொண்டு நிற்கிற, குகனைக்கண்டு, விமானத்தைத் தணிக்கக், குகன் சுவாமி பாதத்தில் வீழ்ந்து நமஸ்காரஞ் செய்தான். அவனுக்கு ஆசீர்வதித்து, ஏ. குகனே! நீ வேடர் வம்மிஷத்திலுதித்தவனுயினும், எமது பால் மிகுந்த அன்பு பாராட்டியதால், நீ மிகுந்த பாக்கியசாலியாய் வாழ்வதுடன், உனக்கு இன்று முதல் குகப்பெருமானென்றும் நாமமிட்டோமென்று சொன்னர்,

அதைக்கேட்ட குகப்பெருமானும் ஆனந்த மகிழ்வுடனின்ருன். அப்பொழுது அந்த விமானத்தில் அவனையுமேற்றிக் கொண்டு விமானம் ஆகாயத்திற் கிளம்பி, அயோத்திக்குச் சென்றது. அப்பால் அயோத்தியிலுண்டான சகலரும், தங்கடங்கள் இல்லத்தின் சுபகாரியக்கொண்டாட்டம் போல் எண்ணி, அவரவர் வீட்டின் முன்பாகக் காவணங்கள் போட்டுச் சிங்காரித்துக் கொண்டு நிற்கிறவர் சிலர், உடை உத்தரீயம், ஆபரணங்கள், புதிதாயணிகிறவர் சிலர், கோட்டை, கொத்தளங்கள், உப்பரிக்கை, பலகணி வாசல்களினின்று, சுவாமி தெற்கே யிருந்து வருவாரென்னும் குதூகலத்தால், தெற்கு நோக்கிப் பார்த்துக் கொண்டு நிற்கிறவர் சிலர், இப்படியாய்ப் பட்டணத்துச் சனங்களனைவோரும் வெகு கெம்பீரமாக நின்ருர்கள்.

அப்போது சுமந்திரனுகிய மந்திரி, பிரதானி, மற்ற இராஜாக்கள், கருணீகர் முதலாகிய சகலரும், இரத கெஜ துரக பதாதிகளோடு பரதனுஞ், சத்துருக்கனும், வெளியே புறப்பட்டு, மேள வாத்திய முழங்க, இராமபிரான் வருகிற திசையை நோக்கிச், சிரத்தின் மீது இருகரத்தையுங் குவித்து நின்ருர்கள். ஆகாயமார்க்கமாய் விமானத்தில்வருகிற சுவாமி கண்டு, அகமகிழ்ந்து விமானத்தைத் தணித்தார். அப்போது இருவகைச் சேனைகளும் ஒன்ருய்க் கலந்து, கொண்டாடப், பரதன் ஓடி வந்து அடியற்ற மரம்போற் சுவாமி பாதத்தில் வீழ்ந்து தெண்டம் பண்ணினன். அவனைச் சுவாமி தாங்கி யெடுத்து மார்புறத் தழுவிக் கொண்டு, நிற்கிறபோது, சத்துருக்கன் வந்து தெண்டனிட, அவனையுந்தழுவி இருவருக்கும் ஆசீர்வாதஞ் செய்தார்.

அப்போது சுமந்திரனாகிய மந்திரி, பிரதானி, மற்ற இராஜாக்கள், யாவரும் வந்து இராமபிரானையும் இலட்சுமணரையும், பிராட்டியையுந் தெண்டஞ் செய்தார்கள். அவர்களுக்கும் அருள் கொடுத்து நிற்கிறபோது. யானையின் பேரில் அம்பாரி வைத்தும், நவரத்னப் பல்லக்கு அலங்காரஞ் செய்து கொண்டு வந்தார்கள். அப்பொழுது தனக்குத்தானே உவமைவாய்ந்த இராமச்சந்திரமூர்த்தியும், இலட்சுமணப்பெருமானும், யானையின் பேரிலெழுந்தருள, பரதன், சத்துருக்கன், இருவரும் இராஜவரிசையாகப் பல்லக்கைந் தொட்டு வர, மேளவாத்திய முழங்க, மற்ற சேனைகளோடும் அயோத்தியாபுரியை வலஞ்சுற்றிப் பட்டணப் பிரவேசம் வந்தார்கள்.

வரும்போது ஆலாத்திப் பெண்களுக்கு இடமில்லாது சலனப்படுகிறதைச் சுவாமி கண்ணுற்று, யானையை நிறுத்திச், சந்தடியை விலக்கி, ஆலாத்தியைக் கண்ணுற்பார்த்து, அவர்களுக்கு வேண்டியசெல்வங்களைக் கொடுக்கும்படி கட்டளையிட்டு, அரண்மனை வாசலில் வந்து இருவரும்யானையை விட்டிறங்கி, ஆங்காங்கு அவரவர்களையும் நிறுத்தி விட்டு, அரண்மனைக்குட்போகிறபோது, இராமபிரானை யீன்ற கௌசலாதேவி திடுக்கிட் டோடிவந்து, என்னிருகண் மணியே! அப்பா! இராமா! வந்தாயோஎன்று, மார்புடன் அணைத்துக்கொள்வதற்கு முன், மாதாவின் வதனத்தை நோக்கிய சுவாமி, தாயார் அமங்கிலியமா யிருப்பதையும், வெகுநாள் விட்டுக் காடுறைந்தபடியாலும், உடம்புபதறிப்பாதத்தில் வீழ்ந்து தெண்டம் பண்ணுவதற்குமுன் தழுவி யணைத்துக் கொண்டு இராஜாவை நினைந்துதுக்கித்தாள். அப்பொழுதுகைகேசிவந்து, அப்பாஇராமா!

வந்தாயோ? உன்னை வனத்திற் றுரத்திய பாவியாமென் முகத்தில் விழித்தாயோ? மகனே! என்று செப்பிய கைகேசி பாதத்தில் வீழ்ந்து, நமஸ்காரஞ் செய்து தாயே! அவ்வசனம் பகரவேண்டாம், தாங்கள் வனவாசம் போய்வாவென்றதால், தேவர்களினிடுக்கந் தீர்த்துப், பின் தங்களுக்குச் சேயனுகவும் வந்து சேர்ந்தேன் என்றூர். அக்கணம் சுமித்திரை வந்தாள், அவளையுஞ் சரணஞ் செய்து, நிற்கிறபோது, தாய்மார்கள் மூவருக்கும், இலட்சுமணர் கரங்குவித்தார். அவருக்கு ஆசீர்வாதஞ் செய்தார்கள். பின் சீதாப்பிராட்டியார், மாமிமார் மூவர்களையுஞ் சரணஞ் செய்து, யாவரும் ஆனந்தமகிழ்வுற்றிருக்கும் போது, கூனியானவள், இராகவன் முன்னே வருவதற்கு நாணத்துடன், ஓர் தூணின் மறைவினின்றூள். சுவாமி அவள் மனதறிந்து, ஏமந்தரை! நீ வேறென்றும் யோசிக்க வேண்டாம், உன்னுடைய கோட்பாட்டின்படி, அமரர்கள் இடுக்கந்தீர வேண்டியிருந்ததால், நீ நல்ல வரம்பெற்றவ ளென்றூர்.

யாவரும் சரிசரி என்று ஆமோதித்துச் சந்தோஷமாக விருந்தார்கள். அப்பொழுது சூரிய வம்மிசத்திற்குக் குருவாகிய வதிஷ்டர் விசுவாமித்திரர், மற்ற மஹரிஷிகளெல்லாம் அரண்மனைக்கு வருகிறதறிந்து, இராகவன் எதிர்சென்று தெண்டஞ் செய்து, அழைத்துவந்து, அவரவர்க்கேற்ற ஆசனங்களி லமரச்செய்தார். அப்போது வதிஷ்டர், சுவாமியை நோக்கி, ஏ இராமா! நீ யொரு குழந்தைபிறந்து, பூலோகம், தேவலோகத்தையும், நிலைநிறுத்தும் பொருட்டாய் இலங்கையில் வெகு அவஸ்தை யடைந்தாயோ வென்று கேட்க, சுவாமி அரக்கனுல் பட்ட கஷ்டங்களையும் போர்புரிந்த திறமையையும் சொல்ல யாவருங் கேட்டு அகமகிழ்ச்சியுட னிருந்தார்கள்.

அப்போது சுமந்திரனாகிய மந்திரி பிரதானி மற்றனைவோருங்கூடி ஆலோசித்து, மகளும் மருகனும் வனஞ் சென்றார்களென்று, மாறாக் கவலையுட னிருக்கின்ற மிதிலைநகர்க் கரசனாகிய ஜனகராஜாவுக்கு, இராமபிரானும், பிராட்டியாரும், அயோத்தி நகரில் வந்து சேர்ந்தார்களென்று, ஒரு நிருபம் எழுதி ஒரு தூதன் வசம் அனுப்பினார்கள். அந்தத் தூதுவன் கடுநடையுடன்சென்று, மிதிலைநகர் அரண்மனைமுன்பாகநின்று நிருபத்தைக் கொடுத்தான். அந்த நிருபத்தை வாங்கி அரசன் பார்த்ததும், துயரம் நீங்கிக் குதூகலமேற்கொண்டு, வந்த தூதுவனுக்கு வேணத்தக்க பரிசு கொடுத்தனர்.

உடனே அயோத்திக்குப் புறப்பட வேண்டுமென்று, மந்திரியிடம் ஆக்ஞாபிக்க, அதுபோல் இரதம் அலங்கிருதஞ் செய்து சிவிகையுங் கொண்டுவந்தான். இரதத்திற் ஜனகராஜாவும், சிவிகையிற்றேவியும், ஆரோகணித்துக் கொண்டு, மந்திரிமார், மற்ற சைனியங்களோடும் புறப்பட்டு அயோத்திக்கு வருகிற செய்தி இராமபிரானுக்குத் தெரிந்து, எதிர்சென்றழைத்து வந்து ஆசனத்திருத்தினார். அப்போது பிராட்டியார் மாதா பிதாக்களைத் தெண்டனிட அவர்களும் ஆசீர்வதித்து மிகு சந்தோஷத்துட னிருந்தார்கள்.

## இராமர் பட்டாபிஷேகம்.

அப்பாற் சிறிது நாட்சென்று ஓர் தினம், அரசர்கள் அமைச்சர்கள், புடைசூழ்ந்திருக்க, அன்று வதிஷ்டர், விசுவாமித்திரர், சதாநந்தர், காசிபர், மற்ற ரிஷிகளும் வந்து, இராமசுவாமிக்குப் பட்டாபிஷேகஞ் சூட்டவேண்டு மென்று, தீர்மானித்து, அதற்குள்ள சாமக்கிரிகைகளெல்லாஞ் சேகரித்துப், பட்டாபிஷேக

மண்டபமுதலானதும் அலங்கரித்து, அபிஷேகத்துக்குத் தீர்த்தம் வேண்டுமென்று ஆலோசித்து, அனுமாரையழைத்து, நீர் ஆகாயக் கங்கைகொண்டுவரவேண்டுமென்று, அவர் கரத்திற் பொற் குடத்தைக் கொடுத்தார்கள்.

அப்போது அனுமார் அகமகிழ்வுடன் பொற்குடத்தைக் கரம்பற்றி, அடியேன் இதோ தீர்த்தங்கொண்டு வருகின்றேனென்று, விசுவரூபத்துடன் ஆகாயத்திற்ருவி ஆகாயக் கங்கையும், மற்றும் வானுலகத்தில் விசேடமான தீர்த்தங்களு மொண்டு கொண்டு, ஒரு முகூர்த்தத்திற்குள் அயோத்திக்கு வந்து, பட்டாபிஷேக மண்டபத்திற்கு முன்பாகப் பொற்குடத்தை வைத்தார்.

அப்பொழுது அந்தத் தீர்த்தத்தால் இராகவனுக்கும், ஜானகியாருக்கும், திருமஞ்சனமாட்டி, ஆடையாபரணங்களாலலங்கரித்துப், பட்டாபிஷேக மண்டபத்திலியற்றிய சிம்மாசனத்தி லமரச்செய்தார்கள். அப்பொழுது சப்த ரிஷிகளும், ஓம எக்கியம் வளர்க்க, தேவர்களெல்லாம் பூமாரிபெய்ய முப்பத்திரண்டுமேளவாத்தியங்களும், இருமருங்கும் நின்றதிர, இராஜாக்கள். மந்திரிமார் மற்ற பெரியோர்களும் நின்று ஜெயா ஜெயா என்ன, மேழிக்கொடியும், தார்க்கோ லென்னும் செங்கோலுடைய வேளாள குலதிலகராகிய வெண்ணெய்நல்லூர் சடையப்பவள்ளலின் மரபினர் கொடுக்கும் நவமணிக்கிரீடத்தை வசிஷ்டர் கரத்தால் வாங்கி இராமசுவாமிக்கு முடி சூட்டினர்.

விருத்தம்.

அரியணை யனுமன்ருங்க வங்கத னுடைவா ளேந்தப்
பரதன்வெண் குடைகவிக்க விருவருங் கவரி வீச

விரைசெறி குழலியோங்க வெண்ணெயூர்ச் சடையான் [றங்கண்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் [மௌலி.

வசனம்.

இப்படியாக வதிஷ்டர் திருமுடி சூட்டுகிறபோது மூப்பத்து முக்கோடி தேவர்கள், மற்ற மகரிஷிகளெல்லாம், மங்கள வாழ்த்துடன் பூமாரி பெய்யச் சகலருந் திருமுடி புனைந்த மகோற்சவங் கண்ணுற்று, தெரிசித்து ஆனந்த மகிழ்வடைந்தனர். இப்பால் பட்டாபிஷேக மகோத்ஸவத்திற்கு வந்திருந்த தேவர் மூவர் யாவருக்கும் வேணத்தக்க பரிசுடன் அவரவர் வாசஸ்தலங்களுக்கு அனுப்பிவைத்தனர்.

அதன் பிறகு சுக்கிரீவனையும் அங்கதனையும் அழைத்து ஏ சுக்கிரீவா! முன் வாலியானவன் அங்கதனை என்னிடம் அடைக்கலமாய் ஒப்பிவித்தானல்லவோ, இப்போது நான் உன்னிடம் அங்கதனைச் சேர்ப்பித்தேன், இவனைக் கைவிடாமற் காப்பதுடன், தாரையின் வாக்கின்படியே கிட்கிந்தாபுரியைப் பரிபாலனஞ் செய்து கொண்டிருவென்று திருவாய் மலர்ந்தருளி, வேண்டிய பரிசுகளுங் கொடுத்துச் சாம்பவருக்கும் மற்றஎழுபது வெள்ளம் வானரச்சேனைகளுக்கும் அப்படியே கொடுத்து, கிட்கிந்தாபுரிக்கு அனுப்பி வைத்தார். அவர்களும் விடைபெற்றுச் சென்றனர். அப்போது அனுமார், இந்த வானரங்களுக் கெல்லாம் பரிசளித்தவர், நமக்கு ஒன்றுஞ்செய்ய நினைந்தாரில்லையே என்று கிஞ்சிற்று முகவாட்டமாக நிற்பதை, இராமசுவாமியறிந்து சொல்லுகின்றார்.

ஏ மாருதி! இந்த அயோத்தியாபுரிப் பட்டணமும், சிம்மாசனமும், இந்நகரின் அரசாட்சியும், இந்தச்

செல்வங்களும், நீர் தந்த பாக்கியமாகையால், யாவும் உனது செல்வமே, ஆனால் நாம்இப்போது, உமது உத்திரவல்லாது, பொக்கிஷந் திறந்ததற்கு, நீர் நமது பேரிற் கிருபை கூர்ந்து மன்னிக்க வேண்டு மென்று இனிய வசனங்களால், அனுமாரைத் திருப்திசெய்து, ஒன்பது வகை ரத்னங்களா லமைத்த மாலையும், முன்கைமுதாரி, அஸ்தகடக முதலான ஆபரணங்களுங் கொடுத்தார், ஜானகியாரும் கழுத்திலணிந்திருந்த முத்துமாலையையும், அனுமார் கழுத்திற் போட்டு, ஆசீர்வதிக்க அனுமார் மகிழ்வுடன் யாவையும்பெற்றுக்கொண்டு சொல்லுகின்றார்.

ஏ. பரந்தாமா! பக்தரக்ஷகா! சுவாமி! அடியேனுக்கு தங்கள் பாதசேவையே மாறாது கிடைக்கவேண்டுமேயல்லாமல், பல வெகுமதிகள் எனக்குற்றதல்ல வென்றார். அப்படியே சுவாமியுங் கிருபை கூர்ந்து, சந்தோஷமாக விருந்தார்கள். அப்பால் குகப்பெருமானுக்கும் வேண்டிய உடையும், பணிகளும் கொடுத்துக் கெங்கைக் கரைக்கியனுப்பி வைந்தார்.

அதன் பிறகு சுவாமி விபூஷணரை யழைத்து; விபூஷணருக்கும், அவர் மந்திரிமார் நான்கு பேர்களுக்கும், வேணத்தக்க மரியாதை செய்து, ஏ. விபீஷணா! நீ இலங்கைப்பட்டணஞ் சென்று, இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்துகொண்டு, தேவர்களிடத்தில் மிகுந்த அன்பு பாராட்டித், தரும நெறியுடனிருந்து வாவென்று திருவாய் மலர்ந்தருளி யனுப்பினார். அப்போது விபீஷணர், சுவாமியைப் பணிந்து, இராகவா! தங்கள் சேவை எனக்குத் தினமுங் கிடைக்கும்படியாய், அரங்க நாயகரைப் பெட்டகத்துடன் கட்டளையிடவேண்டுமென்று கேட்டார். சுவாமி அப்படியே தருகிறேனென்று,

அரங்கநாயகரைப், பெட்டகத்துடன் கொண்டுவந்து, விபீஷணு! நீ இலங்கைக்குச் சேருவதற்குள், பூமியில் பெட்டகத்தை வைக்கக்கூடாதென்று சொல்லிப், பெட்டகத்தைக் கொடுத்தார். அதை விபீஷணர் வாங்கிச் சிரத்தின் பேரில் வைத்துக்கொண்டு, சுவாமியிடத்திலும், ஜானகியார், மற்ற யாவரிடத்திலும் விடைபெற்று அமைச்சர்களுடன் இலங்கையை நோக்கிச் சென்றான்.

அப்போது தேவர்கள் காவேரிக்கரையிற் கூட்டமிட்டு, இந்த விபீஷணன், எவ்வளவு இராமபக்த சிரேட்டனாயினும், இராட்சதனல்லவோ, இவன் அரங்கநாயகரை, இலங்கையில் வைத்து விட்டானானால், நாம் அங்கு சென்று தெரிசிக்க இயலாததுடன், அடிக்கடி பகையேற்பட்டு விட்டாலென்ன செய்கிறதென்று யோசித்து, திரிசிரன் மலையிலிருக்கிற விநாயகரை வணங்கி, வர்த்தமானங்கூற, அவர் கேட்டு, வருணனை யழைத்து விபீஷணன் வயிற்றுள் பிரவேசித்துச் சிறு நீருபாதையுண்டு பண்ணும் நாம் இதோ வருகிறோமென்று, வருணனை யனுப்பிவிட்டு, தேவர்களையும் அவிடத்தினிறுத்தி, விநாயகர் பிரமச்சாரியைப்போல் ரூபங்கொண்டு, காவேரிக்கரைக்கு வந்தார்.

அப்போது அந்த வழியே வருகின்ற விபீஷணருக்குச் சிறு நீருபாதை யேற்பட்டதால் சுற்றிலும் பார்த்து, யாவரேனும் ஒருவர் வராததால், மிகவுங் கவலையுடன் வருகிறபோது, எதிரே வருகிற பிரமசாரிக் குழந்தையைக் கண்ணுற்று, ஏ. பிராமணக் குழந்தாய்! நான் சிறுநீர் கழித்து வருமளவும், நீ, இந்தப் பெட்டகத்தை வைத்துக்கொள்ளுமென்று, கொடுத்தார்.

அந்தக் குழந்தை பெட்டகத்தை வாங்குகிறபோது, இதுவானாற்பாரமாயிருக்கிறது, என்னாற்றாங்க

முடியாது, என் கரங்கள் கடுத்தவுடன் மூன்று சத்தங் கூப்பிடுவேன், வராது போனால், பெட்டகத்தைக் கீழே வைத்துச் சென்று விடுவேனென்று சொன்னார். விபீஷணரும் சரியெனப் பெட்டகத்தைக் கொடுத்துச் சிறுநீர் கழிக்கப்போய் உட்காருவதற்குள் ஒரு சத்தங் கூப்பிட்டார், எழுந்திருக்குமுன் ஒரு சத்தங் கூப்பிட்டார். கால் கை சுத்தஞ் செய்து கொள்வதற்குள் ஒரு சத்தங் கூப்பிட்டு வரவில்லையென்று, பெட்டகத்தைப் பூமியில் வைத்து விட்டுப் பிரமசாரியாய் வந்த விநாயகர் சென்றார்.

உடனே விபீஷணர், சிறுநீர் உபத்திரவந் தீர்ந்ததும், கங்கையில் கால்கைகளைச் சுத்தஞ் செய்து கொண்டு, வருவதற்குள், அரங்கநாயகர் இலங்கையை நோக்கிக் கண் வளர்ந்தருளினார். அப்போது கங்கையுங் காவேரியும், தான்தான் பெரியவளென்று சண்டையிட்டு அரங்க நாயகர் முன்பாக வந்து நின்றார்கள். அதுகேட்ட அரங்க நாயகர் இருவர் வழக்கையுந் தீர்த்துக்கெங்கையை நோக்கி, நீசெய்த குற்றம் நிவிர்த்தியாக, இந்தக்கங்கா நதியில் திங்களொன்றுவரை தீர்த்தமாடென்று ஆக்ஞாபித்துக் காவேரியை மாலையாகத்தரித்துக் கொண்டிருக்கிறபோது, விபீஷணர் வந்து பார்த்து, ஓகோ பிராமணன் கெடுத்தானே என்று, வருத்தப்பட்டுக்கொண்டு பெட்டகத்தை எடுத்தார், எடுக்கக் கூடாமல் நின்று திகைத்து, மகா விசனத்துடனின்றார்.

அதையறிந்த அரங்கநாயகர், ஏ விபீஷணா! நீ வீணில் மனமுருகவேண்டாம், நமக்கு இது வசதியான இருப்பிடமானதால், நாம் இங்கிருந்து இலங்கையை நோக்கிக் கண் வளர்ந்தருளுகிறோம், நீ இலங்கைக்குச்

சென்று வருடத்துக்கொரு முறைவந்து, நம்மைத்தெரிசித்து, உனது சுற்றத்தாருடன் இலங்கை இராட்சியத்தைப், பரிபாலனஞ் செய்து கொண்டு, சுகவாழ்விலிருப்பா யெனக்கட்டளையிட்டு அனுப்பினர். அதுபோல் விபீஷணர், மந்திரிகளுடன் இலங்கைக்குச் சென்று, அரசியற்றி, ஆண்டுக் கொருமுறைவந்து, அரங்கநாயகரைத் தெரிசித்துக் கொண்டிருந்தார்.

இப்பால் அயோத்தியா புரியில் விபீஷணனால் கொடுக்கப்பட்ட புட்ப விமானம், குபேரனுடையதென்று அறிந்து சுவாமி அந்த விமானத்திற்குச் சோடச உபசாரத்துடனே பூஜாவிதிகள் செய்து, அஃதை அளகாபுரிக்கு அனுப்பி வைத்தார். அப்பால் அயோத்தியா புரியின் பரிசனங்க ளனைவோருங் கூட்டமிட்டுச்சுவாமி வனஞ்சென்ற பதினன்கு வருடத்துப் பகுதியும், நாம் இப்போது ஒன்றுய்ச் சேர்த்துக் கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்து, அவரவர் இல்லங்களிற்சென்று, பகுதிப் பணங்களைக் கணக்குடன், வருடத்துக்கு, ஓர் பொன்பகுதியுள்ளவன் பதினன்கு பொன்னும், பத்துப் பொன்பகுதி யுள்ளவன் நூற்றி நாற்பது பொன்னும், இவ்விதமாகவே யாவருங் கொண்டு வந்து, இராகவனடியிணையில் வைத்துச் சரணுகதஞ் செய்தார்கள்.

அவர்களனைவோருக்கும் சுவாமி ஆசீர்வதித்து, அவரவர்களுக்கும், மனம் போற் பரிசளித்து அனுப்ப அவர்களும் விடைபெற்றுச் சென்று, ஆனந்த மகிழ்வுடனிருந்தனர்கள். இப்பால் இராமபிரான் யாவரையும் அவரவர் இருப்பிடங்களுக்கு அனுப்பிவிட்டுஜானகியார், இலட்சுமணர், பரதர், சத்துருக்கர், சுமந்திரனுகிய மந்திரிமார், மற்ற சேனைகளுடனிருந்து, யாவரேனும் அபயம் அனியாயமென்று சொல்லாமல், எளி

யோரையும் வலியோருக்குச் சமமாக, வேண்டிய செல்வங்களைக் கொடுத்து, எல்லோரையும் ஒரே நிறையாய் நடத்திக் கொண்டு, பருந்துங் கிளியும், ஒரு கூண்டில் வாழ, பசுவும் புலியும் ஒரு துறையில் நீரருந்த, ஆறிலொரு கடமையும் வாங்கித், தருமநீதியுடன் இராட்சிய பரிபாலனஞ் செய்து சந்தோஷமாக விருந்தார்கள்.

விருத்தம்.

மற்றொருதவமும் வேண்டா மணிமதி ளிலங்கைமூதூர்
செற்றவன் விஜயம்பாடத் தெரிந்ததிலொன்றுதன்னைக்
கற்றவர் கேட்போர் நெஞ்சிற் கருதுவோ ரிவர்கள்பார்
லுற்றரசாள்வார்பின் னுமும்பர்வா னுலகிற்சேர்வார்[மே

வையநீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்றழைத் தோங்குக
செய்யவன் றிருநாமஞ் சிறக்கவே.




ஸ்ரீராமஜெயம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!.



# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 10 | மூனிவர் | முனிவர் |
| 28 | 13 | மறைந்னர் | மறைந்தனர் |
| 53 | 23 | தாயின் றலை | தாயின்றலையல்ல |
| 74 | 4 | திடுக்கெழுந்து | திடுக்கென்றெழுந்து |
| 96 | 3 | தடந்தார்கள் | நடந்தார்கள் |
| 97 | 8 | சக்கராயுந் | சக்கராயுதந் |
| 101 | 7 | மூன்றுபிள்ளைகளை | பதிமூன்றுபிள்ளைக (ளை |
| 102 | 18 | பாதனுக்கு | பரதனுக்கு |
| 104 | 8 | கூாமை | கூர்மை |
| 114 | 13 | கேளாமம் | கேளாமல் |
| 129 | 7 | நானுக்கு | நானுனக்கு |
| 148 | 15 | விருவரும் | லிவரும் |
| 159 | 16 | வல்லை | வில்லை |
| 160 | 12 | சந்தேகத்தீர்ந்து | சந்தேகந்தீர்ந்து |
| 164 | 23 | தம்மைமேயார் | தம்மைமேய |
| 165 | 3 | லேற்றி | லேந்தி |
| 204 | 12 | பார்ந்து | பார்த்து |
| 225 | 22 | கனியை | கணியை |
| 226 | 15 | னுலகம் | னுலகம் |
| 234 | 11 | றவந்திற்கிரங்கி | றவத்திற்கிரங்கி |
| 239 | 27 | கொன்றின் | கொன்றுன் |
| 256 | 29 | கரியிக்கு | கரியாக்கி |
| 281 | 23 | யன்று | யின்று |
| 321 | 1 | னென்று | னென்று |
| 378 | 4 | லாமே | லாமோ |
| 437 | 3 | படைத்தவலைவர் | படைத்தலைவர் |
| 456 | 23 | இனிமேல் என் | இனிமேல்நான் |
| 458 | 23 | உயுயு | உய்யு |



